# மெய்க்கீர்த்திகள்

பூ. சுப்பிரமணியம்







உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. டி. டி, ஐ. தரமணி, சென்னை - 600 113.

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | — | MEYKKIRTHIGAL |
| Author | — | P. SUBRAMANIAM, M.A. B.Lit., B.T., Research Officer, International Institute of Tamil Studies, MADRAS-600 113. |
| Publisher | — | International Institute of Tamil Studies, Madras-600 113. |
| Publication Number | — | 75. |
| Language | — | Tamil |
| Edition | — | First |
| Date of Publication | — | August, 1983. |
| Paper Used | — | 16 kg D/Demy. |
| Size of the book | — | 21×18 cms. |
| Printing Types used | — | 8, 10 & 12 Points |
| Number of copies Printed | — | 2200 |
| Number of Pages | — | 450 |
| Price | — | Rs. 20 (Rupees Twenty) |
| Printer | — | Sudha Printers, 3/287, Lloyds Road, MADRAS-600 014, Phone : 843580 |
| Binding | — | Cardboard. |
| Artist | — | RADHA |
| Subject | — | A Collection of Historical Inscriptions. |

35/1

டாக்டர். ச. வே. சுப்பிரமணியன்
இயக்குநர்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
டி. டி. டி. ஐ. (அஞ்சல்) தரமணி,
சென்னை-600 113.

## முன்னுரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பலவகையான கோணங்களில் ஆய்வுகளை நிகழ்த்தி வருகின்றது. மெய்க் கீர்த்தி இலக்கியமா? என்ற கேள்வி கேட்கப்பட்டது. இலக்கியமே என்று சில அறிஞர்கள் எழுதி உள்ளனர். அதன் அடிப்படையில் இதுவரை அச்சில் வந்துள்ள மெய்க்கீர்த்திகள் அனைத்தையும் தொகுத்துச் சிறந்த் விளக்கத்துடன் வெளியிட வேண்டும் என்ற எண்ணம் உருவாயிற்று. அதற்குத் தகுதியானவர் திரு. பூ. சுப்பிர மணியம் என்பதை உணர்ந்து அவரிடமே அந்த வேலை ஒப்படைக்கப்பட்டது.

இலக்கியக்கொள்கைக் கருத்தரங்கில் 'மெய்க்கீர்த்தி கள்' பற்றிச் சிறந்த ஒரு கட்டுரையை 24-9-81 இல் அவர் தந்தார். அதற்குப் பின்பு இதுவரை அச்சில் வந்துள்ள மெய்க்கீர்த்திகள் அனைத்தையும் திரட்டி ஏறத் தாழ 75 முழு மெய்க்கீர்த்திகளையும் 23 ஒருவரி இருவரி உடைய மெய்க்கீர்த்திகளையும் வரன் முறைப்படித் தொகுத்து ஒவ்வொரு சொல்லுக்கும் விளக்கமும் தந்து ஒப்புடைய செய்திகளையும் ஆங்காங்கே திரட்டியும் தொகுத்தும் விளக்கியும் தந்துள்ளார். அவருடைய கடுமை யான உழைப்பும் முயற்சியும் இந்நூலில் காணப்படு கின்றன. மெய்க்கீர்த்தி பற்றி வருகின்ற முதல் தமிழ்நூல் இதுதான். அதில் நிறுவனம் மகிழ்ச்சி அடைகிறது. இந்த நூல் தமிழ் மாணாக்கர் அனைவருக்கும் பயன்படும். தமிழக வரலாற்றைத் தெரிந்து கொள்வதற்கு வரலாற்று ஆசிரியருக்கும் பயன்படும். பொது நிலையில் தமிழ் மக்கள் அனைவருக்கும் பயன்படும். இது போன்ற நல்ல நூலை உருவாக்கித் தந்த திரு. பூ. சுப்பிரமணியம் அவர்களைப் பாராட்டுகின்றேன். இது போன்று இன்னும் நல்ல நூல் களை நிறுவனத்திற்குத் தர வேண்டுகிறேன்.

நிறுவனப்பணிகள் அனைத்திற்கும் ஊக்கமும் ஆக்க மும் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. செ. அரங்கநாயகம் அவர்களுக்கு என்றும் நன்றி உடையோம்.

சென்னை-600 113.
3-8-1983

அன்புள்ள
ச. வே. சுப்பிரமணியன்

# செய்திகள்

# நான்முகம்

**கருத்தரங்கு** - ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபத்து நான்கா மாண்டு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ் இலக்கியக் கொள்கைகளை அறிவதற்கு அகலமும் ஆழமும் நிறைந்த ஒரு முயற்சியை மேற்கொண்டது. அதன் பயனாக ஒவ்வொரு திங்களும் தொல்காப்பியம் முதல் உரையாசியர்கள் ஈறாகப் பலதுறை நூல் களைத் தனித்தனியாகவும், பொருள்வகையில் தொகுதியாகவும் தனித்தனிக் கிளைகளாகவும் கண்டு இலக்கியக்கொள்கை பற்றிய ஆய்வுக்கட்டுரைகளை அறிஞர் பலர் வழங்கினார்கள். அவற்றைப் பலதுறை அறிஞர்களின் தலைமையில் கூடி ஆய்வு செய்தனர். அவ் ஆண்டு நவம்பர்த் திங்கள், இருபத்தெட்டாம்நாள் தொல்காப் பியத்தின் இலக்கியக் கொள்கைகளைப்பற்றி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பேராசிரியரும், முதன்மை அலுவல் ஆட்சியருமாகிய டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் முதன் முதலாக ஒரு கட்டுரையை வழங்கினார்கள். அன்றைய கருத்தரங்கிற்குச் சென் னைப் பல்கலைக் கழக முன்னாள் துணை வேந்தர் உயர்திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள் தலைமை ஏற்றார்கள். அன்று தொடங்கித் திங்கள்தோறும் முறையாக நடைபெற்றுவரும் அக்கருத் தரங்கின் எண்பத்து நான்காவது கூட்டத்தில் 'மெய்க்கீர்த்திகள்' என்ற தலைப்பில் ஒரு கட்டுரையினை வழங்கும் வாய்ப்பு எனக்கு அளிக்கப்பட்டது. அதன்படி ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண் பத்தொன்றாம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள் இருபத்து நான்காம் நாள் அக்கட்டுரையினைப் படித்தேன்.

**நூலின் தோற்றம்**—கேள்வி நேரத்தில் எழுப்பப்பட்ட பலவினாக் களுக்கிடையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் துணைப் பேரா சிரியர் டாக்டர் தா. வே. வீராசாமி அவர்கள் மெய்க்கீர்த்தி இலக் கியம் ஆகுமா? என்ற ஒரு வினாவினை எழுப்பினார்கள். கட்டுரை யில் காட்டியுள்ள சில அறிஞர்களின் கருத்துகளையும் சுட்டி விடை யளித்தேன். அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் கட்டுரையிலிருந்து சில அடிகளை எடுத்துக்காட்டி விளக்கம் கூறி, இவற்றை இலக்கிய மில்லை என்று எவ்வாறு மறுக்க முடியும் என்று பதிலளித்தார்கள். இறுதியில் நிறுவன இயக்குநர் அவர்கள் எழுந்து, பார்வையாளர் களில் ஒருவன் என்ற முறையில் பேசுவதாகக் குறிப்பிட்டு விட்டு,

"மெய்க்கீர்த்தி என்பது இலக்கியம் ஆகாது என்பதை நானும் ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால் திரு. பூ. சுப்பிரமணியம் அவர்களே எல்லா மெய்க்கீர்த்திகளையும் தொகுத்துத் தந்து, மெய்க்கீர்த்தி சிறந்த இலக்கியமே என்பதை நிறுவி இருநூறு பக்க அளவில் ஒரு நூலாக வெளியிடுவார்கள். அதற்கு நான் துணை இருப்பேன்"

என்று மட்டும் கூறிவிட்டு அமர்ந்துவிட்டார்கள். இயக்குநர் அவர்களுடைய இக்கூற்றினை ஆணையாகக் கொண்டு இந்நூலினை உருவாக்கும் பணியில் ஈடுபட்டேன். நிறுவனத்தில் சுவடிஇயல் வகுப்பு நடத்தவேண்டிய பொறுப்பே எனக்கு முழுநேரப் பணியாதலால் இப்பணியில் விடுமுறை நாட்களை மட்டுமே செலவழிக்க முடிந்தது. ஒரு சில நாட்களே முழுநேரப்பணி மேற்கொண்டுச் செல்ல முடிந்தது. இந்த நிலையில், வெளியாகியுள்ள மெய்க்கீர்த்திகளைத் தொகுப்பது என்பதே ஒரு சிக்கலான பணியாக ஆகி விட்டது. பெரும்பாலான மெய்க்கீர்த்திகள் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளிலேயே (South Indian Inscriptions - Vols. I-XXIII) கிடைக்கின்றன. அவை இப்பொழுது விலைக்குக் கிடைப்பதில்லை. அத்தொகுதிகள் அனைத்தையும் ஒரே நூலகத்தில் காண்பது என்பதும் இயலாத காரியமாகிவிட்டது.

சென்னைப் பல்கலைக் கழக நூலகம், பல்கலைக் கழகத் தொல்பொருள் ஆய்வுத் துறையின் நூலகப் பகுதி, அரசினர் சுவடி நூலகம், மறைமலையடிகள் நூலகம், கன்னிமாராப் பொது நூலகம் போன்ற பல நூலகங்களிலும் இத்தொகுதிகள் உள்ளன. ஆனால் எந்த நூலகத்திலும் எல்லாத் தொகுதிகளும் கிடைக்கவில்லை. தமிழ் நாடு தொல்பொருள் ஆய்வுத் துறையில் ஒரு நூலகம் உள்ளது. நிறுவன இயக்குநர் அவர்கள் அளித்த அடையாளக் கடிதத்தோடு சென்றபோதும் அந்நூலகத்தைக் காண்பதற்கும் அனுமதி மறுக்கப் பட்டுவிட்டது. கன்னிமாராப் பொது நூலகத்தில் இத்தொகுதிகள் போன்ற அரிய நூல்களுக்கென ஒரு பகுதி ஒதுக்கப்பட்டுள்ளது. கட்டுப்பாடுகள் மிகுதி. முதலில் அனுமதிச் சீட்டு வாங்கிச் செல்ல வேண்டும். அவ் அனுமதிச் சீட்டில் நாம் குறிப்பிட்டுள்ள நூலை அங்குள்ள பணியாளர்கள்தான் எடுத்துத் தருவார்கள். நம் நாட்டைப் பொறுத்த வரையில் இம்முறை மிகச் சிறந்த முறையே என்பது என் கருத்து.

நூலகங்கள்—நூலகப் பணியாளர்களே எடுத்துக் கொடுப்பதும், மீண்டும் நாம் அவர்களிடமே நூல்களை ஒப்படைக்க அவர்களே உரிய இடத்தில் கொண்டு சேர்ப்பதுமாகிய இம்முறையை அரசினர் சுவடி நூலகம் இன்றும் கையாளுகிறது. அங்கு ஒரு பார்வையாளர் வந்து ஒரு நூலைக் குறிப்பிட்டுக் கேட்டால் அடுத்த நிமிடத்தில் அது அவர் கைக்கு வந்து சேரும். நூல் இல்லை என்ற பதிலும் அடுத்த நிமிடமே கிடைக்கும். இல்லை என்று கூறப்பட்ட அந்த

நூல் உண்மையில் அங்கு வாங்கவே இல்லை என்பதை உறுதியாகக் கூறமுடியும். நூல் வாங்கப்பட்டுள்ளது ; அதற்குரிய நூலக எண் அகரவரிசை அட்டையில் காணப்படுகிறது. ஆனால் நூல் உரிய இடத்தில் இல்லை என்ற நிலை ஏற்பட்டால், அந்த நூலை இன்ன தேதியில், இன்னார், கடனாகப் பெற்றுச் சென்றிருக்கிறார் கள் என்ற செய்தியும் அதே நிமிடத்தில் கிடைக்கும். ஆனால் இதே முறையினைக் கடைப்பிடிக்கும் **கன்னிமாரா பொது நூலகப் பகுதியில் புதுக் கோட்டைக் கல்வெட்டுகள்** என்ற தொகுதியின் எண்ணை அகரவரிசை அட்டையிலிருந்து குறித்துச் சென்று, அதனைக் குறிப்பிட்டுக் கேட்டபொழுது, சுமார் அரைமணி நேரம் கழித்து அந்த நூல் காணவில்லை என்ற பதில் கிடைத்தது. அவசி யம் வேண்டுமே என்று வேண்டிக் கொண்டதன் பேரில் நாளைக்குத் தேடி வைக்கிறோம் என்று கூறினார்கள். நாளை என்பது எனக்கு அடுத்த விடுமுறைநாளே. அன்றும் அதே பதில்.

ஒரு சிலர் நூல்கள் இருக்கும் பகுதியினுள் சென்று நூல்களை எடுத்து வருவதை அறிந்தபின் நானும் கெஞ்சிக் கேட்டுக் கொண்டு உள்ளே சென்றேன். இத்தொகுதிகள் உள்ள பகுதியை அப்பணி யாளர் மூலம் அறிந்தேன். கல்வெட்டுத் தொகுதிகள் அனைத்தும்- சுமார் பதினைந்து நூல்கள் - ஒரு சன்னலின் மேல் கொட்டிக் கிடந்தன. எனக்காகத்தான் அவற்றை எல்லாம் வெளியிலே எடுத் துப் போட்டுத் தேடியிருக்கிறார்கள் என்று எண்ணி உண்மை யிலேயே அவர்களின் பொறுப்புணர்ச்சியையும் உழைப்பையும் உளமாரப் பாராட்டினேன். ஆனால் அவ் எண்ணத்தோடு நின்று பார்த்துக் கொண்டிருந்த பொழுதே பெரிய எழுத்தில் நூலின் முதுகில் பெயர் அச்சிடப்பட்ட, புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் என்ற தொகுதி என் கண்ணில் பட்டது. இதே நிலையில் பல தொகுதிகள். சில தொகுதிகள் கிடைக்கவே இல்லை. திருவாங் கூர்க் கல்வெட்டுகள் (T.A.S. Vols) என்ற தொகுதிகளுக்குரிய நூலக எண் கொடுக்கப்பட்ட அட்டை இருக்கிறது. இறுதி வரை நூல் கிடைக்கவே இல்லை.

தொகுத்தற்பணி — ஒரு மெய்க்கீர்த்தியை முழுமையாகப் படித்து பார்த்துப் புரிந்துகொண்டு, தூய்மையாகப் படி எடுத்து முடிப்பதற்கு இரண்டு மூன்று நாட்கள் தேவைப்பட்டன. அதாவது எனக்கு இரண்டு மூன்று வாரங்கள். பணியைத் தொடங்கிப் பல மாதங்கள் கடந்த பின்னும் ஒருசில மெய்க்கீர்த்திகளே முழுமையாயின. நாள் தோறும் சிலமணி நேரமாவது உழைத்தால்தான் விரைவில் நூல் உருவாகும் என்ற நிலை ஏற்பட்டது. நூல்கள் கையில் இருந்தால் அவ்வாறு உழைக்க முடியும். கலவெட்டுத் தொகுதிகளைக் கடனாகப் பெற்றுச் செல்வது என்பது இயலாது. புதிய நூல் களும் கிடைக்காது. மெய்க்கீர்த்திகள் உள்ள ஏடுகளை மட்டு மாவது எடுத்துச் செல்லவேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். எழுநூற்றுக்கு மேற்பட்ட மெய்க்கீர்த்திகள் உள்ளன. ஒரு பக்கம்

முதல் ஆறு பக்க அளவு உடையவை. குறைந்தது இரண்டாயிரம் பக்கங்களை எடுத்துச் செல்லவேண்டும். இயலாத காரியமாயிற்று. மெய்க்கீர்த்திகளின் தொடக்கத்தை நோக்கச் சுமார் அறுபது தலைப்புகளே முழுமை பெற்றன. காரணம் ஒரு மன்னனின் மெய்க்கீர்த்தி, அம்மன்னன் செய்த அறச்செயல்கள் பொறிக்கப்பட்ட நூற்றுக் கணக்கான கல்வெட்டுகளில் காணப்படுகிறது. எனவே அவற்றுள் முழுமையான ஒன்றை மட்டும் எடுத்துக்கொண்டால் பிறகு மற்றவற்றை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்தேன். கன்னிமாரா நூலகத்தில் கிடைத்த மெய்க்கீர்த்திகளை எழுதிக் கொள்ளுவதைத் தவிர எடுத்து வருவதற்கான வாய்ப்பு எதுவுமே இல்லை.

பல்கலைக் கழகத்திலிருந்த தொகுதிகளில் சில மெய்க்கீர்த்திகளைத் தேர்ந்தெடுத்து, நூலகர் அனுமதியுடன் புகைப்படப் படியாக (Photostat Copy) எடுத்துக்கொள்ள முடிந்தது. இதேபோல மறைமலையடிகள் நூலகத்தின் நூலகரும் உதவி செய்தார்கள். சிலவற்றைப் படியெடுத்துக் கொள்ள முடிந்தது. பிறவற்றையெல்லாம் எழுதியே தொகுக்க வேண்டியிருந்தது. தொகுத்தவற்றைப் பாட்டு நடையில் முறைப்படுத்தித் தூயபடியாக எடுத்துக்கொண்டு ஒப்பிட்டுப் பார்க்கும்போது எழுதப்பட்டவற்றின் வடிவமே முழுமையாக மாறிவிட்டது. இடையிடையே பல அடிகள், தொடர்கள், சொற்கள் சேர்ந்தன. சில சொற்கள், தொடர்கள் மாறுபட்டிருந்தன. அவ்வேறுபாடுகளை எல்லாம் குறித்ததனால் ஏற்பட்டது அவ்வடிவ வேறுபாடு. மீண்டும் சேர்த்தும், நீக்கியும், மாற்றியும், வேறுபாடு குறித்தும் புதியபடி எழுதப்பட்டது. பொருள் எழுதி முடித்தபின் ஒருமுறை இதேபோல படி எடுக்க நேர்ந்தது. நானூறு பக்கச் செய்திகள் (கையெழுத்துப்படியில்) இவ்வாறு மூன்றுமுறை எழுதித் தொகுக்கப்பட்டன. நிறுவனத்தில் எழுதுபொருள்களின் பொறுப்பில் இருக்கும் திரு. ந. இராமமூர்த்தி அவர்கள் 'இவ்வளவு தாள்களை என்ன செய்கிறீர்கள்' என்று கேட்பதில் வியப்பில்லை என்றே தோன்றியது.

**விளக்கம்**—சென்னை, நக்கீரர் கழகம், திருவள்ளுவர் தமிழ்க் கல்லூரி, காஞ்சி மணிமொழியார் தமிழ்க் கல்லூரி போன்றவற்றில் புலவர், பி. லிட்., எம். ஏ., ஆகிய வகுப்புகளுக்குக் கல்வெட்டுப் பாடம் நடத்திய பொழுது கல்வெட்டுகள், மெய்க்கீர்த்திகள் ஆகியவற்றில் உள்ள சில தொடர்களுக்குப் பொருள் கூறி விளக்கம் தருவதில் பல சிக்கல்கள் ஏற்பட்டன. இந்நூலை மாணவர் பயிலும்போது அவ்வாறான சிக்கல்கள் ஏற்படாதவாறு விளக்கங்களை அமைக்க வேண்டும் என்று கருதி, இயன்றவரை விரிவான விளக்கங்களை எழுதித் தொகுத்தேன். ஆனால் சில கூறியது கூறலாக அமைந்தன. சில சரியான விளக்கம் பெற முடியாதனவாகிவிட்டன. காரணம் பல மெய்க்கீர்த்திகள் ஒரே செய்தியைத் தருவனவாய் அமைந்துள்ளன. பல சொற்கள் விளங்காதவையாக உள்ளன.

பொறிந்தவை, காண இயலாதவை பல. இவற்றால் அக்குறைபாடு கள் அமைந்துவிட்டன.

**நூல் அமைப்பு**—பாண்டியர் மெய்க்கீர்த்திகள் எட்டாம் நூற் றாண்டு முதல் கிடைத்துள்ளன. சோழர் மெய்க்கீர்த்திகளோ பத்தாம் நூற்றாண்டில் பொறிக்கப்பட்டவையே முதன்மையாகக் கிடைத்துள்ளன. இருப்பினும் சோழர் காலத்திற்குப் பிறகு பாண்டி யரின் சிறப்பை விளக்கும் மெய்க்கீர்த்திகள் பதினைந்தாம் நூற்றாண்டு வரையில் கிடைத்திருப்பதால் நூல் அமைப்பில் முதலில் சோழர் மெய்க்கீர்த்திகள் தொகுக்கப்பட்டன. முறைவைப்பிற்கான காரணங்களும் உரைப்பகுதிகளில் தொடர்ந்து காட்டப்பட்டுள்ளன. பாண்டிய மன்னரின் பெயர்களும், பட்டப் பெயர்களும் ஒரே மாதிரி யானவை பல மெய்க்கீர்த்திகளில் காணப்படுவதாலும், வரலாற்று நூல்களில் தனித்தனியே பிரித்துக் காட்டப்பெறும் இடங்களில் உறவு முறைகள் தொடராகக் கிடைக்கவில்லையாதலாலும், ஒரே காலத் தில் இரண்டு, மூன்று மன்னர்கள் ஆட்சி புரிந்துள்ள நிலைமை காணப்படுவதாலும் பாண்டியர் மெய்க்கீர்த்திகளின் முறைவைப்பு நிறைவு தருவதாக அமையவில்லை.

விசயநகர மன்னரின் மெய்க்கீர்த்திகள் பெரும்பாலும் ஒரே மாதிரியான சிறப்புப் பெயர்களை மட்டுமே கொண்டுள்ளன. அப் பட்டப் பெயர்கள் சில மன்னருக்குப் பலவாகவும் சிலருக்குச் சில வாகவும் அமைந்துள்ள தன்மையே அவற்றுள் வேறுபாடாகக் காணமுடிகிறது.

ஒருவரி இரண்டு வரிகளில் அமைந்த மெய்க்கீர்த்திகள் நூற்றுக் கணக்கில் உள்ளன. அம்முறை அனைத்து மன்னரின் கல்வெட்டு களிலும் காணப்படுகிறது. சான்றாகச் சிலவற்றை மட்டுமே பிற மெய்க்கீர்த்திகள் என்ற தலைப்பில் தொகுத்துத் தந்திருக்கிறேன். எழுபத்தைந்து மெய்க்கீர்த்திகள் தொகுக்கப்பட்டுள்ளன என்ற செய்தியை அறிந்த பேராசிரியர் பலர் இவ்வளவுதானா? ஏராள மாக உள்ளனவே! என்றார்கள். எழுநூற்றுக்கும் மேற்பட்ட மெய்க்கீர்த்திகள் ஒப்பிடப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலும் மெய்க்கீர்த்திகள் வெளியாகியுள்ள இடங்கள் என்ற தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளது.

**பதிப்பு முறை** — மூலப்படிகளின் வடிவம் காப்பாற்றப் பட வேண்டும். இச்செயல் தென் இந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் போன்றவற்றில் செய்யப்பட்டுள்ளது. இனி அவற்றைத் தூய்மை யாக்கி, எளிமைப்படுத்தித் தருவதே பயனுள்ளதாக அமையும் ஆதலின் எழுதுவோர், கல்லில் வெட்டுவோர் போன்றவர்களால் ஏற்பட்டபிழைகளை ஓரளவு நீக்கித் தூய்மைப் படுத்தியும், கடினமான தொடர்கள் சிலவற்றைப் பிரித்து எளிமைப்படுத்தியும் பதிப் பிக்கும் முறை கையாளப்பட்டுள்ளது. அவற்றிலும் சில குறைபாடு

கள் உள்ளன. மீண்டும் மீண்டும் படிக்கும் போதுதான் அக்குறை பாடுகள் வெளியாகின்றன. அச்சாகிவிட்ட நிலையில் புலப்பட்ட சில குறைகள் திருத்தம் பெறவேண்டுவனவாகும்.

**நன்றி** — நூல் தோன்றி உருவாக முதற்காரணமாக இருந்தவர்கள் நிறுவன இயக்குநர் வணக்கத்திற்குரிய **டாக்டர் ச. வே. சுப்பிர மணியன்** அவர்கள் ஆவார்கள். அவர்களுக்கு உளமார்ந்த நன்றியை உரித்தாக்கும் கடப்பாடு உடையேன். தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகள் சிலவற்றைச் சொந்தமாகப் பெற்று வைத்திருந்து, மன முவந்து கொடுத்து உதவியவர்கள், சென்னைப் பல்கலைக் கழகத் தொல்பொருள் ஆய்வுத்துறைத் துணைப்பேராசிரியர் **டாக்டர் சண் முகம்** அவர்கள். தொடக்கம் முதல் நூல்களிலிருந்து படியெடுத்து முழுமையாக்கித் தந்து உதவியவர்கள் **திருமதி ந. விசயா, எம்.ஏ., பி.லிட்., பி.எட்.,** அவர்கள். தெலுங்கு இலக்கணம், சொற்றொடர் கள் பற்றிய விளக்கத்தைத் தந்து உதவியவர்கள் தெலுங்குப்புலவர் **திரு தீ. ஸ்ரீதரமூர்த்தி** அவர்கள். சுவடிஇயல் ஆராய்ச்சி உதவியாளர் களாகப் பணியாற்றும் **திரு வே. இரா. மாதவன் எம்.ஏ.,பி.எஸ்.ஸி., பி.எட்.,** அவர்களும் **திருமதி மா. சத்தியபாமா, பி.எஸ்.ஸி.,** அவர் களும் தூயபடிகள் எழுதுவதிலும் சொற்பட்டியல் முதலியன தயா ரிப்பதிலும் முழுமையான ஒத்துழைப்பினைத் தந்தார்கள். **திரு. சி. கிருஷ்ணமூர்த்தி** அவர்கள் புகைப்படப்படி முதலியன எடுத்து உதவி புரிந்தார்கள். மெய்க்கீர்த்திகள் வெளியாகியுள்ள இடங்களைத் தொகுத்தல், அருஞ்சொற்களைத் தொகுத்தல், ஆகிய பணிகளில் சுவடிஇயல் மாணவர்களான **திரு. துரேந்திரநாதன், திரு. விநா யகம், திரு. ஜான் செல்வராஜ், செல்வி. க. லலிதாம்பிகா, செல்வி. தி. லலிதா** ஆகியோர் பெரிதும் துணைபுரிந்தார்கள். அச்சுப்படி யினைத் திருத்துதல், சொல் அட்டைகள் தயாரித்தல் போன்ற வற்றைச் செய்தவர்கள் **சு. இளங்கோ (பி. காம்.,) சு. இளவரசு, சு. இளம்வேள்** ஆகியோர். அனைவருக்கும் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

மனநிறைவு தருமாறு பொறுப்போடு நூலினை அச்சிட்டுத் தந்த, சுதா பிரிண்டர்ஸ், சென்னை-14, **திரு. வி. சுப்பிரமணியன்** அவர்களுக்கு மனமுவந்த நன்றி.

**சென்னை-600 113.**
**3—8—1983.** **பூ. சுப்பிரமணியம்**

# Introduction

A Scheme to theorise Tamil language and Literature was first designed by the International Institute of Tamil Studies in 1974. In the same year on November 28th a seminar was organised under the presidentship of former Vice-chancellor of Madras University Thiru. *N. D. Sundara Vadivelu*. On that occasion *Dr. S. V. Subramanian*, Director of I. I. T. S. presented a paper, theory on Tholkapiyam. In the 84th seminar held on 24-9-'81. I had an opportunity to present a paper theorising Monarchic magnificence (Meykkirthy). Dr. T. V. Veerasamy, Associate prof. of I. I. T. S. raised a question whether this subject could be a Tamil Literature. Hence, I bring forword this theory to held my opinion.

While confessing some delay in bringing out this edition I take this opportunity to express the travails experienced due to inadequak fecelity in consulting all the 23 Vols. of South Indian Inscriptions from where I had to select topics suited for my work. Though the Institutions like, Madras University Library, Archaeological Dept. Library. of Madras University, Govt. Oriental Manuscripts Library, Marai Malai Adigal Library and connimara Public Library are the main sources, where these volumes are supposed to be available, none of them possessed this work comprising all the 23 Volumes. So, I was driven from Pillar to Post to consult the necessary inscriptions from differant Institions. To cite a piece of my agony, strain and stress I am constrained to say that I was not even permitted to consult certain vols. in the Archaeology department of Tamil Nadu when approached with an authorisation letter from the Director of I. I. T. S. Anyhow without Prejudice to my normal official works I went to these Institutions only cn holidays and acquired the needed copies either by transcribing or taking Photostat copies. Inspite of lack of time to finish the work as it is found in the incriptions I spared no pain to make some variations from the original script to suit the posterity. I thought it must to transform the script with glaring erratum to fecilitate easy and proper understanding. By virtue of my experience in

imparting knowledge on similar subjects for Post graduate students of various Institutions. I have made some comments also appropriate to the context.

The work is devided with three dynasty namely chola, Pandiya and Vijaya nagara and the events arranged are chronological.

Root cause for bringing out this Publication is the inspiration and guidelines derived from the respected Director of International Institute of Tamil Studies *Dr. S. V. Subramanian.* Since I do not find words to express my gratitude to him I sincerely keep my feelings in mind for ever.

I sincerely thank *Dr. Shanmugam,* Asst. Professor, Archaelogy Dept. Madras University for giving me his own copies of certain Vols. and thus helping in a big way to alleviate my difficulties.

Contribution of Tmt. *N. Vijaya,* M. A., B. Lit., B.Ed., is immeasurable in respect of this work as she played sheet - anchor role from preparation of Press copy to the completion of the entire work.

I owe my thanks to Thiru. *T. Sreedhara murthy,* Telugu Pandit, Govt. Oriental Mss. Library for making certain Telugu terms understandable.

My sincere thanks are due to thiru *V. R. Madhavan,*M.A., B. Sc., B. Ed., and Mrs. *M. Sathyabama,* B. Sc., Research Assistants of I.I.T.S. for their help in preparing fair copy, Index etc. Thiru. C. Krishnamurty, Thiru. Thurendra Nathan, Thiru. Vinayakam Thiru. John Selvaraj, Selvi. G. Lalithambika, and Selvi. T. Lalitha students of Manuscriptology also deserve my thanks for their contribution in preparation of various indices.

My hearty gratitude to selvan *S. Ilango* (B.Com), Selvan *S. Ilavarasu,* and Selvan *S. Ilam Vel* for correcting proof and helping in various aspects of the finishing of this work.

I whole heartedly thank Thiru. *V. Subramanian,* Sudha Printers for printing this work with appriciable fortitude.

Madras-600 113.<br>3—8—1983

P. SUBRAMANIAM

# மெய்க்கீர்த்தி இலக்கியம்

## 1. முன்னுரை

"தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தன் புகழ்தல் தகுதி அன்று"[1]

என்பது தமிழர்தம் பண்பாடு. சிறந்ததுதான். ஆனால் அது தமிழர் வரலாற்றையே மறைத்து விட்டது. பழந்தமிழர் நாகரிகத்தை அறிய, பண்பாட்டை அறிய, வரலாற்றை அறிய இன்று இலக்கியங்களைத் துழவ வேண்டியிருக்கிறது; சிற்பங்களைத் தேட வேண்டியிருக் கிறது; ஓவியங்களைக் காண வேண்டியிருக்கிறது; நாணயங்களை நாட வேண்டியுள்ளது. நயமும் நுட்பமும் அழகும் திறனுமாகிய வற்றை அவற்றிலிருந்து சுவைத்துத் துய்க்க இயலாமல் போகிறது. சுவைக்கும் இன்பத்தைத் துறந்து முயற்சி செய்தாலும் முழுமையான வரலாற்றை, தெளிவான வரலாற்றை, விளக்கமான வரலாற்றைக் காலக் கணிப்போடு அறியவும் முடிவதில்லை. காரணம் அம்மூலங் களாகிய இலக்கியம், சிற்பம், ஓவியம், நாணயம் போன்றவை எல்லா வகையிலும் தெளிவு பெற உதவுவதில்லை. அவற்றுள்ளும் அழிந் தவை பல; மாற்றம் பெற்றவை பல. இந்த நிலையில் வரலாற்றாசிரி யர்களுக்கு முழுமையான அளவு என்று கூற இயலவில்லையாயினும் மிகுதியான அளவு துணை செய்வன கல்வெட்டுகளும் செப்பேடு களுமே என்பது மிகையாகாது. அவையும் முழுமையாகக் கிடைக்க வில்லை. குறையானவை பல; ஒரு சில வரிகளே உடையவை பல; பொறிந்து போனவை சில; தெளிவற்றவை சில. இவ்வகைக் குறை பாடுகள் பல இருப்பினும் அவை மாற்றம் பெறாதவை என்பது உறுதி.

அக்கல் வெட்டுகளைப் பற்றி முழுமையாக ஆய்வது இக்கட்டு ரையின் நோக்கம் அன்று. அறக்கட்டளைகளும் ஆணைகளும் போன்ற செய்திகளைத் தாங்கியவை அக்கல்வெட்டுகள். அவற்றுள் ஒரு பகுதியாக—முன் பகுதியாக—விளங்குவன மெய்க்கீர்த்திகள். அவை தமிழ் மன்னர்தம் வரலாற்று இலக்கியங்களாக விளங்கு

---

1. நன்னூல் 52.

கின்றன. அவ்வரலாற்று இலக்கியங்களைத் தொகுத்துத் தருகிறது இந்நூல். தொகுக்கப்பட்டுள்ள வரலாற்று இலக்கியங்களைப் பற்றிய ஆய்வுரையே இக்கட்டுரையாக அமைகிறது.

இக்கட்டுரை முறையே,

1. முன்னுரை 2. கல்வெட்டு 3. மெய்க்கீர்த்தி 4. மெய்க்கீர்த்தியின் இலக்கணம் 5. மெய்க்கீர்த்தி இலக்கியமா ? 6. கொள்கைகள் என்ற ஆறு தலைப்புகளில் அமைகிறது.

## 2. கல்வெட்டு—சொல்லும் பொருளும்

கல்லில் பொறிக்கப்பட்ட செய்திகள் கல்வெட்டு என்னும் சொல்லால் குறிக்கப்படுகின்றன. கல்வெட்டு என்ற சொல்லுக்கு அகராதிகள், அழியாத சொல், ஓர் பிரபந்தம், சிலாசாசனம், புகழ்ச்சிச் செய்யுள், கல்லெழுத்து, முன்னோர் இறந்த நாள் முதலியவற்றைக் குறிக்கும் புகழ்ச்சிச் செய்யுள், சரமகவி (Elegy) unalterable word, as if engraven on stone என்பன போன்ற பல பொருள்களைக் கூறுகின்றன.

சிலாசாசனம் என்பது வடசொல், சிலை = கல்; சாசனம் = ஆணை, உறுதிமொழி; கல்லிலே பொறிக்கப்பட்ட செய்தி எனப் படுகிறது. சிலாலேகை என்பதும் அப்பொருளதே. கல்வெட்டுகளைப் பொறிப்புகள் என்றும் வரலாற்றறிஞர் குறிப்பிடுவர்.

> "தென்னிந்திய வரலாற்றுக்கு—பொறிப்புகள்
> மிகவும் உண்மையாண ஆதாரங்களாக இருக்கின்றன"[1]

என்பது அவ் அறிஞர் கூற்று.

### 2.1. தோற்றம்

1. ஓலை—மன்னருடைய ஆணைகள், ஊர் மன்றங்களில் நடைபெறும் செயல்கள், புலவர் பெருமக்களின் பாடல்கள் போன்றவை முதலில் ஓலைகளில் எழுதப்பட்டன. இவை 'பிடிபாடுகள்' எனப் பட்டன. ஓலைப்பிடிபாடுகள் எனவும் கூறுவர்.

2. செப்பேடு—இவ்வாறு ஓலைகளில் எழுதப்பட்டவை அழியக் கூடியவை; இவற்றைத் திருத்தி எழுதி வைக்கவும் முடியும். அழிவும் திருத்தமும் அடைவதைத் தடுக்க வன்மையான பொருள்களில்

---

1. தென்னிந்திய வரலாறு பக். 21.

எழுதி வைக்கும் செயல் மேற்கொள்ளப்பட்டது. இச்செயலால் உருவானவை செப்பேடுகளும் பிற உலோகத் தகடுகளில் எழுதப் பட்ட செய்திகளுமாகும்.

''மறைஓத பன்னிருவர்க்குக் காராண்மை மீயாட்சி உள்ளடங்கக் கண்டமைத்துச் செப்பேடு செய்து கொடுத்தருளினன்...
......சோமாசிக் குறிச்சியிது... காடக சோமயாஜியார்க்கு ஏக போகமதுவாக எழிற் செப்பேட்டோடு கொடுத்தனன்''[1]

3. வெள்ளி—''டச்சுக் காரர்களுக்கு 1658 இல் தஞ்சை விஜய ராகவ நாயக்கர் அளித்த பட்டயமும், 1676இல் ஏக்கோஜி அளித்த பட்டயமும் வெள்ளித் தகடுகளில் பொறிக்கப் பட்டிருக்கின்றன. அவை முன்னர் பட்டேவியா என்று வழங்கிய ஜாக்கர்த்தாவின் பொருட்காட்சிச் சாலையில் இருக்கின்றன''[2]

உலோகத் தகடுகளில் செய்திகள் பொறிக்கப்பெற்றன என்பதை இக்கூற்றுகள் எடுத்துக் காட்டுகின்றன.

4. கல்—''ஏடுகள் உராய்ந்து தேய்ந்து போகாதபடி ஒவ்வொரு செப்பேட்டின் விளிம்புகளும் சற்றுத் தடிப்பாக உள்ளன. முதல் ஏடும் இறுதி ஏடும் ஒரு பக்கம் மட்டும் (உட்பக்கம்) எழுதப்பட்டுள்ளன. பிற ஏடுகள் (உள்ளே உள்ளவை) இருபுறமும் எழுதப்பட்டவை''[3] என்னும் செய்தியால் செப்பேடுகளில் எழுதப் பெற்றவையும் அழியா மல் இருக்க வேண்டும் என்பதற்காக அவ் ஏடுகளின் அமைப்புகளும் எழுது முறைகளும் இவ்வாறு அமைக்கப்பட்டன என்பதை அறிய முடிகிறது. ஆனால், இச்செப்பேடுகளும் போர்ச் செயல் போன்ற வற்றால் அழிவுறுகின்றன என்பதை, ''இவ்வூரிரண்டின் செப்பேடு மறக் கேட்டில் இழந்து போயின''[4] என்னும் விண்ணப்பக் கூற்று விளக்குகிறது. எனவே, வன்மையான பொருளில் எழுதி வைத்தல் என்னும் முறை கல்லுக்குத் தாவியது. அதாவது ஆணைகளும் அறச் செயல்களும் நிலையாக இருக்கவேண்டும் என்பது தமிழர் குறிக்கோள். அவை ஒரே இடத்தில் முடக்கி வைக்கும் நிலையில் அமைந்து விடக்கூடாது என்றும் கருதினர். பலரும் அறிய வேண் டும் என்ற இன்றியமையாமையும் உருவாயிற்று. எனவே எந்த ஒரு செய்தியையும் கல்லில் பொறித்தனர்; பலரும் காணுமாறு கோயிலின் ஒரு புறத்தே நட்டு வைத்தனர். கற்கோயில்கள் இல்லாதபோது பாறைகள், குன்றுகள் போன்றவற்றில் பொறித்துப் பலரும் காணு மாறு செய்தனர்.

---

1. பாண்டியர் செப்பேடு பத்து பக். 2. தென் இந்திய வரலாறு பக். 26.
3. பாண்டியர் செப்பேடு பத்து - பக். 50. 4. பாண்டியர் செப்பேடு பத்து பக்.

"நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம்—கல்மேல்
எழுத்துப் போல் காணுமே"[1]

என்னும் ஔவையார் கூற்றுப்படி நல்லவை, நிலையானவை கற்களில் பொறிக்கப்பட்டன.

"செம்பிலும் சிலையிலும் வெட்டுவித்துக் கொள்க"[2]
"செம்பிலும் சிலையிலும் வெட்டிப்பரிப்பித்துக் கொள்க"[3]
"சந்திராதித்தவரை செல்வதாகச் செய்து கொடுத்தேன்;
கல்வெட்டிக் கொடுத்தேன்"[4]

என மன்னர்களே இசைவு வழங்கித் தம் ஆணைகளைச் செம்பிலும் கல்லிலும் வெட்டச் செய்துள்ளனர்.

"ஆக, இப்படி உடையார் ஸ்ரீ ராஜராஜதேவர் திருவாய்
மொழிந்தருளினபடி கல்லில் வெட்டியது"[5]
"திருவாய்க் கேழ்விப்படி கல்லில் வெட்டித்து"[6]

கல்லில் வெட்டியவர்களும் இவ்வாறு உறுதிபடுத்தியுள்ளனர்.

## 2. 2. செய்திகள்

இக்கல் வெட்டுகளில் அரசு ஆணைகளும் கொடைகளும், அறச் செயல்களும் மறச் செயல்களும் பொறிக்கப் பெற்றன.

"காந்தளூர் மர்யாதையால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்குச்
சாலையும் செய்தான் ஸ்ரீ கோக்கரு நந்தடக்கன்"[7]
"படாரிக்கு நவகண்டங் குடுத்து, குன்றகத்
தலையறுத்துப் பிடலிகை மேல் வைத்தானுக்கு.....
தொறுப்பட்டி நிலம் குடுத்தார்கள்"[8]
"காரிப் பெருமான் தன் உரையில் அம்புமாள
எவ்விப் பத்திரம் உருவி எதிரே சென்று பட்டான்"[9]

என்பன போன்ற பல செய்திகள் அறச் செயல்களும் மறச் செயல்களும் ஆணைகளுமாகக் கல்வெட்டுகளில் காணப் படுகின்றன. இவ்வாறான கொடைகளும் அறச்செயல்களும் மன்னர்களால் செய்யப் பெற்றவை மட்டுமல்ல. அரசமகளிர் செய்துள்ள அறங்கள் பல; அரசு அலுவலர்கள் அளித்துள்ளவை பல; நகரப் பெருமக்களும் குடிமக்களும் கொடுத்தவை உள்ளன; அவற்றுள் மகளிர் அளித்தவையும் உண்டு.

---

1. மூதுரை—பா. 2. 2. கல்வெட்டியல் பக். 126. 3. ஷை பக். 128. 4. குலசேகர மாண்டியன் கல்வெட்டு—புதுக்கோட்டைக் கல்வெட்டு எண். 246. 5. தெ. இ. க. தொகுதி 2—பகுதி 3—எண் 65. 6. தெ. இ. க. தொகுதி 2—பகுதி 1. எண் 20. 7. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) எண் 5—பக். 23. 8. ஷை எண் 16 — பக். 67. 9. ஷை எண். 15—பக். 66.

"திருப்பதியம் விண்ணப்பம் செய்ய உடையார்
ஸ்ரீ இராசராச தேவர் கொடுத்த பிடாரர்கள்"[1]

என்பது மன்னவன் செய்த கோயில் திருப்பணியைக் குறிப்பது.

"குந்தவையார் தாம் எழுந்தருளுவித்த திருமேனி
களுக்குக்கொடுத்த பொன்"[2]

என்பது அரச மகளிர் செய்துள்ள அறச்செயல்களுக்கு ஒரு சான்று.

"கீழ் இரணிய முட்டத்துப்படும்...... நரசிங்க மங்கலத்துச்
சபையோம்......ஒட்டிக் கொடுத்த பரிசாவது"[3]

இதில் நகரப் பெருமக்களது அறச்செயல் குறிப்பிடப்படுகிறது.

"புகழ்த்துணை விசையரயன் தர்மம் இது"[4]

"சோழ நாட்டுச் சோழனார் உலகப் பெருமானார்
வைத்த திருவிளக்கு முதல்"[5]

"ஸ்ரீ இராஜராஜீஸ்வரமுடையார்க்கு ஸ்ரீ காரியம் செய்கின்ற
பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான......
வேளான் எழுந்தருளுவித்தச் செப்புப் பிரதிமங்கள்"[6]

என்பன அரச அலுவலர் பலராலும் செய்யப்பட்ட அறச்செயல்களைச் சுட்டுவன.

"வழி மல்லியூர் இருக்கும் வியாபாரி நந்நப்பய்யன்
மணவாட்டி சாமுண்டப்பை வைத்த நந்தா விளக்கு"[7]

இது குடிமக்களுள் மகளிரும் அறச் செயல்கள் பல செய்துள்ளனர் என்பதற்கு ஒரு எடுத்துக் காட்டு. இவை கற்களிலே வெட்டப்பட்ட தோடு செப்பேடுகளிலும் பொறிக்கப் பெற்றுள்ளன.

## 2.3. கல்வெட்டுகள் பெறும் பெயர்கள்

கல்வெட்டுகளும் செப்பேடுகளும் நம் நாட்டில் தமிழ், தெலுங்கு, கன்னடம், வடமொழி, பிராக்கிருதம் முதலிய பல மொழிகளில் பொறிக்கப்பட்டுள்ளன. சில இருமொழிகள் கலந்து எழுதப்பெற்றுள் ளன. தனியே தமிழ் மொழியால் ஆன கல்வெட்டுகளில் கூடக் கிரந்த எழுத்துக்களால் எழுதப்பட்டவை பல. வடமொழிச் சொற் கள் கலந்தவை மிகப்பல. பல செய்யுள் நடையில் அமைந்துள்ளன. சில உரை நடையில் உள்ளன; சில கலந்தும் காணப் பெறுகின்றன.

---

1. தெ. இ. க. தொகுதி 2—பகுதி 3—எண். 65. பக். 259. 2. ஷை தொகுதி 2. பதிகு 1. எண். 7. பக். 77. 3. தெ. இ. க. தொகுதி 2 பகுதி 3-3. எண். 106. பக். 239. 4. எபி. இண்டிகா. 8. எண். 29. பக். 296. 5. தெ. இ. க. 12. எண். 48. பக். 18. 6. தெ. இ. க. தொகுதி 2.2 —எண். 88. 7. தெ. இ. க. 1— எண் 67. பக். 99.

இவை அனைத்தும் எவ்வாறு பெயர் பெற்றுள்ளன என்பதைக் கீழ் வருமாறு முறைப்படுத்தலாம்.

1. பொருள்—செய்திகள் பொறிக்கப் பெற்ற பொருள்களால் கல்வெட்டுகள் பெயர் பெறுகின்றன. நடுகல், கல்வெட்டு, குகைக் கல்வெட்டு, செப்பேடு. செப்புப் பட்டயம், தாமிரப் பட்டயம், தாமிர சாசனம் என்பன அவ்வாறு பெயர் பெற்றவையாகும்.

2. இடம் — தளவானூர்க் குகைக் கல்வெட்டு, அசோகன் பாறைக் கல்வெட்டு, திருநாதர் குன்றுக் கல்வெட்டு, ஆனைமலைக் கல்வெட்டு, செந்தலைத் தூண் கல்வெட்டு போன்றவையும் பொறிக்கப்பட்ட பொருளால் அல்லது இடத்தால் பெயர் பெற்றவை எனலாம்.

3. எழுத்து—வட்டெழுத்துக் கல்வெட்டு, கிரந்தக் கல்வெட்டு, தமிழ்ப் பிராமிக் கல்வெட்டு, கிரந்தத்தமிழ்க் கல்வெட்டு போல்வன பொறிக்கப் பட்ட எழுத்துகளால் பெயர் பெற்றவை.

4. மொழி—தமிழ்க் கல்வெட்டு, வடமொழி சாசனம், பிராக்கிருத சாசனம், தெலுங்கு சாசனம், கன்னட சாசனம், வடமொழி — தமிழ்க் கல்வெட்டு, (இருமொழிக் கல்வெட்டு) என்பன எழுதப் பெற்ற மொழியால் பெயர் பெற்றவை.

5. மன்னர் குலம் — பல்லவர் கல்வெட்டு, பாண்டியர் கல் வெட்டு, சோழர் கல்வெட்டு, சேரர் கல்வெட்டு, பல்லவர் செப்பேடு..................போன்றவைமன்னர் குலப் பெயரால் பெயர் பெற்றவை.

6. மன்னர் பெயர்—அசோகர் கல்வெட்டு. இராசராசன் கல் வெட்டு, சுந்தர பாண்டியன் கல்வெட்டு, கிருஷ்ணதேவராயர் கல்வெட்டு, சிம்மவர்மன் செப்பேடு போன்ற பெயர்கள் கல் வெட்டிற்குரிய, கல்வெட்டைத் தோற்றுவித்த மன்னர்களின் பெயரால் அமைந்தவை.

7. ஊர்—வேள்விக்குடிச் செப்பேடு, திருவையாறு கல்வெட்டு, பழமங்கலம் கல்வெட்டு, உக்கல் கல்வெட்டு, கூரம் செப்பேடு,

திருப்பதி தேவஸ்தானக் கல்வெட்டு போன்ற பெயர்கள் கல்வெட்டுச் செய்திகளுக்குரித்தான ஊர்களின் பெயரால் அமைந்தவை.

8. கிடைத்த இடம்—வெண்குன்றக் கோட்டத்துப் பெருநகர நாட்டு அமண் சேர்க்கைப் பருத்திக் குன்று என்னும் இடத்தைத் (வடார்க்காடு மாவட்டம் வந்தவாசி வட்டம்) தானமாகக் கொடுக்கப் பட்ட செய்தியடங்கிய செப்பேடு, தஞ்சை மாவட்டம், திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள பள்ளன் கோயில் என்ற ஊரில் கிடைத்ததால் இது பள்ளன் கோயில்செப்பேடு, எனப் படுகிறது. இது போலவே செப்பேடுகள் போன்றவை கிடைத்த இடத்தால் பெயர் பெற்றவை சில உள்ளன. தளவாய்புரச் செப்பேடு, சிவகாசிச் செப்பேடு போன்றவை இத்தகைய பெயர் பெற்றவையே.

9. இருக்கும் இடம்—நாகப்பட்டினத்தில் எடுக்கப் பட்ட பௌத்தப் பள்ளிக்கு ஆனைமங்கலம் என்னும் ஊரில் உள்ள நிலத்தைப் பள்ளிச் சந்தமாக அளித்தான் இராசராசன். இந்தச் செப்பேடு இப்போது ஆலந்து நாட்டில் லெய்டன் நகரில் இருக்கிறது, எனவே இது லெய்டன் செப்பேடு என்று இப்போது இருக்கும் இடப்பெயரால் வழங்கப் படுகிறது.

10. இடமும் செய்தியும்—குடுமியா மலை இசைக்கல்வெட்டு, உத்திரமேரூர் குடவோலை முறைக் கல்வெட்டு, தஞ்சை திருப்பதியக் கல்வெட்டு போன்றவை ஊர்ப் பெயரோடு, அடங்கிய செய்திகளை இணைத்துப் பெயரிடப் பெற்றுள்ளன.

## 2.4. பழமை வாய்ந்த கல்வெட்டு

"இதுவரை கிடைத்துள்ள தமிழ்ச் சாசனங்களில் பழமையானது செஞ்சிக்கு அடுத்த திருநாதர் குன்றில் உள்ள சாசனம் என்று இன்றைய ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்"[1]

அந்தத் திருநாதர் குன்று கல்வெட்டு :

> "ஐம்பத்தேழு அனசனம் நோற்ற சந்திரநந்தி ஆசிரிகர் நிசீதிகை"[2]

> "வட்டெழுத்துக் கல்வெட்டுகளில் இதுவே தொன்மை வாய்ந்த தாகக் கருதப்பட்டது. இப்போது இதற்கும் காலத்தால் முற்பட்ட பல வட்டெழுத்துக் கல்வெட்டுகள் கிடைத்துள்ளன"[3]

---

1. தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள்—ஆராய்ச்சியுரை பக். 12. 2. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) பக். 62. 3. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) இரண்டாம் பகுதி பக். 41.

என்பது திரு நடன காசிநாதன் அவர்களது கூற்று. அவர் கி. மு. மூன்றாம் நூற்றாண்டு, இரண்டாம் நூற்றாண்டுகளுக்குரிய கல் வெட்டுகளாக

'மீனாட்சிபுரம் கல்வெட்டு'
'சித்தன்னவாசல் கல்வெட்டு'

போன்றவற்றை எடுத்துக் காட்டுகிறார்.

## 2.5. அமைப்பு

இக் கல்வெட்டுமுறை பல்லவர் காலத்தில் விரிவடைந்துள்ளது. அவர்கள் கற்கோயில்களை மிகுதியாகக் கட்டினார்கள். அக்கோயில் களில் எல்லாச் செய்திகளையும் பொறிக்கும் வாய்ப்பு அவர்களுக்கு ஏற்பட்டது. பிற்காலச் சோழர் காலத்தில் இக்கல்வெட்டுமுறை இலக்கிய நடையில் ஒழுங்கு படுத்தப் பட்டுள்ளது. இவ் ஒழுங்கு முறைக் கல்வெட்டுகளின் அமைப்பை ஏழுபகுதிகளாகப் பிரிக்கலாம். அவை, 1. மங்கலச் சொல் 2. மெய்க்கீர்த்தி 3. பட்டப் பெயர், இயற்பெயர்கள் 4. கல்வெட்டின் ஆண்டு 5. ஆணை அல்லது அறச் செயல்களாகிய செய்திகள் 6. எழுதி அமைத்தவர், பொறித் தவர் பெயர்கள் 7. காப்பு நிலை என்பனவாகும்.

இவ் அமைப்புடைய கல்வெட்டுகளை அவற்றில் காணும் பொருள் அடிப்படையிலும் ஏழுவகைப் படுத்தலாம். அவை பின் வருமாறு

1. கொடைக் கல்வெட்டுகள். 2. இலக்கியக் கல்வெட்டுகள். 3. வரலாற்றுக் கல்வெட்டுகள். 4. சமயக் கல்வெட்டுகள். 5. வாழ்க்கைக் கல்வெட்டுகள். 6. அரசியல் கல்வெட்டுகள். 7. போலிக் கல்வெட்டுகள்.

பொருள் அடிப்படையில் அமைந்த இவற்றைத் தனித்தனியே காண இயலாது. சமயமும் வரலாறும் உணர்த்தும் கல்வெட்டு; சமயமும் கொடையும் உணர்த்தும் கல்வெட்டு; வாழ்க்கையை உணர்த்தும் இலக்கியக் கல்வெட்டு எனத் தொடர்புடைய செய்திகள் பலவற்றை உணர்த்துவனவாக அமையும்.

## 2,6. வகை

இத்தகு கல்வெட்டுகளை அமைப்பு அடிப்படையில் இரண்டு வகைப்படுத்தலாம். அவற்றுள் ஒன்று மெய்க்கீர்த்திகள்; மற்றொன்று மெய்க்கீர்த்தியல்லாத பிற கல்வெட்டுகள் எனப்படும்.

"சாசனச் செய்யுள்களை மெய்க்கீர்த்திகள், மெய்க்கீர்த்திகள் தவிர்த்த பிற செய்யுள்கள் என இரண்டாக வகுக்கலாம்"[1] என்பது திரு ஆ. வேலுப்பிள்ளை அவர்களின் கருத்தாகும்.

பொதுவாகக் கல்வெட்டுகள் அனைத்துமே தனி இலக்கியப் பண்புடையனவாகத் திகழ்கின்றன. சிறப்பாக அவற்றுள் வரும் மெய்க்கீர்த்திகள் எல்லாம் இலக்கிய வளம் பொருந்தியனவாய், இலக்கண அமைதி பெற்று விளங்குகின்றன. அம்மெய்க்கீர்த்திகளின் இலக்கிய வளங்களையும், இலக்கண அமைதிகளையும் சிறப்புக் கொள்கையாகவும் பொதுக்கொள்கையாகவும் பகுத்துக் காண விழைவதே இக்கட்டுரையின் முயற்சியாகும்.

## 3. மெய்க்கீர்த்தி

*3. 1.* சொல்லும் பொருளும் - மன்னனது உண்மையான புகழை எடுத்துக் கூறுவது மெய்க்கீர்த்தி எனப்படுகிறது. அதாவது உண்மையான புகழுக்குக் காரணமாகிய குணங்களையும் செய்கைகளையும் எடுத்துக் கூறும் இலக்கியம் எனலாம்.

"மெய்ப்பெயர் மருங்கின் வைத்தனர் வழியே" என்னும் தொல்காப்பியக் கூற்றுக்கு,

"மெய்ப்பெயராவன - பாட்டுடைத்தலைவர் பெயரும் நாடும் ஊரும் முதலியனவாம்"[2] என்று உரை கூறுவர் நச்சினார்க்கினியர். எனவே மன்னனுக்கே உரித்தாகிய உண்மைப் புகழினை எடுத்துக் கூறும் இலக்கியமே மெய்க்கீர்த்தி எனப்படுகிறது என்று கொள்ளுவது பொருத்தமாகிறது.

இவ்வாறு மெய்ப்புகழ் பாடும் மரபில் பாடப்பெற்றுக் கல்வெட்டுகளில் அமைந்த பகுதிகள் மட்டும் பிற்காலத்தே அர்த்தநாரீ வடிவில் பெயர் பெற்றுவிட்டன. தமிழ்ச்சொல் ஒன்றும் வட்சொல் ஒன்றுமாகக் கலந்து அமைந்தது இத்தொடர். இத்தொடர் தமிழ்க்கல்வெட்டுப் பகுதிகளில் காணக் கூடவில்லை. பாட்டியல் நூல்களே இத்தொடரை (மெய்க்கீர்த்தி) அறிமுகப்படுத்துகின்றன. அவை மெய்க்கீர்த்திமாலை என்ற ஒரு இலக்கியம் இருந்ததையும் எடுத்து காட்டுகின்றன.

> "கீர்த்தி என்ற வடசொல் பல்லவர் காலத்திலேயே தமிழ்
> மொழியில் பெருவழக்காகி இருக்கவேண்டும்."[3]

---

1. சாசனமும் தமிழும். பக். 234. 2. தொல். பொருள். 87. நச்சர் உரை.
3. சாசனமும் தமிழும் பக். 236.

## 3. 2. தோற்றமும் வளர்ச்சியும்

"தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினும்
தான்தன் புகழ்தல் தகுதி அன்று"[1]

என்னும் தமிழர் பண்பாட்டிற்கும் விதிவிலக்கு உண்டு. அதாவது அரசவைக்கு எழுதும் கடிதம், தன் கல்வியாற்றலை அறியாதார், பேரவையில் ஏற்படும் சொற்போர், தன் எதிரி பழிக்கும் நேரம் போன்ற இடங்களில் தற்புகழ்ச்சி குற்றமாகாது. அவ்விடங்களில் தன்னைப் புகழ்தல் இல்லாத நிலையே குற்றமாகிவிடும். 'செய்தக்க செய்யாமை யானும் கெடும்' என்பது வள்ளுவர் வாக்கு அல்லவா ? எனவே மன்னவர்தம் புகழுக்குரிய குணங்களையும் செயல்களையும் எடுத்துக் கூறி நிலைநிறுத்த வேண்டும் என்ற மரபு மன்னர்களாலும் புலவர்களாலும் தோற்றுவிக்கப்பட்டது.

1. புகழில் விருப்பம் — மன்னர்கள் பல நாடுகளையும் வென்று தங்கள் தங்கள் நாடுகளை விரிவுபடுத்தவேண்டும் என்று விரும்பியது போலவே புகழ் மாலைகளைப் பெறவும் விரும்பினர். வெற்றித்தூண்களை ஆங்காங்கு நாட்டித் தம் புகழ் பரப்பினர். வெற்றி பெற்ற நாடுகளிலேயே வெற்றி விழாக்கள் கொண்டாடினர். இவ்வகையான சிறப்புகளைக் குறித்துப் புகழ் மாலையாகப் பாடிக் கொண்டு வரும் புலவர்களைப் பாராட்டினர். அவர்களுக்குப் பரிசுகள் பல கொடுத்துச் சிறப்பித்தனர். புகழை விரும்புவதும், புகழை எடுத்துக் கூறுவதும் பாடுவதும் ஆகிய இத்தகைய மரபு சங்க காலத்திற்கு முன்பே தொடங்கி விட்டது. இத்தகைய மரபின் வழியே இலக்கணங்களும் தோன்றியுள்ளன.

"வருவிசைப் புனலைக் கற்சிறைபோல்
ஒருவன் தாங்கிய பெருமையும்"[2]

"வென்றோர் விளக்கமும் தோற்றோர் தேய்வும்"[3]

போன்ற பல நிலைகளில் நாடு கவர விரும்பிய மன்னர்களின் திறங் கூறும் வஞ்சித்திணை ;

"உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு"[4]

போன்ற பல திறங் கூறும் உழிஞைத்திணை ;

"மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை அழிக்கும் சிறப்பினை"[5]

---

1. நன்னூல் 52. 2. தொல். பொருள் 63. 3. தொல். பொருள் 63. 4. தொல். பொருள் 67. 5. தொல். பொருள் 70.

உடைய தும்பைத்திணை போன்ற இலக்கணக் கூறுகள் மன்னர் திறம் கூறும் மரபில் தோன்றிய இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு கூறப்பட்டவையாகும்.

ஒருவன் தன்னைப் பிறர் வாழ்த்துதல் வேண்டும்; புகழ்ந்து உரைத்தல் வேண்டும் என்று கருதுகின்ற நிலையில் ஏற்பட்ட இலக்கியங்களுக்கு ஏற்ப,

> ''கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
> அடுத்தூர்ந்து ஏத்திய இயன்மொழி வாழ்த்தும்''[1]

> ''கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்
> ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்
> பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்
> சென்றுபயன் எதிரச் சொன்ன பக்கமும்''[2]

என்னும் பாடாண்திணைக் கூறுபாடுகளும் பிறவும் வகுக்கப்பட்டன வாகும். இவற்றால் அக்காலச் சமுதாயத்தில் பலர் புகழை விரும்பினர் என்ற நிலை தெளிவாகிறது. இப்புகழ் அழியாதிருக்க வேண்டும் என்றும் விரும்பினர். இப்புகழை நிலைநிறுத்தலே விழுமிய குறிக்கோளாகக் கொண்டு செயலாற்றினர். அப்புகழிற்காக உயிரைக் கொடுக்கவும் தயங்கினாரிலர். புலவர் நாவின் மெய்யுரை யாக அப்புகழ் வெளிப்பட வேண்டும் என்று கருதினர். இவ்வாறான கருத்துக்களை இன்று நின்று நிலவும் இலக்கியங்கள் பலவும் நமக்கு உணர்த்துகின்றன. அவை,

> ''நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்
> பாசறை அல்லது நீஒல் லாயே''[3]

> ''ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
> மாங்குடி மருதன் தலைவன் ஆக
> உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்
> புலவர் பாடாது வரைகஎன் நிலவரை''[4]

> ''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்
> தன்புகழ் நிறீஇத் தாம்மாய்ந் தனரே''[5]

> ''புகழ் எனின் உயிரும் கொடுக்குவர் பழியெனின்
> உலகுடன் பெறினும் கொள்ளலர்''[6]

> ''பீடில் மன்னர் புகழ்ச்சி வேண்டிச்
> செய்யாக் கூறிக் கிளத்தல்
> எய்யா தாகின்றுஎம் சிறுசெந் நாவே''[7]

> ''பொய்யா நாவின் கபிலன் பாடிய''[8]

---

1. தொல். பொருள் 90. 2. தொல். பொருள் 91 3. புறம் 31. 4. புறம் 72. 5. புறம் 165. 6. புறம் 182. 7. புறம் 148. 8. புறம் 174.

2. புகழ் பாடுவோர்—இவ்வாறு புகழை விரும்பிய மன்னரும் பிறரும் தம் புகழைப் பாடுதற் கென்றே தங்கள் அவையில் அல்லது தங்கள் பாதுகாப்பில் நிலையாகப் பல புலவர்களையும் கவிஞர் களையும் நியமித்து வைத்திருந்தனர். பிற மன்னர்களது அவையி லிருந்து வரும் புலவர்களும் தம்மைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற வழி வகைகளையும் செய்திருந்தனர். `புகழ் விரும்பிய இம்மன்னரது மரபினால்தான் 'கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு' என்னும் பழமொழியும்

"மன்னவனும் நீயோ வளநாடும் உன்னதோ
உன்னையறிந் தோதமிழை ஓதினேன்—என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு."[1]

என்னும் கம்பனின் பாடலும் தோன்றின.

3. இறை புகழ் பாடும் மரபு—இத்தகைய நோக்கங்களாலும் செயல்களாலும் பேரரசர்களும், குறுநில மன்னர்களும் வள்ளல்களும் புகழ்ந்து பாடப்பட்டனர். இவ்வாறே தெய்வத்தைப் புகழ்ந்து பாடும் மரபும் தோன்றியது.

"இடியென முழங்கு முரசின்
வரையா ஈகைக் குடவர் கோவே"[2]

"நீயே அமர்காணின் அமர்கடந்தவர்
படை விலக்கி எதிர் நிற்றலின்
வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு
கேள்விக் கினியை கட்குஇன் னாயே"[3]

என்பன போன்ற வாகைத் திணைப் பாடல்கள் பலவும்,

"ஐம்பெரும் பூதத்து இயற்கை போலப்
போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்
வலியுந் தெறலும் அளியும் உடையோய்"[4]

என்பது போன்ற பாடாண் திணைப் பாடல்கள் பலவும் மன்னர்தம் புகழை நிலை நிறுத்தும் நோக்கில் தோன்றியனவே.

"அறுவர் பயந்த ஆறமர் செல்வ !...
செருவில் ஒருவ ! பொருவிறல் மள்ள !...
மைந்தர் ஏறே !... குறிஞ்சிக் கிழவ !...
பெரும் பெயர் முருக !... இசை பேராள !...[5]

---

1. தனிப்பாடல் திரட்டு—பக். 99. பா. 268. 2. புறம் 17. 3. புறம் 167.
4. புறம் . 5. திருமுரு. 255 முதல்.

என்பன இறைவனின் புகழ் பாடும் மரபில் தோன்றிய புகழ்த் தொடர்களாகும். புறநானூறும் பதிற்றுப் பத்தும், பத்துப் பாட்டும் இவ்வாறே அரசர்தம் புகழ்பாடும் மரபில் தோன்றிய இலக்கியங்களாகும். களவழி நாற்பதும், நந்திக் கலம்பகமும், பாண்டிக் கோவையும் முத்தொள்ளாயிரமும் பிற்கால இலக்கியங்களாக இம் மரபில் தோன்றியனவாகும்.

4. புகழ் வடிவம் பெறல்—இவ்வாறு பாடப் பெற்ற புகழுரைகளையும் பிறவற்றையும் நிலை பெறச் செய்ய விரும்பிய மன்னரும் பிறரும் வேறு சில வழிகளையும் கையாண்டனர். கையாண்ட வழிகளுள் ஒன்று அவற்றைக் கற்களில் பொறித்து வைக்கும் செயலாக வடிவெடுத்தது. இவ்வாறு தமிழில் தோன்றிய கல்வெட்டுகள் மெய்க்கீர்த்திகளாகவே தோன்றின என்று கூறுவது பொருந்தும்.

5. நடுகல்—நாடு காக்கும் பணியில் ஈடுபட்டு, வீரச் செயல் பலபுரிந்து, பெரும் புகழ்பெற்ற வீரர்களுக்கு நடுகல் நடப்பட்டது. அக்கற்களிலே அவர்தம் புகழ் ஏற்றவாறு பொறிக்கப்பட்டது. மறவனது புகழை நிலைபெறச் செய்த அக்கல்லினைத் தெய்வமாக்கி வாழ்த்தப் பட்டது. இவ்வாறு நடுகற்கள் பல தோன்றி, வீரர்தம் புகழ்பாடி, நிலைபெற்று நின்றன என்பதற்குப் பல இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. அவ் இலக்கியங்களுக்குத் தமிழர் இலக்கணமும் கண்டுள்ளனர்.

> "காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
> சீர்த்தகு சிறப்பில் பெரும்படை வாழ்த்தல்"[1]
>
> "கற்கோள் நிலையே கல்நீர்ப் படுத்தல்
> கல்நடு தல்லே கல்முறைப் பழிச்சல்"[2]
>
> அவன்பெயர்க் கல்மிசைப் பொறித்துக்
> கவின்பெறக் கல்நாட் டின்று"[3]

என்பன தமிழர் கண்ட இலக்கணம். அவ் இலக்கணம் நடுகற்களுக்குரிய இலக்கியச் சான்றுகளையும் வகுத்துக் காட்டுகிறது.

> "மன்அட்ட வென்றி மறவோன் பெயர்பொறித்துக்
> கல்நட்டார் கல்சூழ் கடத்து"[4]
>
> "பீலி அணிந்து பெயர் பொறித்து .....
> காண்தக நாட்டினார் கல்"[5]

---

1. தொல். பொருள் 60. 2. பு. பொ. வெ. மா. சூத். 10. 3. ஷ கொளு 251.
4. தொல். பொருள் 60. நச்சர் உரை. மேற்கோள். 5. பு. பொ. வெ. மா. 251க்குச் சான்று.

என்பன நடுகற்களுக்குரிய இலக்கியச் சான்றுகளாகும். நடப்பெற்ற கற்களில் அவ்வீரர்தம் பீடும் பெயரும் பொறிக்கப் பெற்றிருந்தன என்பதை,

> "வில் இட வீழ்ந்தோர்—எழுத்துடை நடுகல்"[1]
> "நிரை இவண் தந்து நடுகல் ஆகிய
> வென்வேல் விடலை"[2]
> "அணிமயிற் பீலி சூட்டிப் பெயர் பொறித்து
> இனி நட்டனரே கல்லும்"[3]

என்பன போன்ற பல இலக்கிய அடிகளும் உணர்த்துகின்றன. நடுகல் பெறுவதைப் பெரும் புகழாகக் கருதிய தமிழர் அந் நடுகற்களைப் பலரும் காணுமாறு வழிகளில் அமைத்து வழிபாடு செய்யத் தக்க ஏற்பாடுகளைச் செய்தனர். இதனை,

> "நல்லிசைப் பெயரோடு நட்ட
> கல் ஏசு கவலை"[4]

> "பெயரே—இடம் பிறர்கொளாச் சிறுவழிப்
> படஞ்செய்ப் பந்தர்க் கல்மி சையதுவே"[5]

> "நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
> பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
> பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"[6]

என்னும் பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றன. இத்தகைய நடுகற்களில் வீரர்களின் புகழ் உள்ளவாறு உணர்த்தப்படுவது குறிப்பிடத் தக்க ஒன்று. ஒரே பலகை போன்ற கல்லில் அவன் புகழ் பொறிக்கப் படுவதால் அக்கல்லில் அமையும் செய்தி உண்மையான, மிகவும் சிறப்பு வாய்ந்த, குறிப்பிடத்தக்க ஒரு சில நிகழ்ச்சிகள் அடங்கிய, செறிவான தன்மைகளை உடையதாய் அமைகிறது.

> "வாய்த்தபுகழ் மங்கலத்து வந்தெதிர்த்த மாற்றலரைச்
> சாய்த்தமகன் வென்ற சயம்பெருக—சீர்த்தபுகழ்
> நிக்குவணம் கல்பொறிக்கப் பட்டான் கரடிகுல
> சொக்கனேந்த லேஉலகிற் காண்"[7]

> "...... ....... ........ ........
> தகடூர் புகுந்து நுளம்பன் பலத்தோடே துணிந்து
> நாடு பாவினார் சங்கர குட்டியார்
> அவரோடு உடன்புகுந்து தகடூரில் பட்டார்
> நாகந்தை சிறுகுட்டியார் கல்நாடு"[8]

---

1. அகம் 53. 2. புறம 261. 3. புறம் 264. 4. மலைபடுகடாம். வரி 388-89. 5. .புறம் 260. 6. அகம் 67. 7. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) பக். 68. 8. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) பக். 70.

என்பன அச்செறிவான செய்திகளடங்கிய நடுகற்களில் சில. இத்தகைய இலக்கிய, இலக்கணக் கூறுபாடுகளை ஆய்ந்து நோக்குங்கால்,

1. கல்வெட்டுகள் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே தோன்றியுள்ளன.
2. அவை முதன்முதலில் நடுகற்கள் என்ற வடிவில்தான் தோன்றியுள்ளன.
3. அவற்றில் வீரர்தம் பெயரும் பீடும் பொறிக்கப்பெற்று விளங்கின.

என்னும் உண்மைகள் தெளிவாகின்றன. நடுகற்களில் பொறிக்கப்பட்ட வீரர்தம் பெயரும் பீடும் முதலான புகழ்த் தொடர்கள் நாளடைவில் நீட்டி வரையப் பெறும் நிலையை அடைந்தன. அவையே கல்வெட்டுகள் ஒழுங்காக, முறைப்படுத்தப் பெற்ற காலத்தில் மெய்க்கீர்த்தி என்ற பெயரைப் பெற்றன.

6. பல்லவர் மெய்க்கீர்த்தி—பல்லவர் காலக் கல்வெட்டுகள் பல தமிழில் காணப் பெறுகின்றன. அவற்றில் மெய்க்கீர்த்தி போன்ற சிறப்புப் பகுதி வட மொழியிலேயே அமைந்துள்ளன. அவற்றை அடுத்த நிலையில் பாண்டியருடைய மெய்க்கீர்த்திகள் விரிவான நிலையில் தமிழில் காணப் படுகின்றன.

7. பாண்டியர் மெய்க்கீர்த்தி — கி.பி. 768 முதல் பாண்டி நாட்டைச் சிறப்புற ஆண்டவனாகிய பராந்தகன் நெடுஞ்சடையன் அளித்த வேள்விக் குடிச் செப்பேடு, சீவரமங்கலச் செப்பேடு, சின்னமனூர்ச் சிறிய செப்பேடு ஆகிய மூன்றிலும் உள்ள மெய்க்கீர்த்திகளை முதலில் தோன்றிய மெய்க்கீர்த்திகளாக அறிய முடிகிறது. அவற்றுள் வேள்விக் குடிச் செப்பேட்டில் காணப்படும் மெய்க்கீர்த்திப் பகுதி, பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி முதலாக ஆண்டு வந்த பாண்டிய குலத்தை அழித்துத் தமது ஆட்சியை நிறுவியவர் களப்பிரர். அக்களப்பிரரை அழித்துப் பாண்டிய நாட்டை மீட்டவன் கடுங்கோன் என்று தொடங்குகிறது. அவனது சிறப்பினைக் கூறுகிறது. தொடர்ந்து கடுங்கோன் மகன் அவனி சூளாமணி முதலாகச் செழியன் சேந்தன், சிரீமாறவர்மன், கோச்சடையன், தேர் மாறன் போன்ற பாண்டிய மன்னர் அறுவரின் செயல்களும் புகழும் முறையாகக் கூறிச் செல்லுகிறது இறுதியாக நெடுஞ்சடையனின் புகழை முறைப் படுத்திக் கூறுகிறது. அதாவது அவனது படை, படைத்திறம், வீரம், வெற்றி, சிறப்புப் பெயர்கள் போன்றவற்றை முறைப்படுத்திக் கூறுகிறது.

அடுத்த நிலையில் பராந்தக வீர நாராயணனின் திருமங்கலம், சோமாசிக் குறிச்சி செப்பேடு, மெய்க்கீர்த்திப் பகுதி (தளவாய்புரச் செப்பேடு), மிக நீண்டு அமைந்துள்ளதைக் காண முடிகிறது. 'ஓங்கு திரைவியன் பரப்பில்' என்ற இலக்கியத் தொடரோடு தொடங்குகிறது. பாண்டியர் குல மரபு விளக்கு முகத்தால் திருமால், பிரமன், அத்திரி ஆகியோரின் சிறப்புகளைக் கூறி அத்திரி மகன் சந்திரன் என்றும் அவன் வழி வந்த புதன், புரூரவன் ஆகிய பாண்டிய மன்னர் நாடாண்டனர் என்றும் விளக்கிப் பாண்டியர் குலம் சந்திர குலம் என்பதை நிறுவுகிறது. பாண்டியரின் குலகுருவாக அகத்தியனைக் கூறி, அகத்தியனது சிறப்பு பலப்படக் கூறிச் செல்லுகிறது. மேலும் பாண்டியரின் சிறப்புச் செயல்களாகத் திருவிளையாடல் புராணச் செய்திகள் பலவற்றையும் தொகுத்து உணர்த்துகிறது. இறுதியாக மெய்க்கீர்த்திக்கு உரியவனாகிய வீர நாராயணனின் பிறப்பு, போர்ச் செயல், வெற்றி, அறச் செயல்கள் போல்வன அம்மெய்க்கீர்த்தியுள் விளக்கப்படுகின்றன.

பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றிய மெய்க் கீர்த்திகள் முன்னோர் செய்திகள் அனைத்தையும் பெற்றிருந்தாலும் ஓரளவு சுருங்கிய வடிவைப் பெற்று விட்டன. வீர நாராயணனின் செப்பேடு பாண்டியர் குலச் சிறப்பினை ஏறத்தாழ ஐம்பது வரிக்கு மேல் விளக்கிச் செல்லுகிறது. ஆனால் பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய இராச சிம்மன் வீரபாண்டியன் ஆகியோருடைய செப்பேடுகளான சின்னமனூர் பெரிய செப்பேடும், சிவகாசிச் செப்பேடும் சுமார் பத்து வரிகளுக்குள் அச்செய்திகளைச் சுருக்கித் தருகின்றன.

பாண்டியர் திருக்குலம்,

"திருவொடுந்தெள் ளமிர்தத்தொடுஞ் செங்கதிரொளிக்
கௌஸ்துபத்தொடும்
அருவிமதக் களிறொன்றொடுந் தோன்றி அரனவிர் சடைமுடி
வீற்றிருந்த வெண்திங்கள் முதலாக வெளிப்பட்டது;
பொருவருஞ்சீர் அகத்தியனைப் புரோகிதனாகப் பெற்றது."

என்பன பாண்டியர்குலம் பற்றிக் கூறும் சின்னமனூர்ச் செப்பேட்டுச் செய்திகள். தளவாய்புரச் செப்பேட்டில் இவையே மிக நீண்ட வரிகளில் அமைந்துள்ளன.

சின்னமனூர்ச் செப்பேட்டில் நான்கு வரிகளில் காணப்பெறும் இச் செய்திகள் சிவகாசிச் செப்பேட்டில் அமைந்த வீரபாண்டியன் மெய்க்கீர்த்தியினுள்

"சந்திரனது வழித்தோன்றி இத்தராமண்டலம் முழுதாண்டு...
ஆனைஆயிரம் ஐயமிட்டும் அகத்திய னொடு தமிழ்தெரிந்து"

என இரண்டு தொடர்களில் குறிக்கப் பெறுகின்றன. இவ்வாறு எல்லாச் செய்திகளும் மிகச் சுருங்கிய வடிவம் பெற்று விடுகின்றன.

8. சோழர் மெய்க்கீர்த்தி—பத்தாம் நூற்றாண்டின் இறுதியில் சோழ நாட்டை ஆண்ட பிற்காலச் சோழர் காலத்தில்தான் 'மெய்க்கீர்த்திகள்' என்ற பெயருக்கேற்ப உண்மையான வடிவம் பெற்றுள்ளன. அவற்றிலும்,

"முதலாம் இராசராசன் காலத்திலிருந்துதான்
அரசனது போர் வெற்றிகள், ஆட்சிச் சிறப்பு, கொடை
முதலிவற்றைக் கூறும் மெய்க்கீர்த்திகள் விரி
வாகக் கூறப்பட்டு வந்தன"[1]

முதலாம் இராசராசன் தன் பகை மன்னர்களாகிய சேரர் மீது பாடப்பெற்ற பதிற்றுப்பற்தின் பதிகங்களைக் கண்டு அவ்வாறே முதன் முதலில் தனக்கும் மெய்க்கீர்த்தி அமைத்துக் கொண்டான் என்று கொள்ளுவது பொருந்தும். பிற சோழ மன்னர் அதனைப் பின்பற்றி மேலும் விரிவடையச் செய்துள்ளனர்.

"பூழி நாட்டைப் படையெடுத்துத் தழீஇ
உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னனை
நிலைச் செருவி னால்தலை அறுத்து"[2]

"இரட்டபாடி ஏழரை இலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரமும்
திண்திறல் வென்றித் தண்டாற் கொண்டு"[3]

"மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ் சேரலாதற்கு"[4]

"எழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்
...... ......செழியரைத் தேசுகொள்
கோராச கேசரி வர்மரான உடையார்ஸ்ரீ
ராசராச தேவர்க்கு"[5]

போல்வன ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கன. போர்ச் செய்திகள் பல புறநானூற்றில் சுருக்கமாக அமைந்தன. அவையே பதிற்றுப்பத்தில் நீண்டு அமைந்துள்ளன. இத்தன்மை போலவே சோழர் மெய்க்

1. தென்னிந்திய தமிழ்ச் சாசனங்கள் பக். 10. 2. பதிற்றுப் பத்து 4. பதிகம். 3. முதலாம் இராசராசன் கல்வெட்டு. 4. பதிற்றுப்பத்து 2. பதிகம. 5. முதலாம் இராசராசன் கல்வெட்டு.

கீர்த்திகளுள் முற்கால மெய்க்கீர்த்திகள் சுருக்கமாகவும் பிற்கால மெய்க்கீர்த்திகள் விரிந்தும் அமைந்துள்ளன. அவற்றிற்குரிய காரணங்களும் அடுத்த பகுதியில் கூறப்படும்.

"வேங்கை நாடும் கங்க பாடியும்
தடிகை பாடியும் நுளம்ப பாடியும்...
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்
திண் திறல் வென்றித் தண்டாற் கொண்ட"

என்பன போன்று மெய்க்கீர்த்தி என்ற பெயருக்கேற்ப உண்மைச் செய்திகள் மட்டும் சிறப்புச் சொற்கள் எவையும் கலக்காமல் எழுதப் பட்ட நிலை முதலாம் இராசராசன் மெய்க்கீர்த்தியில் காணப்படு கிறது. இதுவே பிற்காலத்து இலக்கணம் அமைக்கவும் அடிப்படை யாக இருந்துள்ளது.

இராசராசனின் மகனாகிய முதலாம் இராசேந்திரன் மெய்க் கீர்த்தி, நாடு முதலியவற்றின் பெயர்களை அடைமொழியோடு எடுத்துக் காட்டுகிறது.

"சுள்ளிச் சூழ்மதில் கொள்ளிப் பாக்கை
நண்ணற்கு அருமரண் மண்ணைக் கடக்கம்"

என்பவை அடைமொழிகளோடு அமைந்தவை. முழுமையும் இதே நிலையில் அமைந்துள்ள வளர்ச்சியைக் காண முடிகிறது.

ஒவ்வொரு அரசனுடைய மெய்க்கீர்த்தியும் ஒவ்வொரு வகை யான தொடக்க அடியினைக் கொண்டு அமைந்துள்ளது. தொடக்க அடியைப் பார்த்தவுடன் இது இந்த மன்னனின் மெய்க்கீர்த்தி என்று கூற முடியும். இந்த நிலையிலிருந்து வளர்ந்து இராசாதி ராசன், இரண்டாம் இராசேந்திரன், வீர ராசேந்திரன், குலோத் துங்கன் போன்ற பல மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் இரண்டு, மூன்று வகையான தொடக்க அடிகளை உடையனவாய் அமைந் துள்ளன. அதே போல ஆட்சி ஆண்டுகள் அதிகமாகும் நிலையில் மெய்க்கீர்த்திகளும் நீண்ட வடிவம் பெற்றுள்ளன.

9. சோழர் மெய்க்கீர்த்திகளின் மாற்றம் — சோழப் பேரரசில் நிலவிய பெரும் போர்ச் செயல்கள் முதலாம் குலோத்துங்கனது ஆட்சியோடு முடிவடைவதை மெய்க்கீர்த்தி களின் வழி அறிய முடிகிறது. விக்கிரம சோழன் காலத்து மிகுதி யான போர்ச் செயல்கள் காணப்படவில்லை. அவனை அடுத்து அரசாண்ட இரண்டாம், மூன்றாம் குலோத்துங்க சோழர்கள், இரண்டாம் இராசராசன், இரண்டாம் இராசாதிராசன் போன்ற மன்னர்களின் ஆட்சியில் போர்ச் செயல் எதுவுமே இல்லாத நிலை

வெளிப்படுகிறது. எனவே அம்மெய்க்கீர்த்திகள் மன்னரது பிற சிறப்புச் செயல்களைத் தாங்கியுள்ள நிலையில் முழுமையாக மாற்றம் பெற்று விடுகின்றன. முழுமையான இலக்கியமாகவே மாறி விடுகின்றன.

"பொறிப்புகள் கூறுகின்ற செய்திகளுள் பல கற்பனைக் கதைகளும் உயர்வு நவிற்சியும் கலந்தவை"[1] என்று கே. ஏ. நீலகண்ட சாஸ்திரியார் அவர்களும்,

"முதலாம் இராசராசன் காலம் முதல் சில சாசனங்களில் மெய்க்கீர்த்திகள் வரையும் வழக்கம் தோன்றியது.........அவற்றுள் பல பொய்க்கீர்த்திகள் போலவே தோன்றுகின்றன"[2] என்று கே. கே. பிள்ளை அவர்களும் கூறும் நிலைக்கு மாற்றம்பெற்று விடுகின்றன.

10. பாண்டியர் மெய்க்கீர்த்திகளின் மாற்றம் — பாண்டியர் மெய்க்கீர்த்திகளோ முதலில்,

1. புராண அடிப்படையில் கடவுளரைக் கூறி, அடுத்து அதே புராண அடிப்படையில் மன்னரின் முன்னோர் பரம்பரையின் சிறப்புச் செயல்களும் இறுதியாகத் தம் புகழும் கூறுவதாக அமைந்துள்ளன.
2. அடுத்த நிலையில் முன்னோர் பரம்பரையின் சிறப்பினைத் தொகுத்துக் கூறித்தம் புகழ் கூறும் நிலைக்கு மாறியுள்ளன. ஆனால்,
3. இறுதி நிலை மெய்க்கீர்த்திகளே மன்னர்களாகிய தங்களது புகழ் மட்டும் கூறும் நிலைக்கு மாறியுள்ளன.

பராந்தக வீரநாராயணனின் மெய்க்கீர்த்தியானது முதல் நிலைக்குச் சான்றாக அமைகிறது. வீரபாண்டியன், இராசசிம்மன் போன்றோரின் மெய்க்கீர்த்திகள் இரண்டாம் நிலைக்கு எடுத்துக்காட்டுகளாகின்றன. சீவல்லபன் மெய்க்கீர்த்தி முதல் அவனுக்குப் பிறகு ஆண்ட மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் மூன்றாம் நிலையில் அமைந்துள்ளவையாகும்.

3.3. முழுநிலை — மெய்க்கீர்த்தியின் தோற்றத்தையும் வளர்ச்சி நிலையையும் சுருங்க நோக்குவோமாயின்,

1. நடுகல் என்ற வடிவில் வீரர்தம் பெயரும் பீடும் பொறிக்கப்பட்ட நிலையில் தோன்றி, மன்னரின் வரலாறு முழுமையும் கூறும் அளவில் வளர்ந்துள்ளது.

---

1. தெ. இ. வரலாறு பக் 30. 2. சோழர் வரலாறு பக். 12.

2. பாண்டியர் மெய்க்கீர்த்தி பாண்டியரின் குலமரபு, முன்னோர்ச் சிறப்புப் போன்றவற்றையும் விரிவாகத் தன்னகத்துப் பெற்றுள்ளது.

3. முதலாம் இராசராசன் காலத்தில் முறைப் படுத்தப்பட்டு மெய்க்கீர்த்தி என்ற பெயருக்கேற்ற தன்மையைப் பெற்றுள்ளது; இலக்கணம் வகுக்கவும் அடிப்படையாக அமைந்துள்ளது.

4. மீண்டும் புலவர் தம் ஆற்றலால் சிறிது சிறிதாக அடை மொழிகளும் வருணனைகளும், பலவகை அணிநயங்களும் புகுத்தப்பட்டு இலக்கியத் தன்மையை அடைந்துள்ளது.

5. இறுதியாக, போர்ச் செயல்கள் மிகுதியாக இல்லாத மன்னர் காலத்து, மன்னர் சிறப்பும் ஆட்சி முறையும், நாட்டு வளமும் கூறும் இலக்கியமாகவே அமைந்துள்ளது.

6. பிற்காலப் பாண்டிய மன்னரின் மெய்க்கீர்த்தியும் சோழர் மெய்க்கீர்த்தியைப் பின்பற்றியதாகவே மாறியுள்ளது என்னும் கருத்துகள் வெளிப்படுகின்றன.

7. மேலும், மொழி அடிப்படையில் நோக்க, நடுகற்கள் வட்டெழுத்து, தமிழி, தமிழ் ஆகிய எழுத்துகளாலேயே அமைந் துள்ளன ; பல்லவர் கால மெய்க்கீர்த்திகள் வடமொழி, பிராக்கிருத மொழிகளில் பிராமி, கிரந்த எழுத்துகளில் அமைந்துள்ளன; சோழர், பாண்டியர் மெய்க்கீர்த்திகள் தமிழ், வடமொழி ஆகியவற்றாலேயே அவ்வவ் எழுத்துகளில் அமைந்துள்ளன.

8. பல மெய்க்கீர்த்திகள் வடமொழி, தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் அமைந்துள்ளன ; இருமொழி அமைப்பு முறை ஏற் பட்ட பிறகு கொடைகள், நில எல்லைகள் போன்ற சிறப்புச் செய்தி களை விரிவாக எழுதத் தாய்மொழியாகிய தமிழே பயன்படுத்தப் பட்டுள்ளது.

9. தமிழில் எழுதப்பட்ட மெய்க்கீர்த்தித் தொடர்களில் பல சொற்கள் வடமொழிச் சொற்களாக அமைந்துள்ளன; அவற்றுள் சில ஒலி முதலிய தன்மையும் பொருளும் மாறாமலிருக்க இடை யிடையே வடமொழி எழுத்துகளாலேயே எழுதப் பட்டுள்ளன என்பன போன்ற சில அமைப்பு முறைகளையும் அறிய முடிகிறது.

## 4. மெய்க்கீர்த்தியின் இலக்கணம்

மன்னனின் உண்மைப் புகழைப் பாடுவது மெய்க்கீர்த்தி. முடி வில் அவன் வரலாறு அமைய வேண்டும். பேரரசியாகிய துணைவி

யுடன் வாழ்க என்று உரைத்தல் வேண்டும். மன்னவன் இயற் பெயரைச் சுட்டுதல் வேண்டும். அவனுடைய ஆட்சி ஆண்டுகள் வளர்க எனக் கூறுதல் வேண்டும்.

இக்கருத்துகள் அடங்கிய இவ் இலக்கியத்தினை அளவடியால் இயற்றுதல் வேண்டும். ஆசிரியம் விரவிய சொற்சீரடிகளால் அமை வதும் உண்டு. பெரும்பான்மை அகவல் ஓசையால் அமையும். துள்ளல் ஓசை வருவதும் உண்டு. இரண்டு அடிகள் ஒரு தொடை யாய் அமைதல் சிறப்பு. இம்மெய்க்கீர்த்தியின் இறுதி உரைநடை யாய் முடிவதும் உண்டு. இவையே பாட்டியல் இலக்கணங்களும் அவற்றின் உரைகளும் தரும் விளக்கம் ஆகும்.

''சீர்நான் காதி இரண்டடித் தொடையாய்
வேந்தன் மெய்ப்புகழ் எல்லாம் சொல்லியும்
அந்தத்து அவன்வர லாறு சொல்லியும்
அவளுடன் வாழ்கெனச் சொல்லியும் மற்றவன்
இயற்பெயர்ப் பின்னர்ச் சிறக்க யாண்டெனத்
திறப்பட உரைப்பது சீர்மெய்க் கீர்த்தி''[1]

''நிலைபெறு சீர்மெய்க்கீர்த்தியின் அந்தம்
உரையாய் முடியும் எனஉரைத் தனரே''[1] (கோவூர்கிழார்)

1. பாட்டியலுக்கு முன் — இராசராசன் மெய்க்கீர்த்தி முத லாகத் தோன்றிய பிற்காலச் சோழர் மெய்க்கீர்த்திகளே பாட்டியல் நூல்களில் மெய்க்கீர்த்திக்கு இலக்கணம் வகுக்க அடிப்படையாயின என்று கொள்ள முடிகிறது. ஆனால் அவற்றிற்கு முந்திய பாண் டியர் மெய்க்கீர்த்திகளின் அமைப்பிற்கும் தமிழில் இலக்கணம் இருந் திருக்க வேண்டும்.

தெலுங்கு இலக்கியங்களில் 'விருது' என்ற தலைப்பிலேயே மெய்க்கீர்த்திக்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது. இவ் இலக்கணக் கருத்துகள் வருமாறு :

## 2. விருதுகள் (பிருதமுலு)

மெய்க்கீர்த்தியில் அரசகுல முறைகளை வரிசைப்படுத்தி அவர் களுடைய வீரச்செயல்கள் (புஜவிக்கிரமம்) கூறப்படவேண்டும். அக்கூற்றுகள் பகைமன்னர் காதுகளுக்குத் துன்பம் தரத்தக்கனவாய் (கர்ணகடூரமாய்) அமையவேண்டும். அரசகுல முன்னோர்களின் (தன் பூர்வராசாக்களின்) தான தருமங்கள் சொல்லப்பட வேண்டும்.

1. பன்னிரு பாட்டியல்—198.

இவ்வித விருதுகளை வரிசைப்படுத்திக் கூறுவதனால் இது பிருதாவளி (பிருத+ஆவளி) என்று பெயர் பெறுகிறது. அடுத்து விருது பெறும் மன்னனின் பணிவு (விநயம்), வீரம் (புஜபராக்கிரமம்), தானதருமம், போர்ச்செயல் (ரணவிகாரம்), கருணை, கலை, பிறப்பிடம் (ஜனனஸ்தலம்) போன்றவற்றைப் புகழ்ந்து பேசுவது பிருதாவளி ஆகும். தகுந்த தாள வரையறையோடு கம்பீரமான நடை (ரீதி = கௌடரீதி) யில் அமையவேண்டும். அவை பிராகிருதம், சமஸ்கிருதம் ஆகிய மொழிகளில் அமையும்; இருமொழியிலும் அமைவதுண்டு. தீர, கம்பீர, ஜெய, தேவ தேவா போன்ற விளித்தல் சொற்களோடு, சிறந்த அணிநலம் அமைய (அலங்காரம்) சுவை மிக்க (ரசம்) பாட்டுகளால் அமையவேண்டும் (ஆசீர்வசன பத்யம்). கேட்பதற்கு மகிழ்ச்சி தருவதாக, இனிமையாக அமையவேண்டும்.[1]

இந்த இலக்கணம் முன்னோர் வரலாறு முதலியவற்றோடு கூறப்படும் பாண்டியர் மெய்க்கீர்த்திகளுக்குப் பொருந்துகிறது.

"தானம் வழங்குவோருடைய பரம்பரையை மூன்று தலைமுறைக்குக் கொடுக்கவேண்டும் என்று தர்மசாஸ்திரங்கள் விதிக்கின்றன. ...... தானம் கொடுப்போரையும் சேர்த்தால் நான்கு தலைமுறைகளுக்கு ஆகும். பல்லவர் பழைய சாசனம் இவ்வாறே (வடமொழியில்) அமைந்துள்ளன. சிலவற்றில் மூன்று தலைமுறையோடு நிறுத்திவிடாமல் அந்த வமிசம் நிறுவப்பட்ட காலத்திலிருந்து ஆண்ட அரசர்கள் எல்லோரையும் குறிப்பிட்டிருப்பார்கள்"[2] என்று கூறும் தி. நா. சுப்பிரமணியம் அவர்களின் கூற்று இங்கு ஒப்பிட்டறியக் கூடிய ஒன்று.

## 5. மெய்க்கீர்த்தி - இலக்கியமா ?

வரலாற்றுச் செய்திகளைக் கூறும் மெய்க்கீர்த்தி இலக்கியமாகுமா என்னும் வினா எழத்தான் செய்கிறது. மெய்க்கீர்த்தி இலக்கியத்தின் சிறப்புக் கொள்கைகள், அதில் பொதிந்து கிடக்கும் பொதுக் கொள்கைகள என்ற இரண்டு தலைப்புகளில் அவ்வினாவிற்கு விடையளிக்கிறது இப்பகுதி. மெய்க்கீர்த்தி சிறந்த இலக்கியமே என்பதை இப்பகுதி உணர்த்தவில்லை. அதன் இலக்கியக் கொள்கைகளை எடுத்துக் காட்டி அது சிறந்த இலக்கியமே என்பதை உணரச்செய்கிறது. இருவகைக் கொள்கைகளை விளக்குவதற்கு முன்னால் இலக்கியமே என்பதற்கான கருத்துகளை இங்கு சுருக்கித் தருகிறது இப்பகுதி. அவற்றிற்கான விளக்கங்கள், எடுத்துக்காட்டுகள் போன்றவற்றை இருவகையான கொள்கை

1. காவ்யாலங்கார சூடாமணி பக். 54—55· பாட்டு 26—30. 2. தென்னிந்திய கோயில் சாசனங்கள் பக். 355—56.

களை விளக்கும் பகுதிகளில் காணலாம். இங்கு அவற்றைத் தருவது விரி வடைவதோடு கூறியது கூறலாகவும் அமைந்து விடும்.

## 5. 1. இலக்கியமே

1. மெய்க்கீர்த்தி என்பது இலக்கியவகைகளுள் ஒன்று எனக் கொண்டுதான் மெய்க்கீர்த்தி, மெய்க்கீர்த்திமாலை என்னும் தலைப்புகளில் பாட்டியல் நூல்கள் இலக்கணம் வகுத்துள்ளன.

2. அவ் இலக்கணங்களுக்கு ஏற்ப அமைந்துள்ள உண்மைப் புகழ் முதலிய ஏழுவகைத் தன்மைகளும் எல்லா மெய்க்கீர்த்தி களிலும் அமைந்துள்ளன.

3. தொடக்கத்தில் வரலாற்று இலக்கியமாகச் செய்திகளை மட்டும் தொகுத்துக் கூறுவதாகக் காணப்படுகிறது. என்றாலும் முதலாம் இராசேந்திரன் காலம் முதல் மெய்க்கீர்த்திகள் அடை மொழியோடு கூடிய தொடர்களில் தொடங், நல்ல இலக்கிய நடையில் வளர்ந்து விடுவதைக் காண முடிகிது.

4. வளர்ந்த நிலையில் முதற்குலோத்துங்கன் மெய்க்கீர்த்திக்குப் பிறகு அது முழு இலக்கியமாகவே மாறி விடுவதையும் காண முடிகிறது.

5. பலவகைக் கற்பனைகள் இடம் பெற்று விடுகின்றன; அணிநலன்கள் பலவற்றைச் சுட்ட முடிகிறது; மிகைப்படுத்தப் பெற்றுள்ள இடங்கள் பல; இவை அனைத்தும் இலக்கிய நெறியிலே அமைந்தவை.

6. பிற இலக்கியங்களைப் போல வாழ்த்து, வணக்கம், வருணனை என்பவற்றோடு தொடங்கப் பெறவில்லை ஆயினும் மெய்க்கீர்த்திகள் இலக்கியங்களுக்குரிய மங்கலத் தொடர்களோடு தான் தொடங்கு கின்றன என்பதும் அறிய முடிகிறது.

7. தமிழ் அறிந்த மன்னர்கள், தமிழ் உணர்ந்த மன்னர்கள், தமிழ் வளர்த்த மன்னர்கள், தமிழ் இலக்கியச் சுவையுணர்ந்த மன் னர்கள் தங்கள் புகழை நிலைநிறுத்துவதற்காகவே இம்மெய்க்கீர்த்தி களைப் பாடச்செய்தார்கள். எனவே அத்தகு மன்னரின் புகழைப் பாடிய புலவர்கள் அம்மன்னர்களின் சுவைக்கு ஏற்ப இலக்கிய மாகவே பாடினார்கள் என்று கொள்ளுவதுதான் பொருந்தும்.

8. இலக்கிய அடிகள் பல அப்படியே மெய்க்கீர்த்திகளில் அமைந்துள்ளன; புராணச்செய்திகள் பலவும் அவ்வாறே அமைந் துள்ளன.

9. போர்க்களச் செயல்கள் பல பரணி இலக்கியமாகவே அமைத்துக் காட்டப்படுகின்றன.

10. மன்னர்களின் தோல்விகள் மறைக்கப்பட்டு அவர்களின் வெற்றி முதலிய சிறப்புகளே கூறப்படுவது இலக்கிய அடிப்படை குறித்தேயாகும்.

5. 2. சான்றோர் கூற்று — மெய்க்கீர்த்திகளுள் காணப்படும் இத்தகு இலக்கியக் கோட்பாடுகளை நன்குணர்ந்த வரலாற்று அறிஞர்களும், இலக்கியப் பேரறிஞர்களும், ஆய்வாளர்களும் கூட மெய்க்கீர்த்தியை ஒரு இலக்கியமாகவே கொண்டு ஆய்ந்து, துய்த் துள்ளனர் என்பதை அவர்களின் கூற்றுகளாலும் உறுதிப்படுத்த முடிகிறது. அக்கூற்றுகளில் சில ;

> "மெய்க்கீர்த்தி என்பது ஒருவகைச் சிறு நூல் ;
> விருந்து என்னும் வனப்பு வகையைச் சார்ந்தது."[1]

> "சாசனச் செய்யுள்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க
> பகுதி மெய்க்கீர்த்தி என்னும் இலக்கியவகையாகும்.
> தமிழில் உள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்
> களுள் மெய்க்கீர்த்தி என்பது ஒன்றாகும்,"[2]

> "சாசனங்களில் வரும் மெய்க்கீர்த்திகள் எல்லாம்
> இலக்கிய வளம் பொருந்தியனவாய், இலக்கண
> அமைதி பெற்று விளங்குகின்றன."[3]

> "மெய்க்கீர்த்தி மாலை - ஒரு பிரபந்தம். குலமுறையில்
> செய்த கீர்த்தியைக் கூறுவது"[4]

> "மன்னரது உண்மைக் கீர்த்தியைத் தொடுப்பது
> மெய்க்கீர்த்தியாம்"[5]

> "தென்னிந்திய வரலாற்று மாணவர் 'மெய்க்கீர்த்தி இலக்கியம்'
> பற்றியும் ஓரளவு அறிந்திருப்பர்"[6]

இக் கூற்றுக்கள் தமிழில் காணும் மெய்க்கீர்த்திகள் சிறந்த இலக்கி யங்களே என்ற கருத்துக்குத் துணை நிற்கின்றன.

---

1. கலைக்களஞ்சியம் எட்டு 489. 2. சாசனமும் தமிழும் பக். 234. 3. தென் இந்திய தமிழ்ச் சாசனங்கள் பக். 17. 4. தமிழ் மொழி அகராதி, 5. வெண்பாப் பாட்டியல் உரை பக். 52. 6. சாசனமும் தமிழும் பக். 234.

## 6. கொள்கைகள்

மெய்க்கீர்த்தி இலக்கியத்திற்குரிய இலக்கியக் கொள்கைகளை வகைப்படுத்திக் காட்டுவதே இப்பகுதியில் கொண்டுள்ள நோக்க மாகும். மெய்க்கீர்த்திக்கு அமைந்துள்ள இலக்கணங்களையும் இந் நூலில் தொகுத்துள்ள பல மெய்க்கீர்த்திகளையும் அடிப்படையாகக் கொண்டு அதன் கொள்கைகளை வகைப்படுத்த முடிகிறது. அவ் வடிப்படையில் கொள்கைகளை இரண்டு பெரும் பிரிவுகளாகப் பிரிக் கலாம். அவற்றுள் ஒன்று - இலக்கணங்களுக்கு ஏற்ப மெய்க்கீர்த்தி களில் அமைந்துள்ள கொள்கைகள்; இவற்றை மெய்க்கீர்த்தி இலக் கியத்திற்குரிய சிறப்புக் கொள்கைகள் எனக் கொள்ளலாம்.

இரண்டு - பிற இலக்கியங்களுக்கு ஏற்ப மெய்க்கீர்த்திகளில் காணப் பெறும் கொள்கைகள்; இவற்றைப் பொதுக் கொள்கைகள் என்று கொள்ளலாம்.

1. சிறப்புக் கொள்கைகள் — இவற்றுள் சிறப்புக் கொள்கை கள். 1. உண்மைப் புகழ் 2. வரலாறு 3. துணைவி 4. இயற் பெயரும் சிறப்புப் பெயரும் 5. ஆண்டு 6. அடியும் தொடையும் 7. உரைநடை என்ற ஏழு தலைப்புகளில் விளக்கப்படுகின்றன.

2. பொதுக் கொள்கைகள்—1. அணிநலம் 2. மன்னர்சிறப்பு 3. இயற்கை வளமும் ஆட்சி முறையும் 4. தொடக்கம் 5. குறிப்புச் சொல் 6. இலக்கண அமைதி 7. புராணக் கருத்து 8. மொழி நடை 9. முடிவுரை என்னும் ஒன்பது தலைப்புகளில் பொதுக் கொள்கைகள் விளக்கப்படுகின்றன.

### 6. 1, சிறப்புக் கொள்கைகள்

#### 6. 1. 1. உண்மைப்புகழ்

1. தன்மை நவிற்சி — புகழ் விரும்பிப் பாடுவது இயல்பு. பரிசில் வேண்டிப் பாடுவதும் மரபு. எதிலும் பாடும் புலவர்களின் கற்பனைத்திறம் இடம் பெற்று விடும். இதனால் உள்ளது விரித்தும் இல்லது புனைந்தும் பாடுதல் மரபாய் அமைந்துவிடும். இந்த மரபை மறுத்து எழுந்ததனால் இவ்விலக்கியம் மெய்க்கீர்த்தி எனப்பட்டது. மெய் என்னும் அடைமொழி பெற்றது. இவ்வடை மொழிக்கு எடுத்துக் காட்டாய் அமைகின்ற இலக்கிய அடிகளுள் சில :

> ''காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளி''[1]
>
> ''வேலைகெழு காந்தளூர்ச் சாலை கலமறுத்து''[2]

---

1. முதலாம் இராசராசன் மெய்க். 2. முதலாம் இராசாதிராசன் மெய்க்.

"கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச் சாலை கலமறுத்து"[3]

"வேங்கை நாடும் கங்க பாடியும்
நுளம்ப பாடியும் தடிகை பாடியும்
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்......
திண்திறல் வென்றித் தண்டாற் கொண்ட"[4]

"குச்சரரும் ஆரியரும் கோசலரும் கொங்கணரும்
அருமணரும் சோகனரும் அவந்தியரும் முதலாய
இருநிலமா முடிவேந்தர் இறைஞ்சிநின்று திறைகாட்ட"[4]

என்பன போன்ற செய்திகள் தன்மை நவிற்சியாகவே அமைக்கப் பெற்றுள்ளன.

## 2. சிறப்புப் பெயர்

"........ ........ தன் சிறிய
தாதையாகிய எறிவலி கங்கைகொண்ட சோழனைப்
பொங்கிகல் இருமுடிச் சோழன் என்றும்
தன்திருத் தம்பியர் தம்முள் மும்முடிச் சோழனைச்
சோழ பாண்டியன் என்றும்"[5]

இவற்றுள் பேரரசன் பலநாடுகளை வென்றான். அந்த நாடுகளில் தன்சிறிய தந்தை, தம்பியர், மக்கள், பெயரர் ஆகியோரை மன்னர் களாக நியமித்தான். சிறப்புப் பெயர்களையும் சூட்டினான் என்பன போன்ற செய்திகள் தொகுத்துக் கூறப் பெற்றுள்ளன. இதே செயல் முதலாம் இராசாதிராசன் மெய்க்கீர்த்தியில்.

## 3. நிரல்நிறை

"தன்சிறிய தாதையையும் திருத்தமையனையும்
குறிகொள் தன் இளங் கோக்களையும்
நெறியுணர் தன்திருப் புதல்வர் தம்மையும்
துன்றெழில் வானவன், வில்லவன், மீனவன்,
கங்கன், இலங்கையர்க் கிறைவன்
பொலங்கழல் பல்லவன் கன்னகுச்சியர்க் காவலன்
எனப் பொன்னணிச் சுடர்மணி மகுடம் சூட்டி"[6]

என நிரல்நிறை முறையால் உணர்த்தப்படுகிறது; மிகைப்படுத்தப் பெறவில்லை.

---

3. பராந்தக பாண்டியன் மெய்க். 4. சுந்தர பாண்டியர் மெய்க். 5. இரண்டாம் இராசேந்திரன மெய்க். 6. முதல் இராசாதிராசன் மெய்க்.

4. போர்க்களம்

"மானாபரணன் பசுந்தலை பொருகளத்து அறிந்து
வார் அளவிய கழல் வீர கேரளனை
முனைவயிற் பிடித்து"[7]

"...... ...... சுந்தர பாண்டியன்
கொற்றவெண் குடையும் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத்து இழந்துதன்
முடிவிழத் தலைவிரித்து அடிதளர்ந்து ஓடத்
தொல்லை முல்லையூர்த் துரத்தி"[8]

என்பன போன்று பதினான்கு இடங்களில் முதலாம் இராசாதிராசன் நிகழ்த்திய போர்கள் அவன் மெய்க்கீர்த்தியுள் தொகுத்துக் காட்டப் படுகின்றன. இவையாவும் பொருகளச் செய்திகளை உள்ளவாறு படம் பிடித்துக் காட்டியனவாகும்,

5. மன்னர் இயல்பு – வீரசலாமேகன், தன் கன்னகுச்சி நாட்டிலும் ஈழ நாடு சிறந்தது என்று கருதி, தன் உறவினரோடு சென்று முடி சூடினான். அவன் இராசாதிராசனோடு போர் செய்து தோற்று ஓட, இராசாதிராசன் அவன் காதலியையும் தமக்கையையும் பிடித்து வைத்துக் கொண்டும், அவன் தாயின் மூக்கை அறிந்தும் அவமானப் படுத்தினான்.

"ஆங்கு அவமானம் நீங்குதற் காக
மீட்டும் வந்து வாள்தொழில் புரிந்து
வெங்களத்து உலந்தஅச் சிங்களத்து அரசன்
பொன்அணி முடியும்"[9]

இராசாதிராசன் கவர்ந்தான் என்னும் செய்தி மன்னர்களுக்குரிய இயல்பினை உள்ளவாறு எடுத்துக் காட்டுகிறது. வீர ராசேந்திரன், விக்கிரம சோழன், குலசேகர பாண்டியன், சுந்தர பாண்டியன் போன்ற பல மன்னர்களின் மெய்க்கீர்த்திகளிலும் இவை போன்ற போர்ச் செயல்கள் பல உள்ளவாறு எடுத்துக் காட்டப் படுகின்றன.

6. வளர்ச்சி – மெய்க்கீர்த்திகள் உண்மைப் புகழையே கூறுகின்றன என்பதற்கு, மெய்க்கீர்த்திகள் வளர்ந்துள்ள செய்தியைச் சிறந்த எடுத்துக் காட்டாகக் கூற முடியும்.

சான்று—முதலாம் இராசேந்திர சோழனில் கல்வெட்டு மிக நீண்ட செய்தியை உடையது. ஆனால், தொடக்க ஆண்டுகளில்,

---

7. முதல் இராசசாதிராசன் மெய்க். 8-9. முதலாம் இராசாதிராசன் மெய்க்.

"ஸ்வஸ்திஸ்ரீ

கோப்பரகேசரி வர்மரான உடையார் ஸ்ரீ இராசேந்திர
சோழ தேவர்க்கு யாண்டு மூன்றாவது வரை"

என்றே தொடங்குகிறது. மிகச் சிறிய கல்வெட்டுச் செய்திகளை உடைய இச் சோழனுடைய கல்வெட்டுகளிலும் இது போன்ற தொடக்கமே காணப் பெறுகிறது. ஆனால் இவனுடைய பத்தொன்பதாம், இருபதாம் ஆண்டு கல்வெட்டுகளில் முப்பத்தைந்து வரி அளவு நீண்ட மெய்க்கீர்த்தி அமைந்துள்ளது. இவை இடைக் காலங்களில் பெற்ற வெற்றிகளையும், செய்த சிறப்புச் செயல்களையும் குறித்துத் தோன்றியன. இல்லது புனைதலாக இருப்பின் பிற கல் வெட்டுகளிலும் கூறப் பெற்றிருக்கலாம்.

7. அரசுமுறை – மன்னர்கள் ஆட்சியில் மக்கள் நலமே பெரிதும் போற்றப் பெற்றன; மன்னவன் மக்களுக்காக இறைவனை வணங்கினான்; பகை மன்னர் பணிந்தனர்; பிற மன்னர் அளித்த திறைப் பொருள்கள் குவிந்தன; போர்க்களத்திலிருந்து கவர்ந்து வந்த பெரும் பொருள்கள் குவிக்கப் பெற்றன; அவை மக்களுக்கு வாரி வழங்கப் பெற்றன—என்பன போன்ற அரசு முறைச் செய்திகளும் மெய்க்கீர்த்திகளில் உள்ளவாறு கூறப் பெறுவதைக் காணலாம்.

சான்று

1. குவலயத்து உயிர்களைப் பெற்றதாயினும் பேணி"[10]

2. "அம்மையும் அப்பனுமாய் அனைத்துயிர்க்கும்
இம்மைப் பயனும் மறுமைக்கு உறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய"[11]

3. "மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயம் சூடி
சிவநெறி ஓங்கச் சிவார்ச்சனை புரிந்து"[12]

4. "பிள்ளைப்பிறைச் சடைக் கணிந்த பினாகபாணி
எம்பெருமானை உள்ளத்தில் இனிதிருவி
உலகம் காக்கின்ற நாளில்"[13]

5. "கொங்கர் கலிங்கர் கோசலர் மாளுவர்.....
பல்லவர் முதலிய பார்த்திவர் எல்லாம்
உறைவிடம் அருள்என்று ஒருவர்முன் ஒருவர்
முறைமுறை கடவ"[14]

---

10. முதலாம் இராசேந்திரன் மெய்க். 11. ராசேந்திரன் மெய்க். 12-13. பராக்கிரம பாண்டியன் மெய்க். 14. சுந்தர. மெய்க்.

6. "அறைகழல் அரசர்தன் அடிநிழல் ஒதுங்க
கலிஒதுங்க முறை செய்து"[15]

7. "........வெண்குடை மீமிசை நிற்ப
கருங்கலி ஒளித்துவன் பிலத்திடைக் கிடப்ப"[16]

8. "ஆங்கு அவரது ஆரமும் அவர்குல தனமும்
சங்கும் தொங்கலும் தாரையும் பேரியும்...
பாய்பரித் தொகையொடும் பறித்து"[17]

8. கலைகள் - மன்னர்கள் முத்தமிழ் வளர்த்தனர்; பிறவாகிய அனைத்துக் கலைகளுக்கும் ஆதரவு அளித்தனர்; தாங்களும் பல கலைகளையும் உணர்ந்திருந்தனர் என்பனவும் உண்மைப் புகழ் களாகவே கூறப் பெறுகின்றன.

சான்று

1. "இன்னமு தாகிய இயலிசை நாடகம்
மன்னி வளர மணிமுடி சூடி"[18]

2. "மூவகைத் தமிழும் முறைமையில் விளங்க"[19]

3. "தென்கலை வடகலை தெளிவறத் தெரிந்து"[20]

4. ......தென் மதுரா புரஞ் செய்தும்
அங்கதனில் அருந்தமிழ் நற்சங்கம்
இரீஇத் தமிழ் வளர்த்தும்"[21]

9. கொடுமைகள் - கலகம் விளைவித்த பகைவர்களை அடக்க, அழிக்கப் பகைவர்களுக்குப் பல கொடுமைகள் செய்யப்பட்ட செய்தி கள் இக்காலத்து வெறுக்கத்தக்கன வாயினும் அக்காலப் போர் முறைகளில் இலக்கணம் வகுக்கப் பட்டவையே. இலக்கியங்களும் சான்று பகர்கின்றன.

"இயங்குபடை யரவம் எரிபரந் தெடுத்தல்"[22]

"அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்—
தாமாய்ந் தனரே குடைதுளங் கினவே......
பெண்டிரும்-பாசடகு மிசையார் பனிநீர் மூழ்கார்—
மார்பகம் பொருந்தி யாங்கமைந்தனரே"[23]

---

15. வீர ரசேந்திரன் மெய்க். 16. விக்கிரம சோழன் மெய்க். 17. வீர ராசேந்திரன் மெய்க். 18. குலசேகர பாண்டியன் மெய்க். 19. சுந்தர் பாண்டியன் மெய்க். 20. பராக்கிரம பாண்டியன் மெய்க். 21. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) பக் 8. 22. தொல். பொருள். 63. 23. புறம் 62.

என்பன தமிழர்தம் போர்முறைகளைக்கூறும் இலக்கணமும் இலக்கியமுமாகும். இம்முறை கல்வெட்டுச் செய்திகளிலும் காணப் படுகிறது.

சான்று

"வடிநெடு வாளும் வயப்பெரும் புரவியும்
தொடிநெடுந் தோளுமே துணைஎனச் சென்று
சேரனும் தானையும் செருகளத்து ஒழிய"[24]

"அவன் சிரத்தினை அறுத்து
அவன் ஒருமகள் ஆகிய இருகயன் தேவி
நாகலை என்னும் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்கு வேறாக்கி"[25]

## 6. 1. 2. வரலாறு

மெய்க்கீர்த்தி இலக்கணம் கூறும் மெய்ப்புகழ், துணைவி, இயற்பெயர், ஆண்டு ஆகியவை தனித்தனி கூறுபாடுகளாகக் காணப் பெற்றாலும் அனைத்தும் வரலாற்றுக்குத் துணை புரிவனவே.

1. வென்ற நாடுகள் முறைப் படுத்தப் படுகின்றன.
2. வெற்றி பெற்றவர்கள் திறை பெறுகின்றனர்.
3. பல சிற்றரசர்கள் நியமிக்கப் பெறுகின்றனர்;
4. அவர்கள் பெரும்பாலும் வெற்றிபெற்றப் பேரரசர்களின் சுற்றத்தவராகவே அமைகின்றனர்.
5. சிற்றரசர்களும் பட்டப்பெயர் கொடுத்துச் சிறப்பிக்கப் பெறுகின்றனர்.
6. பேரரசர்தம் மக்களே அரசுரிமை பெறுகின்றனர்.
7. தந்தை வென்ற நாடுகளில் மீண்டும் படையெடுக்கின்றனர்.
8. உரிமையால் வந்து, பொருது நாடு பெறுபவர்களும் சுட்டப் படுகின்றனர்.
9. தோற்ற மன்னர்கள், நேர்ந்த அவமானத்தைப் போக்கிக் கொள்ள மீண்டும் படை எடுக்கின்றனர்.
10. மன்னர்கள் ஆறில் ஒரு கடமை வரி பெறுகின்றனர்.
11. போரில் கவர் பொருள்களும், திறைப் பொருள்களும், வரிப் பொருள்களும் - நாட்டின் செல்வ மிகுதியை ஏற்படுத்துகின்றன,

24. சுந்தர பாண்டியன் மெய்க். 25. வீர ராசேந்திரன் மெய்க்.

மெய்க்கீர்த்திகளில் காணப் பெறும் இத்தகைய செய்திகள் முழுமையும் அவர் வரலாறு கூறுவனவாகும்.

## 1. நாடுகள் முறைப் படுத்தப் பெறுதல்

"காந்தளூர்ச் சாலைக் கலமறுத்தருளி
வேங்கை நாடும் கங்க பாடியும்"

என்பது முதலாக உண்மைப் புகழுக்காக எடுத்துக் காட்டப் பெற்ற தொடர்கள் அனைத்திலும் வென்ற நாடுகள் வென்ற கால முறைப் படியும், சிலவிடத்து இலக்கிய நடைக்கு ஏற்பவும் அமைக்கப் பெற்றுள்ளன.

"தத்துமாப் புரவிப் பொத்தப்பி வேந்தனை
வாரணை வன்கழல் கேரளன் தன்னைச்
சனநாதன் தம்பியைப் போர்க் களத்து...
தென்னனைச் சீவல்லவன் மகன்...
வீரகேசரியை மதவரை ஒன்றால் உதைப்பித்து"[1]

"செல்வமோ டவனிவாழ் பல்லவர் தெலுங்கர்
மாளவர் கலிங்கர் கோசலர் கன்னடர்
கடாரர் தென்னவர் கேரளர் சிங்கணர்..."[3]

என்னும் மெய்க்கீர்த்தி அடிகள் வென்று அடக்கப்பட்ட வேந்தர் களின் பெயர்களைச் சுட்டுகின்றன. இவையும் வெற்றிபெற்ற கால முறைக்கு ஏற்ப ஒன்றன்பின் ஒன்றாக முறைப் படுத்தப்பட்டு இலக்கிய நடையில் அமைக்கப்பட்டுள்ளன. இம்முறைவைப்பினால் போர்முறைகளையும் அவற்றிற்கான காரணங்களையும் தொடர்பு படுத்தியறிந்து வரலாற்று ஆசிரியர்கள் சிறந்த முறையில் வரலாற்றை எழுத முடிகிறது.

## 2. திறை பெறுதலும் திறைப் பொருள்களும்

வெற்றி பெற்ற மன்னர்கள் வென்ற நாடுகளின் ஆட்சிப் பொறுப்பைத் தாங்களே வைத்துக் கொள்ளும் வழக்கம் பெரும் பான்மையாகக் காணப்படவில்லை. தோல்வியுற்ற மன்னர்களை நாட்டை விட்டே ஒழித்துவிடுவது என்பதும் அவ்வாறே. ஒரு நாட்டின்மீது படையெடுத்த மன்னன் அந்நாட்டு அரசனை வென்று அந்நாட்டைத் தன் ஆட்சிக்கு உட்பட்டதாகச்செய்கிறான். ஆனால் ஆட்சிப் பொறுப்பை அம்மன்னனிடமே ஒப்படைத்துத் தனக்கு அந்நாட்டு வருமானத்தில் ஒரு பகுதியைத் திறையாகச் செலுத்தச் செய்து திரும்புகிறான். வெற்றியுடன் திரும்பி வரும்போதும் திறைப் பொருள்கள் பலவற்றுடன் தன் நாட்டிற்குத் திரும்பி வருகிறான். அப்பொருள்களை அவனே வலியப் பறித்து வருவதும் உண்டு;

1. வீர ராசேந்திரன் மெய். 2. வரி 67 முதல். 2. குலோ. 3. மெய். 2. வரி. 34 முதல்.

தோற்ற மன்னர்கள் அஞ்சி திறைப் பொருள்கள் பலவற்றை வரிசைப் படுத்திக் கொடுத்து அனுப்புவதும் உண்டு. இவ் இருவகைக்கும் சான்றுகள் பல மெய்க்கீர்த்திகளில் கிடைக்கின்றன. இவ்வாறே திறைப் பொருள்களும் பல வகையாகக் காணப்படுகின்றன. இவை ஆண்டுதோறும் முறையாகச் செலுத்தப்படுகின்றன.

சேரலனைச் செருவில்வென்று திறைகொண்டு வாகைசூடிக்
"கூபகர்கோன் மகள் கொடுப்பக் குலவிழிஞம் கைக்
கொண்டு"[1]

"பழிஇகந்து கொடுத்த புகழின் செல்வியும்
வாளார் உண்கண் மடந்தையர் ஈட்டமும்
மீளாது கொடுத்த வெங்கரி நிரையும் கைக்கொண்டு"[2]

வெற்றியுடன் திரும்பிய மன்னவன் பெற்று வந்த பொருள்களைச் சுட்டுகின்றன இவ்வடிகள். புகழ்ச்செல்வியைப் பெற்று வருகிறான்; தோல்வியுற்ற மன்னவன் தன் மகளைத் திருமணமாகச் செய்து தருகிறான்; பணிப் பெண்கள் பலரையும், யானைகள் பலவற்றையும் தருகிறான்; இப்பொருள்களைப் பெற்றுத் திரும்புகிறான் வெற்றி பெற்ற மன்னவன்.

"சேரனும் வளவனும் திறைகொணர்ந்து இறைஞ்ச"[3]

"ஒன்பது கண்டத்து உயர்புல வேந்தரும்
அன்புடன் வணங்கி அருந்திறை காட்டி
மணித்தட முடிமேல் அடிமலர் சூட"[4]

"வில்லவர் மாகதர் விக்கலர் செம்பியர்
பல்லவர் முதலிய பார்த்திபர் எல்லாம்
உறைவிடம் அருளென ஒருவர் முன் ஒருவர்
முறைமுறை கடவதம் திறைகொணர்ந்து இறைஞ்ச"[5]

"கங்கர் சோனகர் கைகயர் சீனரென்று
அறைகழல் வேந்தரும் பல்லாணை சூழ
முறைமையில் உரிந்த திறைகொணர்ந்து இறைஞ்சவும்[6]

"எப்புவி வேந்தரும் எழில்மண்ட லீகரும்
மும்முரசு முழங்கும் செம்மணி மாளிகை
கோயில் கொற்ற வாயில் புகுந்து
காலம் பார்த்துக் கழலிணைப் பணிந்து
நல்ல வேழமும் நிதியமும் காட்டி"[7]

---

1. பராந்தக பாண்டியன் மெய்க். வரி 6-7. 2. குலோ. I மெய்க். 3. 40-42.
3. மாற. விக்கிரம மெய்க். வரி. 9. 4. சடை. குலசேகரன் மெய்க். I. 21:2 3
5. மாற. சுந்தரபாண்டியன் மெய்க். 2. 18-19. 6. குலோத். II. மெய்க். 2. 39-41.
7. சடை. வீரபாண்டியன் மெய்க். 1. 12-16.

என்பன பேரரசனுக்கு அடங்கிய மன்னர் பலரும் ஆண்டுதோறும் தாம் கட்டுவதாக ஒப்புக்கொண்ட கப்பப் பொருள்களைத் தங்களுக்கென ஒதுக்கப் பெற்ற அந்த அந்த நேரத்தில் முறையாகக் கொண்டு வந்து அளித்து வணங்கி நின்றனர் என்பதைத் தெரிவிக்கின்றன.

''தீவாந் தரத்துப் பூபாலர் திறைவிடு
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப''[1]

''தருமை யானையும் பலப்பைப் புரவியும்
கண்மணித் தேரும் சீன வடமரும்
நாகத் தோடும் நவமணிக் குவையும்
ஆடகத் திரியும் அரியா சனமும்
முடியுங் கடகமும் முழுமணி யாரமும்
கொடியும் குடையுங் குளிர்வெண் கவரியும்
முரசுஞ் சங்கமும் தனமும் முதலிய
அரைசுகெழு தாயம் அடைய வாரி''[2]

யானை முதலிய உயர்ந்த பொருள்களும் செல்வக்குவியல்களும் திறைப் பொருள்களாகச் செலுத்தப்பட்டன. ஆனால் நாட்டை அழித்துக் கவர்ந்த பொருள்களாக நாட்டின் அனைத்துப் பொருள்களுமே குறிப்பிடப்படுகின்றன.

இவ்வாறு கவரப்பட்ட பொருள்களும், திறைசெலுத்தப்பட்ட பெரும் பொருட் குவியல்களும் ஆலயத் திருப்பணிகளுக்குச் செல விடப்பட்டுள்ளன; மறையவர், வீரர் முதலிய சுற்றத்தவருக்குப் பகிர்ந்தளிக்கப் பட்டுள்ளன என்ற செய்திகளும் கிடைக்கின்றன. இச்செய்திகள்,

''வருமுறை முன்னே மன்னவர் சுமந்து
திறைநிறைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் புரியும்
செம்பொன் அம் பலஞ்சூழ்த் திருமா ளிகையும்
கோபுர வாயிற் கூடசா லைகளும்
..............விளங்குபொன் வேய்ந்து''[3]

''......... வேங்கைநன் நாட்டிற் கொண்ட
இருநிதிப் பிறக்கம் வரிசையிற் காட்டி''[4]

''அந்திரர் முதலிய அரைசரிடு திரைகளும்......
உகந்துநான் மறையவர் முகந்துகொளக் கொடுத்து''[5]

என்பன போன்ற அடிகளால் பெறப்படுகின்றன.

---

1. குலோத். I மெய்க். 3-22-23. 2. சடை. வீரபாண்டியன் மெய்க். 1. 41-48. 3. விக்கிரமசோழன் மெய்க். 1. 31-39. 4. வீரராசேந்திரன் மெய்க். 1. 5. இராசாதி I மெய்க். 2. 73-75.

## 3. சிற்றரசர்-பட்டப்பெயரும் சுற்றமும்

வெற்றிபெற்ற மன்னர்கள் தங்கள் நாட்டின் அண்டைநாடு களைத் தங்கள் நாட்டோடு இணைத்துக்கொண்டு ஆட்சி செய் வதும் உண்டு, அவ்வாறு மிகப்பரந்த நாட்டை உருவாக்கிய மன்னர் கள் தங்கள் நாட்டுக் குடிமக்களின் நலனைப் பேணுவதில் கண்ணுங் கருத்துமாய் இருந்துள்ளனர். அதனால் நாட்டைப் பல பெரும் பகுதிகளாகப் பிரித்து மண்டலம், கோட்டம், கூற்றம் என்ற பெயர் களால் அமைத்தார்கள். ஆங்காங்கு பல சிற்றரசர்களையும் அரசப் பிரதிநிதிகளையும் அமர்த்தினார்கள். தங்கள் பொறுப்பில் இருந்த பகுதிக்கும் இளவரசன் ஒருவனை நியமித்தார்கள். இவர்கள் அந்தந்தப் பகுதி மக்களின் நலனில் தங்கள் நேரடிக் கவனத்தைச் செலுத்த வேண்டும் என்பதே மன்னர்களின் நோக்கமாக இருந்து வந்தது. மன்னர்களே படைத்தலைமை தாங்கிப் படையெடுத்துச் செல்லும்போது நாட்டின் பொறுப்பை ஏற்று நடத்துவதும், மன்னர் களுக்குத் துணையாக அவ்வப்பொழுது துணை புரிவதும் இளவரசர் களின் கடமைகளாக இருந்துவந்தன. இளவரசர்களே படைத் தலைமை ஏற்றுப் போருக்குச் செல்லுவதும் உண்டு.

இவர்களுள் பெரும்பாலும் அரசர்களின் சுற்றத்தவரே சிற்றரச ராக நியமிக்கப்பட்டுள்ளனர். உரிமை முறையில் அடுத்துப் பட்டம் பெறுபவரே இளவரசர்களாக ஆக்கப்பட்டனர். இவர்களுக்கு முறை யாக முடிசூட்டுவிழா நடைபெற்றுள்ளது; பட்டப் பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இச்செய்திகள் அனைத்திற்கும் மெய்க்கீர்த்தி களுள் சான்றுகள் கிடைக்கின்றன.

"தன்சிறிய தாதையையும் திருத்தமை யனையும்
குறிக்கொள் தன்இளங் கோக்க ளையும்
நெறியுணர் தன்திருப் புதல்வர் தம்மையும்
பொன்னணிச் சுடர்மணி மகுடம் சூட்டி"[1]

"காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லபன் என்றும். . .
பருமணிச் சுடர்மணி மகுடம் சூட்டி"[2]

"மைந்த னாகிய கங்கைகொண்ட சோழனை
ஏழுயர் யானைச் சோழபாண்டியன் என்று
ஈண்டுயர் மணிமுடி இசைபெறச் சூட்டிப்
பாண்டி மண்டலங் கொடுத்தருளி"[3]

---

1. இராசாதி I மெய்க். 1. 4-7.
2. இராசேந். II. மெய்க். 32-35.
3 வீரராசேந்திரன் மெய்க். 2. 13-16.

மன்னனின் சிறிய தந்தை, தமையன், தம்பி, மக்கள், பெயரர் போன்ற உறவினர்கள் சிற்றரசர்களாக நியமிக்கப்பட்டனர்; சோழ வல்லபன், சோழ பாண்டியன் போன்ற பட்டப் பெயர்களைப் பெற்றனர்; பாண்டி மண்டலம் போன்ற பல மண்டலங்களின் உரிமை களைப் பெற்றனர்; முடி சூட்டப்பட்டனர் என்பன போன்ற செய்தி களை மேற்கண்ட மெய்க்கீர்த்தி அடிகள் உணர்த்துகின்றன. இவற் றைப் போன்ற செய்திகளைத்தரும் அடிகளுள் மேலும்சில—

> “. . . . . . தன் சிறிய
> தாதையாகிய எறிவலி கங்கைகொண்ட சோழனைப்
> பொங்கிகல் இருமுடிச் சோழன் என்றும்
> தன் திருத் தம்பியர் தம்முள் மும்முடிச்
> சோழனைச் சோழ பாண்டியன் என்றும்”[1]

## 4. தந்தை–மகன்; நாடும் முடியும்

தந்தைக்குப் பிறகு மகனே அந்நாட்டின் முடி சூடுதல் என்னும் உரிமைமுறையே தமிழ் மன்னரிடை இருந்து வந்துள்ளது. மகன் இல்லாதபோதும், மகன் இளையவனாக இருந்தபோதும் அரசனின் தம்பி, சிறிய தந்தை போன்றோர் மன்னர்களாக முடி சூட்டப் பட்டுள்ளனர். அவர்களும் இல்லாத நிலையில் சகோதரியின் மகன் போன்ற பிற உறவினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். பெரும் பாலும் அரசன் தன் ஆட்சியின்போதே அடுத்த மன்னனைத் தேர்ந்தெடுத்து அவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டித் தனது ஆட்சியில் தனக்குத் துணையாக வைத்துக்கொள்வான். அவனே அடுத்த பட்டத்தைப் பெறுவான்.

பேரரசன் முதலாம் இராசராசன், இராசேந்திரன் ஆகியோர் தந்தையும் மகனுமாவர். முதலாம் இராசேந்திரனின் மக்கள் மூவர் முறையே முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன், வீர ராசேந்திரன் ஆகியோர் தொடர்ந்து பட்டம் பெற்றுள்ளனர். வீர ராசேந்திரன் மகன் அதிராசேந்திரனுக்குப் பிறகு முதலாம் இராசேந்திரனின் மகள் வயிற்றுப் பெயரனும் இரண்டாம் இராசேந்தி ரனின் மருமகனுமாகிய முதலாம் குலோத்துங்கன் பட்டம் எய்தி யுள்ளது குறிப்பிடத்தக்கதாகும். சோழர் வழியில் மகன் இல்லாமை யின் மகள்வழியில் தோன்றிய குலோத்துங்கன் தாய்வழி உரிமை பாராட்டி மன்னனாகிறான்.

பாராந்தகன் வீரநாராயணனின் மகன் இராசசிம்மன், அவன் மகன் வீரபாண்டியன் போன்ற பாண்டிய மன்னரும் இவ்வாறே அரசுரிமை பெற்றுள்ளனர். இச் செய்திகளையும் மெய்க்கீர்த்திகள் அறிவிக்கின்றன.

---

1. இராசேந். II. மெய். 3-7.

சான்று

"பொன்னி யாடை நன்னிலப் பாவையின்
திருமணி மகுடம் உரிமையிற் சூடி"[1]

"நாவலந்தீவு அடிப்படுத்த நரபதியும் வானடைந்தபின்
வானவன்மகா தேவிஎன்னும் மலர்மடந்தை முன்பயந்த
மீனவர்கோன் இராசசிங்கன் விகடவா டவனவனே"[2]

"மன்னவர்க்கோன் இராசமல்லன் மணிமுடிமா னாபரணன்
தென்னவர்க்கோன் மற்றவர்க்குச் சேரலன்தன் மடப்பாவை....
வீரகேரளன் வீரபாண்டியன்...மன்னியமணி முடிகவித்து"[3]

தன் தந்தை வென்று தன் நாட்டுடன் இணைத்துக் கொண்ட நாடுகளின்மீது 'மகனும் படையெடுத்து வென்றுள்ளான் என்ற செய்தி பல மன்னர்களின் அரசியலிலும் அறியமுடிகின்றது. தந்தை யிடம் தோல்வியுற்ற மன்னன், மகன் பட்டத்திற்கு வந்ததும் அவன் மேல் படையெடுத்துத் தன் நாட்டைத் திரும்பப் பெற்று விட வேண்டும் என்ற தன் உரிமை வேட்கையே இப்படை யெடுப்பிற்குக் காரணமாக இருந்துள்ளது.

தன்னைத் தோல்வியுறச் செய்த அதே மன்னன் மீது மீண்டும் போர் தொடுக்கும் நிலையும் பலவிடத்துக் காணப்படுகிறது. தன் னுரிமை வேட்கையே இதற்கும் காரணமாகிறது. அவ்வேட்கை உந்த, தன் படைபலத்தைப் பெருக்கிக்கொள்ளுகிறான். பிற மன்னர் களை நாடித் துணை வேண்டுகிறான். இவ்வாறு வலிமை வாய்ந்த பெரும் படையின் துணையொடு மீண்டும் போர் தொடுக்கிறான்.

"..... செங்கண்மால் சீவல்லபன்
குன்னூரில் அமர்வென்றும் குரைகடல் ஈழம் கொண்டும்
விண்ணாள வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்தும்"[4]

"...... ஸ்ரீபராந்தக மகாராசன்
விரைபரித்தேர் வீரநாரணன் ......
சேறுபடு வியன்கழனித் தென்விழிஞ நகர்கொண்டும்"[5]

".,... .மன்னர் பிரான் இராசசிங்கனும்
தேங்கமழ்பொழில் குன்னூரிலும் சிங்களத்தும் விழிஞத்தும்
வாடாத வாகை சூடி"[6]

"முரட்டொழில் சிங்களர் ஈழமண் டலமும்
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீரா யிரமும்"[7]

---

1. குலோத். I மெய்க். 3. 13-14. 2. இராசசிம்மன் மெய்க். 52-54.
3. வீரபாண்டியன் மெய்க். 7-12. 4. பராந்தக வீரநாரயணன் மெய்க். 55-58.
5. ௸ 73-80. 6. இராசசிம்மன் மெய்க் 33-37. 7. இராசராசன் I. 7-9.

"பொருகடல் ஈழத்து அரசர்தம் முடியும் . . .
தெண்திரை ஈழ மண்டலம் முழுவதும் . , .
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்"[1]

என்பனவற்றுள் முறையே சீவல்லபன், வீரநாரணன், இராசசிம் மன் ஆகிய பாண்டிய மன்னரும், முதலாம் இராசராசன், இராசேந் திரன் ஆகிய சோழ மன்னரும் ஒரே நாட்டின் மீது தொடர்ந்து படையெடுத்த செய்திகள் கூறப்படுவதைக் காணமுடிகிறது. இவை தன்னுரிமை விரும்பியதன் காரணத்தால் ஏற்பட்டபோர்கள் ஆகும்.

"வடதிசை வேங்கை மண்டலங் கடந்து
தாங்கலர் கலிங்கமும் கனல்எரி பரப்ப"[2]

"வேங்கை மண்டலங் கடந்து தாங்கலர்
கலிங்கம் ஏழும் கனலெரி பரப்பி"[3]

முதலாம் குலோத்துங்கன், விக்கிரம சோழன் ஆகியோர் மெய்க் கீர்த்திகளில் உள்ள இவ் அடிகள் ஒரே போரைக் குறிப்பன. விக்கிரம சோழன் இளவரசனாக இருந்தபோது பெற்ற இவ் வெற்றி, பேரரச னான குலோத்துங்கன் மெய்க்கீர்த்தியிலும், வெற்றிபெற்ற மகனது மெய்க்கீர்த்தியிலும் இடம் பெற்று உள்ளது.

"ஆகவ மல்லனை ஐம்மடி வென்கண்டு
வேங்கை நாடு மீட்டும் கொண்டு"[4]

"இரண்டாம் விசையும் குறித்த களத்து
ஆகவ மல்லனை அஞ்சுவித்து"[5]

"பகைத்து எதிர் மூன்றாம் விசையினும்—ஏன்றுஎதிர்
பொருது"[6]

ஒரே நாட்டின் மீது, ஒரே மன்னனை எதிர்த்து, ஒரே களத்தில் இரண்டுமுறை, மூன்றுமுறை என்று ஐந்து முறை படை யெடுத்ததாக ஒரு அரசனுடைய மெய்க்கீர்த்தி கூறுகிறது. மீண்டும் படையெடுத் ததற்கான காரணங்களையும் அம்மெய்க்கீர்த்திகளே கூறுகின்றன.

" . . . . . .   . . . . . . .   சளுக்கி
பழியொடு வாழ்வதில் சாவதுசால நன்றுஎன்று
ஏவமுற்று . . . . யாவரும் அறிய எழுதிய கடிதம்"[7]

" . . . . .   . . . . . .   காதலி யொடுந்தன்
தவ்வையைப் பிடித்துத் தாயை மூக்கரிய...
ஆங்கவமானம் நீங்குதற் காக...
மீண்டும் வந்து வாள்தொழில் புரிந்து"[8]

---

1 இராசேந்திரன் I. 2. குலோத். I மெய்க். 3. 66-67. 3. விக்கிரம சோழன் மெய்க். 1. 12-15. 4. வீரராசேந்திரன் 5-6. 5. வீரராசேந்திரன் 5-6. 6. வீரராசேந்திரன்5-6. 7. வீரராசேந்திரன். 8. இராசராசன் I மெய்க். 2. 55-58.

தோல்வி என்னும் இழிவைப் போக்க எண்ணிய மன்னரின் உள்ள நிலையைக் காட்டுவன இத்தொடர்கள்.

5. ஆறில் ஒன்று - வென்ற நாடுகளிலிருந்து கவர்ந்து வந்த பொருள்களும், சிற்றரசர் செலுத்திய திறைப் பொருள்களும் நாட்டின் செல்வ வளத்தை உயர்த்தின. எனவே குடிமக்களிடமிருந்து அரசர் ஆறில் ஒரு கடமையே இறை வரியாகப் பெற்று வந்தனர் என்பதும் புலனாகிறது. இதனை,

"ஆறில் ஒன்று அவனியுள்
கூறுகொள் பொருள்களும்"[1]

"நாடு வளம்படுத்து நையும் குடிஓம்பி
ஆறில் ஒன்றுகொண்டு அல்லவை கடிந்து"[2]

என்னும் அடிகள் புலப்படுத்துகின்றன.

## 6. 1. 3. துணைவி

"பன்னிரு பாட்டியல் கூறும் சில அமிசங்கள் இதில் இல்லை. இதற்குப் பின் தோன்றிய மெய்க்கீர்த்திகளிலும் இல்லை. அரசியுடன் வாழ வேண்டும் எனவும், நீண்ட காலம் வாழவேண்டும் எனவும் வாழ்த்தும் பகுதிகளை இம்மெய்க்கீர்த்திகளில் காணக் கூட வில்லை"[3]

என்பார் ஆ. வேலுப்பிள்ளை அவர்கள். ஆனால் மன்னர் தேவிய ருடன் வீற்றிருக்கும் காட்சிகள் பல, மிக அழகுற உவமை நயங்க ளோடு கூறப்பட்டுள்ளன. பெரும்பாலான மெய்க்கீர்த்திகளில் 'உலக முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய' என்னும் தொடரும் இதே பொருளில் 'புவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய......" என்பது போன்ற பல தொடர்களும் காணப்படுகின்றன. இவை அனைத்தும்,

'அவளுடன் வாழ்கெனச் சொல்லியும்'

என்னும் இலக்கணத்திற்கு உரியனவாகவே அமைகின்றன.

1. தியாக வல்லி உலகுடையாள் - சிவனிடத்து உமை வீற்றி ருப்பதென வீற்றிருக்கிறாள்.

2. ஏழிசை வல்லபி ஏழுலகமுடையாள் - உமையுடன் கங்கை வீற்றிருப்பதெனக் காட்சி தருகிறாள்.

3. உலக முடையாள் - திருமாலாகத்துப் பிரியாது என்றும் திருமகள் இருப்பது போல இருக்கிறாள்.

---

1. இராசாதிராசன் I வரி 74. 2. விக்கிரம சோழன் மெய். 3. 4-5. 4. சாசனமும் தமிழும் பக். 234.

மேலும் இவர்களுடன் வீரசிம்மாசனத்து வீற்றிருந்தருளிய கோ இராச கேசரிவர்மரான, திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்று மன்னவன் போற்றப் பெறுகிறான்.[1]

"முல்லை வாள் நகை முக்கோக் கிழானடி
உமையொடும் சங்கரன் இமயச் சிமயத்து
இருந்தெனப் பொருந்தி உடனினி திருப்ப
ஆங்கவன் மகிழும் கங்கையொப் பாகிய . . . .
திரிபுவனம் முழுதுடையாள் இவன்திரு உளத்து
அருள்முழுது உடையாள் எனஉடன் இருப்ப"[2]

என்பன குலோத்துங்கனின் மகன் விக்கிரமசோழனின் மெய்க்கீர்த்தி அடிகள். மன்னன் தேவியுடன் இனிதிருப்ப என்ற வாழ்த்துகளையே இவ்வடிகளில் காணுகிறோம்.

"உலகமுழு துடையா ளுடனே
இலகு கருணை இரண்டுஉரு வென்ன . . . .
அம்மையும் அப்பனுமாய் . . . வீற்றிருந்தருளிய
பராக்கிரம பாண்டிய தேவர்"[3]

"வீரசிம்மா சனத்து உலகமுழுதுடை யாரொடும்
வீற்றிருந் தருளி மாப்புகழ் மனுவுடன் வளர்த்த"[4]

"திருந்துநித்தில மணிமுறுவல் தெரிவைமுக்கோக்
கிழானடிகளும்
ஊழிஊழி பிரியாது வாழிமணம் புணர்ந்திருப்ப"[5]

பல மெய்க்கீர்த்திகளில் கூறப்பெறும் இச்செய்திகள் அவளுடன் வாழ்கெனச் சொல்லும் இலக்கணத்திற்கு உரியனவாகும்.

*1.* தேவியர் ஆட்சி—மேலும் அரசமாதேவியரும் முடி சூடி விளங்கினர்; அரசு ஆணை செலுத்தினர் என்பன போன்ற செய்திகளையும் மெய்க்கீர்த்திகளில் தேவியரைக் குறித்து வரும் தொடர்களால் அறிய முடிகிறது.

"திருமகள் என்னத் திருத்தோள் மேவி
ஒத்தமுடி சூடி உயர்பே ராணை
திக்கெட்டும் நடப்ப . . . . .
உலகமுழு துடையா ளொடும்"[6]

"திருவாணை உடன் ஆணைத் திசை நடாத்தும் தியாகவல்லி
கலக வெங்கதிர் மணிமுடி கவித்து"[7]

---

1. குலோத் I. மெய்க். 3. 83-92. 2. விக்கிரம சோழன் மெய்க். 1, 64-71. 3. அரி. பராக்கிரம பாண்டியன் மெய்க். 43-48. 4, அதிராசேந்திரன் மெய்க். 15-16. 5, குலோத். II வரி 34-35 6. சடை. சுந்தர வரி84. 7. குலோ. II வரி 31.

அரச மாதேவியர்தம் அரசனுடன் இருந்து பொறுப்பேற்று ஆணை நடத்தினர் என்பதை இவ் அடிகள் உணர்த்துகின்றன.

மெய்க்கீர்த்திகளில் அரசமாதேவியர் பற்றிய செய்திகளைக் கூறும் முறை வீரராசேந்திரன் மெய்க்கீர்த்தியிலிருந்தே தொடங்கு கிறது. அதுவும் 'உலகமுடையாளொடும்' வீற்றிருந்தருளின என்ற தொடரால் மட்டுமே சிம்மாசனத்தில் அரசமாதேவி உடனிருந்த செய்தி கூறப்படுபிறது.

முதலாம் குலோத்துங்கனின் இரண்டாம், மூன்றாம் ஆண்டு மெய்க்கீர்த்திகளில் தேவியர் பற்றிய தொடர் காணப்படவில்லை. ஆறாம் ஆண்டு மெய்க்கீர்த்தியில்,

"திருப்புக லூர்தென் திருவனைய புகழ்நிறை
புவன முழுதுடை யாளொடும்"

என்று உவமை விளக்கத்தோடு எடுத்துக் கூறப்படுகிறது. நாற்பத் தைந்தாம் ஆண்டு மெய்க்கீர்த்தியில் இரண்டு தேவியர் உடனிருந்த தாகக் குறிப்பிடப்படுகின்றனர். உமையும் கங்கையும் போல என்ற உவமையோடும் குறிப்பிடப்படுகின்றனர். விக்கிரமசோழன் மெய்க் கீர்த்தியிலும் இத்தன்மை காணப்படுகிறது.

## 2. தேவியர் இயற் பெயரும் பட்டப் பெயரும்

பொதுவாக நோக்குமிடத்து, அவனி முழுதுடையாள், உலக முழுதுடையாள், உலக முடையாள், திரிபுவன முழுதுடையாள், புவன முழுதுடையாள் என்ற பெயர்களே சோழர், பாண்டியர் ஆகிய அனைத்து மன்னர்களின் மெய்க்கீர்த்திகளிலும் சுட்டப்படு கின்றன. 'திரைலோக்கிய முழுதுடையாள்' என்ற தொடரால் சடையவர்மன் வீர பாண்டியன் தேவி சுட்டப்படுகிறாள். இவை தேவியரின் பட்டப் பெயர்களே. மன்னர்கள் பெற்ற பட்டப் பெயர் களைப்போல தேவியரின் இப்பட்டப் பெயர்கள் முறையாகச் சூட்டப்பட்டதாகவும் தெரியவில்லை.

"தியாகவல்லி உலகுடையாள்"[1]
"ஏழிசை வல்லபி ஏழுலகமுடையாள்"[2]
"உலகுடை முக்கோக் கிழானடிகள்"[3]
"அம்பொன் மலர்க்கொடி செம்பியன் கிழானடி"[4]
"தெரிவையர் திலதம் தியாக பதாகை"[5]
"வானவன் மகாதேவி என்னும் மலர்மடந்தை"[6]
"வலவன் மணிமகள் அக்கள நிம்மடி திருவயிறு கருவுயிர்த்த"[7]

1. 2. குலோத்-I. 3. இராசராசன்-II. & விக்கிரம சோழன். 4. குலோ-II.
5. விக்கிரம சோழன். 6. சின். பெரிய செப்பேடு. வரி-53. 7. தளவாய். வரி-72

என்பன போன்ற பெயர்கள் அரசமாதேவியர் சிலரின் இயற் பெயர் களாகச் சுட்டப் படுகின்றன.

3. பிற மன்னரின் தேவியர் — இவர்களைத் தவிர பகை மன்னரின் தேவியர் பலர் வெற்றி பெற்ற மன்னவர்களால் சிறை பிடிக்கப்பட்டனர் என்று குறிப்பிடப்படுகின்றனர். அவர்கள் தங்களைச் சிறை பிடித்த மன்னவரின் தேவியருக்குக் குற்றேவல் செய்கின்றனர். இச் செய்திகளை விளக்கும் மெய்க்கீர்த்தி அடிகள் !

"மற்ற வன்மகா தேவிய ரோடும்
வஸ்துவாக னங்கைக் கொண்டு"[1]

"மற்றவன் ஒருமக ளாகிய இருகயன் தேவி
நாகலை என்னும் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றாக்கி"[2]

"தொழுதுவந் தடையார் நிருபர்தம் தோகையர்
அழுத கண்ணீர் ஆறு பரப்பி"[3]

"கவ்வையுற் றோடிக் காதலி யொடுந்தன்
தவ்வையைப் பிடித்துத் தாயைமூக் கரிய"[4]

"வடபுல வேந்தர் மணிப்புயம் பிரியா
இலங்கிழை அரிவையர் தொழுதுநின் றேத்தும்
உலக முழுதுடை யாளொடும்"[5]

"பராள் வேந்தர் உரிமை அரிவையர்
இருமருங்கு நின்று விரிபெருங் கவரியின்...
அந்தளிர்க் கரங்கொண்டு அசைய வீச"[6]

இவ்வாறு பொதுப்படக் கூறப்படும் தேவியர், மகளிர் தவிர சில அடி கள் ஆகவமல்லனின் தேவியர் இருவரின் பெயர்களைச் சுட்டியும் கூறுகின்றன.

"ஒப்பில் சத்தியவ்வை சாங்கப்பை என்று இவர்முதல்
தேவியர் குழாமும் பாவையர் ஈட்டமும்
இனையன பிறவும் முனைவயிற் கொண்டு"[7]

இவ்வடிகளுள் கூறப்படும் **சத்தியவ்வை, சாங்கப்பை** என்போர் ஆகவ மல்லனின் தேவியராவர்.

---

1. விரராசேந். 18,19. 2. ஷை மெய் 2. வரி 30-31. 3. மாற. சுந்: மெய்: 2 வரி 32-33: 4: இராசாதிராசன் மெய். 2 வரி 55-56: 5: மாற. சுந்தர: மெய்: 2 வரி 124: 6: சடை: சுந்தர. வரி 80 முதல்: 7: இராசேந். II மெய்: 4 வரி 68:

"இராச மயேந்திரவரத்துக்கு எழுந்தருளி தேவியர் சின்னாச் சியம்மன், திருமலைதேவி அம்மன் இவர்களும் மகாதானம் பண்ணி"[1]

இவற்றுள் கிருஷ்ணதேவமகாராயரின் தேவியர் பெயர்கள் காணப்படுகின்றன.

## 6. 1. 4. இயற் பெயரும் சிறப்புப் பெயரும்

கல்வெட்டுகள் ஆணைகளையும் அறச்செயல்களையும் ஆலயப் பணிகளையும் கூறுகின்றன. அச்செயல்கள் எந்த அரசனால் செய்யப்பட்டவை ? எந்த அரசன் காலத்தில் செய்யப் பட்டவை ? என்பன போன்ற வினாக்களுக்கு அக் கல்வெட்டுகளில் காணும் மெய்க்கீர்த்திகளிலேயே சரியான விடை கிடைக்கிறது. கல்வெட்டுச் செய்திகளை அளித்த மன்னவனின் இயற் பெயர், அவன் பட்டம் எய்திய போது சூட்டப்பட்ட அபிஷேகப் பெயர், அரசு முறைப்படி பெறும் பட்டப் பெயர், அவனது செயல்களின் காரணமாக வந்த சிறப்புப் பெயர்கள் போன்றவற்றால் அவ்விடை அமையும். கல்வெட் டில் கூறப்பெறும் அறம் முதலிய செய்திகள் அரசனைத் தவிர மற்ற வர்களால் செய்யப்பட்ட செயல்களைக் குறிப்பனவாக இருந்தாலும், இந்த அரசனது ஆட்சிக் காலத்தில் இச்செயல் செய்யப்பட்டது என்று குறிப்பிடுமுகத்தான் அரசனின் பெயர்கள் குறிப்பிடப்படு கின்றன.

### 1. இயற்பெயர்-பட்டப் பெயர்

"செழியரைத் தேசுகொள் ஸ்ரீ கோஇராசகேசரி வன்மரான
ஸ்ரீ இராசராச தேவர்க்கு..."

"கோப்பரகேசரி வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீ விக்கிரம சோழ தேவர்க்கு"

"...... மதிக்குலம் விளக்கிய கோமுதல்
கோச்சடைய வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
சீவல்லப தேவர்க்கு"

"...... மதிக்குலம் விளக்கிய கோமுதல்
கோமாற வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்க்கு"

இவற்றுள் இராசராசன், விக்கிரமன், சீவல்லபன், சுந்தர பாண்டியன் ஆகிய இயற் பெயர்கள் முறையே இராசகேசரி, பரகேசரி, சடைய வர்மன், மாறவர்மன் என்னும் பட்டப் பெயர்களோடு அமைந் துள்ளன. இவை முறையே சோழ மன்னரும் பாண்டிய மன்னரும் கொண்ட பட்டப் பெயர்களாகும்.

---

1. கிருஷ்ண தேவராயர் மெய்க்.

2. அபிடேகப் பெயர்

"வென்றிகொள் மும்முடிச் சோழனைத் தெம்முனை
அடுதிறல் சோழ பாண்டியன் என்றும் .....
ஏழுயர் களிற்றுச் சோழ கேரளனை
வார்சிலைச் சோழ கேரளன் என்றும்"[1]

இராசாதிராசன் தன் தம்பியர் போன்ற சுற்றத்தவருக்குத் தனித்தனி நாட்டினை அளித்து முடிசூட்டி வைத்தபோது முறையே சோழ பாண்டியன், சோழ கேரளன் என்ற அபிஷேகப் பெயர்களைச் சூட்டியுள்ளான். இவை தான் வென்ற பாண்டிய நாட்டுப் பகுதியையும், சேரநாட்டுப் பகுதியையும் தன் தம்பியருக்கு அளித்துப் பெயர் சூட்டிய செய்தியைக் குறிப்பனவாகும். அந்தந்த நாட்டு மக்களுக்கு மன்னனிடம் நம்பிக்கையும் மதிப்பும் நல்ல எண்ணமும் ஏற்பட வேண்டும் என்ற காரணத்தால் இவ்வாறு அபிஷேகப் பெயர்கள் பல சூட்டப்பட்டுள்ளன.

3. சிறப்புப் பெயர் - போர்த்திறன், கொடைத் தன்மை, மனுநெறிவழாமை போன்ற சிறப்புச் செயல்களால் மன்னர்களுக்குச் சிறப்புப் பெயர்கள் சூட்டப் பட்டுள்ளன.

"நின்றபெரும் புகழாலும் நிதிவழங்கு கொடையாலும்
வென்றிப் போர்த் திருவாலும் வேல் வேந்தரில் மேம்பட்ட
கதிரார்கடுஞ் சுடரிலைவேல் கலிப்பகை கண்டருள் கண்டன்
மதுராபுர பரமேசுரன் மாநிதி மகரகேதனன்
தன் செங்கோல்..........."[2]

நாட்டு மக்களிடையே துன்பம் எதுவும் இல்லாமல் பாதுகாத்த வீர நாராயணன் கலிப்பகை என்றே சிறப்பிக்கப் படுகிறான். மதுரைக்கு இறைவனாகவே விளங்குபவன், மன்மதன், மீனக்கொடியோன் என்பன போன்ற காரணங்களாலும் சிறப்புப் பெயர்கள் சூட்டப் பட்டுள்ளன என்பதை இவ்வடிகளால் அறிய முடிகிறது.

4. முடிவு - சோழ மன்னர் தம் இயற் பெயருக்குமுன் இராச கேசரி, பரகேசரி என்னும் பட்டப் பெயர்களை முறையாக மாறி மாறி வைத்துக் கொண்டனர். பாண்டிய மன்னர் மாறவர்மன், சடையவர்மன் என்னும் பட்டங்களை அவ்வாறே மாறிமாறி ஏற்றனர். இவ்வகைப் பட்டப் பெயர்களுள் ஒன்றும் இயற் பெயரும் இணைந்து மாறவர்மன் சுந்தர பாண்டியன், இராசகேசரி இராசேந்திரன் என்பன போன்ற பெயர்கள் மெய்க்கீர்த்திகளில் அமைகின்றன. ஆனால் அவர்களே பரந்த நிலப் பரப்பினை வென்று

1: இராசாதிராசன் மெய்க். வரி 7 முதலாக. 2: வீரநாராயணன் மெய்க். 85-89.

பேரரசர்களாக விளங்கிய பிறகு திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்ற சிறப்பினைப் பெறுகிறார்கள் என்பன போன்ற செய்திகள் இங்கே எடுத்துக் காட்டப்பட்ட இயற் பெயர், சிறப்புப் பெயர்களின் அமைப்புகளால் பெறப்படுகின்றன.

### 6. 1. 5. ஆண்டு

'சிறக்க யாண்டு' எனத் திறப்பட உரைப்பது மெய்க்கீர்த்தி யாகும் என்பது இலக்கணம். அவ் இலக்கணத்திற்கேற்ப அனைத்து மெய்க்கீர்த்திகளிலும் ஆண்டு கூறப்பட்டுள்ளது. கல்வெட்டில் கூறப்பெறும் செய்திகள் மன்னவனைச் சார்ந்ததாக இருந்தாலும், மற்றையவர் செய்தனவாக இருந்தாலும் அச்செய்தி நிகழ்ந்த ஆண்டை அக்கல்வெட்டில் குறிப்பது வழக்கமாகவே இருந்து வந்துள்ளது. பெரும்பாலான மெய்க்கீர்த்திகளில் அன்று ஆண்ட அந்நாட்டு மன்னனது ஆட்சியாண்டே குறிக்கப்பட்டுள்ளது. அவ்ஆண்டின் சிறப்பும் பெருமையும் இணைத்துக் கூறப்பட்டுள்ளது. சில மெய்க்கீர்த்திகளில் சக ஆண்டு, கலியுக ஆண்டு, கொல்லம் ஆண்டு போல்வன காணப்படுகின்றன. இவையே வரலாற்றிற்குச் சிறப்பாகப் பயன்படுவன.

#### 1. ஆட்சியாண்டு

"தன்—எழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்
தொழுதகை விளங்கும் யாண்டே . . . . ஸ்ரீ ராசராச
தேவர்க்கு யாண்டு 29 ஆவது"

"ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்குயாண்டு
நாற்பத்தைந்தாவது
துலாஞாயிற்றுப் பூர்வபட்சத்து வியாழக்கிழமையும்
சப்தமியும் பெற்ற உத்திராடத்து நாள்..."

"செங்கோல் யாண்டு நாற்பதின்மேல் மூன்றோடுஈர்
யாண்டில்"[1]

"இராச்சிய வர்ஷம் இரண்டாவதன் எதிர் பதினான்காம்
யாண்டில்"[2]

"ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்டு பதின்மூன்றாவதின்
எதிராமாண்டு"

"ஸ்ரீ சுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு பதினைந்தாவது
நாள் நூற்று எழுபத்தாறினால்"

இவற்றைப் போல பெரும்பான்மையும் ஆட்சியாண்டுகளாகவே காணப்படுகின்றன. இவற்றுள் ஆண்டும் நாளும் துல்லியமாகக்

1. பராந்தக வீரநாராயணன் மெய்க். 2. இராசசிம்மன் மெய்க்.

கூறப்படுவது குறிப்பிடத்தக்கது. அவற்றோடு இலக்கினம், பட்சம், கிழமை, திதி, நட்சத்திரம் ஆகியவை அமைந்திருப்பது எந்த ஆண்டு என்பதைச் சரியாக வரையறுக்க உதவி புரிகிறது. நாற்பத்தைந்தாம் ஆண்டு என்பதை நாற்பதின்மேல் மூன்றோடு ஈரியாண்டு எனவும், பதினாறாம் ஆண்டு என்பதை இரண்டாவதன் எதிர் பதினான்காம் ஆண்டு எனவும் இவ்வாறு பலவாறு அழகுபடக் கூறப்படுவது இலக்கிய நயம் கருதியதாகும்.

2. சக ஆண்டு - வரலாற்றுக்குப் பயன்படும் வகையில் சில மெய்க்கீர்த்திகளில் ஆண்டுகள் நேரடியாகக் கூறப்படுவதையும் காண முடிகிறது. அவ்வாறு எழுதப்படும் முறைக்குச் சில சான்றுகள்—

> ''சகயாண்டு ஆயிரத்து ஒருநூற்று ஒருபத்து ஒன்பதால்
> பிங்கல சம்வத்சரத்து. . .ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு
> யாண்டு பத்தொன்பதாவது. . .ஞாயிற்றுப் பதினைந்தாந் தேதியான
> வெள்ளிக் கிழமையும் ரேவதியும் பெற்றநாள்''[1]

> ''சகாத்தம் 1471 இன்மேல் சொல்லாநின்ற சவுமிய
> வருஷம் ஆனிமாதம் 13ஆம் தேதி சோம
> வாரமும் பிரதமையும் பெற்ற மூல நட்சத்திரத்து நாள்''[2]

> ''ஸ்வஸ்திஸ்ரீ விசயாற்புதய சாலிவாகன சகவருஷம் 1438 இன்
> மேல் சொல்லாநின்ற தாதுவருஷம் மகரஞாயிற்றுப் பூர்வ
> பட்சத்தில் திரயோதசியும் சோமவாரத்து நாள். .''[3]

அரசரின் ஆட்சியாண்டு எழுதும் முறையன்றி சக ஆண்டு முதலியன குறிப்பிடும் இம்முறையினால் காலத்தை எளிதாகக் கண்டறிய முடிகிறது. சகாத்தம் 1471, சவுமிய, ஆனி என்பதற்குச்சரியானது (1471+78) கி. பி. 1549 சூன் மாதம் என்பதை அறிய முடிகின்றது. சக ஆண்டு முதலியன எழுதும் இம்முறை மூன்றாம் குலோத்துங்கனது பத்தொன்பதாவது ஆட்சியாண்டு மெய்க்கீர்த்தியிலிருந்தே தொடங்குகின்றது. அதன்பிறகு இம் முறை மிக அதிகமாக வளர்ந்துள்ளதைக் காண முடிகிறது.

### 6. 1. 6. அடியும் தொடையும்

1. அடி – மெய்க்கீர்த்திகள் நான்கு முதலாகிய சீர்களையுடைய அடிகளால் அமைய வேண்டும்; ஆசிரியம் விரவிய சொற்சீரடிகளாற் பாடப்படவேண்டும்; சொற்சீரடி என்னும் கட்டுரைச் செய்யு

1. குலோத் :3 மெய்க். 4: 2, சதாசிவதேவ மகாராயர் மெய்க்: 3. கிருஷ்ணதேவ மகாராயர் மெய்க்:

ளால் அமைய வேண்டும் என்பன மெய்க்கீர்த்தி அடிகளைப் பற்றிய இலக்கணமாகும்.

இரண்டடி ஒரு தொடையாய் அமைய வேண்டும் என்பது மெய்க்கீர்த்தி அமைப்பின் தொடை பற்றிய இலக்கணமாகும். இவற்றை,

"சீர்நான் காதி இரண்டடித் தொடையாய்"[1]
"தொழிலார்ந்த மெய்க்கீர்த்தி சொற்சீ ரடியால்"[2]
"சொற்சீ ரடியால் தொழிற்படு கீர்த்தியை"[3]

என்னும் பாட்டியல் அடிகள் உணர்த்துகின்றன.

இரண்டு சீரானும் மூன்று சீரானும் ஐந்து சீரானும் ஆறுசீர் முதலிய பல சீரானும் அடிகள் வருமாயினும் நாற்சீரடியே சிறப்புடைய அடியாகும். மிகக்குறைந்த சீர்களாலும், மிகப்பலவாகிய சீர்களாலும் அமையாது அளவுடைய சீர்களால் அமைந்தது நாற்சீரடியே. மேலும் அவ் அடியே பாக்களுள் பயின்று வருவது. எனவே அவ் அடி அளவடி, நேரடி என்னும் பெயர்களைப் பெற்றது. இச் சிறப்பினை,

"நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே"[4]

என்னும் தொல்காப்பிய நூற்பா உணர்த்துகிறது.

2. அகவல் ஓசை அடி - பெரும்பாலான மெய்க்கீர்த்திகள் இச் சிறப்புடை அடியாகிய நாற்சீரடியினால் அமைந்தவையே. அவற்றுள்ளும் அகவல் ஓசையமைந்த அளவடியால் யாக்கப் பெற்றவையே மிகுதியாகும்.

"திருவளர் திரள்புயத் திருநில வலயம்
தன்மணிப் பூணெனத் தாங்கிப் பன்மணிக்
கொற்றவெண் குடைநிழல் குவலயத் துயிர்களைப்
பெற்ற தாயினும் பேணி மற்றுள"[5]
"திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்
முன்னோன் சேனை பின்னது வாக"[6]

என்பன போன்ற பல மெய்க்கீர்த்திகளின் அடிகளைச் சான்றாகக் காட்டலாம்.

3. கலியோசை அடி - காலத்தால் முற்பட்டனவாகக் காணப்படும் பாண்டியர் மெய்க்கீர்த்திகளில் பல துள்ளல் ஓசையமைந்த

1. பன்னிரு 198 2. வச்சணந்தி 34. 3. இலக்கண விளக். 105 4. தொல் பொருள். 344. 5. வீரஇராசேந்திரன் மெய்க். 2. 6. இராசேந்திரன் II மெய்க், 2.

நேரடியால் அமைந்துள்ளன. புலவர் மரபின்வழி அமைந்த அவற்றுள் மிகைப்படக் கூறப்பெற்ற செய்திகளும் காணப்படுகின்றன.

''நூற்கடலைக் கரைகண்டு
நோன்பகடா யிரம்வழங்கியும். . .
பொன்னிமயப் பொருப்பதனில்
கன்னிமையில் கயலெழுதியும். . .
காயல்பாய்க் கடல்போலக்
குளம்பலவின் கரையுயரியும்''[1]

''கோளார்ந்த சினப்புலியும்
கொடுஞ்சிலையும் குலைந்தொளிப்ப
வாளார்ந்த பொற்கிரிமேல்
வரிக்கயல்கள் விளையாட''[2]

''செம்முரசின் முகில்முழங்கச்
சிலையகன்று விசும்படையக்
கயலிரண்டும் நெடுஞ்சிகரக்
கனவரையில் விளையாட''[3]

பாண்டியர் மெய்க்கீர்த்திகளாக அமைந்துள்ள இவ் அளவடிகள் துள்ளல் ஓசையில் அமைந்து சுவைபயக்கும் பொருளைத் தாங்கி விளங்குகின்றன.

பராந்தக நெடுஞ்சடையன், வீரநாராயணன், இராசசிம்மன் போன்ற பாண்டிய மன்னர் காலம் வரையிலுள்ள மெய்க்கீர்த்திகள் பெரும்பாலும் கலியோசையோடு கூடிய அளவடியினாலேயே அமைந்துள்ளன. பத்தாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் ஆண்ட வீரபாண்டியன் காலம் முதல் பல மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் தூங்கலோசை அமைந்த அளவடிக்குத் தாவியுள்ளன.

4. வஞ்சியோசை அடி

''சந்திரனது வழித்தோன்றிஇத்
தராமண்டலம் முழுதாண்டு
இந்திரன்முடி வளையுடைத்தும்
இமயத்துக் கயலெழுதியும்''

என்பன வீரபாண்டியன் மெய்க்கீர்த்தியின் தொடக்க அடிகள்.

''திருமடந்தையும் சயமடந்தையும்
திருப்புயங்களில் இனிதிருப்ப''[4]

---

1. பராந்தக வீரநாராயணன் மெய்க். வரி 41 முதல், 2. மாற. சுந்தர, மெய்க், 2,
3. சடை. சுந்தரபாண்டியன் மெய்க்: 4, சீவல்லபன் மெய்க்.

"பூமடந்தையும் செயமடந்தையும்
பொலிந்துதிருப் புயத்திருப்ப"[1]

"பூமருவிய திருமடந்தையும்
புவிமடந்தையும் புயத்திருப்ப"[2]

என்பனவும் பாண்டிய மன்னரின் மெய்க்கீர்த்திகள். வஞ்சி ஓசை யமைந்த அளவடியைப் பெற்றவை.

சோழர் மெய்க்கீர்த்திகளுள் இரண்டாம் குலோத்துங்கனின் காலம் முதலே இவ் வஞ்சியோசை அடி இடம் பெற்றுள்ளது. பன்னிரண்டாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை அகவல் ஓசை, துள்ளல் ஓசைகளால் ஆன அளவடிகளே காணப்படுகின்றன.

5. வஞ்சியடி

"பொய்யுடையன வரைவேயே
போர்மலைவன எழுகழனியே
மெய்யுடையன நெடுவரையே
மருளுடையன இளமான்களே"[3]

"கள்ளுண்பன பூங்கொடியே
கறைபடுவது நிறைமதியே
பட்டுண்பன அணியல்குலே
பரிந்தாற்றுவ பரியாகமே"[4]

என்னும் வஞ்சியடிகளும் நாட்டின் சிறப்பு கூறும் வகையில் இலக்கியச் சுவைபடக் கையாளப்பட்டுள்ளன.

6. 1. 6. தொடை—தளையும் தொடையும் உறழ்ந்து அறிவதற்கு இடனாய் அமைவதும் நாற்சீரடியேயாகும். இதனை,

"அடியுள் ளனவே தளையொடு தொடையே"[5]

என்னும் தொல்காப்பிய நூற்பா அறிவிக்கும். தொடைகொள்ளும் போதும், தம்மின் வேறாகாத இரண்டடிகளைக் கொண்டே கொள்ள வேண்டும் என்பதை உரையால் அறியமுடிகிறது. மேலும்,

"அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே"[6]

என்னும் நூற் பாவினால், அடியிரண்டும் பலவும் அடுத்து வந்த தொடையே பாட்டு எனப்படும்; அடியளவு கூறச் செய்யுள் புலப் பாடாகும் என்னும் உரைகளைப் பெறவைத்தார் தொல் காப்பியர். எனவே, இரண்டடித் தொடையால் அமைக்கப்படுவது மெய்க்கீர்த்தி

1. சடை, வீரபாண்டியன் மெய்க். 2. மாற. சுந்தர. மெய். 2. 3. இராசராசன் II மெய்க் 2 வரி 23-24. 4. இராசாதி II மெய்க். 3. வரி-28-29. 5. தொல் பொருள் 345. 6. தொல். பொருள் 347.

என்னும் இலக்கணத்தை நோக்க, மெய்க்கீர்த்தியின் அமைப்பு சிறந்த பாவின் அமைப்பே என்பதும், அம் மெய்க்கீர்த்தி சிறந்த இலக்கியமாகவே கருதப்பட்டது என்பதும் புலனாகின்றன. மெய்க்கீர்த்திகளில் பெரும்பான்மையாக எதுகைத் தொடையும் சிறுபான்மையாக முரண்தொடை, இயைபுத் தொடை, மோனைத் தொடை ஆகியவையும் அமைந்துள்ளன.

1. எதுகைத் தொடை—

"அடிதொறும் தலையெழுத்து ஒப்பது மோனை"[1]

"அஃதொழித்து ஒன்றின் எதுகை யாகும்"[2]

என்பது தொல்காப்பியம். தொடை கொள்ளப்படும் இரண்டு அடிகளிலும் முதலெழுத்து ஒன்றுவது மோனைத் தொடை. முதல்சீரின் முதல் எழுத்துத் தவிர்த்த பிற எழுத்துகள் எல்லாம் ஒன்றிவருவது தலையாகு எதுகை எனப்படும். இரண்டாம் எழுத்து மட்டுமே ஒன்றிவருவது இடையாகு எதுகை யாகும். பிறவாகிய வருக்கம், நெடில், வல்லினம், மெல்லினம், இடையினம், உயிர் போன்றவை ஒன்றிவருவது கடையாகு எதுகை என்று கொள்ளப்படும். மெய்க்கீர்த்திகளுள் அனைத்து வகை எதுகைகளும் காணப்படுகின்றன.

2. தலையாகு எதுகை

"பொன்னிசூழ் நாட்டில் புலியாணை போயகலக்
கன்னிசூழ் நாட்டுக் கயலாணை கைவளர"[3]

"காவியும் நீலமும் நின்றுகவின் நிழற்ற
வாவியும் ஆறு மணிநீர்நலன் அழித்து"[4]

"மன்னவர்க்கோன் இராசமல்லன் மணிமுடி மானாபரணன்
தென்னவர்க்கோன் மற்றவர்க்குச் சேரலன் தன் மடப்பாவை"[5]

"புயல்வாய்த்து வளம்பெருக . . . .
செயல்வாய்த்துத் திருமகளும் . . . ."[6]

"மண்களிப்பவும் மனங்களிப்பவும் . . . .
கண்களிப்பவும் தண்ணளிப்பெரும் . . . ."[7]

என்பன போன்ற பல இரண்டடித் தொடைகளில் முதல் சீரின் முதல் எழுத்துகள் மாத்திரை அளவால் ஒன்றிவர இரண்டாம் எழுத்து முதல், சீர்முழுமையும் ஒன்றி நின்று தலையாகு எதுகைத் தொடையாகின்றன.

---

1. தொல். பொருள் 404. 2. தொல்-பொருள் 405. 3 மாற. சுந்தா. மெய்க். 2 வரி 24:25. 4. ஷை வரி 28-29 5. வீரபாண்டியன் வரி 7-8. 6. குலோத் III மெய்க். 1. 7. இராசாதிராசன் II மெய்க். 2 வரி 6-7.

3. இடையாகு எதுகை

"அறைகழல் அரையர்தன் அடிநிழல் ஒதுங்க
உறைபிலத்து உடைகலி ஒதுங்க முறைசெய்து
அரும்பெறல் தமையனை ஆளவந் தானை
இரும்புவி புகழும் இராசாதி ராசன்"[1]

"தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய உரிமையில் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் வளர்ப்ப
வெங்கலி நீங்கி மெய்யறந் தழைப்ப"[2]

இவை ஒவ்வொரு இரண்டடித் தொடையின் முதற் சீர்களில் முதல் எழுத்து மாத்திரையளவில் ஒன்றிநிற்க இரண்டாம் எழுத்துகள் மட்டும் ஒன்றி வந்தவை. இவ்வகை இடையாகு எதுகைகளே பெரும்பான்மையாக மெய்க்கீர்த்திகளில் அமைந்துள்ளன.

4. கடையாகு எதுகை – எதுகைத் தொடைகளுள் இவ் இரு வகையினைத் தவிர வருக்க எழுத்துகள் ஒன்றி வருதலும், இன எழுத்துகள் ஒன்றி வருதலும் உயிர் எழுத்துகள் ஒன்றி வருதலு மாகிய கடையாகு எதுகைத் தொடைகளையும் மெய்க்கீர்த்திகளுள் காணமுடிகிறது.

"ஓடுபுறங் கண்டவன் ஒலியுடை மணித்தேர்
ஆடல்வெம்மா அவையுடன் கவர்ந்தும்"[3]

"கரடிகைத் தொகுதியும் கைம்மணிப் பகுதியும்
முருடியல் திமிலை முழக்கமும் மருடரு"[4]

"யானையாயிரம் ஐயமிட்டும் அபரிமிதமதி சயங்கள்செய்தும்
ஊனமில்புகழ் பாண்டிய வம்சத்து உலோகநாதர் பலர்
கழிந்தபின்"[5]

இவை முறையே டகர வருக்கம், ரகர வருக்கம், னகர வருக்கம் ஆகிய வருக்க எழுத்துகள் ஒன்றிய எதுகைத் தொடையாலானவை.

"அகத்தியனொடு தமிழாய்ந்தும் மிகத்திறனுடை வேந்தழித்தும்
தசவதனன் சார்பாகச் சந்துசெய்தும் தார்தராஷ்டிரர்"[6]

"நன்னி நுளம்பனும் எனுமிவர் முதலியர்
எண்ணிலி யரசரை விண்ணகத் தேற்றி"[7]

---

1. வீரராசேந். மெய்க். 2 வரி 5-8. 2. விக்கிரம. மெய்க். 2 வரி 3-6. 3. பராந்தக. நெடுஞ். மெய்க். 2 வரி 13-14. 4. இராசராசன் I மெய். 2 வரி 96-97. 5. பராந்தக நெடுஞ். மெய்க். 3 வரி 9-10. 6. பராந்தக வீரநாராயணன் வரி 35-36. 7. இராசேந்திரன் II மெய்க். 5 வரி 17-18.

''நாள்ஒன் றினுக்கு நான்முந் நாழி
பால்நிறத் தன்மை தூநிறக் குத்தல்''[1]

இவற்றுள் முறையே வல்லின, மெல்லின, இடையின எழுத்துகள் இரண்டாம் எழுத்துகளாக ஒன்றிவந்து இன எதுகைத் தொடை யமைகிறது.

''மூவகைத் தமிழும் முறைமையின் விளங்க
நால்வகை வேதமும் நவின்றுடன் வளர''[2]

இதனுள் லகரமெய் ஆசாக இடையிட்டு அமைய ஆசெதுகைத் தொடை அமைகிறது.

5. மோனை—எதுகைத் தொடைக்கு அடுத்த நிலையில் மெய்க் கீர்த்திகளுள் மோனைத் தொடையினைக் காண முடிகிறது. அதிலும் அடிமோனையே மிகுதி.

''இருநேமி யளவும் ஒருநேமி ஓங்க
இன்னமு தாகிய இயலிசை நாடகம்''[3]

''மணித்தட முடிமேல் அடிமலர் சூட
மணிமுடி சூடி வளங்கெழு கவரி''[4]

''மகாபாரதம் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம் வைத்தும்
மகாராசரும் சார்வபௌமரும் மகீமண்டலங் காத்திகந்தபின்''[5]

என்பன போன்று பல அடிகளில் அடிமோனைத் தொடைகள் பொருந்தியுள்ளன.

''எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த தடாகங்களும் இருநிலத்தில் இயற்றுவித்தும்''[6]

''நண்ணிய நட்சத் திரமென நல்லோன்
நண்ணிய திருவிளக் கெண்பதும் கண்ணென''[7]

என்னும் அடிகளில் முதல்சீர் முழுவதும் ஒன்றிவருவதால் தலையாகு மோனை எனலாம். இதுவே நச்சர் கருத்து. ஆனால், ''ஆசிரியன் 'அடிதொறுந் தலையெழுத்து ஒப்பது மோனை' என்றானாதலின் அடி மோனையே கொண்டாம் என்பது''[8] என்று கூறி இவற்றையும் அடி மோனையே என்பர் பேராசிரியர்.

---

1. இராசராசன் I மெய். 2 வரி 189-190. 2. மாற. சுந்தர. மெய். 2 வரி 8-9. 3. சடை. குலசேகர. மெய். 3 வரி 15-16, 4. சடை. குலசேகர. மெய். 1. வரி 23-24. 5. இராசசிம்மன் வரி 29-30. 6. பராந்தக விரநாரா. வரி 83,84. 7. இராசராசன் I மெய். 2 வரி 204-205, 8, தொல்-பொருள் 405 உரை.

6. முரண் - மெய்க்கீர்த்திகளில் கையாளப்படும் சொற்களுள் பெரும்பான்மையானவை மன்னருடைய கோல், குடை, கொடி, நாடு, முரசு, வளம், கலி, போர், களம் போன்றவையாகும். செய்யுள் அழகும் பொருள் இன்பமும் நோக்கிப் பலவிடத்திலும் இச் சொற்களை அடைகொடுத்து முரண்பட அமைத்திருப்பது தொடையழகினை மிகுவிக்கிறது. இதனை முரண்தொடை என்பர் இலக்கண நூலார்.

"மொழியினும் பொருளினும் முரணுதல் முரணே"[1]

என்பது தொல்காப்பியம்,

"செங்கோல் நடப்பவும் வெண்குடை நிழற்றவும்
கருங்கலி முருங்கவும் பெரும்புகழ் விளங்கவும்"[2]

இவ் இரண்டடித் தொடையில் முதற்சீர்கள் இரண்டும் செம்மை கருமையாகிய அடைகளால் முரண்பட அமைந்து அடி முரணாக அமைகிறது. மேலும் ஒவ்வொரு அடியினையும் நோக்க, முதலடியில் செங்கோல்—வெண்குடை என்பன பண்பாலும், நடப்ப-நிழற்ற என்பன தொழிலாலும் முரண்படுவதை அறியமுடிகிறது. அதே போல இரண்டாமடியிலும் கருங்கலி - பெரும்புகழ் என்பனவும், முருங்க - விளங்க என்பனவும் முறையே முரண்பட்டே அமைந்துள்ளன. எனவே இவ் அடிகள் இரண்டும் முற்று முரணாக அமைந்துள்ளன என்பதைச் சுவைத்து அறிய முடிகிறது. மேலும்,

"வெரிநெளித் தோடி அரண்எனப் புக்க
காடறத் துடைத்து நாடடிப் படுத்து"[3]

"மற்றவர் கருந்தலை யோடு வெண்ணிணம்
கழுகொடு பருந்தலை எங்கணும் பரப்பி"[4]

"கருங்கூந்தல் வெள்ளெயிறு செவ்வாய்ப்பெரிய சூலக்க
வல்லிபலி கொள்க வெனவாழ்த்தி வென்று"[5]

"கருங்கால் ஒன்றால் செங்கை இரண்டிட்டு
அளந்த நெல்லாற்று பதனில்..."[6]

"செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து"[7]

"குறுவாளான நெடுவாள் நயனிக்கு"[8]

என்பன போன்று பலவிடத்தும், பொழிப்பு, கூழை, முற்று, இணை போன்ற பலவகை முரண்தொடைகளை அடிதோறும் நோக்கியறியலாம்.

---

1. தொல். பொருள் 407. 2. மாற. குலசேகர. வரி 4-5. 3. குலோத். I மெய். 3 வரி 52-53. 4. ஷை குலோத். வரி 77-78. 5: மாற. சுந்தர. மெய். 2 வரி 108-109: 6: இராசராசன் I மெய். 2 வரி 121-122. 7: வீரராசேந். மெய்: 1 வரி 2: 8. இராசராசன் I மெய்: 2 வரி 188.

7. இயைபு—முரண்தொடையுள் சொற்கள் முரண்பட நின்று ஒலிநயமும் பொருட் சுவையும் தந்து இன்பமூட்டுவதைப்போல, அடியின் முடிவில் ஒன்றிநின்று சிறந்த ஓசை நயம் பயந்து மகிழ்ச்சி யூட்டுவது இயைபுத் தொடையாகும். இந்த ஓசை நயம் மெய்க் கீர்த்திகளில் பலவிடத்திலும் காணப்படுகிறது. இதற்கு,

"முதலி யான மதுவணன் ஓட
விரித்த தலையொடு விக்கலன் ஓட
செருத்தொழில் அழிந்து சிங்கணன் ஓட.....
ஆகவ மல்லனும் அவர்க்குமுன் ஓட"[1]

என்னும் அடிகளைச் சான்றாகக் காட்டலாம். இவை தவிர இயற்கை வருணனைகள் நிறைந்து இலக்கியப் பகுதியாகவே காணப்பெறும் மெய்க்கீர்த்தி அடிகள் சிலவற்றிலும் இத்தொடை நயம் மிளிர்ந்து விளங்குகிறது. சான்றாக,

"படியானையே பிணிப் புண்பன
செல்லோடையே கலக் குண்பன
வருபுனலே சிறைப் படுவன
மாவே வடுப் படுவன
மாமலரே கடிய வாயின
காவுகளே கொடிய வாயின"[2]

என்னும் அடிகள் போல்வன பல உண்டு.

" . . . . பாரதத்திற் பகடோட்டியும்
. . . . வேந்தழியச் சுரம்போக்கியும்
. . . . குறைத்தலையின் கூத்தொழித்தும்
. . . . மதுராபுரிச் சங்கம்வைத்தும்"[3]

இவ்வாறான ஈற்றுச்சீர்களில் உம்மை இயைபாக அமைந்த அடிகள் மிகப்பலவாகும். இவையாவும் படித்தின்புறத்தக்க இலக்கிய நடை யுடையன.

## 6. 1. 7. உரைநடை

'உரைவகை நடையே நான்கென மொழிப'[4] என்று வகைப் படுத்திக் காட்டுவர் தொல்காப்பியர். அவ் உரைநடை வகை நான்கனுள் 'பாட்டிடை வைத்த குறிப்பினால்' வரும் உரைநடைப் பகுதி மெய்க்கீர்த்திகளுள் காணப்படுகிறது. அதனை உரைநடை என்று குறிப்பிடலாம். பாநடையில் அமைந்த பிற அடிகளின் கருத்துகளோடு தொடர்புடையதாய் அமைந்து, கருத்தினைத்

---

1: வீர இராசேந்: மெய்: 2 வரி 50-54: 2. இராசராசன் II மெய். 2 வரி: 19-21: 3: இராசசிம்மன் வரி 22 முதல்: 4: தொல். பொருள். 485:

தெளிவுபடுத்த வருவது உரை நடையாகும். பாட்டு நடையினுள் அடங்காத தொடர்களால் அமைதலின் அது உரைநடை என்று வேறுபடுத்தப்பட்டது. மெய்க்கீர்த்திகளுள் காணப்படும் இவ் உரை நடைப்பகுதியினை இரண்டு வகைப் படுத்தலாம்.

ஒன்று இடையிடையே வரும் உரைநடைப் பகுதியாகும். பாநடையில் அடங்காது கருத்தினைத் தொடர்பு படுத்திச் செல்ல வந்து அமைவது அப்பகுதி.

> "நாற்றிசையோர் புகழ்நீரது நானிலத்தில் நிலைபெற்றது
> பாரத்வாசாதிகளால் நேரஸ்துதிக்கப்பட்டது; விரவலர்க்
> கரியது; மீனத்வய சாசனத்தது; பொருவருஞ்சீர்
> அகத்தியனைப் புரோகிதனாகப் பெற்றது;......
> வாழியர் பாண்டியர் திருக்குலமிதனில் வந்து தோன்றி. . ."[1]

> "ஆதிபுருஷன் அமரநாயகன் அழகமைநாபி மண்டலத்துச்
> சோதிமரகதத் துளைத்தாட்சுடர் பொற்றாமரை மலர்மிசை
> விளைவுறுகளம கணிசமென மிளிர்ந்திலங்கு சடைமுடியோடு
> அளவியன்ற கமண்டலுவோடு அட்சமாலையோடு
> தோன்றின...
> மதுகமழ்மலர்க் கமலயோனி மனந்தந்த மாமுனி"[2]

என்னும் பகுதிகள் இவ் உரைநடைப் பகுதிக்குச் சான்றாகின்றன.

மற்றொன்று மெய்க்கீர்த்தியின் இறுதியில் அமையும் இயற் பெயரும் ஆண்டும் கூறப்படும் பகுதி. இது பொதுவாக எல்லா மெய்க்கீர்த்திகளிலும் அமைந்துள்ளது.

> "திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீசோணாடு கொண்டு
> முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகம் பண்ணியருளிய
> ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்குயாண்டு இருபதாவது"[3]

என்பது போன்ற சான்றுகள் எல்லாமெய்க் கீர்த்திகளிலும் இறுதியடி களாக அமையக் காணலாம்.

## 6. 2. பொதுக் கொள்கைகள்

### 6. 2. 1. அணிநலம்

#### 1. உவமை - தேவியர் பற்றிய உவமை

இமயமலையில் வீற்றிருக்கிறான் இறைவன்; உமையம்மையோடு வீற்றிருக்கிறான். அதுபோல சோழ மன்னன் விக்கிரமசோழன்

---

1. இராசசிம்மன் வரி 4-9. 2. பராந்தக வீரநாராயணன் வரி 10-15. 3. மாற. சுந்தர. இறுதி அடிகள்.

செம்பொன் வீர சிம்மாசனத்து வீற்றிருக்கிறான்; தேவி முக்கோக் கிழானடிகளோடு வீற்றிருக்கிறான்.

அவ் இறைவனிடத்து கங்கை அமர்ந்திருப்பது போல, சோழனின் அன்பையும் அருளைபும் பெற்றவளாய் தியாகபதாகை திரிபுவன முழுதுடையாள் உடன் இருக்கிறாள்.

திருமாலின் மார்பில் என்றும் பிரியாது வீற்றிருக்கிறாள் திருமகள். அது போல சோழன் அருளைப் பெற்றவளாய் தரணி முழுதுடையாள் காட்சியளிக்கிறாள். விக்கிரம சோழனின் தேவியர் மூவர் என்பதை உணர்த்தும் அவனது மெய்க்கீர்த்தி இவ்வாறு உவமையோடு உணர்த்துகிறது.

"முல்லை வாணகை முக்கோக் கிழானடி
உமையொடுஞ் சங்கரன் இமயச் சிமயத்து
இருந்தெனப் பொருந்தி யுடனினி திருப்ப
ஆங்கவன் மகிழும் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதம் தியாக பதாகை...
திரிபுவன முழுதுடையாள் இவன்திரு வுள்ளத்து
அருள்முழு துடையாள்—எனஉடன் இருப்ப"[1]

"ஊழியந் நெடுமால் ஆகத்துப் பொருந்தி
பிரியாது என்றும் திருமகள் இருந்தென
...... ...... தரணிமுழு துடையாள்
இவன்திரு மார்வத்து அருளொடும் இருப்ப"[2]

விக்கிரம சோழனுக்குரிய தேவியர் மூவரைப்பற்றி விளக்கும் அவனது மெய்க்கீர்த்தி, அவனுடைய பட்டத்தரசியாக விளங்கிய வளையும் தனியே எடுத்துக் கூறுகிறது.

"செம்பொன் வீர சிம்மா சனத்து
முக்கோக் கிழான் அடிகளோடும் வீற்றிருந் தருளிய"

என்பன அவ் இறுதியடிகள். உமையம்மை போன்று மூக்கோக் கிழானடிகளும், கங்கையை யொப்பத் தியாக பதாகையும், திருமக ளைப் போல தரணி முழுதுடையாளும் வீற்றிருந்தனர். இந்த உவமை விளக்கத்திலேயே தேவியர் மூவருள் மூத்தவளாக முதலில் வைக்கப்பட்டவளும், உமையம்மைக்கு ஒப்பாக உவமிக்கப்பட்டவளு மாகிய முக்கோக் கிழானடிகளே பட்டத்தரசியாக விளங்கினாள் என்பதை உணர முடிகிறது. இருப்பினும் இறுதியடிகள் அதைத் தெளிவு படுத்திவிடுகின்றன.

---

1. விக்கிரமசோழன் மெய். 1 வரி 64-70. 2. ஷை வரி 72-75.

2. முதலாம் குலோத்துங்கனின் தேவியர் இருவர். அவ் இருவருள் தியாகவல்லி உலகுடையாள் என்பவள் சிவனிடத்து உமையென மன்னவனோடு வீற்றிருக்கிறாள்; ஏழிசை வல்லபி ஏழுலகமுடையாள் சிவனிடத்துக் கங்கை வீற்றிருந்ததுபோல மகிழ்ச்சியோடு அமர்ந்திருக்கிறாள். இவ் விருவருள் பட்டத்தரசியாகச் சிம்மாசனத்து வீற்றிருப்பவள் தியாகவல்லி உலகுடையாள் ஆவாள். அவள் சிம்மாசனத்து வீற்றிருக்கும் நிலை திருமால் ஆகத்துத் திருமகள் இருப்பது போன்று காணப்படுகின்றது என்ற விளக்கங்களோடு கூடிய உவமைகள் மிக உயர்வுடையனவாக விளங்குகின்றன.

அவ்வடிகள்,

"சிவனிடத்து உமையெனத் தியாக வல்லி
உலகுடையா ளிருப்ப அவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலதம்
ஏழிசை வல்லபி ஏழுலக முடையாள்
வாழிகை மலர்ந்தினிது இருப்ப ஊழியும்
திருமால் ஆகத்துப் பிரியாது என்றும்
திருமகள் இருந்தென வீரசிம்மா சனத்து
உலக முடையாளொடு வீற்றிருந் தருளிய"[1]

உலக முழுதுடையாள் என்னும் பட்டத்தரசி புவனமுழுதுடையாள் என்ற தொடராலும் சில மெய்க்கீர்த்திகளில் சுட்டப்படுகிறாள். அவளது புகழ் உமையம்மையின் புகழுக்கு ஒப்பானது என்று உவமிக்கப்படுகிறது. அதிலும் சிறப்பாகத் திருப்புகலூரில் எழுந்தருளியுள்ள கொந்தார்க் குழலியம்மையின் புகழே கூறப்படுகிறது. திருநாவுக்கரசர் முத்தி பெற்ற தலமும், சுந்தரருக்குச் செங்கற்கள் பொன்னாக மாறிய நிகழ்ச்சிக்குரிய தலமுமாக விளங்குவது திருப்புகலூர். நன்னிலம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே 4 கல் தூரத்தில் உள்ளது. அங்கு எழுந்தருளியுள்ள அம்மையின் புகழ் இங்கு உலக முழுதுடையாளின் புகழுக்கு எடுத்துக் காட்டப்படுகிறது.

"திருப்புக லூர்தென் திருவனைய புகழ்நின்ற
புவன முழுதுடை யாளொடும்"[2]

என்பது அவ் உவமைத் தொடர்.

இரணியாக்கதன் நிலமகளாகிய பூமியைச் சுருட்டிக் கொண்டு பாதளத்தில் சென்று ஒளித்துக் கொண்டான். தேவர் முறையிட, திருமால் வராக வடிவில் புறப்பட்டு இரணியாக்கதனைக் கொன்று,

1. குலோ. I மெய்க். 3 வரி 83 முதல். 2. குலோ. I மெய்க். 2 வரி 16.

அப் பூமியைத் தன் கொம்பில் தாங்கி வந்து முன்போல் விரித்தார் என்பது வராக புராண வரலாறு. வேற்று வடிவம் பெறுவது முதலாகப் பெரும்பாடுபட்டு நிலமகளைத் தாங்கி வந்த திருமாலைப் போல அல்லாமல் மிகவும் எளிமையாக, மகிழ்ச்சியோடு நிலமகளைத் தாங்கினான் சோழன் என்ற உவமை மிக எளிமையான அடிகளில் எடுத்துக் காட்டப்படுகிறது. அதேஅடிகளில் கமல மலரை ஒத்தவள் நிலமகள் எனவும், அக்கமலம் மலர்ந்து மணம் வீசச் சூரியனின் தோற்றத்தை மிகவும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது எனவும் எடுத்துக்காட்டி அவ்வுவமையைப் பாதளத்தில் ஒளித்து வைக்கப் பெற்றுள்ள நிலகமளுக்கு ஒப்பிட்டுக் காட்டப்படுவதும் சுவைக்கத்தகும் உவமையாக விளங்குகிறது.

அவ்வடிகள்—

"அருக்கன் உதயத்து ஆசையில் இருக்கும்
கமலம் அனைய நிலமகள் தன்னை
முந்நீர்க் குளித்த அந்நாள் திருமால்
ஆதிக் கேழல் ஆகிஎடுத் தன்ன
யாதுஞ் சலியா வகைஇனிது எடுத்து"[1]

## 2. மன்னவர் பற்றிய உவமைகள்

1. மார்பும் புயமும் - குலோத்துங்கனின் மார்பு பரந்த மலை போன்றது; பனிமலையை நிகர்த்து விளங்கியது. அவனுடைய தோள்களோ வெற்றி மகளைத் தழுவி அவளணிந்திருந்த சந்தன அடையாளத் தோடு விளங்கின. செழுமையானதும் குளிர்ச்சி பொருந்தியதுமான அச்சந்தனத் தோடு விளங்கிய அவனுடைய தோள்கள் இரண்டும் அப்பனி மலையிடை அமைந்த இரண்டு கயிலை மலைகளை ஒத்துக் காணப்பட்டன. இவ் உவமையோடு விளங் கும்மன்னனின் மார்பும் புயங்களும்—

"பருவரை மார்பம் பனிவரை நிகர்ப்பச்
செயமகள் செழுந்தண் சந்தனச் சுவட்டால்
புயமிரு கயிலைப் பொருப்பெனத் தோன்ற"[2]

என்னும் தொடர்களால் அறியப்படுகின்றன.

"திருமன்னி விளங்கும் இருகுவடு அனையதன்
தோளும் வாளும் துணையென"[3]

"குன்றுறழ் புயத்தினும்"[4]

---

1. குலோ. I வரி 7-11. 2. குலோ. II மெய்க். 2 வரி 6-8. 3. குலோ. I வரி 1-2.
4. இராசேந்திரன் II மெய். 4 வரி-4.

என்பன போன்று மன்னர்களின் தோள்களைக் கூறுங்கால் உவமை நயம் பொருந்தவே கூறப்படுகிறது.

2. போர்ச் செயல்கள் - தன் தோளும் வாளுமே துணையாகக் கொண்டு போர் தொடங்குதல் மன்னர்தம் துணிபு. பெரும் படையுடன் செல்லுங்காலும் அம் மன்னர் தம் படைக்கு முன்னால் தாமே தலைமை தாங்கிச் சென்றுள்ளனர். மெய்க்கீர்த்திகள் அப்படைகளின் தன்மையையும், மன்னர்தம் செயலையும் எடுத்துக் கூறும் போதுகூட அரிய உவமைகளின் மூலமே விளக்குகின்றன.

"வீரந் தலைநின்று உவர்க்கடல் கிளந்தது
எனப்படை பரப்பி வந்து தோன்றினன்"[1]

"அயிரா பதத்தோ டயிரா பதமென
வயிரா கரத்து வாரணம் வாரி"[2]

"வடகடல் தென்கடல் படர்வது போலத்
தன்பெருஞ் சேனையை ஏவி"[3]

மன்னன் தன் சேனையைக் கடல் போல பரப்பினான்; வடகடலோடு தென்கடல் எதிர்ப்பது போலத் தன் படையை ஏவினான்; யானைப் போர் ஐராவதம் என்னும் இந்திரன் யானையோடு மற்றொரு ஐராவதம் பொருவது போல இருந்தது என்பன படைக்குரிய இவ்உவமைகள்.

பகைவர் படை வடகடல் போலப் பரவி இருந்தது. அப்படையைத் தன் மதகளிறு ஒன்றாலேயே கடலைக் கலக்குவது போலக் கலக்கினான். மன்னன் தன் படையின் முன் தானே சென்று ஒரு மதயானை படையுள் புகுந்து கலக்கினாற் போலக் கலக்கி வெற்றி பெற்றான் என்பன போன்ற உவமைகள் வீரச் செயலுக்குரியனவாக விளக்குவனவாம். அவை,

"வடகடல் என்ன வகுத்தவத் தானையைக்
கடகளிறு ஒன்றாற் கலக்கி"[4]

"தன்தண்டின்முன் தான்சென்று
ஒருதனி வேழம் உற்றுஉடலி யாங்கு"[5]

பகைவர் படைக்கும் உவமை கூறி விளக்குவது போலப் பகை மன்னர் செயலையும் சிறந்த உவமையால் விளக்குகிறது மெய்க்கீர்த்தி இலக்கியம். சொல் திறம் மாறியவனாக இருப்பினும் வில் திறத்தில்

---

1. இராசேந்திரன் II மெய், 5 வரி 73-74. 2. குலோ. I மெய், 2 வரி 10.
3. குலோ. I மெய்' 3 வரி 49-50. 4. வீர ராசேந்திரன் மெய். 2 வரி 40.
5. இராசேந்திரன் II மெய். 5 வரி 80-81.

சிறிதும் மாறாதவன் விக்கலன் என்பதைக் குலோத்துங்கன் மெய்க்கீர்த்தி எடுத்தியம்புகிறது.

"பிற்குலப் பிறைபோல் நிற்பிழை என்னும்
சொல்எதிர் கோடிற்று அல்லது தன்கை
வில்எதிர் கோடா விக்கலன்"[1]

3. முடி—இரண்டாம் இராசராசன் முடிசூடி நாட்டின் மன்னனாகும் நிகழ்ச்சியை அவனது மெய்க்கீர்த்தி, மண் மடந்தையைக் கைப்பிடித்தான் என்பதாகக் கற்பிக்கிறது; அக் கூற்றுக்கு ஓர் உவமையையும் எடுத்துக் காட்டுகிறது. பாற்கடலில் பள்ளி கொண்டவன் திருமால்; ஆயிரம் படங்களையுடைய பாம்பாகிய படுக்கையில் பள்ளி கொண்டவன். அத்திருமால் பாற்கடலிலிருந்து எழுந்தருளிச் சோழ நாட்டின் மணிமுடியைச் சூடி விளங்குவது போல, இராசராசன் முடிசூடி மண்மடந்தையைக் கைப்பிடித்தான் என்று கூறுவதே அவ்வுவமைத் தொடர். அத்தொடர்:

"பணியணைமிசைப் பரஞ்சோதி பாற்கடல்நின் றெழுந்தருளி
மணிநெடுமுடி கவித்தானென மண்மடந்தையைக் கைப்
பிடித்து"[2]

இதே கருத்துடைய வேறு சில மெய்க்கீர்த்தி இலக்கியத் தொடர்கள் பின்வருமாறு:

"நெடுமால் இவனென நெடுமுடி சூடி
இருநில மகளை உரிமையிற் புணர்ந்து"[3]

"தேமருவிய பசுந்துளவித் திருநெடுமால் இவன்என்ன
.... .... .... ....
வருங்கதிரின் வெயில்விரிக்கும் மணிமகுடம் புனைந்தருளி"[4]

"தினகரோ தயமெனச் செழுங்கதிர் சொரியும்
கனக மாமுடி கவின்பெறச் சூடி"[5]

இவ் உவமைத் தொடர்கள் பொருள் நிறைந்ததும், சுவை ஊட்டுவதுமாகிய அடைகளோடேயே அமைகின்றன. தாய்வழி உரிமை பாராட்டி வந்து, சோழ நாட்டின் முடி புனைந்தான் என்பதை உரிமையிற் புணர்ந்து என்ற தொடர் விளக்கி நிற்கிறது. அடுத்தத் தொடர்கள் மணிமகுடமானது இளஞ்சூரியனது ஒளி போன்ற ஒளியை வீசி நிற்கிறது என்ற உவமை விளக்கத்தோடு அமைகின்றன.

---

1. குலோத்துங்கன் I மெய். 3 வரி 26-28. 2. இராசராசன் II மெய். 2 வரி 5-6.
3. குலோத்துங்கன் II மெய். 2 வரி 3-4. 4. இராசாதிராசன் II மெய். 2 வரி 2-5.
5. சுந்தரபாண்டியன் வரி 78-79.

4. குடை—நாட்டைக் காக்க யானைகள் நிறுத்தப்பட்டன; நாட்டின் எட்டுத் திசைகளிலும் நிறுத்தப்பட்டன. அவை எட்டுத் திக்கு யானைகள் என்றே பெயர் பெற்றன. நாட்டுக்குத் தண்ணளி செய்யும் இராசராசனது வெண் கொற்றக் குடையானது அந்தத்திக்கு யானைகள் எட்டும் தங்குவதற்குத் தனியாக அமைக்கப்பட்ட யானைக் கொட்டகையைப் போல வானளாவி நின்றது என்று உவமிக்கப் படுகிறது. அவ்வெண் கொற்றக்குடை, முழுமதிக் குடை என உவமைத் தொடரை அடைமொழியாகவும் பெற்றிருக்கிறது.

"எண்முகத்து எண்கரிக்கும் எடுத்தனிக் கூடமென
அண்டகூட முறநிமிர்ந்து முழுமதிக்குடை நின்றழகெரிப்ப"[1]

"திங்கள் வெண்குடை திசைக்களிறு எட்டும்;
தங்கு தனிக்கூடம் தானென விளங்க"[2]

மன்னரது வெண் கொற்றக் குடையானது எட்டுத் திசைகளிலும் தனது நிழலைப் பரப்பி மக்களுக்குத் தண்ணளி செய்கிறது; வெண் மதி போல எல்லாத் திசையிலும் ஒரே மாதிரி ஒளி வீசி நிற்கிறது. அக்குடை வெண்மையான முத்து மாலைகளால் ஆக்கப்பட்டது. எனவே நிலவினும் மிகுந்த ஒளியைத் தருகிறது என்பன போன்ற உவமைகள் பல மெய்க்கீர்த்திகளிலும் காணப்படுகின்றன.

சான்று

"...... ...... அகில
புவனமும் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிற்ப"[3]

"கடல்சூழ்ந்த பாரேமும் திசைஎட்டும் காத்துநின்று
தடமாமதி எனவிளங்கித் தரளவெண்குடை நிலாவெறிப்ப"[4]

'வெண்மதிபோல் குடை விளங்க' என்னும் தொடர், பல மெய்க்கீர்த்திகளிலும் அமைந்துள்ள உவமைத் தொடராகும்.

5. பிற உவமைகள்—மன்னவர் சூரியனைப் போலத் தோன்றுகின்றனர்; இந்திரனைப் போலவும், பொன்மலை போலவும் விளங்குகின்றனர். இதனை,

"படுகடல் முளைத்த பருதி போலப்
பாண்டியாதி ராசன்வெளிப் பட்டு"[5]

---

1. இராசராசன் III வரி 7-8. 2. இராசராசன் II வரி 5-6. 3. விக்கிரம. வரி 8. 4. இராசாதிராசன் II மெய். 3 வரி 1-2. 5. வேள்விக். வரி 14-15.

"உதயகிரி மத்திமத்து உறுசுடர் போலத்
தெற்றென்று திசைநடுங்க மற்றவன் வெளிப்பட்டு"[1]

"வாசவன் போல் வீற்றிருந்தான்"[2]

"பொன்மலை என்னப் பொலிந்து தோன்ற"[3]

என்னும் தொடர்கள் கூறுகின்றன.

"பகீரதிபோல் துய்யபுகழ்ப் படர்வல்லிக் கொழுந்தோட"[4]

என, புகழ்பரப்பி விளங்குகின்றனர்.

"..........பாண்டி மண்டலம்
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ளம்
வருபரித் தரங்கமும் பொருபரிக் கலங்களும்
தந்திர வாரியும் உடைத்தாய் வந்து"[5]

"வடகடல் தென்கடல் படர்வது போலத்" தன் படை ஏவி வெற்றி பெறுகின்றனர்.

"..........தன்திரு மேனியில்
பசும்புண் பொழிநீர்ப் புதம்அப் புனலால்
நீக்கின போல நோக்கருங் களத்தே
விசையாபிஷேகம்"[6] செய்து மகிழ்கின்றனர்.

"உம்பரி யானை ஒரெட்டி னுக்கும்
தம்பம் என்னத் தனித்தனி திசைதொறும்
விசையத் தம்பம்"[7] நிறுவியபின்,
"வீரமும் தியாகமும் ஆரம்எனப் புனைந்து"[8]

விளங்குகின்றனர்.

"பொன்வேய்ந் தருளிய செம்பொற் கோயிலுள்
வளந்திகழ் மாஅல் உதய வெற்புஎனத்
திருவளர் குலமணிச் சிங்கா சனமிசை
மரகத மலைஎன மகிழ்ந்து இனிதுஏறி"[9]

தரும வெண்குடை நிழற்றிச் செங்கோல் நடத்துகின்றனர். தமது அரசு நிகழ்ச்சிகளை மேற்கொள்ளும் அம்மன்னர்கள்,

---

1. வேள்விக். வ்ரி 32-33. 2. சின்னம. சிறிய வ்ச 20. 3, சடை, சுந்தரபாண்யடின் வரி 73. 4. சடை, சுந்தரபாண்டியன் வ்ரி 5. 5. குலோத்துங்கன் I மெய்க் 3 வரி 45 முதல். 6: இராசேந்திரன் II மெய்: 5 வ்ரி 42-45. 7: குலோத்துங்கன் II மெய். 2 வ்ரி 19-20. 8: அதிராசேந்திரன் வரி 13: 9: சடை, சுந்தரபாண்டியன் வ்ரி 74-77.

"ஒத்து உலகம் தாங்கும் உயர்மா மேருவைக்
கொணர்ந்துவைத் தனையசோதி மணிமண்ட பத்திருந்து"[1]

"மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பித் தனித்தனி புரந்தும்"[2]

"கடல்போலக் குளம்பலவின் கரையுயரியும்"[3]

"....திருமாலுக் கமர்ந்துறையும் குன்ற
மன்னதோர் கோயில் ஆக்கியும்"[4]

இன்ன பல சிறப்புடைச் செய்களைச் செய்து ஆணை செலுத்து கின்றனர். இச் செய்திகள் பலவும் சிறந்த உவமைகளோடு விளங்கு வதை மேற்கண்ட மெய்க்கீர்த்தி அடிகளுள் காண முடிகிறது.

இவற்றைப் போலவே, பாண்டிய மன்னனின் போர்ச் செயல்,

"சேவலுயர் கொடிக்குமரன் எனச்சீறித் தென்தஞ்சைக்
காவலனது கரிதுரக பதாதிசங்கம் களத்தவிய"[5]

என்ற அடிகளாலும், அவன் தோற்றுவித்த பெரிய குளமும் அதனை அடுத்த நகரும்,

"உராம்பிலோதி ஒலிகடல்போல் ஒருங்கு முன்னம்
தானமைத்தவல்
இராச சிங்கப் பெருங்குளக்கீழ் சூழல்நகர்"[6]

என்ற அடிகளாலும் உவமைகளொடு விளக்கப்படுகின்றன.

மாறவர்மன் சுந்தர பாண்டியன் சோழனை வென்று பொன் அமராவதி என்னுமிடத்தில் தங்கி இருந்தபோது வடகோங்கருக்கும் தென் கோங்கருக்குமிடையே பெரும் பூசல் ஏற்பட்டு, கொடுமை யைத் தாங்க முடியாத வட கொங்கு மன்னன், பகைவரை ஒறுத்து, அடைக்கலம் புகுந்தோர் குறை தீர்த்து வைக்கும் கடவுள் சுந்தர பாண்டியனே ஆவான் என்று கருதி அவனிடம் அடைக்கலம் புகுந் தான். அடுத்து அதே எண்ணத்துடன் தென் கொங்கு மன்னனும் வந்து அடைந்தான். இருவருக்கும் அடைக்கலம் கொடுத்த பாண் டியன் அவர்களுடன் மதுரை வந்து சேர்ந்தான். இந்த நிகழ்ச்சியைச் சிறந்த உவமையால் படம் பிடித்துக் காட்டுகிறது பாண்டியன் மெய்க்கீர்த்தி.

---

1. மாற. சுந்தரபாண்டியன் மெய். 2 வ்ரி சுமார் 54-55. 2. விக்கிரமசோழன் வரி 24. 3. தளவாய். வ்ரி 45. 4. சின்னம, சிறிய. வ்ரி 25. 5. சின்னம. பெரிய 66-67. 6. சின்னம. பெரிய 76-77.

"திருமால் இருமருங்கும் சந்திரசூரியர் சேவிக்கச் செங்கண்
கருமால் களிக்கிற்றில் வரும் முக்கண் கடவுளென
மாட மதுரையில் தான்போந்து"[1]

என்பன அம்மெய்க்கீர்த்தி அடிகள்.

நாட்டில் எல்லா வளமும் செழிக்கச் செங்கோல் செலுத்திய மன்னவனை,

"இந்திரன்முதல் திசாபாலர் எண்மரும்ஒரு வடிவாகி
வந்தபடி எனநின்று மனுவாணை தனிநடாத்திய"[2]

மன்னவன் என்று உவமையால் சிறப்கிக்கிறது அவனது மெய்க்கீர்த்தி.

"தன்கடற்படை கெடக்கண்டு"[3]

"கூற்றெனத் தெரிகணை கடாவி"[4]

கடல் போன்று பரந்த அளவினையுடையது தன் படை; அப்படை அழிவது கண்டு, பகைவர் படை மீது தாவிக் கணைகளை வீசுகிறான் இராசேந்திரன். அப்போது இராசேந்திரன் எமனைப் போல விளங்கினான் என்பன இவ்வடிகளில் காணும் உவமைகள்.

## 6. உவமை உருபுகள்

எடுத்துக் காட்டப்பட்ட உவமைத் தொடர்களுள், அனைய, அன்ன, ஆங்கு, இன், உறழ், என, என்ன, ஒப்ப, நிகர்ப்ப, போல, போல் என்னும் உவமை உருபுகள் எடுத்தாளப் பட்டுள்ளன. அவ்வுருபுடைத் தொடர்களுள் சில வருமாறு:—

திரு அனைய புகழ்நிறை; கமலம் அனைய நிலமகள்;
குன்றம் அன்ன தோர்; கேழல்ஆகி எடுத் தன்ன
உடலி யாங்கு; வருங்கதிரின் வெயில் விரிக்கும்;
குன்றுறழ் புயத்தினும்; கங்கை ஒப்பாகிய;
சிவனிடத்து உமையென; திருமால் இவன்என;
திருநெடுமால் இவன்என்ன; வடகடல் என்ன;
பனிவரை நிகர்ப்ப; படர்வது போல;
பிற்குலப் பிறைபோல்; புதுமதி போல.

---

1, மாற. சுந்தரபாண்டியன் மெய். 2 வரி 81-83. 2, இராசராசன் II மெய். 2 வரி 17-18, 3, இராசேந். II மெய். 5 வரி 11, 4, இராசேந், II மெய். 5 வரி 13,

2. உருவகம்

1. தேவியராக — மெய்க்கீர்த்திகள் மங்கலச் சொற்களால் தொடங்கப்படுகின்றன. அவையும் திருமகள், மலர்மகள், பூமகள் போன்ற செல்வச் சிறப்பு பொருந்திய மங்கலச் சொற்களாக அமைகின்றன. சடையவர்மன் பராந்தக பாண்டியன் தன் நாட்டில்,

"திருவளரச் செயம்வளரத் தென்னவர்தம் குலம்வளர
அருமறைநான் கலைவளர அனைத்துலகும் துயர்நீங்க"

இனிது அரசு வீற்றிருந்தான் என்னும் கருத்துடைய இத் தொடர்களோடு மெய்க்கீர்த்தி தொடங்குகிறது. ஆனால் பல மெய்க்கீர்த்திகளில் நாட்டின் செல்வச் செழிப்பு, திருமகளாக உருவகிக்கப்பட்டு அவள் மன்னவனுக்கே உரியவளாக எடுத்துக் காட்டப் பெறுகிறாள். அதேபோல பரந்து வளர்ந்த பேரரசு நிலமகளாக உருவகிக்கப்பட்டு, அவள் மன்னவனின் உரிமைத் தேவியாக விரும்பி வந்தடைந்தாள் என்று கற்பிக்கப்படுகிறது.

இவ்வாறே மன்னவன் பெற்றிருந்த கல்வியின் சிறப்பு கலைமகளாகவும், அவன் பெற்ற வெற்றிகள் வெற்றிமகளாகவும் (செய மடந்தை) உருவகிக்கப்படுகின்றன. அவர்களும் மன்னவனை விரும்பி வந்தடைந்தனர் என்று கூறும் மெய்க்கீர்த்திகள் மன்னனுக்கு மேலும் சிறப்பூட்டுகின்றன. செல்வமும் நாடும், கல்வியும் வெற்றியும் மன்னர் தம் தேவியராக உருவகிக்கப் பெறும் அடிகளுள் சில:

"திருமன்னி வளர இருநில மடந்தையும்
போர்செயப் பாவையும் சீர்தனிச் செல்வியும்
தன்பெருந் தேவியர் ஆகி இன்புற"[1]

"பூதல வனிதை மேதக விளங்க
மந்தர மார்பினில் இந்திரை இருப்பப்
புயவரை தழுவி வயமகள் களிப்ப"[2]

"பூமலர்வளர் திகழ்திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப
நாமலர்வளர் கலைவஞ்சி நலமிகுமா மனத்துறையச்
சிமயவரைத் திறல்மடந்தை திருத்தோளின் மிசைவாழ"[3]

"பாமாலை மலிந்த பருமணித் திரள்புயத்து
இருநில மடந்தையொடு சயமகள் இருப்பத்
தன்துணை மார்பந் தனதெனப் பெற்றுத்
திருமகள் ஒருதனி இருப்பக் கலைமகள்
சொற்றிறம் புணர்ந்த கற்பினள் ஆகி
விருப்பொடு நாவகத் திருப்ப"[4]

1. இராசேந். I வரி 1-3. 2: சடை. குலசேகர. வரி 1-3. 3. சடை: சுந்தரபாண்டியன் வரி 1-3: 4: விக்கிரமசோழன் வரி 2-7

இவ் உருவகத் தொடர்களுள் மார்பு மந்தரமலையாகவும், புயம் மலையாகவும் உருவகிக்கப்படுகின்றன.

3. புதுமணமாக—குலோத்துங்கன் இளவரசனாக இருந்தபோது சக்கரக்கோட்டம் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் தாரா வர்ஷன் என்னும் மன்னனை வென்று வெற்றி சூடினான். இதுவே அவனது கன்னிப்போர். வெற்றி செயமகளாக உருவகிக்கப்படுகிறது. குலோத்துங்கனின் வெற்றிச்செயல், அவன் செயமகளை மணம் புரிந்ததாக உருவகிக்கப்படுகிறது. கன்னிப் போர் வெற்றி யாதலின் அம்மணம் **புதுமணம்** எனச் சிறப்பிக்கப்படுகிறது அவ் உருவகத் தொடர்கள் :

> "விளங்குசெய மகளை இளங்கோப் பருவத்துச்
> சக்கரக் கோட்டத்து விக்கிரமத் தொழிலால்
> புதுமணம் புணர்ந்து"[1]

3. படைகள்—பல மெய்க்கீர்த்திகளிலும் தொடக்க அடிகள் உருவகத் தொடர்களாகவே அமைகின்றன. இவை தவிர, குலோத் துங்கனது படையெடுப்பில் அவனுடைய பெரும்படை கடலாகவும், குதிரைகள் கடலலையாகவும், யானைகள் கலங்களாகவும் உரு வகிக்கப் படுகின்றன.

> "..........................வெள்ளம்
> வருபரித் தரங்கமும் பொருகரிக் கலங்களும்
> தந்திர வாரியும் உடைத்தாய் வந்து"[2]

என்னும் அடிகளில் அவ் உருவகங்களைக் காணலாம்.

> "மதவரை ஒன்றால் உதைப்பித்து உதகையில்"[3]
> பெரும்பிணக் குன்றம் இருங்களன் நிறைத்து"[4]
> "செம்முரசின் முகில்முழங்கச் சிலையகன்று விசும்படையத்
> திறல்புலிபோய் வனமடைய"[5]
> முத்த வெண்குடை முழுநிலவு சொரிய"[6]
> "வசந்தவெண் கவரியின் வாடலும் தென்றலும்
> வேந்தர் வீச"[7]
> "இருமருங்கு நின்று விரிபெருங் கவரியின்
> மந்த வாடையும் மலையத் தென்றலும்
> அந்தளிர்க் கரங்கொண்டு அசைய வீச"[8]

---

1. குலோத்துங்கன் I மெய். 3. வரி 3-5. 2. குலோத்துங்கன் வரி 46-48. 3. வீரராசேந்திரன் மெய். 2 வரி 73. 4. சடை சுந்தரபாண்டியன் வரி 30. 5. சடை. சுந்தரபாண்டியன் வரி 9-10, 6. சடை. வீர. வரி 31. 7. சடை; வீர வரி 64, 8. சடை. சுந்தரபாண்டியன் வரி 81-83,

என்னும் அடிகள் போன்று பல இடங்களில் யானை மலையாகவும், பிணக்குவியல் குன்றமாகவும், முரசொலி முகில் முழக்கமாகவும் உரு வகிக்கப்படுகின்றன. விற்கொடியுடைய சேரர் போரில் கொல்லப் பட்டனர்; சோழர் தோற்று ஓடிக் காட்டில் ஒளித்தனர் என்ற செய்தி களைக் கூறும் 'சிலையகன்று விசும்படையத் திறல்புலிபோய் வன மடைய' என்னும் தொடர்கள் இலக்கியச் சுவைபட உருவகிக்கப் பட்டவையாகும். இவற்றைப் போலவே முத்துக்களாலான வெண் கொற்றக் குடையின் ஒளி நிலவொளியாகவும், மன்னரும் தேவிய ரும் விசும் கவரியின் காற்று வாடையும் தென்றலுமாகவும் எடுத்துக் காட்டப்படுகின்றன.

4. பிற உருவகங்கள்—ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியதாகக் கருதப்படும் பாண்டியர் மெய்க்கீர்த்திகளில் ஒன்றா கிய பராந்தக வீரநாராயணன் மெய்க்கீர்த்தி, பத்துப் பாட்டில் ஒன்றாகிய மதுரைக் காஞ்சியின் தொடக்க அடியினையே தனது தொடக்க அடியாகக் கொண்டு அமைந்துள்ளது. அதன் தொடக்கத் தில் கடல் திருமாலின் ஆலயமாக உருவகிக்கப்பட்டுத் தொடங்கு கிறது. ஆகாயம் அக்கோயிலின் மேற் கூரையாகவும் ஆதிசேடன் படுக்கையாகவும் விளங்கத் தலைகளில் விளங்கும் மணி விளக்காக ஒளி வீசுகிறது. திக்கு யானைகளின் முதுகுப்புறங்கள் மகரக் குலம் உலவும் கூடமாக உருவகிக்கப்படுகிறது. சீவல்லபன் திரு மாலாக உருவகிக்கப் படுகிறான். பராந்தகன் மன்மதனாக உருவகிக்கப்படுகிறான். போர்க்களங்கள் அமராலயங்களாக்கப்படு கின்றன. இவ்வாறான பல சிறந்த உருவகங்கள் அடங்கிய இலக்கியத் தொடர்கள் பலவும் மெய்க்கீர்த்திகளைச் சிறந்த இலக்கியமாகத் திகழச் செய்கின்றன.

எடுத்துக் காட்டப்பட்ட உவமை, உருவகங்களைத் தவிர 'உண்மைப் புகழ்' என்னும் தலைப்பில் எடுத்துக் காட்டப்பட்ட அடிகள் பலவும் தன்மை நவிற்சியணியின் பாற்பட்டவை என்பதை மீண்டும் இங்கு எடுத்துக் கூறத் தேவையில்லை. இதே போன்று தொடை நயங்களுள் எடுத்துக் காட்டப்பட்டுள்ள முரண் தொடை போன்றவையும் அணிநலம் விளங்க அமைந்த தொடர்களாகும்.

### 6. 2. 2. மன்னர்ச் சிறப்பு

அறக்கட்டளைகள், ஆலயத் திருப்பணிகள், அரசு ஆணைகள், அந்தணர் நிவந்தங்கள், நிலக் கொடைகள் போன்ற ஒரு சில செய்தி களை மட்டுமே செப்பேடுகளாலும் கல்வெட்டுகளாலும் அறிய முடி கிறது. ஆனால், மெய்க்கீர்த்திகளோ மன்னர்க் குலமும் பிறப்பும் தொடங்கிப் போர்களில் பெற்ற வெற்றி ஈறாகப் பலவகைச் செய்தி களைத் தொகுத்து அறிய உதவி புரிகின்றன.

1. குலம் - பாண்டியர் சந்திர' குலத்தில் தோன்றியவர்கள் என்பதை வீரநாரணனது மெய்க்கீர்த்தி (தளவாய்புரச் செப்பேடு) முறைப்படுத்திக் காட்டுகிறது. அதனைத் தொடர்ந்து பிற மெய்க்கீர்த்திகளில்,

''.......அரனவிர்ச் சடைமுடி
வீற்றிருந்த வெண்திங்கள் முதலாக வெளிப்பட்டது''[1]

''சந்திரனது வழித்தோன்றி இத்தராமண்டலம் முழுதாண்டு''[2]

''மதிக்குலம் திகழ மணி முடிசூடி''[3]

என்றெல்லாம் பாண்டியர் குலத்தின் தோற்றமும் மன்னர் குலமும் பற்றிக் கூறப்படுகின்றன. இதேபோல, சோழமன்னர் சூரிய குலத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை அவர்கள் தம் மெய்க்கீர்த்திகள் பல சிறப்பித்துக் கூறுகின்றன.

''அங்கதிர்க் கடவுள் தொல்குலம் விளங்கத் தோன்றி''[4]

''பருதிகுலந் தனிவிளங்கப் பாரிலெழு சந்திரோதயம்
...தியாக வல்லி''[5]

''குலமுதற் பருதியின் வலிசேர் புவனிக்கும்
ஒற்றை ஆழி உலாவ''[6]

''தாமுன்செய் தவத்தால் பருதிவழித் தோன்றி''[7]

''பருதிமுதற் குலம் விளங்க...சுருதிகள்...அருள்வாய்ப்ப''[8]

''ஆதவகுல மரபில்வந்த—சோழகுல மணிவிளக்கு''[9]

என்பன சோழரது குலம் விளக்கி நிற்கும் அடிகள்.

இவற்றைத்தவிர,

''சந்திரன் தொல்குலத்து இந்திர தரனை''[10]

''மலாடகுல மணிவிளக்கு''[11]

என்னும் தொடர்களால் பிற மன்னர்க் குலமும் தேவியர்க் குலமும் சுட்டப்படுகின்றன.

2. நாடுகாத்தல் — ஆயிரந் தலைகளை உடைவன் ஆதி சேடன். அவனே இந்நிலவுலகத்தைத் தாங்கி நிற்கிறான். அச்செயல் மிகவும் அரிதான செயல். இவை புராண மரபுகள். இச்செயலை மிகவும் எளிமையாகச் செய்கிறார்களாம் தமிழ் மன்னர்கள்.

---

1. இராசசிம்மன் வரி 2-3; 2. வீரபாண்டியன் வரி 1; 3, மாற. விக்கிரம வரி 12; 4: இராசாதிராசன் I வரி 1-2, 5: குலோத்துங்கன் II வரி 30; 6: அதிராசேந்திரன் வரி 5-6. 7. குலோத்துங்கன் II மெய், 2 வரி 2; 8. இராசாதிராசன் II மெய். 2 வரி 9. 9: இராசாதிராசன் II மெய், 3 வரி 38-39. 10. இராசேந்திரன் I வரி 31. 11. குலோத்துங்கன் II வரி 34.

இம் மன்னர்கள் பூ பாரத்தைத் தாங்குவதால் ஆதிசேடனுக்கு ஓய்வு ஏற்பட்டுள்ளதாம். இவை மெய்க்கீர்த்தி இலக்கியக் கூற்றுகள். இதோ அவை;

> ''அகிபதியா யிரந்தலையால் அரிதாகப் பொறுக்கின்ற
> மகிமண்டலம் பெரும்பொறைதன் மகாபுஜபலத் தால்தாங்கி''[1]

> ''அரவரசன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால்
> பெரிதரிதின் பொறுக்கின்ற பெரும்பொறைமண் மகளைத்தன்
> தொடித்தோளில் எளிதுதாங்கிய தொண்டியர்க்கோன்''[2]

> ''மறைநா ஓசை யல்லது யாவதும்
> மணிநா ஓசை கேட்டதும் இலனே''[3]

என்பது சிலப்பதிகாரம். பாண்டிய மன்னன் தனது நாட்டில் மறையோசையையே கேட்டறிந்தவன். முறைவேண்டி வந்தோர் அறிவிக்கும் கொற்ற வாயிலின் மணியோசையைக் கேட்டறியான் என்பதனால அவன் நாட்டில் அநீதி என்பது கனவிலும் நடவாத ஒன்று என்னும் செய்தி பெறப்படுகிறது. இதேபோல,

> ''தண்ணளி பரப்பித் தனித்தனிப் புரந்து
> மண்முழுதுங் களிப்ப மணிநா ஒடுங்க''[4]

என்னும் இவ்வடிகளும் அதே கருத்தை வெளியிடுவன வாகும்.

3. எல்லை—

> ''வடதிசைக் கங்கையும் தென்திசை இலங்கையும்
> குடதிசை மகோதையும் குணதிசைக் கடாரமும்
> தண்டினிற் கொண்ட தாதைதன் மண்டலம்''

என்று முதலாம் இராசாதிராசனின் மெய்க்கீர்த்தி அதன் தந்தை வென்று கொண்ட நாட்டிற்கு எல்லை கூறுகிறது. தந்தையின் முழுமையான நாட்டிற்குரிய எல்லையை, மகனது தொடக்க மெய்க் கீர்த்தியின் வழி அறியமுடிகிறது.

> ''வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுனல் கங்கை''
>
> ''முரட்டொழில் சிங்களர் ஈழ மண்டலம்''
>
> ''தொடுகடற் காவல் கடுமுரண் கடாரம்''
>
> ''பூசுரர் சேர்நல் கோசல நாடு''
>
> ''தங்காத சாரல் வங்காள தேசம்''

---

1. சின்னம, வரி 55-56. 2. தளவாய் 66-68; 3. சிலம்பு. கட்டுரை காதை வரி 30-31. 4. விக்கிரம சோழன் வரி 25-26

என்பன போன்ற பல அடிகளால் மன்னர் பலரும் பெற்ற வெற்றி களும் வென்று கொண்ட நாடுகளும் குறிப்பிடப்படுகின்றன.

4. பரப்பு - இவ்வாறு மிகப்பரந்த அளவில் பல நாடுகளை வென்று அவற்றைத் தனக்கு உரிய நாடுகளாக ஆக்கிக் கொண்ட நிலையில் அம்மன்னன் 'உலகு பொது நீங்க' மணிமுடி சூடியவன் என்று சிறப்பிக்கப் படுகிறான். உலகம் யாவருக்கும் பொதுவானது அன்று; அது தனக்கே உரியது என்ற முழு உரிமையோடு முடி சூடினானாம். இச் செய்தியடங்கிய கீழ்வரும் பல தொடர்கள் இலக்கிய நயம்பட அமைந்தவை எனில் மிகையாகாது. அத் தொடர்கள் :

"உலகுபொது நீங்க ஒருகோல் ஓச்சி"[1]
"பௌவ மானிலம் பார்த்திபர் பொதுவற"[2]
"அறைகடல் வளாகம் பொதுமொழி அகற்றி"[3]
"நீராழி வையம் முழுதும்பொது வழித்த"[4]

இவ்வாறு பொது நீக்கித் தனக்கே உரியது என்ற நிலையில் ஆண்ட மன்னவன்,

"கோனேரின்மை கொண்டான்"[5]
"திரிபுவனச் சக்கர வர்த்திகள்"[6]

என்பன போன்ற தொடர்களால் குறிப்பிடப்படுகிறான். அவனது நாடும் அரசும்,

"கருங்கடல் உடுத்த பெருங்கண் ஞாலம்"[7]
"ஆழிவரை வரப்பாக அடற்கலியைப் பிலத் தொதுக்கி"[8]
"கடல்சூந்த பாரேழும் திசைஎட்டும் காத்துநின்"[9]

என்பன போன்ற தொடர்களால் சிறப்பித்துக் கூறப்படுகின்றன. இவற்றைப் போன்று அவனது வெண்கொற்றக் குடையானது,

". . . . . . . . . , .அகில
புவனமும் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை நிற்ப"[10]
"எண்கரிக்கும் எடுத்ததனிக் கூடமென
அண்டகூட முறநிமிர்ந்து முழுமதிக்குடை நின்ற
அழகெரிப்ப"[11]
"தடமாமதி எனவிளங்கித் தரளவெண்குடை நிலாவெறிப்ப;'[12]

---

1: மாற. பராக். வரி 6. 2: சடை. குலசே. 8. 3: வேள்விக்குடி 52: 4, மாற சுந்தர, மெய். 2-43. 5-6, பல மெய்க்கீர்த்தித்ள். 7, வேள்விக்குடி 88. 8. இராசாதிராசன் II மெய்: 4 வ்ரி 3: 9, ஷை வரி 1, 10: விக்கிரம சோழன் வரி 8. 11. இரசசராசன் III வரி 7-8 12: இராசாதி II மெய். 3 வரி 2.

என்பன போன்று பலவகை உவமைச் சிறப்புகளோடு புனைந்து கூறப்படுகின்றது. இத்தொடர்கள் யாவும் இலக்கிய நயமுடையனவே. அவனது புகழ்,

"எண்பெருங் களிற்றினும் இசைமகள் ஏற"[1]
"தியாகவீரக் கொடியெடுத்து வாகைவீரக் கழல்கட்டித்
திக்கெட்டும் ஏவல் கேட்பச் சக்கரவெற்பில் புகழ்எறிப்ப"[2]

என்னும் தொடர்களால் சிறப்பிக்கப் படுகிறது. இவ்வாறு மன்னனது குடையும் புகழும் கூறுமாற்றால் அவனது நாட்டின் பரப்பு மிகைப் படுத்தப்பட்டுக் கூறப்படுவது பிற இலக்கியங்களுக்குரிய மரபின் வழிக் கூறப்படுவதாகும்.

5. பொறுப்பு—மிகைப்படக் கூறும் இலக்கிய நயத்தோடு சிறப் பிக்கப்பட்டாலும் மன்னர்கள் பெற்ற வெற்றிகளும், அவற்றால் அவர் களுக்கு உரிமையான நாடுகளும் மிகப்பல என்பது அம்மன்னர் களின் செயல்களால் உறுதிப்படுத்தப்படுகின்றது. மன்னர்கள் தங்கள் ஆட்சிக்குட்பட்ட நாட்டைத் தண்ணளி செய்தும், மக்க ளைத் தனித்தனி புரந்தும் காக்கும் நோக்கமுடையவர்களாதலின் தங்களது பரந்த நாட்டினைப் பல பகுதிகளாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதிக்கும் தகுதி வாய்ந்த ஒருவனைத் தலைவனாக்கினார்கள். அத் தகுதி வாய்ந்த தலைவர்களுக்கு முடி சூட்டி வைத்துச் சிறப் பித்தார்கள். தாங்கள் பெற்றது போலவே அவர்களுக்கும் சிறப்புப் பெயர்களைப் பட்டப் பெயர்களாகச் சூட்டி மகிழ்வித்தார்கள். மிகப் பரந்த பல நாடுகளை வென்று உரிமையாகக் கொண்டிருந்த முதலாம் இராசாதிராசன், இரண்டாம் இராசேந்திரன் போன்ற மன்னர்கள் தங்கள் சுற்றத்தினரையே அத்தகு பொறுப்புகளில் அமர்த்திச் சிறப் பித்தார்கள் என்பன அவர்கள்தம் மெய்க்கீர்த்திகளால் அறியக் கிடக்கும் செய்திகளாகும். இச்செயல்கள் யாவரும் செய்தறியாத செயல்கள் என்று சிறப்பிக்கப்படுகின்றன. மக்களைத் திருக்காதலர் எனவும், பெயரர்களைக் காதலர் காதலர் எனவும், தம்பியரை இளங்கோக்கள் எனவும் மெய்க்கீர்த்திகள் குறிப்பிடுகின்றன. இச்செய்திகளடங்கிய மெய்க்கீர்த்தி அடிகளுள் சில :

"தன்சிறிய தாதை யாகிய எறிவலி
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல்
இருமுடிச் சோழ னென்று. . . .
திருவுளத்து அன்பொடு கருது காதலருள்
இத்தலம் புகழ்இரா சேந்திர சோழனை
உத்தமச் சோழ னென்றும். . . .

1: சடைய. குலசேகர. வரி 20. 2. குலோ. III மெய். 3 வரி 19-20.

தன்காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லபன் என்றும்''[1]

''தன்சிறிய தாதையையும் திருத்தமை யனையும்
குறிக்கொள் தன் இளங் கோக்களையும் நெறியுணர்
தன் திருப் புதல்வர் தம்மையும் துன்றெழில்
வானவன் வில்லவன் மீனவன் கங்கன். . .எனப்
பொன்னணிச் சுடர்மணி மகுடம் சூட்டி. . . .
ஆங்கவர்க்கு அவர்நா டருளி''[2]

''கங்கா புரிபுகுந் தருளி இன்றுதொறும்
யாவரும் செய்தறி யாதன செய்யாநின்று''[3]

''சுடர்நவ மணிபுனை திருமுடி சூட்டித்
தென்னவர் முதலியர் நிருபரைத் தாங்கவர்
இருநிலம் ஆள நிலமவர்க் கருளி''[4]

''. . . .    . . . . சுடர்முடி சூட்டி. . .தன்கிளை
எவ்வேறு உலகத் தவர்க்குரிய அகலிடம்
வேறு வேறு அருளி''[5]

6. சமயம் — மன்னர்தம் அறப்பணிகளுள் பெரும்பான்மை ஆலயத் திருப்பணிகளாகவே உள்ளன என்பதைக் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. மன்னர்கள் இறையன்பு பூண்டு அரசோச்சிய நிலையும், தங்கள் வெற்றிகளை யடுத்து ஆலயத் திருப்பணிகளை மேற்கொண்ட நிலையும் போன்ற செய்திகள் பலவற்றை மெய்க் கீர்த்திகளும் அறிவிக்கின்றன.

''. . . .    . . . . .கொற்றவன்எங் கோவரகுணன்
பிள்ளைப்பிறைச் சடைக்கணிந்த பினாகபாணிஎம்
பெருமானை
உள்ளத்தில் இனிதிருவி உலகங்காக் கின்றநாளில்''[6]

''வருமுறை முன்னே மன்னவர்ச் சுமந்து
திறைநிரைத்துச் சொரிந்த செம்பொற் குவையால்
தன்குல நாயகன் தாண்டவம் புரியும்
செம்பொன் அம்பலஞ்சூழ் திருமா ளிகைபும். . .
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து. . .
திருத்தேர்க் கோயில் செம்பொன் வேய்ந்து''[7]

---

1. இராசேந். || மெய். 4 வ 4-33: 2. இராசாதிராசன் | மெய்: 2 வ்ரி 4-11: 3: இராசேந்திரன் || மெய்: 5 47-48: 4; இராசேந்திரன் || மெய்: 5 62-64: 5; வீரராசேந்திரன் மெய்: 2 வரி 19-22; 6: தளவாய் 64-66: 7; விக்கிரம சோழன் 29 முதல்

"· · , · திருமாலுக்கு அமர்ந்துறையக்
குன்ற மன்னதோர் கோயில் ஆக்கியும்"[1]

இவ்வாறு ஆலயங்களை அழகுற அமைத்த பணிகளும் ஆங்கு பல வகை விழாக்கள் எடுக்கச் செய்த ஏற்பாடுகளும் பல நடைபெற்றுள்ளன.

7. போர்ச் செயல்கள்—கல்வெட்டுகள் ஒவ்வொன்றும் அரசர் தம் செயல்களுள் ஒவ்வொன்றினை மட்டுமே உணர்த்துவன. மெய்க்கீர்த்திகளோ அன்று வரை செய்துள்ள அனைத்துச் செயல்களையும் கொகுத்து உணர்த்துகின்றன. அவ்வாறான செயல்களுள் போர்ச் செயல்களின் தொகுப்பு இன்றியமையாததாகக் காணப்படுகிறது. மெய்க்கீர்த்திகள் தொகுத்து உணர்த்தும் போர் பற்றிய செய்திகள் தொகுப்பாக அமைவது மட்டுமின்றி சுவை மிக்கனவாகவும் அமைகின்றன. வீரச்சுவையும் அவலச் சுவையும் உடையவை பல; நகைச் சுவையுடையனவும் உள.

"· · · ·   · · · ,   · · · ·   அவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினும்
தன்திருத் தொடையிலும் குன்றமும் புயத்தினும்
தைக்கவும் தன்னுடன் கதக்களிறு ஏறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையுற்று
ஒருதனி அநேகம் பொருபடை வழங்கி
எண்ணிலி அரசரை விண்ணகத் தேற்றி"[2]

"குந்தளர் நற்படை குடைந்துதன் கடற்படை கெடக்கண்டு
அஞ்சல் அஞ்சல் என் றருளித்தன்
குஞ்சரம் ஏறிக்கன் னாடாகர்மேற் கூற்றெனத்
தெரிகணை காடவி"[3]

என்பன இருகுவடு அனைய தன் தோளும் வாளுமே துணையெனச் சென்று போருடற்றி வெற்றிகண்ட மன்னவனின் போர்ச்செயல்களை எடுத்துக் காட்டுவன.

"அயப்படை ஆகவ மல்லன் பயத்தொடும்
வரவிடும் ஒற்றரை வெருவரப் பிடித்து
ஆங்கவர் மார்பில் ஆகவ மல்லன்
யாங்ஙனம் அஞ்சினன் என்னநன்கு எழுதிச்
செலுத்திய பின்னை"[4]

---

1. சீவரமங் வரி 25-26. 2. இராசேந். II மெய். 4 வரி 44 முதல். 3. இராசேந். II மெய். 5 வரி 18 முதல்: 4. இராசாதி. I மெய். 3. 19-23.

"ஒருவனைப் பெண்உடை உடுத்தி ஒருவனை
அஞ்சு சிகைபடச் சிரப்பித்து நொந்தழி
ஆகவ மல்லியும் ஆகவ மல்லனும்
என்று பெயர் எடுத்து"[1]

ஆகவ மல்லனின் ஒற்றரையும், பாடி வந்தோரையும் பிடித்து மான மிழக்கச் செய்த செய்திகள் இரக்கச் சுவையும் நகைச்சுவையும் தருவனவாகும்.

"புரசை யானைப் புழைக்கையிற் பிழைத்து இவ்
உலகம் அறிய ஓடிய பரிசு ஒரு
பலகையில் பழுதற எழுதிய பின்னை
... ... ... ... மார்வொடும் பூட்டி"[2]

என்னும் நிகழ்ச்சியும் இத்தகையதே.

சோழனது மெய்க்கீர்த்தி ஒன்று சோழனிடம் தோல்வியுற்ற பாண்டியனையும் சிறப்பித்துப் பேசுகிறது. பாண்டியனையும் சேர னையும் நாட்டை விட்டுத் துரத்தி வெற்றி மாலை சூடிய போர்ச் செயல் குறித்த அடிகளும் இரக்கச் சுவை தருவனவாக அமை கின்றன. அவை:

"அந்தமில் பெரும்புகழ் சுந்தர பாண்டியன் ......
தன் முடிவிழத் தலைவிரித்து அடிதளர்ந்து ஓட
தொல்லை முல்லையூர் துரத்தி"[3]

"மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டுதன்
நாடுவிட்டு ஓடிக் காடுபுக்கு ஒளிப்ப
வஞ்சியம் புதுமலர் மலைந்து"[3]

பாண்டியனிடம் தன் நாட்டை இழந்து வருந்தினான் சோழ மன்னன். பாண்டியன் அவனை அழைத்து அவனது நாட்டை வழங்கி உதவினான். அந்த நன்றியை மறந்த சோழன் பாண்டிய னுக்குத் திறை செலுத்த மறுத்தான். பாண்டியன் மீண்டும் படை யெடுத்து அச்சோழனை முறியடித்தான். வெறும் போர்ச் செயல் கள் மட்டுமின்றி அவற்றிற்கான காரணங்களும் பிற நிகழ்ச்சிகளும் மெய்க்கீர்த்திகளால் பெறப்படுகின்றன. இச்செய்திகளை,

"... .. ... சோணாடு தானிழந்து (வருந்திய சோழனை)
மாலை முடியுந்தர வருகவென் றழைப்ப . . . .

1. இராசாதி I மெய். 3, வரி 53-56. 2. வீரராசேந். மெய். 2, 120-123.
3. இராசாதிராசன் I மெய். 2 வரி 23 முதல்.

போன வளவன் உரிமையொடும் புகுந்து
பெற்ற புதல்வனைநின் பேரென்று முன்காட்டி
வெற்றி அடியிணைக்கீழ் வீழ்ந்து தொழுதிரப்ப . . . .
பண்டிழந்த சோழ பதியென்னும் நாமமும்
தொல்நகரும் மீள வழங்கி விடைகொடுத்து . . . .
முன்னம் நமக்கு முடி வழங்கு சேவடிக்கீழ்
இன்னம் வழிபடுவோம் என்னாது . . . பின் ஒருநாள்
இறைமறுத்த சென்னிவிடு தூசியும் பேரணியும்
. . . . கைக் கொண்டு"[1]

என்னும் அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

" . . .  . . .  . . . திங்களின்
வழிவரு சளுக்கி பழியொடு வாழ்வதில்
சாவது சால நன்றென்று ஏவமுற்று
உன்னிய சிந்தைய னாகி முன்னம்
புதல்வரும் தானும் முதுகிட்டு உடைந்த
கூடலே களமெனக் குறித்து அக்கூடலில்
வாராது அஞ்சினர் மன்னர் அல்லர்
போர்ப்பெரும் பழிப்பிரட்டர் ஆக வென்று
யாவரும் அறிய எழுதிய சபதம்"[2]

என்னும் அடிகளால் ஆகவமல்லனது உள்ளத்தையும் அவன் எழுதிய கடிதத்தையும் தெளிவாக அறிய முடிகிறது. அவ் ஆகவ மல்லன் கங்கா கேத்தன் என்பவனிடம் தான் எழுதிய கடிதத்தைக் கொடுத்து அனுப்புகிறான். கங்கா கேத்தன்,

"வந்துஅடி வணங்கி வாசகம் உணர்த்தலும் (சோழன்)
சிந்தையும் முகமும் திருப்புயம் இரண்டும்
ஏந்தெழில் உவகையொடு இருமடங்கு பொலியப்
போந்து அப்போர்க்களம் புகுந்து"[3]

காத்திருக்கின்றான். போர்ச் செய்தி கேட்டவுடன் உண்டான சோழனது மகிழ்ச்சி, போரில் அவன் கொண்டுள்ள பேரார்வத்தை எடுத்துக் காட்டுகிறது.

". . . . . . . தன்கழல் அடைந்தமன் னவர்க்குக்
கடாரம் எறிந்து கொடுத்து" அருளுகிறான் சோழன்

---

1. மாற. சுந்தரபாண்டியன் மெய். 2 55-95. 2. வீரராசேந்திரன் மெய்- 2 93 முதல். 3. வீரராசேந்திரன் மெய். 2. 104 முதல்.

தன்னிடம்

"வந்தடி பணிந்த விசயா தித்தற்கு
மண்டலம் அருளித் தன்னடி அடைந்து
அருளுகின்ற விக்கிரமா தித்தனை
எண்டிசை நிகழக் கண்டிகை சூட்டி"

மகிழ்விக்கிறான்.

"அப்பெருஞ் சேனையை அடவியிற் பாய்ச்சிக்
கோதா வரியில் தன்போ தகம்நீர் உண்ண"ச் செய்து

பல நாடுகளைக் கடந்து தன் தலைநகராகிய **கங்கைகொண்ட சோழபுரம்** அடைகிறான். தொகுப்பான வரலாற்றுச் செய்திகளை அவனது மெய்க்கீர்த்தியால் மட்டுமே அறியமுடிகின்றது.

சிங்கள மன்னனை வென்று, தென் ஈழ நாட்டைக் கைப்பற்ற நினைத்த மூன்றாம் குலோத்துங்கன், தன் செல்வச் செழிப்பாலும், படை பலத்தாலும் மலை முதலியவற்றைக் கொண்டு அணை போட்டுக் கடலை அடைத்து வழியை ஏற்படுத்தினான். ஈழ நாட்டின் மீது படையெடுத்துச் சென்று சிங்கள மன்னனின் தலையை அரிந்தான். அவனது படையை அழித்தான். இதனால் இலங்கை மன்னன் இராவணனது தலையை அரிந்த திருமால் இவனேயாவான் என்னும் சிறப்பினையும் பெற்றான். இச்செய்திகளை உவமையோடு கூறும் அவனுடைய மெய்க்கீர்த்தி அடிகள் இலக்கிய நடைக்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகின்றன. அவ்வடிகள் :

"தென்ஈழம் கொள்களன்னத் திரைகடலை அடைக்கவென்ன
மன்னுதிரு வாற்படையால் மலைகொண்டு வழிப்படுத்தி
இலங்கையர்க்கோன் தலையரிந்த திருநெடுமால் இவனென்னத்
தென்னவனைத் தலையரிந்து தேசமெலாம் இருளகற்றி"[1]

இராமாயணச் செய்தியை உள்ளடக்கிய உவமையை எடுத்தாண்டுள்ள இம்மெய்க்கீர்த்தி, முன்னோர் மொழி பொருளைப் பொன்னே போல் போற்றுந் திறத்திலமைந்த சிறந்த இலக்கியமே என்பதில் தவறில்லை.

தன் படை வலிமையால் அனேக சாமந்தரை (படைத் தலைவரை)ச் சின்னா பின்னஞ் செய்து வெற்றி பெற்றான் மன்னவன் என்று படைத் தலைவர்களின் பெயர்களோடு கூறியிருக்கலாம். ஆனால், மெய்க்கீர்த்தி இலக்கியம் ஆதலின் இச்செய்தியை,

---

1. குலோத்துங்கன் III மெய். 2 வரி 11-14.

"....     ....     அனேகசா மந்தரைச்
சின்னா பின்னஞ் செய்து பின்னை
முதலி யான மதுவணன் ஓட
விரித்த தலையொடு விக்கலன் ஓட
செருத்தொழில் அழிந்து சிங்கணன் ஓட
அண்ணன் முதலியர் அனைவரும் அமர்போர்ப்
பண்ணிய பகடிழிந்து ஓட நண்ணிய
ஆகவ மல்லனும் அவர்க்குமுன் ஓட"[1]

என்று அழகுபடக் கூறி இலக்கியச் சுவை யூட்டுகிறது சோழனின் மெய்க்கீர்த்தி.

"குவலயத் துயிர்களைப் பெற்றதாயினும் பேணி"[2]
"தந்தைஇல்லோர்த் தந்தையாகியும் தாயரில்லோர்த் தாயராகியும்
மைந்தரில்ஒரு மைந்தராகியும் மன்னுயிர்கட் குயிராகியும்
விழிபெற்ற பயன்என்னவும் மெய்பெற்ற அருள்என்னவும்
எத்துறைக்கும் இறைவன் என்னவும்"[3]

விளங்கி அரசு புரிந்தான் மன்னவன் என்னும் இவ் அருட் காட்சிக்ளை யளித்து மகிழ்விக்கும் மெய்க்கீர்த்தி இலக்கியம்,

"மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்
செற்றவன் சிரத்தினை அறுத்து மற்றவன்
ஒருமக ளாகிய இருகையன் தேவி
நாகலை என்னும் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றாக்கி"[4]
"தண்டொன்றால் வழுதிமைந்தனை மூக்கரிந்து
தமிழ் மதுரை கொண்டு"[5]
"சிங்களப்படை மூக்கறுப்புண்டு அலைகடல்புக"[6]
"தென்இலங் கையர்க்கோன் தலையரிந்த
திருநெடுமால் இவன் என்னத்
தென்னவனைத் தலையரிந்து தேசமெல்லாம் இருளகற்றி"[7]
"தொழுதுவந் தடையார் நிருபர்தம் தோகையர்
அழுத கண்ணீர் ஆறு பரப்பி
கழுதைகொண் டுழுது கவடிசெம் பியனைச்
சினம்இரியப் பொருதுச் சுரம்புக ஓட்டி"[8]

என்பன போன்ற கொடிய மறக்காட்சிகளையும் நம் கண்முன் நிறுத்தத் தவற வில்லை.

---

1. வீரராசேந்திர மெய் 2 வரி 47-54. 2-3. இராசராசன் II மெய். 2. 29 முதல். 4. வீரராசேந்திரன் மெய். 2. 29-33 5. குலோ. III மெய். 3 6: குலோ. III மெய். 3 வரி 8. 7. குலோ. III மெய். 2. 13-14. 8. மாற. சுந்தர. மெய். 2. 32-35.

8. மன்னனைக் காணும்முறை—மன்னர்கள் வந்து பேரரசனைக் காணும் முறையைச் சித்திரிக்கும் அடிகளை மிகவும் பரிதாபத்தோடு காண முடிகிறது. பேரரசனைக் காணும் நிலையில் மக்களுக்கிருந்த உரிமைகூட மன்னர்களுக்கில்லை போலும். தகுந்த சமயம் பார்த்துச் சென்று பணியும் அவர்கள் நிலையைச் சித்திரிக்கின்றன கீழ்வரும் பகுதிகள் ;

"எப்புவி வேந்தரும் இகல்மண்ட லீகரும்
மும்முரசு முழங்கும் செம்மணி மாளிகை
கோயில் கொற்ற வாயில் புகுந்து
காலம் பார்த்துக் கழலிணை பணிந்து
நல்ல வேழமும் நிதியமும் காட்டி"[1]

"திருவிழந்த தென்னவனும் சேரலனும் வந்திறைஞ்சி
அரியணையின் கீழிருக்க அவன்முடிமேல் அடிவைத்துப்
படிவழங்கி முடிவழங்கிப் பாண்டியர்க்கு விடைகொடுத்துக்
கொடி வழங்கி வில்லவர்க்குக் கொற்றவர்ப் பெறாத்
திருவழங்கி"[2]

"......பார்த்திபர் எல்லாம் உறைவிடம் அருள்என
ஒருவர்முன் ஒருவர்
முறைமுறை கடவதம் திறைகொணர்ந்து இறைஞ்ச"[3]

9. கவர்ந்த பொருள்கள்—வெற்றி பெற்ற மன்னர்கள் பகை மன்னர் நாடுகளிலிருந்து பெரும் பொருளைக் கவர்ந்து வந்தனர் ; பகை மன்னர்களே திறைப் பொருளாகப் பெரும் பொருளைக் கொண்டு வந்து வழங்கி வந்தனர். இவ்வாறு நாட்டில் வந்து குவிந்த பொருள்களைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றன மெய்க்கீர்த்திகள். அரசச் சின்னங்களும், படைகளும் அரச மாதரும் பிற மகளிரும் இப்பட்டியலில் காணப்படுகிற காட்சி ஒரு புறம் பெருமித உணர்வையும் ஒருபுறம் பரிதாப உணர்வையும் ஊட்டுவனவாகும்.

"தருமை யானையும் பலப்பைப் புரவியும்
கண்மணித் தேரும் சீன வடமரும்
நாகத் தோடும் நவமணிக் குவையும்
ஆடகத் திரியும் அரியா சனமும்
முடியும் கடகமும் முழுமணி யாரமும்
கொடியும் குடையும் குளிர்வெண் கவரியும்
முரசுஞ் சங்கமும் தனமும் முதலிய
அரசுகெழு தாயம் அடைய வாரி"[4]

---

1. சடை. வீரபாண்டியன் 12-16. 2. குலோ. III மெய். 3. 11-14. 3. மாற. சுந். மெய். 2. 17-19. 4: சடை. வீரபாண். 41-48.

"வேகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்டு
அங்கவர் தாரமும் அவர்க்குல தனமும்
சங்கும் தொங்கலும் தாரையும் பேரியும்
வெண்சா மரையும் மேக டம்பமும்
சூகரக் கொடியும் மகரதோ ரணமும்
ஒட்டக நிரையும் உலோகா சனமும்
புட்பகப் பிடியும் பொருகளிற்று ஈட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்து"[1]

10. மண விழா—முடிசூட்டு விழாக்களையும் வெற்றி விழாக் களையும் சிறப்பாகக் கொண்டாடிய மன்னர்கள் திருமண விழாக் களை நடத்தியதாக மெய்க்கீர்த்திகள் கூறவில்லை. ஆனால் அவர் கள் பெற்ற வெற்றிகளையும் நாடுகளையும் செல்வக் குவியல்களை யுமே அவர்கள் திருமணம் செய்து கொண்டதாகக் கற்பிக்கின்றன. அக்கற்பனைக் கூற்றுகள் :

"நிருபர்வந் திறைஞ்ச நீள்நில மடந்தையைத்
திருமணம் புணர்ந்து"[2]

"விளங்குசய மகளை இளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்கிரமத் தொழிலால்
புதுமணம் புணர்ந்து"[3]

".... .... மகீதலம் பொதுநீக்கி
மலர்மங்கை யொடு மணனயர்ந்த"[4]

11. தோல்வி பற்றிய கூற்று— மெய்க்கீர்த்திகளை அளித் துள்ள சோழ மன்னரும் பாண்டிய மன்னரும் அவரவர் மேம்பாடுற்று விளங்கிய காலத்தில் சேர, சோழ, பாண்டிய நாடுகளை ஒருசேரத் தங்களுக்கு உரிமையாகக் கொண்டு ஆண்டுள்ளனர். இந்த நிலை காலத்துக்குக் காலம் மாறியிருக்கிறது. மெய்க்கீர்த்திகளில் பகை மன்னர்களின் கொடிகள் சிறப்பித்தே பேசப்படுகின்றன. போரில் மறைந்துபட்ட மன்னர்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது விசும் படையச் செய்து என்றும், வானகம் அருளி என்றும், குறிப்பிடப்படு கின்றன. தோல்வியுற்ற மன்னர்கள் வனம் புகுந்தனர்; கடல் புகுந் தனர்; ஓடி ஒளிந்தனர் என்றெல்லாம் கூறப்படுகின்றனர். சேரர், சோழர், பாண்டியர் என்பதற்குப் பதிலாக வில், புலி, கயல் என்று ஆகு பெயராலும் குறிக்கப் படுகின்றனர். இவை அனைத்தும் இலக்கியச் சுவைபட அமைந்தவையாகும். செய்திகளை மட்டும் உரைப்பதாயின் இறந்துபட்டனர்; தோற்று ஓடினர் என்றே கூறி யிருக்கலாம். இக்கருத்துக்களை விளக்கும் அடிகளுள் சில :

---

1. வீரராசேந். மெய். 2. 55 முதல். 2. குலோ. I மெய். 3. 5-6. 3. குலோ. I மெய்: 3. 3-5. 4. வேள்வி, 24-25.

"சிலையகன்று விசும்படையத் திறல்புலிபோய் வனமடைய. . .
கயலிரண்டும் நெடுஞ்சிகரக் கனவரையின் விளையாட"[1]

"கானிலை செம்பியன் கடும்புலி யாளவும்
மீனம் பொன்வரை மேருவில் ஓங்கவும்"[2]

"கோளார்ந்த சினப்புலியும் கொடுஞ்சிலையும் குலைந்தொளிப்ப
வாளார்ந்த பொற்கிரிமேல் வரிக்கயல்கள் விளையாட"[3]

"நேராம் அரசரை நெடுவிசும்பு ஏற்றி
அந்தர வாளத்து அரம்பையர் எதிர்கொள
இந்திர லோகம் எய்திய பின்பு"[4]

"மீனமும் சிலையும் சிதைந்துவான் உயர
பொன்நெடு மேருவில் புலிவீற் றிருப்ப"[5]

"வெஞ்சின வேங்கை வில்லுடன் ஒளிப்ப"[6]

"செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடல்புக"[7]

"கன்னி காவலர் தென்னவர் மூவருள்
வானகம் இருவருக் கருளிக் கானகம்
ஒருவனுக் களித்து"[8]

12. பரணி—நாடு பெற விரும்பிய மன்னன் போர்க்களத்தில் தன் வீரம் முழுமையையும் காட்டும் திறத்தால் பகைவருடன் போர் செய்கிறான். போர்க்களத்தில் பகைவர் படையைக் கொன்று குவிக்க இரத்த ஆறு பெருகி ஓடுகிறது. அக்களத்தில் அவ்வீரனது புகழை ஏத்திக் கூறுகின்றனர் புலவர். அப்புகழ்ச்சி இலக்கியமே பரணி எனப்படுகிறது.

"ஏழ்தலைப் பெய்த நூறுடை இடபமே
அடுகளத் தட்டாற் பாடுதல் கடனே"[9]

"ஆனை ஆயிரம் அமரிடை வென்ற
மான வனுக்கு வகுப்பது பரணி"[10]

என்பன பரணி பாடப்படுதற்குரிய காரணம் கூறும் இலக்கண அடிகள். இவ்விலக்கியம் பெற்ற மன்னர்களைச் சுட்டுகின்றன மெய்கீர்த்திகள். பலவிடத்து அவ்விலக்கியக் கூறுபாடுகளையும் காணமுடிகிறது.

---

1: சடை. சுந்தர. வரி 10-11. 2: மாற. குலசேகர. 6-7. 3. மாற. சுந்தர. மெய். 2. 3-4. 4: இராசேந். II வரி 8-10. 5, குலோத். II மெய். 2. 17-18. 6: சடை. குலசேகர. வரி 6. 7. விக். சோழ. வரி 5-7. 8. இராசாதி. I மெய். 3. வரி 7-8, 9. பன்னிரு. 145. 10. இலக். விளக்கப்பாட்டியல் 78.

"..........தன் கொடிப்படை ஏவிக்
கன்னா டகர்விடு கடகரி புரளத்
தன்னா டையிற்றமிழ்ப் பரணி கொண்டு"[1]
"...... அனைவரும் வென்றவேழத் தொடுபட்டு
மற்றவர் கருந்தலை யோடு வெண்ணிணம்
கழுகொடு பருந்தலை எங்கணும் பரப்ப"[2]

".........அக் களத்தில் ஆனையின்
வெண்மருப்பும் கையும் குறைத்துஎங்கள் மீனவற்கும் . . .
அவற்றது ஆட லும் கூகையின் பாடலும்
கண்டும் கேட்டும் களித்தஉடல் கருங்கூந்தல் . . .
பாடும் பரணிதனைப் பார்வேந்தர் கேட்பிக்க"[3]

என்பன போன்ற பல இடங்கள் பரணி இலக்கியக் கூற்றுக்குச் சான்றாக அமைகின்றன.

### 6. 2. 3. இயற்கை வளமும் ஆட்சி முறையும்

*1.* வளத்திற்கு அடிப்படை—மன்னவர்தம் ஆட்சியில் நீதி நெறி முறைகள் வழுவிக் கொடுங்கோல் முறை தழுவி ஆணைகள் செலுத்தப் பெறுமேயானால் மக்களிடையே பிழைகள் மலியும்; இயற்கையும் துணை செய்ய மறுக்கும். எனவேதான்,

". . . . . . . . .கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்ப மல்லது தொழுதகவு இல்"[4]

என்று வருந்திக் கூறினான் சேரன் செங்குட்டுவன். அவ்வருத்தத்திற்குக் காரணமாக,

"மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழைஉயிர் எய்திற் பெரும்பே ரச்சம்"[5]

என்னும் கருத்தையும் எடுத்துக் காட்டுகிறான். மழைவளம் குன்றுவதற்கு மன்னன் அஞ்ச வேண்டும் எனின், அவ்வளங்குன்றா திருக்குமாறு நடந்து கொள்ள வேண்டுவது அவனது கடமையாகிறது. அக்கடமையாவது கொடுங்கோலுக்கு அஞ்சி நடத்தலேயாகும் என்பதே செங்குட்டுவனது கூற்று.

இக்கருத்துகளை உணர்ந்து செங்கோல் செலுத்திய மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் அவர்கள் நாட்டின் வளத்தினையும் மக்கள் வாழ்வினையும் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவ்வடிகள்—

---

1. இராசாதிராசன் I மெய். 3 வரி 12-14. 2. குலோத். I மெய். 3 வரி 76-78:
3. மாற. சுந்தர. மெய், 3 வரி 98-110. 4. சிலப்: காட்சிக்காதை வரி 102-104,
5. ௸ 100-101.

"‚. . . .      . . . .      . . . .      ஆதியுகம்
கொழுந்துவிட்டுத் தழைத்தோங்கக் கோமாதுஅறங்
குளிர்தூங்க
மாரிவாய்த்து வளம்சுரக்கத் தாரணியோர் பிணிநீங்க
நல்லோர்தம் கற்புயர நான்மறையோர்த் துறைவளர
எல்லோரும் தனித்தனியே வாழ்ந்தனம்யாம் எனமகிழ்ந்து
ஒருவருடன் ஒருவர்க்கும் ஒன்றினுடன் ஒன்றுக்கும்
வருபகை யகத்தின்றி விழைந்துகாத லுடன்சேர
இந்திரன்முதல் திசாபாலர் எண்மரும் ஒரு வடிவாகி
வந்தபடி எனநின்று மனுவாணை தனிநடாத்திய"[1]

2. அஃறிணை உயிர்—இரண்டாம் இராசாதிராசன், குலோத் துங்கன் ஆகியோரின் மெய்க்கீர்த்திகளும் இதே இலக்கிய நடை யுடையவை அஃறிணை உயிர்களின் வாழ்வினையும் படம் பிடித்துக் காட்டுவனவாய் அமைகின்றன என்பதைக் கீழ்க்காணும் அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

"அமைவில்லா மனுவொழுக்கம் ஆதியாம்படி நிலைநிற்க
ஓர்ப்பினுந்தம் முறுகனவினும் ஒன்றோடொன்று பகையின்றிப்
போர்ப்புலியும் புல்வாயும் புக்கொருதுறை நீருண்ணப்
பொன்னிநதியும் பொய்யாது புயலும்புனல் கரவாது
மன்னியநதி வளம்பெருக்க விளைவயலின் வளம்சுரக்கப்
போகபூமி இதுவென்னப் போகமெல்லாம் வந்தீண்டி"[2]

"பொருபுலியும் புல்வாயும் ஒருதுறைநீர் உடன்உண்ணப்
புள்ளும் மாவும் உடன் புணர்ந்து
கடுங்குலைஞர் குரம்பைநிழல் இடும்பைஇன்றி இனிது வைக"[3]

இவை எல்லாவற்றுள்ளும் நாட்டில்

"பருவமாரியும் பலவிளைவும்
பழுதின்றி முழுதுமாக"[4]

விளங்க வேண்டும் என்பது நல்ல அரசியலுக்கு இயல்பாகும் என் பதை மெய்க்கீர்த்திகள் வற்புறுத்துகின்றன.

3. வருணனை-பேரிலக்கியங்களைப் போல நாட்டு வருணனை, நகர வருணனைகள் மெய்க்கீர்த்திகளில் தனிப் பகுதிகளாக விளங்க வில்லையாயினும் நாடு நகரங்களின் சிறப்புகள் ஆங்காங்கு இலக்கி யச் சுவையோடு அமைந்துள்ளன.

"ஓடக் காண்பது பூம்புனல் வெள்ளம்
ஒடுங்கக் காண்பது யோகியர் உள்ளம். . . .

---

1. இராசராசன் II மெய், 2 வரி 10-18. 2. இராசாதிராசன் II மெய், 3 வரி 10-13.
3. குலோத்துங்கன் II வரி 11-13, 4. குலோத்துங்கன் II வரி 6.

தேடக் காண்பது நல்லறம் கீர்த்தி . . .
நெருங்கக் காண்பது கன்னலில் செந்நெல் . . .”[1]

திருக்குற்றால நாட்டின் வளங்கூறும் இவ்இலக்கிய அடிகளைப் போன்ற பல அடிகள் மெய்க்கீர்த்திகளில் அமைந்து, அம் மெய்க் கீர்த்திகளை இலக்கியச் சுவை பயக்கச் செய்கின்றன.

நாட்டு வளங்களை எடுத்துக் காட்டும் அவ் அடிகள், மெய்க் கீர்த்தி இலக்கியத்திற்கேற்ப, தளைப்படுதல், சிறைப்படுதல், பிணிப் படைதல், அரற்றுதல், நீருண்ணல், கரத்தல் போன்ற தொழிற் பெயர்களைப் பெற்றனவாகவே அமைந்துள்ளன. இவற்றிற்கேற்பப் பெயர்ச்சொற்களும் யானை, பணைக்கைமா, பழனப்பரப்பு, சிலம்பு, புலி, புல்வாய், பொன்னி, புயல், மனு ஒழுக்கம் போல்வனவாகவே அமைந்துள்ளன.

“பாவும் பழனப் பரப்பும் பணைக்கை
மாவும் அல்லது வன்தளைப் படுதல்
கனவிலும் காண்டற்கு அரிது . . . .
. . . . . . பல்வேறு புள்ளினம் அல்லது
சிறைஎனப் படுதல் இன்றி நிறைபெரும்
செல்வமோடு அவனிவாழ் . . . .”[2]

பாடல்கள், நீர் நிலங்கள், யானைகள் இவையே தளைப் படுத்தப் படுகின்றன. பிறவாகிய உயிர்கள் தளைப்படுதல் கனவினாலும் காணமுடியாது என்பன போன்ற இக்கூற்றுகள் முழுக்க முழுக்க இலக்கிய நயமாக அமைந்தவையே.

“படி யானையே பிணிப்புண்பன
வடிமணிச் சிலம்பே அரற்றுவன

செல் ஓடையே கலக்குண்பன வருபுனலே சிறைப்படுவன
மாவே வடுப்படுவன மாமலரே கடியவாயின;
காவுகளே கொடியவாயின கள்ளுண்பன வண்டுகளே. . . .

இயற்புலவரே பொருள்வைப்பர் - இசைப்பாணரே
கூடஞ்செய்வர்
இவன் காக்கும் திருநாட்டின் இயல் இது என[3]

“குலைபடுவன தெங்குகளே கோட்படுவன இளங்கமுகே
அலைபடுவன நீர்நிலையே அதிர்படுவன இடியேறே
தளம்படுவன ஓர்வரம்பே தடைபடுவன கோபுரமே . . .

---

1: திருக். குறவஞ்சி. பா. 56. 2. குலோத்துங்கன் II மெய். 2 வரி 29-34.
3, இராசராசன் II மெய், 2 வரி 19-26.

கள்ளுண்பன பூங்கொடியே கறைபடுவது நிறைமதியே
பட்டுண்பன அணியல்குலே பரிந்தாற்றுவ பரியாகமே''

என்பன போன்ற நீண்ட வருணனைத் தொடர்கள் பல இலக்கியச் சுவை பயந்து நிற்பனவே.

முதன் முதலில் மெய்க்கீர்த்தியை முறைப் படுத்தி வரலாற்றுப் பயன் உடையதாக அமைத்தவன் முதலாம் இராசராசன் என்று கருதப்படுகிறது. அவனுடைய மெய்க்கீர்த்தியில் அவன் வெற்றி பெற்ற நாடுகள்.

''வேங்கை நாடும் கங்க பாடியும்
நுளம்ப பாடியும் தடிகை பாடியும்
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்''[1]

என்ற தொடர்களால் குறிப்பிடப் படுகின்றன.

இவ் அடிகள் நாட்டின் பெயர்களை அடுக்கிக் கூறுவனவாகவே அமைகின்றன. ஆனால் அடுத்து வந்த சோழ மன்னர்களின் மெய்க்கீர்த்திகளில் அவர்கள் வென்ற நாடுகள் குறிப்பிடப்படும் போது சிறந்த, பொருத்தமான விளக்கமுடைய அடைமொழித் தொடர்கள் இணைந்து நின்று இலக்கியச் சுவை பயக்கின்றன. வனவாசி என்னும் நாடு தொடர்ந்த காட்டரணை உடையதாய் விளங்கியது; சுள்ளி மரங்கள் அடர்ந்த மதிலையுடையது கொள்ளிப் பாக்கை; சங்குகள் ஒலிக்கும் கடலால் சூழப்பட்டு, அக்கடலையே அரணாக உடையவை பழந்தீவு, கடாரம் முதலியவை. இத்தகு பொருத்தமான விளக்கங்கள் இலக்கியங்களில் காணப் பெறும் வருணனைகளை நிகர்த்தவையே.

''தொடர்வன வேலிப் படர்வன வாசி
சுள்ளிச் சூழ்மதில் கொள்ளிப் பாக்கை
நண்ணற்கு அரும்அரண் மண்ணைக் கடக்கம்
.... .... சங்கதிர் வேலைத்
தொல்பெருங் காவல் பல்பழந் தீவு;...
பூசுரர் சேர்நல் கோசல நாடு
வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுனல் கங்கை
கலைத்தக் கோர்புகழ்த் தலைத்தக் கோலம்
தொடுகடற் காவல் கடுமுரண் கடாரம்''[2]

''பொன் வேங்கைநாடு; பொருகடல் இரட்டம்''[3]

''கருங்கடல் உடுத்த பெருங்கண் ஞாலம்''[4]

---

1. இராசராசன் I, 2. இராசேந்திரன் I வ்ரி 5 முதல், 3. குலோத்துங்கன் I மெய். 2 வரி 12, 4. வேள்வி. வரி 88.

"வாரசும்பு உலரா மலை நாடு"[1]

என்பன போன்ற பல வருணனைத் தொடர்களை மெய்க்கீர்த்திகள் பெற்றுள்ளன.

### 6. 2. 4. தொடக்கம்

காப்பும் கடவுள் வணக்கமும் போன்ற பாடல்கள் தொடக்கமாக அமையவில்லை ஆயினும் மெய்க்கீர்த்திகள் அனைத்தும் பொருத்தமுடைய மங்கலச்சொற்களோடு தொடங்குகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும். சொற்கள் மட்டுமன்றி முதற் சீர்களும் அடிகளுமே மங்கலத் தொடர்களாக அமைந்துள்ள முறையை எல்லா மெய்க்கீர்த்திகளிலும் காண முடிகிறது.

1. சொல்—அமிர்தம், ஓங்குதிரை, கடல், சந்திரன், திங்கள், திருமகள், திருமாதர், தேர், புகழ், பூ, பூதலம், பூமடந்தை, பூமாது, பூமாலை, வீரம் போன்ற மங்கலச் சொற்களே தொடக்கச் சொற்களாக அமைகின்றன.

தொடக்க எழுத்தாக உயிர்மெய் எழுத்தே வரவேண்டும் என்பது தமிழர் கையாண்ட முறை.

"செப்பிய உடம்போடு சேராது உயிர்முதல்
நிற்பன மக்கட்கு ஆமெனின் நேர்ந்திலர்"[2]

என்பது பாட்டியல்.

மன்னரைப்பற்றிய மெய்க்கீர்த்திகள் அனைத்தும் மேற்கண்டவாறு உயிர் மெய் எழுத்துக்களையே தொடக்கமாகக் கொண்டுள்ளன.

"ஓங்குதிரை வியன்பரப்பில் உததிஆ லயமாக"[3]

என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி பட்டினப்பாலையின் தொடக்க அடியைக் கொண்டு அமைகிறது. திருமாலின் சிறப்பு கூறும் தொடக்கமாக அமைவதால் உயிர் எழுத்தில் தொடங்குகிறது.

"மற்றவை கடவுளர் முனிவர்க்கு ஆமே"[4]

என்பதனால் கடவுளர், முனிவர்களைப் பற்றிய சிறப்பினைக் கூறும் இலக்கியமாயின் உயிர் எழுத்தால் தொடங்கலாம் என்னும் கருத்து இங்குப் பொருத்தமாக அமைகிறது.

"அமிர்த கிரணன்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியும் இறைவன் சிறப்பினைக் கூறித் தொடங்குவதேயாகும்.

---

1. சடை. சுந்தர. வரி 23. 2. பன்னிரு: 69· 3. தளவாய். 4· பன்னிரு, 69:

"அன்ன னாகிய அலர்கதிர் நெடுவேல்"[1]

என்று தொடங்கும் தமிழ்ப் பகுதி வடமொழிச் செய்திகளின் தொடர்ச்சியாகத் தமிழில் தொடங்குகிறது. எனவே அன்ன னாகிய என்னும் தொடர் மெய்க்கீர்த்தியின் இடையில் அமைந்துள்ள தொடரே யாகும். தொடக்கத் தொடர் அன்று.

2. சீர்—மூவசைச் சீர்கள் எட்டினுள் தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்கனி, கூவிளங்கனி ஆகிய நான்கு சீர்களே இலக்கியங்களின் தொடக்கமாக அமைய வேண்டும் என்பது தமிழர்க் கொள்கை. அவையே பொருத்தமுடையவை; நன்மை பயப்பவை என்பர்.

"நேரசை மூன்று இயமானன்; அதற்குச்
சீர்புனை நாளே பரணி; வாழ்நாள்
மற்றது பயக்குமென்று உய்த்துரைத் தனரே"[2]

"நிரைநேர் நேரது நீள்மதி; அதற்கு
வருநாள் மகசிரம் மலிபுகழ் ஆகும்"[3]

"நிரையசை மூன்று நிலக்கணம்; அதற்குத்
தருநாள் கேட்டை திருமிகத் தருமே"[4]

என்பன முதற்சீரின்கண் அமைத்தற்குரிய சொல்லினது பொருத்தம் பற்றிய இலக்கண நூற்பாக்கள். இவ் இலக்கணங்களுக்கேற்ப மெய்க்கீர்த்திகளின் முதற் சீர்கள் அமைய அவை பொருத்தமுடைய இலக்கியங்களாகத் திகழ்கின்றன. அம் முதற் சீர்களாவன :

| | | |
|---|---|---|
| 1. | பூ மன் னு<br>பூ மா து<br>பூ மா லை | நேர் நேர் நேர் |
| 2. | கடல் சூழ்ந் த<br>திரு மன் னி<br>திரு மா தர்<br>புகழ் சூழ்ந் த | நிரை நேர் நேர் |
| 3. | அமிர் தகி ரணன்<br>திரு மடந் தையும் | நிரை நிரை நிரை |
| 4. | சந் திர னது<br>பூ மடந் தையும்<br>பூ மரு விய<br>பூ மலர் வளர் | நேர் நிரை நிரை |

1. சிவரமங்கலம், 2, பன்னிரு. 58. 3. பன்னிரு. 59. 4. பன்னிரு. 60.

இம் மூவகைச் சீர்களைப் போலவே ஈரசைச் சீர்கள் நான்கி னுள்ளும் கருவிளம், கூவிளம் ஆகிய இரண்டு சீர்கள் மட்டுமே இலக்கியங்களின் தொடக்கமாக அமைய வேண்டும் என்பர். பிற இரண்டும் தொடக்கத்திற்கு ஆகாதனவாம். இக் கருத்தினை,

"மங்கலம் அமைந்த சொல்லொடு பொருந்திய
ஈரசை நான்கினுள் நேரீறு ஒழித்து
நிரைஈற்று இயற்சீர் முதற்கண் நிற்பினும்
வரையார் மூவசை வாராக் காலே"[1]

என்னும் நூற்பா எடுத்துக் காட்டுகிறது. ஈரசைச் சீர்களால் அமைந்த அடிகளைபுடைய மெய்க்கீர்த்திகள் அனைத்தும் இவ் இலக்கணத் திற்குப் பொருந்தவே முதற் சீர்களைப் பெற்று விளங்குகின்றன. அத்தகு ஈரசை முதற் சீர்களாவன :

1. திரு மகள்
   திரு வளர்
   திரு வொடுந் } நிரை நிரை

2. திங் களேர்
   பூ தல
   பூ மலர்
   வீ ரமே } நேர் நிரை

தொடக்கத்தில் அமையும் மங்கலச் சொற்கள் திரிதல் விகாரம், வகையுளி போன்ற நிலையில் அமையவில்லை; மயக்கமின்றி ஒரு பொருள் தருவனவாகவே அமைந்துள்ளன.

இவ்வாறு மெய்க்கீர்த்திகளின் தொடக்கம் மங்கலச் சொற்க ளாகவே அமைவதோடு ஸ்வஸ்திஸ்ரீ, சுபமஸ்து என்னும் வடசொற்க ளாகிய மங்கலச் சொற்களில் ஒன்றினையும் முதலில் பெற்றிருப்பது அனைத்து மெய்க்கீர்த்திகளிலும் காணப்படுகிற ஒன்றாகும்.

சின்னமனூர்ப் பெரிய செப்பேடும், தளவாய்புரச் செப்பேடும் முறையே,

"திருவொடும் தெள் . . . ."
"ஓங்குதிரை வியன்பரப்பில்"

என்றே தொடங்குவனவாகத் தமிழ்ப் பகுதிகள் காணப்படுகின்றன. உண்மையில் அவை வடசொல்லாகிய ஸ்வஸ்திஸ்ரீ என்னும் மங்கலச் சொல்லோடு கூடியவையே யாகும். அவ் இரண்டு செப்பேடு

---
1. பன்னிரு. 67.

களிலும் வடமொழிச் செய்திகளின் முடிவில் காணப்படும் ஸ்வஸ்திஸ்ரீ என்பது தமிழ்ப் பகுதியின் தொடக்கச் சொல்லாகும். ஆனால் வடமொழிக்குரிய எழுத்துகளால் அமைந்துள்ளன. தமிழ்ப் பகுதியின் இடையிடையேயும் சில சொற்கள் வட வெழுத்துக்களால் அமைந்திருப்பது போல இத் தொடக்கச் சொற்கள் அமைந்துள்ளன.

3. அடி—மங்கலச் சொல்லோடும் சீரோடும் தொடுங்கும் மெய்க்கீர்த்கள் பெருபாலும் முதல் அடி முழுவதும் மங்கலத் தொடர்களை உடையனவாய் அமைகின்றன. சில மெய்க்கீர்த்திகளின் முதலில் சில அடிகளே அவ்வாறு அமைகின்றன. இவற்றைப் பொருளால் நோக்குங்கால் இவ் அடிகள் இலக்கியச் சுவை பயந்து நிற்பவையே என்பது தெளிவாகப் புலப்படும்.

"பூமேவு வளர்திருப் பொன்மார்பு புணர
நாமேவு கலைமகள் நலம்பெரிது சிறப்ப"[1]

"திருமடந்தையும் செயமடந்தையும்
திருப்புயங்களில இனிதிருப்ப"[2]

"திருவளரச் செயம்வளரத் தென்னவர்தம் குலம்வளர"[3]

என்பன போன்ற பல தொடக்க அடிகளைச் சான்றாகக் காட்டலாம்.

### 6. 2. 5. குறிப்புச் சொல்

தொகைக் குறிப்பு—ஒரு சொல்லை அமைத்து அச்சொல்லுக்குரிய நேரான பொருளைப் பெறாமல் வேறு பொருளை உணர்ந்து கொள்ளுமாறு செய்வது செய்யுளிலும் வழக்காற்றிலும் இருந்து வருகிறது. அவ்வாறு வேறுபொருள் உணர்த்தும் சொல் குறிப்புச் சொல் எனப்படுகிறது.

"ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி
ஆகுபெயர், அன்மொழி, வினைக் குறிப்பே
முதல், தொகை குறிப்போடு இன்ன பிறவும்
குறிப்பில் தருமொழி; அல்லன வெளிப்படை"[4]

ஆகிய இலக்கணச் சொற்களும் பிறவும் குறிப்பால் பொருள் தருவனவாகும். அவற்றுள் தொகைக் குறிப்பு என்பது ஒரு வகை. இங்கு தொகை என்பது எண்களைக் குறிக்கும். எண்களை அடுக்கிக் கூறி அவ் எண்களால் பெறும் பொருள், செயல் முதலியவற்றைத் தரும் சொற்களை இணைத்துப் பாடி அவ் எண்களின் பொருளைக்

1: குலோத்துங்கன்]|| மெய். 3. 2: சீவல்லபன்; 3. சடை: பராந்தக. 4. நன். 269.

குறிப்பால் உணரவைப்பது இவ்வகைத் தொகைக் குறிப்பு எனப் படும். இதனை எண் அலங் காரம் என்பது வழக்கு.

> "ஒன்றில் இரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
> வென்று களங்கொண்ட வேல்வேந்தே - சென்றுலாம்
> ஆழ்கடல்சூழ் வையகத்துள் ஐந்துவென்று ஆறடக்கி
> ஏழ்கடிந்து இன்புற் றிரு"[1]

இப்பாடலில் எண்கள் அடுக்கிக் கூறப்பட்டுள்ளன. ஆயினும் ஒன்று இரண்டு மூன்று என்று கூறாமல், ஒன்றில், இரண்டு ஆய்ந்து, மூன்று அடக்கி என அவற்றால் பெறும் தொழிற் சொற்களும் இணைத்துக் கூறப்பட்டுள்ளன. அத்தொடர்களுக்கு ஏற்ப அவ் எண்களுக்குரிய பொருளை உணர்த்துதலே இவ் அணியின் அழகாகும். இவ் எண் அலங்காரம் என்னும் அழகு மெய்க்கீர்த்திகள் பலவற்றுள்ளும் பல பொருள்களை உணருமாறு அமைந்து இலக்கிய நயம் பயக்கிறது.

> "ஒருகுடை நீழல் இருநிலங் குளிர
> மூவகைத் தமிழும் முறைமையின் விளங்க
> நால்வகை வேதமும் நவின்றுடன் வளர
> ஐவகை வேள்வியும் செய்வினை இயற்ற
> அறுவகைச் சமயமும் அழகுடன் திகழ
> எழுவகைப் பாடலும் இயலுடன் பரவ
> எண்டிசை யளவும் சக்கரம் செல்ல"[2]

இவ் அடிகளுள்,

ஒரு குடை என்றது பாண்டியனது ஒப்பற்ற வெண்கொற்றக் குடையை. இருநிலம் என்றது அவனது ஆட்சிக்குட்பட்டிருந்த பாண்டிய சோழ நாடுகளையாகும். இயல், இசை, நாடகம்; இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பனவே இங்கு சுட்டப் படும் மூவகைத் தமிழும், நால்வகை வேதங்களும் ஆகும்.

வேதம் ஓதுதலாகிய பிரம வேள்வி, யாகம் இயற்றுதலாகிய வேத வேள்வி, விருந்து ஓம்புதலாகிய மானிட வேள்வி, நீர்க்கடன் முதலியன செய்தலாகிய தென் புலத்தார் வேள்வி, பிராணிகளுக்குப் பலியுணவு கொடுத்தலாகிய பூத வேள்வி என்பனவே இங்கு ஐவகை வேள்வி என்று குறிப்பிடப்பட்டன. அறுவகைச் சமயம் என்றது சைவம், வைணவம், சாக்தம், சௌரம், கணாபத்தியம், கௌமாரம் என்னும் சமயங்களை. பிறவாகிய சமணம், பௌத்தம் என்பனவற்றைச் சேர்த்துக் கூறுதலும், அகச் சமயம், அகப் புறச்சமயம் என

---

1. புறப். வெ; மா. 225: 2. மாற. சுந்தரபாண்டியன் மெய். 2 வரி 7-13

வேறு கூறுதலும் உண்டு. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன எழுவகைப் பாடல்களாகும். நான்கு நேர்த் திசைகளும் அவற்றிடை அமைந்த நான்கு கோணத் திசைகளும் எண்திசை எனப்பட்டன.

"ஒன்றுபுரி நெஞ்சத்து இருவகைப் பிறப்பின்
முந்நூல் மார்பின் நான்மறை யாளர் . . . .
ஐம்புலன் கட்கும் அருமைசால் அறுவகைச்
செம்பொருட் சமயம் சீருடன் பரவ
எழுபொழில் கவித்த முழுமதிக் கவிதை . . . .
எண்பெருங் களிற்றினும் இசைமகள் ஏற
ஒன்பது கண்டத்து உயர்புல வேந்தரும்"[1]

"ஒருமை மனத்து இருபிறப்பின்
முத்தீயின் நால்வேதத்து
ஆறங்கம் உடன்சிறப்ப"[2]

"பூமருவிய புவியேழும்
புவிசூழ்ந்த பொருப்பேழும்
நிழல்மருவிய தனிவெண்குடை
நீடூழிகள் நிலாப்பரப்பக்
கொள்கைசான்ற அறுசமயமும்
வாடாதவைம் பூதங்களும்
மறைநான்கும் முத்தமிழும்
இருபிறப்பினோடு ஒருமுதலாய்"[3]

என்னும் அடிகளில் அமைந்த எண்களுள் சில, ஒவ்வொன்றும் வெவ் வேறு பொருளை உணர்த்தி நின்று மெய்க்கீர்த்தி இலக்கியத்தின் சுவையை மிகுவிக்கின்றன. சான்றாக, முந்நூல், முத்தீ, முத்தமிழ், ஐம்புலன், ஐவேள்வி, ஐம்பூதம், அறுசமயம், ஆறங்கம் போல்வன வற்றிலுள்ள எண்கள் வெவ்வேறு பொருளை உணர்த்தி நிற்பன வாக அமைந்து இலக்கியச் சுவையை மிகுவிக்கின்றன.

"ஒருபெருங் கடவுளும் வந்தினிது உறையும்
இருபெருங் காவிரி இடைநிலத்து இலங்கும்"[4]

என ஒன்றிரண்டு எண்கள் மட்டுமே அமைவனவாகவும்,

"திசைகள் எட்டினும் இசைமகள் வளர
இருமூன்று சமயமும் ஒருமூன்று தமிழும்
வேதம் நான்கும் நீதியில் வளர"[5]

---

1. சடை. குலசேகரன் வரி 10-21: 2: சடை, சுந்தரபாண்டியன் வரி 12 முதல்: 3. இரண்டாவது குலோத்துங்கன் வரி 1 முதல். 4: சடை, சுந்தரபாண்டியன் 69-70. 5, சடை: வீரபாண்டியன் 4-6.

என ஒரு சில எண்கள் முறை மாறி அமைவனவாகவும், அமைகின்ற எண் அலங்கார வகைகள் பலவிடத்தும் காணப்படுகின்றன.

"ஒருகை இருசெவி மும்மத நாற்கோட்டு
அயிரா வதமுதல் செயிர்தீர் கொற்றத்து"[1]

என்பது ஒரே பொருளைச் சிறப்பிக்கும் எண் அலங்காரத் தொடர்.

வீரபாண்டியனின் சாசனசுலோகம் ஒன்றினை முறைப்படி செய்தருளியவன் வாசுதேவ பீதாம்பரபட்டன் என்னும் அந்தணன். அவனது சிறப்பினையும் குலத்தினையும் வீரபாண்டியனின் மெய்க்கீர்த்தி எண் அலங்கார முறையில் அமைத்துக் காட்டுகிறது. அவனது சிறப்பு முதலின:

"ஒருதன்மை இருபிறப்பில் முச்செந்தீ நால்வேதத்து
அருமரபில் ஐவேள்வி ஆறங்கத்து அந்தணாளன்"[2]

இதே போல பராந்தக வீர நாராயணன் களக்குடியில் தங்கியிருந்த பொழுது நாராயணன்கேசவன் என்பான் சோமாசிக் குறிச்சி, திருமங்கலம் ஆகிய ஊர்களைப் பற்றிய விண்ணப்பம் ஒன்றினை மன்னனிடம் அளிக்கிறான். அவ் விண்ணப்பத்தில் திருமங்கலம் என்னும் ஊர் பன்னிருவர் அந்தணருக்கு பாண்டிய மன்னனின் முன்னோனாகிய கடுங்கோன் என்பவனால் அளிக்கப்பட்டிருந்தது என்று குறிப்பிட்டு, அது எதற்காக அளிக்கப்பட்டது என்ற செய்தியை எண் அலங்காரம் அமையக் குறிப்பிடுகிறான். அவ் விண்ணப்ப அடிகள் :

"ஒன்று மொழிந்து இரண்டோம்பி
ஒருமுத் தீ யுள்பட்டு
நன்று நான்மறை பேணி
அய்வேள்வி நலம்படுத்து
அறுதொழில்கள் மேம்பட்ட மறைஓத
பன்னிருவர்க்கு . . . செப்பேடு செய்து கொடுத்தருளினன்"[3]

"ஒன்றுபுரிக் கொள்கை இருபிறப் பாளர்
முத்தீச் செல்வத்து நான்மறை முற்றி
ஐம்பெரு வேள்வியும் செய்தொழில் ஓம்பும்
அறுதொழில் அந்தணர் பெறுமுறை வகுக்க"[4]

என்பன சிலப்பதிகார அடிகள். இவற்றில் காணும் சொற்களும் பொருள்களும் மெய்க்கீர்த்திகளுள் அமைந்து இலக்கிய வளம் ஊட்டுகின்றன.

1. மாற. சுந்தரபாண்டியன் வரி 13-14: 2: சிவகாசிச் செப்பேடு வரி 19-20; 3: தளவாய்புரச் செப்பேடு: விண்ணபச் செய்தி: 4. சிலப். கட்டுரை காதை வரி 66-69:

## 6. 2. 6. இலக்கண அமைதி

குறிப்பால் பொருள் தரும் இலக்கண அமைதியுடைய தொகைக் குறுப்புச் சொற்றொடர்கள் பல, எண்அலங்காரமாக அமைந்து மெய்க்கீர்த்திகளில் பொருட்சுவை தந்ததைப் போலவே பிற தொகை மொழித் தொடர்களும், அடை மொழித் தொடர்களும், புணர்மொழித் தொடர்களுமாகிய பலவகை இலக்கணத் தொடர்ச்சொற்கள் அழகுற அமைந்து செய்யுள் நடையைச் சிறப்பிக்கின்றன.

1. அடைமொழி — ஒரு மொழிக்குப் பொருட் சிறப்பைத் தருவன அடைமொழிகள். பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகிய அறுவகைச் சொற்கள் அடைமொழியாகப் பயன்படுவன. அவ் அடைமொழிகள் ஒரு சொல்லுக்குரிய, அதன் இனமாகிய பல பொருள்களினின்றும் பிரித்துக் காட்டுதற்காகப் பயன்படுத்தப்படும். அவ்வாறு பயன்படுங்கால் இனப்பொருள் வேறு இல்லாத சொற்களும் அவ் அடைமொழிகளைப் பெற்று வருவது உண்டு. அவ்வாறு இனம் பிரித்துக் காட்டுவனவும், இனம் இல்லாதனவுமாகிய இருவகை அடைமொழிகளும் மெய்க்கீர்த்தித் தொடர்களுள் அமைந்து பொருட்சிறப்பைத் தருகின்றன. சிறப்பான பலவகை அடைமொழிகள் நாடு, போர்க்களம், படை, மன்னர், தேவியர், அரசச் சின்னங்கள் போன்ற வற்றையே பெரும்பாலும் விளக்கி நிற்கின்றன. அடைமொழி, சினைமொழி, முதல் மொழி என்பன முறையே மயங்காது வந்துள்ளன. செய்யுள் நடைக்கு ஏற்ப மயங்கி அமைந்தனவும் சில உள. இவ் அடைமொழித் தொடர்களுக்குச் சில சான்றுகளைக் கீழே காணலாம்.

புதுப் புனல் நாடு
நித்தில நெடுங் கடல்
வெறி மலர்த் தீர்த்தம்
எறி புனல் கங்கை
செங் கதிர் மாலை
பொரு கடல் ஈழம்
தெண் திரை ஈழம்

பெரு வரை யரண்
வெஞ் சமர் வளாகம்
துறை நீர்ப் பண்ணை
ஆழ் கடல் அகழி
நிறை புனல் மாபப்பாளம்
அறை கடல் வளாகம்
செங் கதிர்க் கடவுள்
செஞ் சடைக் கடவுள்

இவை அடை, சினை, முதல் என மயங்காது வந்து பெரும்பாலும் இனம் சுட்டி விளக்கிய அடைமொழித் தொடர்களுள் சிலவாகும்.

"வேத நாவின் வெள்ளிதழ்த் தாமரைக் காதல்மாது"[1]

"சிலைத் தடக்கை கொல்களிற்றுச் செழியன்"[2]

---

1: மாற; சுந்தரபாண்டியன் வரி 3: 2. வேள்விக்குடி வரி 30:

"சிவந்த இணைமலர்ச் சீறடி"[1]

"கருங்கடல் உடுத்த பெருங்கண் ஞலாம்"[2]

"குரை கடல் பெருந்தானை"[3]

"தொடுகடல் காவல் கடுமுரண்கடாரம்"[4]

"சோதி மரகதத் துளைத்தாள் சுடர்ப் பொற்றாமரை"[5]

"அளகநுதற் கயல்நயனத்து அம்பொற்குழைக் கொம்பு"[6]

அடை, சினை முதல் என்பவற்றின் மிக்கும், முறைமாறியும் வந்துள்ள அடைமொழிகளோடு கூடிய இத்தொடர்கள் செய்யுளின்கண் மயங்கி வந்ததற்கு எடுத்துக் காட்டுகளாய் அமைவன.

2. தொகைமொழி — இரண்டும் பலவுமாகிய சொற்கள் தொடர்ந்து நின்று ஒருமொழி போல் நடப்பன தொகை நிலைத் தொடர்ச் சொற்கள் எனப்படுகின்றன. இங்கு உருபு மறைந்து நிற் பதையே தொகை என்றனர். இரண்டு முதலிய சொற்கள் இணைந்து நின்று சொற்சுருக்கமும் அழகும் இனிய ஓசையும் தருவதாலும், பொருளாழமுடையதாய் அமைவதாலும் இத்தொகை மொழி செய்யு ளுள் மிகுதியாக எடுத்தாளப்படுகிறது. இவ்வாறு தொகை மொழி களை எடுத்தாளும் நிலை மெய்க்கீர்த்தி இலக்கியத்திற்கு ஏற்புடைய தாகிறது.

1. நெய்யமுது, மகரக்குலம், கரிக்குலம், பொற்குழை, பொற்றாமரை, துளைத்தாள், தொடித்தோள், அரவரசன், நரப்பிசை, பொற்பூ.

2. விரிசடை, தெரிகணை, அளிசெறி வேம்பு, விளைநிலம், கொல்களிறு, பொருபடை, குரைகடல், எறிபுனல், ஆழ்கடல், நிறை புனல், தொடுகடல், ஓங்குதிரை.

3. சீறடி, செந்தழல், கருங்கடல், வெள்ளிதழ், செங்கதிர், கொடுஞ்சிலை, கார்க்கடல், வெண்திரை, நெடுங்கண், கமலயோனி, நூற்கடல், இருநான்கு.

4. கடற்றானை, பால்மதி, கடற்படை, கயல்நயனம்.

5. உழக்கரை, குறுணிநாழி.

6. பொற்குழைக்கொம்பு, குசைமா, கொலைக்குன்றம், கைமலை, வெண்டிரை (உடுத்த), (முறையே உலகமுடையாள், குதிரை, யானை (2) கடல் ஆகியவற்றைக் குறித்து வந்தவை)

---

1: மாற. சுந்தரபாண்டியன் வரி 32, 2. வேள்விக்குடி வரி 88; 3. சின்னம வரி 62; 4. இராசேந்திரன் I. 5: தளவாய். வரி 11. 6. இராசாதிராசன் II மெய். 3 வரி 48-49.

போன்ற ஆறு வகையில் அமைந்த தொகை மொழிகள் முறையே வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மை, அன்மொழி ஆகிய தொகைகளாக நின்று பொருள் தருபவை. இவற்றுள் தனித்தொகைகளும், உருபும் பொருளும் உடன்தொக்கத் தொகைகளுமாக நிறைந்துள்ளன.

3. அளபெடை—செய்யுளுள் ஓசை குறைகின்றவிடத்து நிற்கும் நெட்டெழுத்துகளை மேலும் நீட்டி ஒலித்து அவ் ஓசையை நிரப்புவது செய்யுள் இலக்கணமாகும். நீட்டி ஒலிக்கும் அவ் ஓசையை வரிவடிவில் காட்டுங்கால் அந்தந்த நெடிலுக்குரிய இனக் குற்றெழுத்துகளை இட்டு நிரப்பிக்காட்டுவர். மெய்க்கீர்த்திகள் சிறந்த இலக்கிய நடையுடையவையாதலின் அவ்வாறு ஓசை குறைகின்ற விடத்து அளபெடைகளைப் பெற்று ஓசை நிரம்பி நிற்கின்றன.

"இருங்கய லாணை ஒருங்குடன் நடாஅய்"[1]

"நிலையமை நெடுவரை இடவயிற் கிடாஅய்"[2]

"அறைகடல் வளாகம் ஒருமொழிக் கொளீஇய"[3]

"அங்கதனில் அருந்தமிழ்நற் சங்கம்இரீஇத் தமிழ்வளர்த்து"[4]

என்பன போன்ற தொடர்களைச் சான்றாகக் கூறலாம்.

4. பிற இலக்கணத் தொடர்கள்—'மைந்தரென்றிவரை மணிமுடி சூட்டி'[5] என்பதனுள் 'ஐ' உருபு நான்காம் வேற்றுமைப் பொருளில் மயங்கி வந்துள்ளது. 'பொன்னி நாடு கிழவோனே'[6]—நாடு+கிழவன்=நாட்டுக் கிழவன் என்று வருதல் இலக்கணம். ட, ற ஒற்று, வேற்றுமையில் பெரும்பாலும் மிகும் என்றதனால் சிறுபான்மை மிகா என்பது பெறப்பட்டது.[7] சிறுபான்மை மிகா என்ற இலக்கணத்தால் நாடுகிழவோன் என மிகாது நின்றது.

நரப்பிசை என வலித்தல் விகாரமாய் நின்றது. மீமிசைப் பாயல் கொள்ளும் என ஒருபொருட் பன்மொழி வந்தது.

'செருவென்றவர் சினந்தவிர்த்தும்'[8]—இசைத்திரிபால் பொருள் மாறுபடும் நிலையில் பொருள் தரும் சொற்றொடராகிய செருவென்றவர் என்பதனை, செரு+வென்றவர் என்றும், செரு+வென்று+அவர் சினம் தவிர்த்தும் என்றும் பொருள் கொள்ளலாம்.

முகில்+துஞ்சல்+இல்-என்னும் சொற்கள் முகிறுஞ்சலில் என்று இணைந்து காணப்படுகின்றன. இவ்வாறான புணர்நிலைச் சொற்கள்

---

1: சீவரமங். வரி 3. 2. வேள்விக். வரி 54. 3: வேள்விக். வரி 96. 4. தளவாய் வரி 47: 5. இராசாதிராசன் I மெய். 3. 6: இராசராசன் I மெய். 2 வரி 249. 7: நன். 183 உரை. 8: வேள்விக். வரி 49.

பல மெய்க்கீர்த்திகளில் காணப் படுகின்றன. பலவகையான உரிச் சொற்றொடர்களும் உருபுமயக்கத் தொடர்களும் ஆழ்ந்து பொருளுணரத்தக்கனவாய் அமைகின்றன.

### 6. 2. 7. புராணக் கருத்து

மெய்க்கீர்த்திகள் இலக்கியமாகவே இயற்றுவிக்கப் பட்டன ஆதலின் அவற்றுள் முன்னோர் மொழிந்த பொருள்களும் செய்தி களும் இடம் பெற்றுள்ளன. அவை மெய்க்கீர்த்தியில் கூறப்படும் செய்திகளுக்குத் துணைபுரிவனவாகவும், விளக்கம் தருவனவாகவும், எடுத்துக் காட்டுகளாகவும் அமைந்துள்ளன. அவ்வாறு அமைந்த முன்னோர் கூற்றுகளுள் பெரும்பான்மையாக விளங்குபவை புராணக் கருத்துகளேயாகும். பாண்டியர் குலத்தையும், முன்னோர் தம் அருஞ்செயல்களையும் தொகுத்துக் கூறுமாற்றால் அமைந்த புராணக் கருத்துகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. உவமை யாக எடுத்துக் காட்டப் பட்டவையும் சில உள்ளன.

1. பாண்டியர் மரபு—திருப்பாற்கடலில் துயில் கொண்ட கார் வண்ணனாகிய திருமாலின் நாபி மண்டலத்துப் பொற்றாமரை மலரிடை உதித்தவன் பிரமன். அக்கமலயோனியின் உள்ளத்தில் தோன்றியவன் அத்திரிமுனி. அவன் கண்ணில் சந்திரன் வெளிப்பட் டான். சந்திரனின் மகனாகத் தோன்றியவன் புதன். இறைவனது சாபத்தால் இளை என்னும் மங்கையாக மாறிய (இளன்) பெண்ணி டம் புதனுக்குப் பிறந்தவன் புரூரவன். அப்புரூரவனைத் தொடர்ந் ததே பாண்டியர்க் குலம் என்னும் கருத்துகள் பாண்டியர் மெய்க் கீர்த்திகள் பலவற்றிலும் மிகப் பரந்தும், சுருக்கமாகவும் காணப்படு கின்றன.

சான்று—தளவாய்புரச்செப்பேட்டின் முதல் இருபத்திரண்டு வரிகள் இச்செய்திகளை விரிவாகக் கூறுகின்றன. மேலும் பாண்டியர் சந்திர குலத்தில் வந்தவர்கள் என்பதையும் சில மெய்க்கீர்த்திகள் உறுதிப் படுத்துகின்றன.

2. அகத்தியர்—அப் பாண்டியர் அகத்தியனைக் குருவாகக் கொண்டனர் என்பதைக் கூறுமுகத்தான் அகத்தியனது வரலாறு முழுமையாகக் கூறப்படுகிறது.

> "விஞ்சத்தின் விஜ்ரும்பணையும், நகுஷன் மதவிலாசமும்
> வஞ்சத்தொழில் வாதாவி சீராவியும்,
> மகோததிகளின் சுருங்காத பெருந்தன்மையும்,
> சுகேது சுதை சுந்தரத்தையும்
> ஒருங்குமுன்னாள் மடிவித்தச் சிறுமேனி உயர்தவத்தோன்
> மலயத்து மாமுனி புரோகிதனாக"[1]

---

1. தளவாய். வரி 27-31.

என்பது அகத்தியனது வரலாறு கூறும் பகுதி. அவர் பாண்டியர்க் குலகுருவாக விளங்கினார் என்பதைப் புரோகிதனாக, புரோசிதனாக என்னும் இருவகைச் சொற்கள் புலப்படுத்துகின்றன. இரண்டும் புரோகிதன் என்றே இருத்தல் கூடும். இதன,

"பொருவருஞ்சீர் அகத்தியனைப் புரோகிதனாகப் பெற்றது"[1]

"தென்வரைமிசைக் கும்போத்பவனது தீந்தமிழிற் செவி
கழுவியும்"[2]

"திடவாசகக் குறுமுனியால் செந்தமிழ்நூல் தெரிந்தருளி"[3]

என்னும் அடிகளும் உணர்த்துகின்றன. கும்பத்தில் தோன்றிய அவரது பிறப்பும் சுட்டப்படுகிறது.

## 3. பிற புராணச் செய்திகள்

"கடல் கடைந்து அமிர்து கொண்டும்"[4]

"அரி அயனது ஆரம்பூண்டும் அர்த்தாசனம்
அவனோடேறியும்"[5]

"பலமுறையும் தூது உய்த்தும் பாகசாசனன் ஆரம்வவ்வியும்"[6]

"அரிஅயனது ஆரம்பூண்டும் அவன்முடியொடு வளை
உடைத்தும்"[7]

"தென்மதுரா புரித்தோன்றி தேவேந்திரனோ டினிதிருந்த"[8]

'வடவரையிற் கயல் பொறித்து வானவர்க்கோன் ஆரம்பூண்டு'[9]

என்பன போன்ற பல தொடர்கள் பாண்டியர் கடல் கடைந்து அமிர்தம் கொண்ட செய்தியையும் உணர்த்துகின்றன. இவற்றைப் போலவே,

தேவாசுரர் செருவென்ற செய்தி
கடலை வேலில் மீட்ட செய்தி
த்சவதனன் சார்பாகச் சந்து செய்த செய்தி
பாரதத்துப் பகடோட்டியது, அருச்சுனனது வசு சாபம்
அகற்றியது, நாற்கடல் ஒரு பகல் ஆடியது, தென் மதுரையை
ஆக்கியது, கடலை மீட்டது, இந்திரன் முடிவளை உடைத்தது

போன்ற பல புராணச் செய்திகளை மேற்குறித்த மெய்க்கீர்த்திகளுள் பரக்கக் காணமுடிகிறது.

---

1. சின்னம. பெரிய: வரி 7. 2. சின்னம சிறிய. வ்ரி 4. 3. சடை. வீரபாண்டியன் வரி 8. 4. தளவாய். வரி 32, சின்னம. பெரிய வரி 10. 5. சின்னம: சிறிய: வரி 5. 6. சின்னம பெரிய. வரி 14. 7: தளவ்ாய்; வரி 33. 8. சடை. பராந்தக, வரி 3. 9: சடை. வீரபாண்டியன் வ்ரி 7.

மாறவர்மன் சுந்தர பாண்டியன் திருப் பொன்னம்பலத்து இறைவனைக் கண்டு வணங்குகிறான். அவ்விறைவனது சிறப்பினைக்

"சோலமலர் மேலயனும் குளிர்த்துழாய் மாலும்
அறியா மலர்ச்சே வடிவணங்கி"[1]

என்னும் அடிகளால் விளக்கி, மும்மூர்த்திகளின் புராண வரலாற்றினை உணர்த்துகிறது அவனது மெய்க்கீர்த்தி.

மூன்றாம் குலோத்துங்கன் இலங்கையின் மீது படையெடுத்து அந்நாட்டு மன்னனைக் கொன்ற செய்தியை இராம காதையோடு ஒப்பிடும் செய்தியும் அவனது மெய்க்கீர்த்தியில் காணப்படுகிறது.

"தென்ஈழம் கொள்க வென்னத் திரைகடலை அடைக்கவென்ன
மன்னுதிரு வாற்படையால் மலைகொண்டு வழிப்படுத்தி
இலங்கையர்க்கோன் தலையரிந்த திருநெடுமால் இவன்என்னத்
தென்னவனைத் தலையரிந்து தேசமெல்லாம் இருளகற்றி"[2]

என்பன அம் மெய்க்கீர்த்தித் தொடர்கள்.

## 6 2. 8. மொழிநடை

பிற்காலச் சோழர் காலத்தில் தூய தமிழ் நடையில் எழுதும் அளவிற்கு வளர்ச்சியடைந்த மெய்க்கீர்த்தி, அவர்களுக்குமுன் ஆண்ட பாண்டியர் காலத்தில் வடமொழிச் சொற்கள் கலந்தே எழுதப்பட்டு வந்துள்ளது. சோழர் காலத்திலும் அடைமொழிகள் கூட இல்லாமல் உண்மையான செய்திகள் மட்டுமே அழகுறத் தொகுத்துக் கூறப்பட்டு வந்த நிலையிலிருந்து மாறிச் சிறிது சிறிதாக அடைமொழிகளும், பின் வருணனைகளுமாகப் பெருகி வடிவமே மாறும் நிலையை அடைந்துள்ளன. மேலும்,

சோழ மன்னர், நாயக மன்னர் காலத்தில் உரையாசிரியர் பலர் இருந்தனர். அவர் தம் தமிழ் நடை கற்றோர் அறியும் நடையாகவே இருந்தது. ஆனால் அக்காலத்தில் ஏற்பட்ட மெய்க்கீர்த்திகள் பேச்சு வழக்கு நடையிலேயே அமைந்துள்ளன. பேச்சுத் தமிழுக்கும் இலக்கியத் தமிழுக்கும் ஒற்றுமை காண்பது போல மெய்க்கீர்த்தித் தமிழுக்கும் இலக்கியத் தமிழுக்கும் ஒற்றுமை காணமுடிகிறது.

1. எழுத்து—கெ, செ, தெ; கே, சே, தே போன்ற குறில், நெடில் உயிர்மெய் எழுத்துகளிடையே மெய்க்கீர்த்திகளில் வேறுபாடுகள்

---

1. மாற. சுந்தரபாண்டியன் மெய். 2 வரி 49-50. 2. குலோத்துங்கன் III மெய். 2 வரி 11-14.

காணமுடியவில்லை. பதிப்பித்தவர்களும் அவ்வாறே பதிப்பித் துள்ளனர். அக்கால எழுத்து முறைகளில் எகர ஒகரங்கள் புள்ளி பெற்று நின்றன. புள்ளியில்லாதவை நெடிலாகவே வழங்கி வந்தன. ஆனால் ஓலைகளில் மெய் எழுத்துகள் உட்பட எந்த எழுத் திற்குமே புள்ளி வைக்கும் வழக்காறு இல்லை. அதே வழக்கின்படி மெய்க்கீர்த்திகளிலும் புள்ளி இல்லா நிலை ஏற்பட்டது. அதனால் குறில் நெடில் வேறுபாடு அறிய இயலாத நிலை இக் காலத்தில் ஏற்பட்டுவிட்டது.

பெற்ற தாயினும் பெணி; ஆங்கவர் வெங்கை நனாட்டிடை;
நாகலை யென்னுந் தொகையஞ் சாயலை.
தாரையும் பெரியும்...மகர தொரணமும்
பொன்னெமி யளவும் தன்னெமி நடக்க
இளங்கொப் பருவத்துச் சக்கரக் கொட்டத்து
தொள்வலி காட்டிப் பொர்ப்பரி நடாத்தி

என்பன வற்றைச் சான்றாகக் காட்டலாம்.

உயிர் ஈற்றுச் சொற்களின் முன் உயிர்முதலாகிய உருபுகள் வருங்கால் உடம்படு மெய்இன்றி எழுதப்படுதல் பெருமரபாக இருந்து வந்துள்ளது. சான்று—

வேலாழிஉம்; சிலைஉம் புலிஉம்;
வார்சிலைஇன்; பல்படை ஓடு
சடைமுடிஓடு; முடிஓடுவளை உடைத்து
வசைஇல்மா; நெற்றிஇல் வரைந்து

சிலவிடத்து கணிய், மீய்மிசை, வைய்காசி, கைய்மலை என்பன போன்று இகர, ஈகார, ஐகாரங்களையடுத்து யகர ஒற்று மிகுதியாக அமைந்துள்ளதையும் காணமுடிகிறது.

2. சொல்—பேச்சு வழக்கிலிருந்த சொற்கள் அவ்வாறே மெய்க் கீர்த்திகளில் இடம் பெற்றுள்ளன.

ரெட்டபாடி, சோளமண்டலம், நவநெதிக்குப்பை,
மயிபாலன், இருமடிச்சோழன், அமர் துடங்கிய,
எனையன (இ), போர்ப் பண்ணி, சிந்தயனாகி,
எரிமூட்டி, அஞ்சாவது, மூன்றாம் விசையினும்,
செம்பொன்மேய்ந்து, சகாத்தம், தியதி, தெசமி,
இசப நாயிறு, சிரிவல்லவன், குடுத்த, குலகுலைந்து,
சிந்நாபின்னஞ் செய்து

என்பன போன்ற பெருவாரியான சொற்கள் பேச்சுவழக்கின் பாற் பட்டவையாகும்.

3. வடமொழிச்சொல் — காலச் சூழ்நிலைக்கேற்ப மொழி அமைப்பும் சொல் ஆட்சியும் மாறுபடுவதை இக்காலத்தும் அறிய முடிகிறது. பல்லவர் ஆட்சியை அடுத்து நடைபெற்ற தமிழ் மன்னர் ஆட்சியில் பெரும்பான்மையான வடமொழிச் சொற்கள் வழக்காற்றில் இருந்துள்ளன. அவற்றின் ஒலி மாறாமலிருக்க இடையிடையே வடமொழிக்குரிய கிரந்த எழுத்துகளால் அச்சொற்கள் பொறிக்கப் பட்டுள்ளன.

சிங்காதனம், சிம்மாசனம், சிம்ஹாஸனம்
ஆஹவமல்லன், விக்கிரமபாஹு, ராஜபரிச் சந்தம்,
விஜயாபிஷேகம், இலங்கேஸன், வாசகம், பரிபவம்
தீர்வது, அக்ஷமாலை, சகஸ்ரபணமணிக் கிரணம்,
புஜங்கம புரஸ்ஸரபோகி, பாதஸ்பரிசனை,
ஆதிபுருஷன், சதுர்ப்புஜன், சதுர்த்வயாக்ஷன்,
இந்துக்கிரணன், புரோகிதன், தசவதனன்

போன்ற நூற்றுக்கணக்கான வடசொற்கள் எடுத்தாளப்பட்டுள்ளன. தூய தமிழ் நடையில் எழுதப்பட்ட சில சோழர் மெய்க்கீர்த்திகளிலும் ஸ்வஸ்திஸ்ரீ, சுபமஸ்து போன்ற, தொடாக்கச் சொற்களும், ஜெயமடந்தை, ஜெயஸ்தம்பம், விஜயாபிஷேகம் பண்ணி, சிம்மாசனம் போன்ற பிற சொற்களும் தவிர்க்கமுடியாதன வாகிவிடுகின்றன.

4. பிற தொடர்கள்—தீவாய் அஇலேந்தி (அயிலேந்தி) ஆஇரவேலி (ஆயிரவேலி), கோஇலாக்கிஉம் (கோயிலாக்கியும்) என்பன போன்ற பல தொடர்களில் ஒலிமுறைக்குஏற்ப யகர இகரங்கள் மயங்கிஅமைந்துள்ளன.

தெந்நவர், இந்திரநாரம், தந்மாதேவியர், மற்றவநொருமகளாகிய, தந்நடி இரண்டும், தொந்நிலவேந்தர் போன்ற தொடர்களில் றன்னகரம் நிற்கவேண்டிய விடத்துத் தந்நகரமே நிற்றலைக் காண முடிகிறது. இந்நிலையினைச் சில மெய்க்கீர்த்திகளில் முழுமையாகவே காண முடிகிறது.

இராசாதிராச தேவர்க்கு யாண்டு என்னும் தொடரில் தேவற்க்கு, தேவற்கு என்பன போன்ற சொற்களே பெரும்பான்மையான மெய்க்கீர்த்திகளில் காணப்படுகின்றன. னகரத் திரிபாகக் கொண்டால், பிறவிடங்களில் காணப்படும் சிறப்புச் சொற்களினும் மாறுபட்டு நிற்பதாகிவிடும்.

மேலே குறிப்பிடப்பட்ட தவறான சொல்லமைப்புகள் கல்லில் வெட்டியோரால், அவருடைய கல்விக் குறைபாட்டால் ஏற்பட்ட பிழைகளே எனக் கொள்ளுவது பொருந்தும்.

ஆட்டாண்டுதோறும், காதலர் காதலர், தவ்வை, இருபத்து ஒருகால், களைகட்ட, ஐந்தாவதின் எதிராமாண்டு, வெந்நுற ஓடி, செருவிற் சினவி, கலைவஞ்சி, புதுப்புனல், போன்ற சிறப்பான இலக்கியச் சொற்களும், அழகிய சொற்றொடர்களும் அமைந்து சிறப்புற விளங்கும் இம்மெய்க்கீர்த்திகளுள் வழக்குச் சொற்கள் எளிமை கருதி சேர்க்கப்பட்டவை தவிர, தவறான பிற யாவும் எழுதுவோராலும் கல்லில் வெட்டுவோராலும் ஏற்பட்ட பிழைகளே யாகும்.

### 5. காந்தளூர்ச்சாலை கலமறுத்தல்

"காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி"[1]

"வேலைகெழு காந்தளூர்ச் சாலைகலமறுத் ததற்பின்"[2]

"கன்னிப்போர் செய்தருளிக் காந்தளூர்ச் சாலை கலமறுத்து"[3]

என்னும் மெய்க்கீர்த்தி அடிகளில் காந்தளூர்ச்சாலை கலமறுத்தல் என்னும் தொடர் காணப்படுகிறது. இவற்றுள் இராசராசன் மெய்க் கீர்த்தியில் அவனது நான்காம் ஆட்சியாண்டு முதலே காணப் படுகிறது. எனவே காந்தளூரில் கலமறுத்துப் பெற்ற வெற்றியே அவனது முதல் வெற்றியாகும். அல்லது அவனது வெற்றிகளுள் சிறப்புடைய வெற்றியாகும் என்னும் கருத்துகள் வரலாற்று அறிஞர் களிடையே நிலவி வருகின்றன. இத்தொடருக்கு,

1. காந்தளூரிலே மணிமண்டபம் ஒன்றை எழுப்பினான்.
2. காந்தளூரிலே ஒரு கலத்தைத் துண்டாக்கினான்.
3. காந்தளூர்த் துறைமுகத்துச் சாலையில் மரக்கலங்களை அழித்தான்.
4. காந்தளூர் அறச் சாலையில் சோறு அட்டுவதை அரசன் நிறுத்தினான்.
5. காந்தளூர்ச் சோற்றுச் சாலையில் உணவு அளிக்க வேண்டிய முறையை நிர்ணயித்துத் திட்டம் செய்தான்.

என்னும் பொருளுடைய கூற்றுகள் வரலாற்று ஆசிரியர்களால் மேற் கொள்ளப்பட்டவை.[4]

"சேலைத் துறந்து சிலையைத் தடிந்திருகால்
சாலைக் கலமறுத்த தண்டினான்"[5]

"வேலை கொண்ட விழிஞம் அழித்ததும்
சாலை கொண்டதும் தண்டுகொண் டல்லவோ"[6]

---

1. இராசராசன் I. வரி. 3. 2. இராசாதி I. மெய். 1. வரி 12; மெய். 2. வரி. 33. மெய்: 3. வரி. 9. 3: சடை. பராந்தக. வரி, 8. 4. தென்னிந்தியக் கோயிற் சாசனங் கள். 3-2. பக். 2. 5. விக்கிரம. உலா. 24. 6. கலிங். பரணி: 370.

என்னும் இலக்கியக் கூற்றுகளுக்குப் படைக் கலமறுத்த செய்தியே பொருளாகக் கொள்ளப் படுகிறது.

இத் தொடருள் காந்தளூர், சாலை, கலம், அறுத்தல் ஆகிய நான்கு சொற்கள் அமைகின்றன. அவற்றுள் காந்தளூர் என்பது ஒரு இடத்தைக் குறிக்கும் பெயர். திருவனந்த புரத்தின் ஒரு பகுதி. இதில் கருத்து வேறுபாடு இல்லை. சாலை என்பது உணவுச் சாலையையும், கலம் என்பது உண்கலத்தையும் குறிப்பனவாகும். படைக்கலச் சாலை, படைக்கலம் என்று கொண்டால் படைக் கலங்கள் நிறைந்த சாலையை அழித்ததாகப் பொருள் படுமே ஒழிய, போர்த் தொழில் செய்து வெற்றி பெற்றதாகப் பொருள் படாது.

"பார்த்திவ சேகரபுரம் என்று பேர்இட்டுக் காந்தளூர்
மர்யாதியாதியால் தொண்ணூற்றுஐவர் சட்டர்க்குச்
சாலையுஞ் செய்தான் ஸ்ரீ கோக்கருநந்தடக்கன். . . . ,
இச்சாலைக்குப் பெய்த கலத்தில் பவிழிய சரணத்தாருடைய
கலம் நாற்பத்தைந்து; தயித்திரியச் சரணத்தாருடைய
கலம் முப்பத்தாறு; தலவகாரச் சரணத்தாருடைய கலம்
பதினாலு; இனி வருங்கலம் மூன்று சரணத்தாருக்கும் ஒப்பது"[1]

என்னும் கோக்கருநந்தடக்கனின் கல்வெட்டுத் தொடராலும் சில விளக்கங்களைக் காணமுடிகிறது. காந்தளூர்ச் சாலையை முன் மாதிரியாகக் கொண்டு பார்த்திவசேகரபுரத்தில் ஒரு சாலைஅமைக் கப்பட்டது என்பதனாலும் அங்கு உண்கலம் வரையறை செய்யப் பட்ட முறைமையினாலும், உணவுச்சாலை, உண்கலம் என்று பொருள் கொள்வதற்கு இவை துணைபுரிகின்றன. இச்சாலை உணவுச் சாலையாகவும் பாடசாலையாகவும் இணைந்து இருந்துள் ளது என்பதும் புலனாகிறது.

இப்பாட சாலையில் சேருவதற்குரிய சட்டதிட்டங்களும் அங்கு கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகளும் இக்கல்வெட்டுச் செய்தியால் பெறப்படுகின்றன.

"பிரவேசகஞ் செய்யும் பரிசு வையாகரண மீமாயப்
புரோகிதப் புன்பாய்ப் புவிஸ்ரீம் இலன்; த்ரைராஜ்
யவியவகாரத்துக்கு வேண்டும் ஒத்து உடையன்;
இது சத்தியம் என்று. . . ,பஞ்சக்கம் செய்தான் புகவு
பெறுவான். . . .

1. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) பக், 23-27.

. . . . . படைக்கலத்தால் புண்செய்தான் அறத்துக்குப் புறத்தனாவது; சட்டர் படைக்கலம் பிடித்துக் கூட்டத் துக்குச் செல்லப் பெறார்''[1]

இவ்வாறான சாலை விதிமுறைகளாவன:

1. வியாகரணம் முதலிய சாத்திரங்களைக் குறைவறக் கற்றிருக் கிறேன்.

2. மூன்று இராச்சியங்களின் (சேர, சோழ, பாண்டியர்) விவ காரங்களை நிர்வாகம் செய்வதற்குரிய பயிற்சியும் அறிவும் நூல்களின் வாயிலாகப் (ஓத்து) பெற்றிருக்கிறேன். இதுசத்தியம் என்று பாட சாலையில் சேருங்காலை உறுதியளிக்க வேண்டும்.

3. சட்டர் படைக்கலம் பிடித்துப் பயிற்சி பெற்று வந்துள்ளனர் என்பதும் அவற்றைத் தவறானமுறையில் பயன்படுத்தக்கூடாது என்பதும் புலனாகின்றன.

இவற்றால் காந்தளூர்ச் சாலை என்பதையும் இவ்வாறே கொள்ளமுடிகிறது. அதாவது இச்சாலையில் கல்வி பயின்றவர்கள், இங்கு சேருமுன்பு இலக்கண இலக்கியங்களில் முழுமையான தேர்ச்சி பெற்றவர்களாக விளங்கினர். அடுத்து அரசியல் காரியங் களை நடத்துவதற்கான முழுப்பயிற்சியையும் பெற்றிருந்தனர் என்பன தெளிவாகின்றன. மேலும் இச் சாலைகளில் அவரவர் முன்பு பெற்றிருந்த தனிப் பயிற்சிகளுக்கு ஏற்ப (வியாகரணம், மீமாம்சம் போன்றவையும், ரிக், யசுர், சாமம் ஆகிய மறைகளும்) மேற் கல்வியும், அவ் அவற்றிற்குரிய நாடுகாக்கும் பயிற்சிகளும் பெற்றுவந்தனர் என்பதும் தெளிவாகிறது.

எனவே சோழ மன்னரும் பாண்டிய மன்னரும் தம் அரசுரிமைப் பொறுப்பை ஏற்றவுடன் இச் சாலையினை முறைப்படுத்தி, ஆங் குள்ள குறைபாடுகளை அறுத்து, அங்கு பயிற்சி பெறுவோர் அரசி யல் பயற்சிகள் பலவற்றிலும் நன்கு பயிற்சிபெற அருள் புரிந்தனர் என்று கொள்ளுவது பொருத்தமாகிறது. எனவேதான் அறுத்து அருளினான் என்ற சொல் சேர்க்கப்பட்டுள்ளது. படையை அழித்து அருள்புரிதல் என்பது பொருத்தமுடையதாகாது.

கலம் என்தற்குப் பன்னிரண்டு மரக்கால் கொண்ட அளவு என்று கொண்டு சாலைக்குரிய நெல் முதலிய தானியங்களை வரையறை செய்தான் என்பதாக விளக்கம் கூறுவர் திரு. நடன காசிநாதன் அவர்கள்.

---

1. ஷை கல்வெட்டு. பக். 27-28.

## 6. 2. 9. முடிவுரை

1. மெய்க்கீர்த்தி கல்வெட்டின் ஒரு பகுதியாகவே அமைந்துள்ளது. நடுகல் செய்தியாகத் தோன்றி, வளர்ந்து, மன்னர்தம் புகழ்க் கூறும் மரபைப் பெற்றது. மன்னனது ஆட்சியாண்டு வளர மெய்க்கீர்த்தியும் வளர்ந்துள்ளதை நோக்க அரசாங்கத்தில் நாட் குறிப்புகள் முறையாக எழுதப்பட்டு வந்தன என்பது புலனாகிறது.

2. தொல்காப்பியம் முதல் பாட்டியல்கள் வரை இலக்கணம் வகுத்துள்ளன. எனவே தொல்காப்பியத்திற்கு முன்பே தோன்றிய மெய்க்கீர்த்தி வளர்ந்த நிலையில் பாட்டியல் இலக்கணத்தைப் பெற்றுள்ளது.

3. புகழை விரும்பிய மன்னரும் பிறரும் தம் புகழை நிலை நிறுத்தவும் விரும்பினர். அவ்வாறு நிலைபெறச் செய்த வழிகளில் ஒன்றே கற்களில் பொறித்து வைக்கும் செயலாக வடிவெடுத்தது.

4. பல்லவர்க்கால மெய்க்கீர்த்திகள் வடமொழியிலேயே கிடைக்கின்றன. தமிழில் கிடைக்கும் பாண்டியர் மெய்க்கீர்த்திகள் வடமொழிச் சொற்கள் நிறைந்து, புராண மரபினை ஒட்டிய முன்னோர்ச் சிறப்புகளோடு நீண்ட அளவில் காணப்படுகின்றன. அம்முன்னோர்ச் சிறப்புகள் பிற்காலத்தே மிகச் சுருங்கிய நிலையை அடைந்துள்ளன.

5. பிற்காலச் சோழர் காலத்தில், சிறப்பாக முதலாம் இராச ராசன் காலத்தில் மெய்க்கீர்த்தி என்ற பெயருக்கேற்ப உண்மை வடிவம் பெற்றுள்ளது. இந்நிலையே பாட்டியல் இலக்கணம் தோன்ற அடிப்படையாக அமைந்துள்ளது.

6. போர்ச் செயல்கள் குறைந்து. புலவர்தம் கற்பனைத்திறமும் ஆற்றலும் இணைந்து இலக்கிய நடையைப் பெற்றுள்ளது. இந்த நிலை பாண்டியர் மெய்க்கீர்த்திக்கும் தாவியுள்ளது.

7. வட்டெழுத்து நிலையிலிருந்து தூய தமிழ்மொழிக்கு மாறும் வரை பலவடிவங்களில் உருவாகியுள்ளது.

8. மங்கலத் தொடர்களோடு தொடங்கும் மெய்க்கீர்த்தி, பல இலக்கிய அடிகளையும், புராணக் கருத்துகளையும் கொண்டு சிறந்த இலக்கியமாகவே விளங்குகிறது,

9. உண்மைப் புகழ், வரலாற்றுச் செய்தி, இயற்பெயர், தேவியர்ச் சிறப்பு, ஆண்டு, அடிதொடையழகு, உரைநடை போன்று தனக்கே உரிய சிறப்புக் கொள்கைகளோடு, அணிநலம், மன்னர்ச் சிறப்பு, இயற்கை வளம், ஆட்சிமுறை, தொடக்க நிலை, இலக்கண அமைதிகள், குறிப்புஅணி, புராணக் கருத்துகள், மொழிநடை போன்றவற்றில் பிற இலக்கியங்களுக்குரிய பொதுக்கொள்கைகளையும் தன்னகத்துப் பெற்று விளங்குகிறது.

10. கவிஞர் தம் கற்பனைத் திறத்தால் சிறப்புடைச் செயல்களும் வெற்றிச் செயல்களும் மட்டுமே பெற்றுத் திகழ்வதால் மெய்க்கீர்த்தியுள் முரணானவை, நம்பத்தகாதவை என முன்னோர்ச் செயல் பல அமைந்துவிட்டன.

11. ஒரு மன்னனுக்கு ஒரு மெய்க்கீர்த்தி என்ற நிலை மாறி மூன்றும் நான்குமாகிய பலவகை மெய்க்கீர்த்திகளை ஒரு மன்னன் பெறும் நிலை வளர்ந்துள்ளது.

12. பேச்சுத் தமிழின் வரலாற்றை அறிய மெய்க்கீர்த்தி துணை புரிகிறது.

13. கல்லிலும் செம்பிலும் வெட்டப்பட்டுள்ள மெய்க்கீர்த்தி பழைய எழுத்துகளின் வரிவடிவமும் மொழி நடையும் பற்றிய ஆய்வுக்குப் பெரிதும் பயன் படுகிறது.

14. அடைமொழிகளும் வருணனைகளும் மிகுந்துள்ள மெய்க்கீர்த்தியும் பலவகை எழுத்துப்பிழை, சொற்பிழைகளோடு காணப் படுவது ஓலையிலிருந்து ஒருவன் சொல்ல ஒருவன் கல்லில் வெட்டும் செயலாலும், அவ்வாறு வெட்டுவோர் தம் கல்விக் குறைபாட்டாலும் ஏற்பட்ட நிலையாகும்.

15. ஒலிக்கு ஏற்பவே எழுத்துகள் அமைந்துள்ளன. வட மொழிச் சொற்கள் பல ஒலிமாறாமலிருக்கக் கிரந்த எழுத்துகளோடு விளங்குகின்றன.

16. னகர, நகர வேறுபாடுகள், றகர ரகர வேறுபாடுகள் வட மொழிச் சார்பால் ஏற்பட்டு விட்டவை என்பதை உணரமுடிகிறது.

17. மன்னர்ப் பெயர்களோடு அல்லாமல், படைத்தலைவர்கள், துணைபுரிந்த குறுநில மன்னர்கள், மன்னரின் தேவியர் போன்ற பலர்தம் பெயர்களைப் பெற்றுள்ள மெய்க்கீர்த்தி இலக்கியம் அவ்வக் காலத்திலேயே பொறிக்கப்பட்டவை என்பதை உறுதிப் படுத்துகிறது.

18. அதேபோல அக்கால வழக்காற்றிலிருந்த ஊர்ப் பெயர்கள் இன்று அறிய இயலாத நிலையில் இருப்பதும் இவ் உண்மையை உறுதிப்படுத்தும்.

19. 'காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளிய' போன்ற தொடர்கள் பலவற்றின் உண்மைப் பொருளை அறியமுடியாத நிலையும் இன்று ஏற்பட்டுள்ளது.

20. இவ்வாறான பலநிலைகளில் பழைய வரலாற்றினை அறிய உதவும் பழைய வெளியீடுகளே மெய்க்கீர்த்திகள் என்பது உண்மை.

—:0:—

# 1

# முதலாம் இராசராசன்

(கி.பி. 985–1014)

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
[1]தனக்கே உரிமை பூண்டமை மனக்கொளக்
காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
[2]வேங்கை நாடும் கங்க பாடியும்
நுளம்ப பாடியும் தடிகை பாடியும் 5
குடமலை நாடும் கொல்லமும் கலிங்கமும்
[3]முரட்டொழில் சிங்களர் ஈழமண் டலமும்
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்
முந்நீர்ப் பழந்தீவு பன்னீரா யிரமும்
திண்திறல் வென்றித் தண்டாற் கொண்ட [4]தன் 10
எழில்வளர் ஊழியுள் எல்லா யாண்டும்
[5]தொழுதகை விளங்கும் [6]யாண்டே
செழியரைத் தேசுகொள் [7]ஸ்ரீ கோ இராச கேசரி
வன்ம ரான ஸ்ரீ இராசராச [8]தேவர்க்கு யாண்டு 29ஆவது

---

1. தநக்கே, 2. வெங்கை, 3. முரட்டெழிற்சிங்களர் ; எண்டிசை புகழ்தர ஈழ மண்டலமும், 4. தன் நெழில்வளர், 5. தொழுதக, 6. யாண்டே, 7. ஸ்ரீ கோவி ராஜராஜகேசரி, 8. தேவற்க்கு.

# முதலாம் இராசராசன்

## முன்னுரை

சோழ மரபினரும் கொடும்பாளூர் வேளிர் மரபினரும் திருமண முறையில் உறவு கொண்டு வாழ்ந்தவர்கள். இச் சோழ மரபில் வந்தவனே விசயாலயன் என்பவன். இவனே கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் சோழ அரசுக்கு மீண்டும் அடி கோலியவன். இவன் தஞ்சை முத்தரையரை வென்று சில நூற்றாண்டுகளாகப் புகழ் குன்றியிருந்த சோழ அரசை நிறுவினான். இவனுக்குத் தஞ்சையே தலைநகராயிற்று. இச் செய்திகளைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் கூறுகின்றன.[1]

விசயாலனுக்குப் பின் அவன் மகன் முதலாம் ஆதித்தன் பல்லவரிடமிருந்து தொண்டை மண்டலத்தை வென்று, தன் நாட்டுடன் சேர்த்துக் கொண்டான்.[2] ஆதித்தனின் மகன் முதலாம் பராந்தகன் பாண்டிய நாட்டையும் ஈழத்தையும் வென்று தன் நாட்டை விரிவு படுத்தினான்.

> ''...................................வில்லவனைப்
> பாதத் தளைவிட்ட பார்த்திவனும்-மீதெல்லாம்
> எண்கொண்ட தொண்ணூற்றின் மேலும் இருமூன்று
> புண் கொண்ட வென்றிப் புரவலனும்''[3]
>
> ''கொடுத்துக் களவழிப்பாக் கொண்டோன்-அடுத்தடுத்துச்
> சீறுஞ் செருவில் திருமார்பில் தொண்ணூறும்
> ஆறும் படுதழும்பின் ஆகத்தோன்''[4]

என்னும் இலக்கியத் தொடர்களும் இச்சோழர் வரிசை முறையைத் தெளிவுபடுத்துகின்றன. காளவழிநாற்பது பாடப்பெற்ற கோச் செங்கணானை அடுத்து விழுப்புண் பலபெற்றுச் சோழ அரசை நிறுவியவனாக விசயாலயனே கூறப்படுகிறான்.

''மதுரையும் ஈழமுங் கொண்ட கோப்பர கேசரிவர்மன்''[5] என்று கூறும் கல்வெட்டுத் தொடரும்,

> ''............ மதுரைத் தமிழ்ப் பதியும்
> ஈழமும் கொண்ட விகலாளி''[6]
> ''ஈழம் எழுநூற்றுக் காதமும் சென்றெறிந்து
> வேழம் திறைகொண்டு மீண்டகோன்''[7]

---

1. தெ. இ. க. தொகுதி 3 - எண் 205 - பக்கம் 418. பா. 44.
2. ,, எண் 205 - பக் 419. பா-49. 3. விக்கிரமசோழன் உலா - 27-30
4. குலோத். உலா. 40-42. 5. தெ. இ. க. தொகுதி-5. எண். 205
6. குலோத். உலா. 45-46. 7. இராச. உலா. 39-40.

என்பன போன்ற இலக்கியத் தொடர்களும் முதலாம் பராந்தகனைச் சுட்டுவன.

முதலாம் பராந்தகனின் இரண்டாம் மகன் கண்டராதித்தனும், அவன் தம்பி அறிஞ்சயனும் அடுத்தடுத்து ஆண்ட சோழமன்னராவர். பிறகு அறிஞ்சயன் மகன் இரண்டாம் பராந்தகன் என்னும் சுந்தரசோழனும், கண்டராதித்தன் மகன் மதுராந்தகன் என்னும் இயற்பெயருடைய உத்தமசோழனும் முறையே பட்டம் எய்தினர்.

சுந்தர சோழனின் பட்டத்தரசி வானவன் மாதேவி என்பவள்; உத்தம சோழனை அடுத்து, சோழப் பேரரசின் மன்னர் மன்னனாக விளங்கிய இராசராசனை ஈன்றெடுத்த பேறு பெற்றவள்.

"திண்திறல் கண்டன் செம்பியர் பெருமான்
செந்திரு மடந்தைமன் ஸ்ரீ இராச ராசன்
இந்திர சமானன் இராசசர்வஞ்ஞ னெனும்
புலியைப் பயந்த பொன்மான்.........
சுந்தர சோழன்......திருப்புய முயங்குந் தேவி"[8]

என்னும் கல்வெட்டுத் தொடர்கள் இராசராசனின் பிறப்பை உணர்த்துகின்றன.

அருண் மொழி வர்மன் என்பது இவனது இளமைப் பெயர். பல நாடுகளையும் வென்று தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு செங்கோல் செலுத்தியதால் மன்னர் மன்னன் என்ற பொருள்படும் இராசராசன் என்னும் சிறப்புப் பெயர் உண்டாயிற்று. இயற்பெயர் மறைந்து சிறப்புப் பெயரே இயற்பெயராய் விளங்கியது.

ஐப்பசித் திங்கள் சதயநாள் இவனது பிறந்த நாள் ஆகும். இதனை,

"உடையார் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரமுடையார் கோயிலில் எழுந்தருளும் திருச்சதயத் திருவிழாப் பன்னிரண்டும்......திருவிழா எழுந்தருளின தேவர்க்குத் திருவமுது செய்ய ஆடவல்லானால்... ... பதக்கும்"[9]

"ஸ்ரீ ராசராச தேவர்க்கு யாண்டு 27 ...... திருவெண்காடு உடையார்க்கு......திருவவதாரம் செய்தருளின் ஐப்பிகைத் திங்கள் சதயத் திருநாள் ஞான்று தீர்த்தமாடவும்......ஆறு நாள் திருவிழாப் போதவும்......"[10]

என்பன போன்ற கல்வெட்டுத் தொடர்களும்,

"சதய நாள்விழா உதியர் மண்டலம்
தன்னில் வைத்தவன்"[11]

என்னும் இலக்கியத் தொடரும் எடுத்துக் காட்டுகின்றன.

---

8. தெ. இ. க. தொகுதி-7. பக். 433. எண் 863.
9. தெ. இ. க. தொகுதி-2. எண் 26. பக். 127.
10. ,, தொகுதி-5. எண் 979. பக். 367. 11. கலிங். பரணி-8-24.

தன் ஆட்சியில் நிகழ்ந்த உண்மையான வரலாற்றுச் செய்திகளை முறையாக விளக்கும் மெய்க் கீர்த்தியை முதன் முதலில் தோற்றுவித்தவன் இராசராசனேயாவான். அம்மெய்க்கீர்த்தி கல்வெட்டின் தொடக்கத்தில் அமைந்தது. எளிய தமிழ் மொழியில் அகவற்பாவால் இயற்றப்பட்டது. இம்முறையையே இவன் வழி வந்த மன்னரும் பிற அரசர்களும் மேற்கொண்டனர்.

## மெய்க்கீர்த்திச் செய்திகள்

திருமகளும் நிலமகளும் அவனுக்கு உரிமை உடையோர் ஆயினர். காந்தளூர்ப் போரில் மரக்கலங்களை அழித்து மக்களுக்கு அருள் செய்தான். வேங்கை நாடு, கங்க பாடி, நுளம்ப பாடி, தடிகை பாடி, குடமலை நாடு, கொல்லம், கலிங்கம், ஈழ மண்டலம், இரட்ட பாடி, பழந்தீவு ஆகிய நாடுகளை வென்று, தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டான். பாண்டியரை வென்று அந் நாட்டையும் இணைத்து ஆண்டான். இராச கேசரி என்னும் பட்டம் பெற்றவன் என்பன முதலாம் இராசராசனின் இம்மெய்க் கீர்த்தி கூறும் செய்திகளாகும்.

## விளக்கம்

1-2. "திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்
தனக்கே உரிமை பூண்டமை மனக்கொள"

'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்பது இராசராசன் மெய்க் கீர்த்தியின் தொடக்கமாக அமைந்த மங்கல மொழியாகும். இராசராசன் பெருஞ்செல்வத்தை உடையவன் ஆதலின் செல்வத்திற்கு உரியவளாகிய திருமகள் தனக்கே உரிமை பூண்டவளாக விளங்குகிறாள் என்பது அவன் முடிபு. அதேபோல இப்பரந்த நிலவுலகத்திற்கு உரியவளாகிய நிலமகளும் தனக்கே உரிமை பூண்டவளாக அமைய வேண்டும் என்பது அவனது திட்டம். அதாவது இப்பரந்த நிலவுலகம் முழுமையும் தன் ஆட்சியின் கீழ் அடங்க வேண்டும் என்பது அவனது ஆசை. இதனையே இவ் வடிகள் விளக்குகின்றன. அந்த ஆசை காந்தளூர்ச் சாலை முதலாகப் பல நாடுகளையும் வென்று தன் ஆட்சிக்கு உட்படுத்தித் தன் நாட்டை விரிவுபடுத்தத் தூண்டியது. அவன் விருப்பப்படியே பல நாடுகளையும் வென்றான்.

அவன் சிறிய தந்தையாகிய உத்தம சோழனது ஆட்சியில் இளவரசனாக இருந்து பெற்ற அரசியல் அனுபவமும், அவனது தனித்த பேராற்றலும் இணைந்து நின்றன. அவை அவன் பட்டம் பெற்றவுடன் தன் நாட்டை விரிவுபடுத்தும் ஒரு பெருந்திட்டத்தைத்

திட்டித் தந்தன. அவனது இத் திட்டதை 'மனக் கொள' என்னும் தொடர் புலப்படுத்துகிறது. பட்டம் பெற்ற இரண்டு ஆண்டுகளில் செயல்படத் தொடங்கினான்.

## 3. ''காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி''

''காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளிய கோ இராசகேசரிவர்மன்'' என்ற தொடர்களே தனி ஒரு மெய்க்கீர்த்தியாக இராசராசன் கல்வெட்டுகள் சிலவற்றுள் காணப்படுகின்றன. இத்தொடர்கள் இவனது நான்காவது ஆட்சியாண்டிலிருந்தே காணப்படுகின்றன. எனவே காந்தளூர்ப்போர் இவனது கன்னிப்போர் என்பது பெறப் படுகிறது. பிறகு பெற்ற வெற்றிகளுக்கேற்ப மெய்க்கீர்த்தி வளர்ந்து வந்துள்ளது.

காந்தளூர்ச்சாலை என்பது திருவனந்தபுரத்தின் ஒரு பகுதியாக அமைந்தது. வலியசாலை எனவும் வழங்கப்படுகிறது.

''வேலைகெழு காந்தளூர்ச்சாலை''[12] என்னும் தொடர் இது ஒரு கடற்கரைப்பட்டினம் என்பதைச் சுட்டுகிறது.

இராசராசன் இக்காந்தளூர்ச்சாலை என்னும் இடத்தில் சேர ரோடு போரிட்டு அவர்தம் கப்பற்படையை அழித்து அந்நாட்டு மக்களுக்கு அருள் செய்தான் என்பது பெறப்படுகிறது.

இராசராசன் காலத்துச் சேரநாட்டையாண்டவன் பாஸ்கர ரவி வர்மன் என்பவன் ஆவான் (கி. பி. 978 - 1036). இராசராசன் அச்சேரமன்னனிடம் ஒரு தூதுவனை அனுப்பினான், சேரன் தூதுவனை இகழ்ந்து உதகையில் சிறை யிட்டான். அதனால் சினம் கொண்ட இராசராசன் சேர நாட்டின் மீது படையெடுத்தான். இதுவே இக்காந்தளூர்ச்சாலைப் போர் நிகழ்ச்சிக்குரிய காரண மாகிறது. இதனை,

> ''மயக்கத்தால் ஈரொன்பது சுரமும் மட்டித்து
> உதகையைத் தீர்த்த உரவோன்''[13]
>
> ''ஏறிப் பகல்ஒன்றில் எச்சுரமும் போய் உதகை
> நூறித்தன் தூதனை நோக்கினோன்''[14]
>
> ''.......................................... — தூதற்காப்
> பண்டு பகலொன்றில் ஈரொன் பதுசுரமும்
> கொண்டு மலைநாடு கொண்டோனும்''[15]
>
> ''உதய பானுவொத்து உதகை வென்றகோன்
> ஒருகை வாரணம் பலகவர்ந்தும்''[16]

---

12. இராசாதிராசன் மெய்க்கீர்த்தி - 'திங்களேர்பெறவளர்' - வரி-12 ; மற்றொன்று-வரி-9. 13. இராச. உலா-41-42. 14. குலோத். உலா-47-48. 15. விக். உலா. 33-34. 16. கலிங். பரணி-201.

என்பன போன்ற வரலாற்று இலக்கிய அடிகள் எடுத்துக்காட்டு கின்றன

உதகை என்னும் ஊர் திருவாங்கூர் நாட்டுக் கல்குளம் வட்டத் தில் நாகர்கோவிலின் வடபால் உள்ளது.

காந்தளூரில் அமைந்த வேத பாடசாலையே காந்தளூர்ச்சாலை ஆகும்; அச்சாலையில் பயில்வதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணாக்கரின் எண்ணிக்கையே கலமறுத்தல் எனப்பட்டது; அதாவது இந்தக் கல்வி பயில இத்தனை மாணாக்கருக்கு இடமளிக் கப்பட்டது என்ற எண்ணிக்கையை இன்ன கல்வி பயிலுவாருக்கு ஒதுக்கப்பட்ட கலம் இத்தனை என்பதாகவே குறிக்கப்பட்டது. இக்கருத்துக்களுக்குச் சில செப்பேட்டுத் தொடர்கள் துணை நிற்கின்றன.

> ''பார்த்திவ சேகரபுரம் என்று பேர்இட்டுக் காந்தளூர்
> மர்யாதியால் தொண்ணூற்று ஐவர் சட்டர்க்குச் சாலையும்
> செய்தான் ஸ்ரீ கோக்கருநந்தடக்கன்''[17]

> ''இச்சாலைக்குப் பெய்த கலத்தில்பவிழிய சரணத்தார் உடைய கலம் நாற்பத்தைந்து; தயித்திரியச சரணத்தார் உடைய கலம் முப்பத்தாறு; தலவகார சரணத்தார் உடையகலம் பதினுலு''[18]

இத்தொடர்கள் பார்த்திவ சேகரபுரத்தில் ஸ்ரீ கோக்கருநந்தடக் கன் அமைத்த வேதபாடசாலையைச் சுட்டுகின்றன. இச்சாலை அமைக்கப்பட்ட முறைக்குச் சான்றாகக் காந்தளூர்ச்சாலை கூறப் படுகிறது.

கலம் என்பதனைப் படைக்கலம் எனக்கொண்டு படைக்கலச் சாலையை அழித்தான் என்பதைக் ''கலமறுத்தருளி'' என்ற தொடர் விளக்குகிறது என்று கூறவும் இடமளிக்கிறது. (விரிவு மெய்க்கீர்த்தி இலக்கியம்' என்னும் ஆய்வுரையில் காண்க.)

## 4-9. ''வேங்கை நாடும்.....................பன்னீராயிரமும்''

வேங்கை நாடு — கிருஷ்ணை - கோதாவரி ஆறுகளுக்கிடைப்பட்ட நிலப்பரப்பு வேங்கைநாடு எனப்பட்டது. அதன் தலைநகர் வேங்கி எனப்பட்டது; கிருஷ்ணா ஆற்றின் கரையில் அமைந்த நகரம் அது. கீழைச்சாளுக்கியர் ஆட்சிக்கு உட்பட்டது.

---

17. பாண்டியர் செப்பேடு பத்து-பக். அ 11, ஏடு 1-முதல் பக்கம்.
18. ,, பக். அ 15, ஏடு 4-முதல் பக்கம்.

பராந்தகன் ஆட்சியின் கீழ் இருந்த சீட்புலி, பாகி ஆகிய நாடுகள் மீண்டும் தெலுங்கச் சோழனாகிய வீமன் ஆட்சிக்குட்பட்டனவாயின. இந்நாடுகள் நெல்லூர் மாவட்டத்தின் வடபகுதியைச் சார்ந்தவை.

அவற்றை மீண்டும் சோழர் ஆட்சியின் கீழ்க்கொண்டுவர எண்ணினான் இராசராசன். ஒரு பெரும் படையை அனுப்பினான். அச்சமயம் வேங்கை நாட்டு மன்னன் தாணார்ணவனுடைய மக்களாகிய சக்திவர்மனும் விமலாதித்தனும் தங்கள் நாட்டை மேலைச் சாளுக்கியரிடம் இழந்து, சோழப் பேரரசனிடம் உதவி வேண்ட எண்ணியிருந்தனர். எனவே தெலுங்க வீமனோடு எதிர்த்த சோழர் படையுடன் சக்திவர்மனும் கலந்துகொண்டான். வீரத்துடன் போர் புரிந்து பெரும் புகழுக்கு உரியவனானான். சீட்புலி, பாகி ஆகிய நாடுகள் இராசராசன் ஆட்சிக்கு உரியவாயின. இந்நிகழ்ச்சிகளைத் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் உணர்த்துகின்றன.[19] சக்திவர்மனின் ஒத்துழைப்பால் மகிழ்ச்சியடைந்த இராசராசன் அவனது வேங்கை நாட்டைப் பெற்று அவனுக்குத் தரவேண்டும் என்று விரும்பினான். அவ்விருப்பத்தினால் ஏற்பட்டதே வேங்கை நாட்டுப் போர். அப்போரில் இராசராசன் வெற்றி பெற்றான் என்பதையே அவனது மெய்க்கீர்த்தியில் அமைந்த 'வேங்கை நாடும் ............ கொண்டு' என்ற தொடர் உணர்த்துகிறது. வேங்கை நாடு சோழர் ஆட்சிக்கு உட்பட்டதாயிற்று. ஆனால் இராசராசன் அந்நாட்டின் ஆட்சியைச் சக்திவர்மனிடமே ஒப்படைத்து, அவன் தம்பி விமலாதித்தனை இளவரசனாக்கினான்.

கங்கபாடி—கங்கபாடி என்பது மைசூர் நாட்டின் தென்பகுதியும், சேலம் மாவட்டத்தின் வடபகுதியும் சேர்ந்த நிலப்பரப்பாகும். தலைக்காடு (தழைக்காடு என்றும் வழங்கப்படும்) என்னும் நகரம் இதன் தலை நகராக விளங்கியது. இந்நாட்டை ஆண்டவர் கங்கர் எனப்பட்டனர். இராசராசன் காலத்து இந்நாட்டை மேலைக் கங்கர் ஆண்டு வந்தனர்.

நுளம்பபாடி—சேலம் மாவட்டத்தின் ஒரு பகுதி, வடார்க்காடு, பல்லாரி, கோலார், தும்கூர் ஆகிய மாவட்டங்களைத் தன்னகத்தே கொண்ட நாடு நுளம்பபாடி எனப்பட்டது. இது கொங்கு நாட்டை ஒட்டியமைந்திருந்த நாடாகும்.

தடிகைபாடி—தடிகைபாடி என்பது மைசூர் மாவட்டத்தின் பெரும் பகுதி அடங்கிய நாடு; கங்கைபாடியை ஒட்டியமைந்த நாடு.

---

19. தெ. இ. க. தொகுதி-3. எண் 205-பா. 82.

**குடமலை நாடு**—இக்காலத்துக் குடகு என்று வழங்கும் பகுதியே குடமலை நாடு எனப்பட்டது. அரண் மிகுந்த உதகையைத் தலை நகராகக் கொண்டிருந்தது.

"வந்தேன் குடமலை மாங்காட் டுள்ளேன்"[20]

என்பதும் இதனைப் புலப்படுத்துகின்றது.

சேரநாட்டுப் போராகிய காந்தளூர்ப் போரில் வெற்றி பெற்ற இராசராசன் அந்நாட்டையடுத்து விளங்கிய குடமலை நாட்டை யும் அதன் அருகிலிருந்த கங்கபாடி, நுளம்பபாடி, தடிகைபாடி ஆகியவற்றையும் கைப்பற்றினான். அவன் காலத்துப் பல்லவ அரசர் மரபில் தோன்றிய நுளம்பர்கள் நுளம்பபாடியை ஆண்டனர். கங்க அரசர்களுக்குத் திறை செலுத்தி வந்த குறுநில மன்னர்களாக இருந்தனர். கங்கர், நுளம்பர் ஆகியோருக்குப் படைத்துணை யாவார் யாரும் இன்மையால் இந்நாடுகளை இராசராசன் எளிதில் கைப்பற்றினான்.

**கொல்லம்**—பழைய திருவாங்கூர் நாட்டைச் சார்ந்த பகுதிகளுள் ஒன்று கொல்லம். சேர நாட்டுப் படையெடுப்பின்போது தொடர்ந்து நடத்திய போர்களில் கொல்லத்துப் போரும் ஒன்று.

**கலிங்கம்**—கலிங்க நாடு வேங்கை நாட்டின் வடபகுதியில் அமைந் தது. வங்கக் கடலை யடுத்து, கோதாவரி - மகாநதிகளுக்கிடைப் பட்ட நிலப்பரப்பினை உடையது. இந்நாட்டைச் சேர்ந்த மலையே மகேந்திரமலை எனப்படுவது.

**ஈழ மண்டலம்**—தனித் தீவாக விளங்கும் இலங்கை நாடே ஈழ மண்டலம் எனப்பட்டது. அதன் மேலைக் கடற்கரையை அடுத்து அமைந்த அனுராதபுரம் என்னும் நகரத்தைத் தலைநகராகப் பெற்றிருந்தது. கி.பி. 981 இல் ஐந்தாம் மகிந்தன் பட்டம் எய்தி ஆண்டு வந்தான். இவன் இராசராசனின் பகைவர்களாகிய சேர, பாண்டியர்களுக்குப் படைத்துணை செய்து வந்தான். இதனால் இராசராசன் இவன் மீது போர்த் தொடுக்க வேண்டியதாயிற்று. வென்ற பகுதியில் தன் அரசியல் அதிகாரிகளை நியமித்து ஆட்சி செய்தான். தன் ஆட்சிக்கு உட்பட்ட பகுதிக்கு மும்முடிச் சோழமண்டலம் என்ற பெயரையும் சூட்டினான். நாட்டின் இடை யில் இருந்தபொலன்னருவா என்ற நகரம் தலைநகரமாக மாற்றப் பட்டது. அந்நகரத்திற்குச் சனநாத மங்கலம் என்று பெயரிடப் பட்டது. இராசராசனால் நியமிக்கப்பட்ட அரசியல் அதிகாரிகளில்

20. சிலப்பதிகாரம் - காதை 11-வரி. 53.

ஒருவன் அங்கு இராசராசேச்சுவரம் என்னும் கோயிலைக் கட்டி நிவந்தமும் அளித்திருக்கிறான்.

இராசராசன் வலிமைமிக்க கப்பற்படையை உடையவன். அப்படையால் கடல் கடந்து சென்று ஈழ நாட்டை வென்றான். இதனால் வானரப்படையுடன் சென்று இலங்கையை வன்ற இராமனையும் விஞ்சிவிட்டான் என்று கல்வெட்டுகள் புகழ்கின்றன.

சிங்கள வீரர்கள் பேராற்றல் உடையவர்கள். அவர்களை வென்றதனால் அவன் புகழ் எட்டுத்திக்கிலும் பரவியது என்பதை,

'முரட்டொழில் சிங்களர் ஈழமண்டலமும்'

'எண்டிசை புகழ்தர ஈழமண்டலமும்' என்னும் தொடர்கள் விளக்கி நிற்கின்றன.

இரட்டபாடி-இரட்டபாடி என்பது பம்பாய் இராச்சியத்தின் தென்பகுதி அடங்கியது. அது ஏழரை இலக்கம் வருவாயை உடையது எனவும் ஏழரை இலக்கம் பரப்பினை உடையது எனவும் பொருள்பட இரட்டபாடி ஏழரை இலக்கம் எனப்பட்டது எனவும், ஏழரை இலக்கம் என்பது தனி நாடு எனவும் கருதுகின்றனர். இராசராசன் காலத்தில் இரட்டபாடியை மேலைச்சாளுக்கிய மன்னனான தைலபனின் மகன் சத்தியாசிரயன் ஆண்டு வந்தான். இராசராசன் மேலைச் சாளுக்கியருக்குரிய நுளம்பபாடியை வென்றதனால் இருவருக்கும் பகை இருந்து வந்தது. அதனால் இரட்டபாடியின் மீது படையெடுத்து வென்றான் இராசராசன்.

பழந்தீவு-கன்னியாகுமரி முனையின் தென்மேற்கே, இந்தியப் பெருங்கடலுள் அமைந்துள்ள சிறு தீவுகள் பலவற்றின் தொகுதி பழந்தீவு எனப்பட்டது. அப்பகுதி இன்று மாலத் தீவுகள் எனப் படுகிறது. மிகப்பல தீவுகளை உள்ளடக்கியது என்பதனால் பன்னீராயிரம் என்று பெயர் பெற்றது. கடலுள் அமைந்த இப்பகுதி முந்நீர்த்தீவு எனப்பட்டது. எனவே பழந்தீவுப் பகுதி முந்நீர்ப்பழந் தீவு பன்னீராயிரம் என்று கூறப்பட்டது. இப்பழந்தீவுப் போரே இராசராசனின் இறுதிப் போராகக் கருதப்படுகிறது. இராசராசன் நிகழ்த்திய கடற்போர்கள் மூன்று. அவற்றுள் காந்தளூர்ச் சாலை கலமறுத்தது முதலாவது போர். ஈழ மண்டலம் கொண்டது இரண்டாவது போர். முந்நீர்ப் பழந்தீவு கொண்டதே இறுதிக் கடற்போராகும்.

## 13. "செழியரைத் தேசுகொள் கோஇராசகேசரி"

இராசராசன் சேரநாட்டின் மீது படையெடுத்த போது இடையே பாண்டி நாட்டைக் கடந்தே செல்ல வேண்டியதாயிற்று.

தன் தூதனை இகழ்ந்து சிறைப்படுத்திய சேரமன்னன் பாஸ்கர ரவிவர்மன் மீது நிகழ்த்தப்பட்டது இப்படையெடுப்பு. பாஸ்கர ரவிவர்மனின் அரசியல் நண்பனாகிய பாண்டியன் அமரபுஜங்கன் பெரும் படையுடன் வந்து தன் நாட்டின் வழி சென்ற சோழர் படையைத் தாக்கினான். அப்போரில் இராசராசனே வெற்றி பெற்றான். இச்செயலை அடிப்படையாகக் கொண்டது 'செழியரைத் தேசுகொள்' என்னும் தொடர்.

சோழ மன்னர்கள் பட்டம் ஏற்கும் போது பரகேசரி, இராச கேசரி என்ற பட்டப் பெயர்களைத் தங்கள் இயற்பெயர்களோடு சேர்த்து வழங்கி வந்தனர். இம்முறை அரசர் பெயர்களை நிரல் படுத்த மிகவும் பயன்படக் கூடியதாய் அமைந்தது. இப்பெயர் கள் முறையே பிறருக்குச் சிங்கம் போன்றவன் (பகைவருக்கு) ; அரசருக்குள் சிங்கம் போன்றவன் என்ற பொருள்களில் வழங்கப் பட்டவையாகும். இராசராசன் இராசகேசரி பட்டம் பெற்ற மன்னன் என்பதைக் கோஇராசகேசரிவர்மர் என்னும் தொடர் விளக்கி நிற்கிறது.

### 10-12. "திண்திறல் வென்றி......யாண்டே"

இத்தகு அளவற்ற வெற்றிகளுக்குக் காரணம் இராசராசனிடம் இருந்த நாற்பெரும் படையே ஆகும். அப்படை மிகவும் வலிமை யும் திறமையும் உடையது; என்றும் வெற்றியையே பெறுவது. அரசனின பெருமையும் புகழும் ஓங்கி வளரும் ஆண்டுகள் அவனுடைய ஆட்சி ஆண்டுகள். அவற்றுள்ளும் மிகவும் போற்றற் குரிய ஆண்டாகிய இருபத்தொன்பதாம் ஆட்சியாண்டில்......... என்பதை விளக்கும் தொடர்கள் மெய்க் கீர்த்தியின் முடிவில் கல் வெட்டுச் செய்தி தோன்றிய ஆண்டைக் குறிப்பிடுவனவாகும். இம்முறை எல்லா மெய்க் கீர்த்திகளுக்கும் பொதுவானதாக எல்லா மன்னர்களாலும் தங்கள் மெய்க்கீர்த்திகளுள் கையாளப் பட்டுள்ளது.

---

## 2

### மெய்க்கீர்த்தி-2

…………ஜய ஜயவென்று மொழி
பன்னிய வாய்மையிற் பணியப் பொன்னியல்
விசும்பரிற் கதமும் பசும்பரி வெள்ளுளை
நெடுஞ்சுவற் றெடுத்த குறுந்துனைப் படுங்க
நள்ளுறப் பொன்ஞாண் வள்ளுற வச்சத் 5
தனிக்கா லரசு பனக்காற் கங்குற்
குழம்புபடு பேரிருட் பிழம்புபட வுருட்டிய
செஞ்சுடர் மௌலி வெஞ்சுடர் வானவன்
வழிமுதல் வந்த மகிபதி வழிமுதல்
அதிபதி நரபதி அசுவபதி…………ட் 10
கசபதி கடலிடங் காவலன் மதிமுதல்
வழுதியர் வரைபுக மற்றவர் தேவியர்
அழுதுய ரங்கலி லழுங்கப் பொழுதியல்
வஞ்சியிற் காஞ்சி வகுத்த செஞ்சிலைக்
கலிங்கன் கன…….கப் பா……லங்கன் 15
அ[ம்]மை[ம]…………………………ட்
புதுமலர் வாகை புனைந்து நொதுமலர்
கங்க பாடி கவ்விக் கொங்கம்
வெளிப்படுத் தருளி யளிபடுத் திருளிய
சாரல்மலை யட்டுஞ் சேரன்மலை நாட்டுத் 20
தாவடிக் குவட்டின் பாவடிச் சுவட்டுத்
துடர்நெய்க் கனகந் துகளெழ நெடுநற்
கோபுரங் கோவை குலைய மாபெரும்
யுரிசை வட்டம் பொடிபடப் புரிசைச்
சுதைகவின் படைத்த சூளிகை மாளிகை 25
யுதகைமுன் னொள்ளெரி கொளுவி உதகை
வேந்தைக் கடல்புக வெகுண்டு போந்து
சூழ்மண் டலம்தொழ வீழமண் டலமுங்

கொண்டு தண்டருளிப் பண்டு தங்கள்
திருக்கு லத்லோர் தடவரை எழுதிய 30
பொங்குபுலிப் போத்துப் புதுக்கத் துங்கத்
திக்கினிற் சேனை செலுத்தி மிக்க
வொற்றைவெண் குடைக்கீழ் இரட்டைவெண் கவரி
தெற்றிய வனலந் திவள வெற்றியுள்
விற்றிருந் தருளிய வேந்தன் போற்றிருந் 35
தண்டமிழ் நாடன் சண்டப ராக்கிரமன்
றிண்டிறற் கண்டன் செம்பியர் பெருமான்
செந்திரு மடந்தைமன் ஸ்ரீராச ராசன்
இந்திர சேனன் ராஜசர் வஞ்ஞ னெனும்
புலியைப் பயந்த பொன்மான் கலியைக் 40
கரந்து கரவாக் காரிகை சுரந்த
முலைமிகப் பிரிந்து முழங்கெரி நடுவணுந்
தலைமகற் பிரியாத் தையல் நிலைபெறுந்
தூண்டா விளக்கு ... ...
... ... ...சி சொல்லிய 45
வரைசர்தம் பெருமா னதுலனெம் பெருமான்
பரைசைவண் களிற்றுப் பூழியன் விரைசெயு
மாதவித் தொங்கல் மணிமுடி வளவன்
சுந்தர சோழன் மந்தர தாரன்
திருப்புய முயங்குந் தேவி விருப்புடன் 50
வந்துதித் தருளிய மலையர் திருக்குலத்
தோரன் மையாக தமரகத் தொன்மையிற்
குலதெய்வ .... கொண்டது நலமிகுங்
கவசந் தொடுத்த கவின்கொளக் கதிர்நுதித்
துவசந் தொடுத்த சுதைமதிற் சூழகழ்ப் 55
புளகப் புதவக் களகக் கோபுர
வாயின் மாட மாளிகை வீதித்
தேசாந் தன்மைத் தென்றிருக் கோவலூ

ரிசரந் தன்றக் கவன்றது மிசரங்
குடக்குக் கலுழி குணக்கு கால்பழுங்கக் 60
காளா கருவுங் கமழ்சந் தனமுந்
தாளார் திரளச் சாளமு நீளார்
குறிஞ்சியுங் கொகுடியு முகடுயர் குன்றிற்
பறிந்துடன் வீழப் பாய்ந்து செறிந்துயர்
புதுமத கிடறிப் போர்க்கலிங் கிடந்து 65
மொதுமொது முதுதிரை விலகி கதுமென
வன்கரை பொருது வருபுனற் பெண்ணைத்
தென்கரை யுள்ளது தீர்த்தத் துறையது
மொய்வைத் தியலு முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன் 70
மூரிவண் டடக்கைப் பாரித னடைக்கலப்
பெண்ணை மலையர்க் குதவிப் பெண்ணை
யலைப்புன லழுவத் தந்தரி க்ஷஞ்செல
மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது புனல்வளர் 75
பேரெட் டான வீரட் டானம்
அனைத்தினு மனாதி யாயது நினைப்பினும்
உணர்தற் கரியது யோகிக ளுள்ளது
புணர்தற் கினியது பொய்கைக் கரையது
சந்தன வனத்தது சண்பகக் கானது 80
நந்தன வனத்தி னடுவது பந்தற்
சுரும்படை வெண்பூங் கரும்பிடை துணித்தரத்
தாட்டொலி யாலை அயலாது பாட்டொலிக்
கருங்கைக் கடையர் பெருங்கைக் கடைவாள்
பசுந்தாட்டிஞ் செந்நெற் பழனத் தசும்பார் 85
கணி . . . . . . . . . . . . .
. . . . . . யவற்றை யருக்க னருச்சனை முற்றிய
நான்மறை தெரிந்து நூன்முறை யுணர்ந்தாங்

கருச்சனா விதியொடு தெரிச்சவா கமத்தொழில்
மூவெண் பெயருடை முப்புரி நூலோர் 90
பிரியாத் தன்மைப் பெருந்திரு வுடையது
பாடகச் சீறடிப் பணைமுலைப் பாவையர்
நாடகத் துழுதி நவின்றது சேடகச்
சண்டையுங் கண்டையுந் தாளமுங் காளமுங்
கொண்டதிர் படகமுங் குளிறுமத் தளங்களும் 95
கரடிகைத் தொகுதியுங் கைம்மணிப் பகுதியு
முருடியல் திமிலை முழக்கமும் மருடரு
வால்வளைத் துணையு மெல்வளைத் தணையுங்
கரும்பொலி மேகமுங் கடலுமெனக் கஞலி
திருப்பொலி திருப்பலி சினத்து விருப்பொலிப் 100
பத்தர்தம் பாடல் பயின்றது முத்தமிழ்
நாவலற் நாற்கவி நவின்றது ஏவலில்
அருஷையோ டரஹரா வெனக்குனித் தடிமைசெய்
பருஷையர் பகுவிதம் பயின்றது கருஷைமுக்
கண்ணவ னுறைவது கடவுளர் நிறைவது 105
மண்ணவர் தொழுவது வானவர் மகிழ்வது
மற்றுமின்ன வளங்கொள் மதிற்ப தாகைத்
தெற்றுங் கொழுநிழற் சிவபுரத் தாற்குப்
பன்னாள் நிலைபெற முன்னா ளரவோன்
செய்த தானந் தேவன் குடியில் 110
அலகியல் மரபி னமைந்து உலகியல்
சாண்பன் னிரண்டிற் சமைந்த தனிக்கோல்
போற்றுற வளர்ந்த நூற்றறு பதுகுழி
மாவொன் றாகவந்த வேலி யாறே
காலி லந்தங் களைந்து நீங்கிய 115
நிலத்தா னீங்கா நெற்றுகை ஆங்கொரு
மாவிற்கு அறுகல மாகக்
கொழுநாற் றவராடுங் கூட்டி யளந்த

எழுநூற் றிருபதி லிறைமகற் குரிமை
நாழி யெட்டான் வாழி யட்டானக் 120
கருங்கா லொன்றாற் செங்கை யிரண்டிட்டு
அளந்த நெல் லாற்று பதனிற்
களைந்த நிவந்தத் தன்மை நினையில்
உவந்துநஞ் சுண்டவருக் கமுதுண நயந்த
வொத்தெண் வழுவாப் பத்தெண் குத்தல் 125
பழநெல் லரிசி பன்னிரு நாழிக்குப்
பதினை யிரட்டிநெற் பதினை யிரட்டியுங்
குறுவா ளான நெடுவா ணயனிக்
கோரிரு நாழி யுட்படுத் துயர்ந்த
நெல்நா லெட்டான நாழி யும்மே— 130
. . . . . . . . . மிளகு முப்பிடிக்கு
செல்லக் கொடுத்த நெல்லஞ் ஞாழியுஞ்
சூழ்கறி துவன்ற போழ்கற் கொள்நெற்
பெருக்கிய நாலுரி யுருக்கிய நறுநெய்
உழக்கரை தனக்கு வழக்கரை வினவில் 135
முந்நாழி யுந்தயிர் முந்நாழிக் காங்கறு
நானா ழியுமடைக் காய மிதிற்குப்
பன்னீ ருழக்கும் பரிசா ரகமாள்
நன்னான் கினுக்கு நெல்லறு நானாழியுந்
திருமடைப் பள்ளிப் பெருமடைக் குதவும் 140
இந்தன வொருவற்குத் தந்தமுந் நாழியும்
ஆகநெற் கலமு மேகநற் றிவசம்
அப்பரி சியற்றலி லறுவகை யிருதுவும்
இப்பரி சியற்றி யெழுந்துநே ரானபின்
புதுமலர் விரிந்து மதுமலர் சோலைப் 145
புள்ளூர் கோவ லுள்ளூர்ப் பழநிலம்
இரட்டுமுக் காலிற் றந்தபதி னைஞ்சும்
மொட்டுக் கல்லைக் கவர்மூன்று மாவும்
ஆலஞ் செறுவி லஞ்சு மாவும்
திரண்டு பாய்புனற் றெங்காச் செறுவில் 150
இரண்டு மாவும் இலுப்பைக்கா லிரண்டும்
நெல்லாலித் தேழும் புல்லா லிப்புறம்
அஞ்சொடுங் கூட்டி ஆகிய நிலத்தொகை
அப்புத்திரண் டியல்மா முப்பத் திரண்டு

மேலா றுணர்ந்த நாலா றெண்பயில் 155
அந்தண ரனைவர்க்கும் அருச்சனா போகந்
தந்த பின்னைத் தடமலர்ப் பொய்கைப்
போதகர் பழனப் புதுமலர்ச் சோலைச்
சிதாரி பலமஞ்சு மஞ்சாமற் கெட்ட
திரு வைய்யன் கொட்டமில் குணத்தாற் 160
செம்பொற் புரிசைச் சிவபுரத் தாற்குக்
கோவலந் தணர்பாற் கொண்டு கொடுத்தன
பண்டைக் கோலாற் பண்டைக் குழித்தொகை
மணங்கொண் டீண்டு முணங்கல் பூண்டி
யொப்புத் தொறுமா முப்பத்தறு மாவு 165
மிகவந் துயர்புனற் பகவந்தக் கழனி
யெட்டுமுத லிருபது மாவு மட்டவிழ்
பூத்துழா வியபுனல் மாத்துழான் வேலி
ஏவிய வெட்டு மாவும் வாவியிற்
கோடேறு பழனக் காடேறு மாநிலம் 170
அஞ்சும் களர்நிலம் பத்துந் நெஞ்சத்து
உள்ளத் தகும்புன லூரவுக்கட லுகாயம்
பள்ளத் திரண்டும் பாவருங் கணியக்
கழனியில் எட்டும் கைகலந் துரைப்பில்
துழணி . . . . . . . . . . கலமென
. . . மேற்படி காலாற் பாற்பட வளர்ந்த 175
விங்கு டனவர் பாங்குடன் றொகுத்த
மெஞ்ஞூற் றுரைகையில் மேதகு தூநெல்
அஞ்ஞூற் றிருபத் திருகலம் என்ன
மற்றைத் தொகையில் மதிவளர் சடையோன்
பெற்ற வாரம் பிழையறப் பேசில் 180
ஐம்பதிற் றைஞ்சொடு மொய்ம்புறு பதினொரு
கலத்தொடு முணங்கல் பூண்டியிற் கறைநெல்
நன்சை நீக்கிப் புன்சை நானமா
மாத்தாற் கலவரை யான வரையறை
அறுகல மேற்றிப் பெறுகல வளவை 185
மூன்றொடு முப்பது குறைந்த முன்னூற்றுக்
கலத்தினில் மற்றக் கண்ணுதற் காக
நிலத்தவ ருவந்த நிவந்தந் நலத்தகு
நாளொன் றினுக்கு நான்முந் நாழி

பானிறத் தன்மைத் தூநிறக் குத்தல் 190
அரிசியி லான நெல்லு வரிசையிற்
குறுபவள் கூலி யேற்றிப் பெறுவன
பேணிய பழநெற் றாணியுங் காணிய
வையமிது புகழு நெய்யமுது முப்பிடி
கொள்ளக் கொடுத்த நெல்லறு நாழியும் 195
பொழுது மூன்றினுக் கிழுதுபடு செந்தயி
ரொருமுந் நாழிக் கிருமுந் நாழியு
மடைக்கா யமுதுக் காறுரி யத்தும்
அந்தண னொருவ னபிஷேகஞ் செய்யத்
தந்தன குறுணி முற்றதைந்த நானாழியு 200
மறைய வல்செய் மாணிரண் டினுக்கு
குறைவறக் கொடுத்தநெற் குறுணிநா நாழியும்
ஓராண் டினுக்கு நேராண் டாக
நண்ணிய நக்ஷத் திரமென நல்லோன்
நண்ணிய திருவிளக் கெண்பதுங் கண்ணெனக் 205
காவியர் கயல்பய லாவியூ ரதனிற்
றிக்குண்ட யிவரு முக்குடை யவர்தம்
அறப்புற மான திறப்பட நீக்கிச்
சாலி விளைநிலம் வேலி யாக்கி
முதல்வதின் மூன்றே முக்காலே யரைக்கா 210
லிதன்தனி வந்த யியல்வகை யுரைப்பில்
ஒப்பத்திரு வனையவர் முப்பத் திருவர்
பாடல் பயின்ற நாடக மகளிர்க்கும்
நெஞ்சா சர்ர நிறைவொடு குறையாப்
பஞ்சா சாரியப் பகுதி யோர்க்கும் 215
நறைப்புது மலர்விரி நந்த வானம்
இறைப்புத்தொழில் புரிந்த விருந்தவத் தோர்க்கும்
யோகி யொருவனுக்கு நியோக முடைநில
. . . . . . . . . . . . வாழியர்
. . . செஞ்சடைக் கடவுடன் றிருவாக் கேழ்வித் 220
தஞ்சுடைக் கடிகையன் றனக்கும் நெஞ்சில்
விதித்த முறைமை மதித்து நோக்கி
யின்னவை பிறவு மிராச ராசன்
தன்னவை முன்னற் றத்துவ நெறியி
லறங்கள் யாவையு மிறங்கா வண்ணம் 225

விஞ்ஞா பனத்தால் மிகவெளிப் படுத்தோன்
அன்பது வேலியி லடைகுன் றகர்க்கும்
ஒன்பது வேலி யுடைய வுரவோன்
கொம்பர் நாடுங் குளிர்மலர்ச் சோலை
அம்பர் நாடன் ஆலங் குடிக்கோன் 230
தெண்டிரைப் பழனத் திரைமூர் நாடன்
வண்டிரைத் துயர்பொழில் மணற்குடி நாடன்
நேரிய னருமொழி நித்தவி னோதன்
காரிய மல்லதோர் காரிய நினையா
தாராண் டலைமைக் கற்பக சதுசன 235
போராண் டலைமைப் புணர்புயத் துரவோன்
கூத்தொழில் கேளா தேத்தொழில் முனைந்த
கண்டகர் கரிசறத் துரிசறக் கலிசெக
மண்டல சுத்தியில் வயப்புலி வளர்த்தோன்
வான்பால் மதியும் வலம்புரி யிடம்புரி 240
யான்பால் வதியும் விரிசடைக் கடவுள்
நெற்றிக் கண்ணும் நிலத்தவர் நினைந்த
தெற்றிக் கண்ணுஞ் சிந்தா மணியும்
போலப் பிறந்த புகழோன் கோலக்
கருங்களிற் றுழவன் கம்பத் தடிகள் 245
மாதி விடங்கு வருபரி வல்ல
வீதி விடங்கன் மென்கருப் பாலைத்
தலந்தருத் தண்டலைத் தடநீர்
நலந்தரு பொன்னி நாடுகிழ வோனே!

வேலியர்கோன் விதி விடங்கன் விறற்கம்ப
னாலியல்மான் சோழ னதிகாரி-கோலப்
படியின்மேற் பொற்பூப் பைங்கோவல் விரட்டர்
முடியின்மேல் வைத்தான் முயன்று. — 1

பொன்முக் கழஞ்சால் மணிப்பட்டம் பூப்புனையும்
மின்மிக்க கட்டமைத்து மேற்கட்டி-சொன்மிக்க
கோவலான் விரட்டற் கீத்தோன் குலவேலி
காவலான் வாழ்கம்பன் கண்டு. — 2

சென்னிதிறல் ஸ்ரீஇராச ராசர்க்கு யாண்டு
திகழுமிரு பத்தேழில் செழுநீர் வேலி
மன்னிய கம்பன் மகிமாலைய மூவேந்த
வேளான்வின் ணப்பத்தால் மணிநீர்க் கோவல்
வென்னியல்சீர் விரட்டத்தில் லிங்க மொன்று
பொன்னூற்றால் செய்ததற்கு வெள்ளிப் பீடம்
பன்னியதொண் ணூற்றுமுக் கழஞ்சுடை யம்பொன்
போர்த்துமய்ங் கழஞ்சின்மேல் பத்து மாவே.

## முன்னுரை

சோழப் பேரரசினை நிறுவிய பெருமை வாய்ந்த முதலாம் இராசராசன் தமிழில் மெய்க்கீர்த்தியினை முறைப்படுத்திய பெருமைக்கும் உரியவனாவான். இவனது மெய்க்கீர்த்தியாக 'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்று தொடங்கும் ஒரு மெய்க்கீர்த்தியே உள்ளதாக வரலாற்று அறிஞர்கள் முடிவு செய்து உள்ளனர். அந்த மெய்க்கீர்த்தியும் அதன் விளக்கமும் எண் ஒன்றில் கொடுக்கப்பட்டுள்ளது.

தொடக்கத் தொடர் பழுதுபட்ட நிலையில் ஜய ஜய என்று தொடங்கும் இப்பாடலில் சிவபுரம் எனப்படும் தில்லையில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு அளிக்கப் பெற்ற நிவந்தங்களைப் பற்றிய செய்திகள் அடங்கியுள்ளன. ஆயினும் முதற்பகுதியில் சுமார் அறுபது வரிகளிலும் பிற்பகுதியில் சில வரிகளிலுமாக முதலாம் இராசராசனின் போர்ச் செயல்களும் பிற சிறப்புகளும் கூறப்பட்டுள்ளன. எனவே இதனையும் மெய்க்கீர்த்திகளுள் ஒன்றாகத் தேர்ந்தெடுத்து, இராசராசனின் மெய்க்கீர்த்தியாகிய 'திருமகள் போல' என்பதனை அடுத்துத் தனிமையாகப் பதிப்பிக் கப்படுகிறது.

## மெய்க்கீர்த்தி

சூரிய குலத்தில் வந்தவன் இராசராசன். நரபதி, அசுவபதி, கசபதி என்பன போன்ற சிறப்புப் பெயர்களை உடையவன். கங்கபாடி, உதகை, ஈழமண்டலம் போன்ற பல இடங்களில் வெற்றிமாலை சூடினான். சுந்தர சோழனின் தேவிக்குத் திருமகனாகத் தோன்றிய இவன் பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ளதும் இயற்கையழகுகள் பொருந்தியதுமான தில்லைத் திருப்பதியில் எழுந்தருளியுள்ள இறைவனுக்கு அநேக நிலங்களையும் நிவந்தமாகக் கொடுத்து அவற்றிலிருந்து கிடைக்கும் நெல்லை இறைவனது பூசை முதலியனவற்றிற்குச் செலவிடு முறைகளையும் வரையறை செய்துள்ளான். ஆலயப்பணியாளருக்கும் பிறருக்கும் அளிக்கப்பட்ட அறச் செயல்களும் வரையறுக்கப்பட்டுள்ளன. மேலும் பல சிறப்புப் பெயர்களைப் பெற்ற இராசராசனின் அரச அலுவலரான கம்பன் என்பவன் திருக்கோவலூர் இறைவனுக்குப் பொன்னால் இலிங்கமும் வெள்ளிப் பீடமும் பொற்பட்டமும் பூவும் அளித்த செய்திகளும் தனிப்பாடல்களில் அமைந்துள்ளன.

## விளக்கம்

### 1-11. 'ஜய ஜயவென்று . . . . கடலிடங்காவலன்'

பொன்மையான ஆகாயத்தில் விளங்கும் பொருள்களுள சிறந்து விளங்குபவன் சூரியன். அவன் மிகுந்த வெப்பத்தை உடையவன்; வெண்மையான பிடரியையும் நெடிய புறமுதுகையும் உடைய

விரைந்த குதிரை பூட்டப்பட்டதும் ஒற்றைச் சக்கரத்தையுடையது மான தேரினை உடையவன்; இரவு காலத்தில் நிலவும் மிகுந்த இருளினை அழிக்கும் சிறந்த ஒளியினை முடியாகச் சூடி விளங்கு பவன்; வெஞ்சுடர் வானவன் என்ற பெயர் பெற்றவன். அந்தச் சூரியனின் குலத்தில் தோன்றியவன் சோழப்பேரரசன் இராசராசன். அவன் மன்னர் மன்னனாக விளங்கினான்; மக்களுக்குத் தலை வனாக விளங்கினான்; கடலால் சூழப்பட்ட இப்பரந்த நிலவுலகத் தின் சிறந்த காவலனாக விளங்கினான்; யானைப்படை, குதிரைப் படைகளைச் செலுத்தும் சிறந்த தலைவனாக விளங்கினான். எனவே அவனைப் பகைமன்னர்கள் அனைவரும் 'ஜய ஜய' வென் னும் வெற்றிமொழி கூறியவாறு பணிந்து நின்றனர்.

### 11-29. 'மதிமுதல் வழுதியர் . . . . ஈழமண்டலமுங் கொண்டு'

சந்திர குலத்தில் தோன்றியவர்களாகிய பாண்டியர் தோற்று ஓடி மலைகளில் ஒளிக்கவும், அப்பாண்டியரின் தேவியர் அழுது துயரமடையவும் செய்த இராசராசன் சேரநாட்டின் மீதும் படை யெடுத்து காஞ்சி சூடினான். கலிங்க மன்னனையும் வென்றான். இவ்வாறு பல போர்களிலும் வென்று வெற்றிமாலை சூடிய சோழன் பகை மன்னர்களின் நாடுகளாகிய கங்கபாடி, கொங்குநாடு, சேரன் மலைநாடு போன்ற பல நாடுகளின் மீது படையெடுத்து, மலை உச்சிவரை புகைமண்டி விளங்குமாறு மாடமாளிகை, கூட கோபுரங்களையெல்லாம் பொடிபடச் செய்தான். உதகையைத் தீக்கு இறையாக்கினான். உதகை மன்னனைக் கடலில் புகுந்து ஒளியுமாறு துரத்தியடித்தான். ஈழமண்டலத்தைக் கைப்பற்றினான்.

### 29-35. 'தண்டருளிப் பண்டு.........அருளிய |வேந்தன்'

வென்ற நாடுகளில் தன் படை வீரரை நிறுத்தினன். மீண்டும் வடதிசையில் படையெடுத்துச் சென்று தங்கள் முன்னோராகிய சோழவேந்தர் இமயமலையில் பொறித்த புலிக்கொடியினைத் தானும் புதுப்பிக்க விரும்பினன். அவ்வாறே தன் படையுடன் சென்ற இராசராசன் பெருவெற்றியுடன் தன் ஒப்பற்ற ஒற்றை வெண் குடையின் கீழ் இரட்டை வெண்கவரி வீச வீற்றிருந்தருளினான்.

### 36-50. 'தண்டமிழ்நாடன்......முயங்குந்தேவி'

தண்தமிழ் நாடன், சண்டபராக்கிரமன், திண்திறல்கண்டன். செம்பியர் பெருமான், செந்திருமடந்தைமன், ஸ்ரீஇராசராசன், இந்திரசேனன், இராசசர்வக்ஞன் என்னும் சிறப்புப் பெயர் களைப் பெற்றிருந்தான். இத்தகு சிறப்புமிக்க புலியைப் பெற்றெடுத்த பெருமை பெற்றவள் சுந்தரசோழனின் திருத்தோள்களைத் தழுவிய வானவன் மாதேவியாவாள்.

## 50-85. 'விருப்புடன் வந்துதித்து......செந்நெற்பழனத்து'

தென் நாட்டுக் காசி எனப்படும் சிவபுரத்து உறையும் இறைவனுடைய ஆலய அமைப்பும் இடமும் கூறி அவ்விறைவனுக்குச் செய்த தேவதானம் முதலியனவற்றைத் தொகுத்துக் கூறும் பகுதி இது. சோழமன்னர்கள் தொழும் குலத்தெய்வமாக விளங்கியது சிவபுரத்து இறைவன் ஆலயம். அழகிய மதிலையும் அகழியையும் உடையது. மாடமாளிகைகள் நிறைந்த தெருக்களையுடையது. ஆறும் நிலமும் சோலையும் நான்கு திசையிலும் நிறைந்து விளங்குவது. பாய்ந்து வரும் நீரையுடைய பெண்ணையாற்றின் தென் கரையில் அமைந்தது. புண்ணிய தீர்த்தத் துறையாய் விளங்குவது. முனிவர்கள் விரும்பும் வீரட்டானம் பலவற்றிலும் உயர்ந்து விளங்குவது. பொய்கைக் கரையில் அமைந்து, யோகியர் நிறைந்து விளங்குவது. சந்தனம், சண்பகம் ஆகிய வனங்கள் நிறைந்தது. இவ்வாறு பலவகை நிலத்திடை வளம் பலவும் நிறைந்து விளங்கும் நாட்டிடை உள்ளது அவ்விறைவனது ஆலயம்.

## 86-110. 'நான்மறை தெரிந்து...உரவோன் செய்ததானம்'

அவ் ஆலயத்தின் சிறப்பு தொகுத்துக் கூறப்படும் பகுதி.

நான் மறை உணர்ந்த அந்தணர் நூல்முறைமாறாது அருச்சனை புரியும் தன்மையில் விளங்கி என்றும் நிலைபெற்று இருக்கும் பேறுடையது அத்திருக்கோயில். நாடக மகளிரும் பலவகை வாத்தியங்களும் நிறைந்து விளங்கும் தன்மையது. பக்தகோடிகளின் பலவகை இசையொலி நிறைந்து விளங்குவது. தமிழ் நாவலர் பாடும் பேறுடையது. மண்ணவர் தொழ, வானவர் மகிழும் சிறப்பினைப் பெற்றது. இன்னும் பலவகையான வளங்களோடு மதிலும் கொடியும் உயர்ந்து விளங்க அவற்றின் நிழலில் கோயில் கொண்டுள்ள சிவபுரத்தானாகிய இறைவனுக்கு எக்காலமும் நிலைபெறும் வண்ணம் இராசராசன் செய்த தானமாவது.

## 110-130. 'தேவன்குடியில்.........நாழியும்மே'

தேவன்குடி என்னுமிடத்தில் ஆறேகால் வேலி நிலம் ஆலயத்திற்குத் தேவதானமாக அளந்துவிடப்பட்டது. பன்னிரண்டு சாண் நீளமுடைய தனிக்கோலால் நூற்று அறுபது குழி ஒரு மாவாகக் கணக்கிடப்பட்டு (ஒரு கோல் நீள அகலமுடையது ஒரு குழி) ஆறேகால் வேலி நிலம் அளந்து விடப்பட்டது. (இருபதுமா ஒருவேலி) அந்நிலத்திலிருந்து வரும் நெல்லினைப் பெறும் பொழுது ஆறேகால் வேலியில் கால் வேலி நீக்கி ஆறு வேலிக்கே நெல் கொள்ளப்பட்டது. கொள்ளப்பட்ட நெல் ஒருமா நிலத்திற்கு ஆறு கலமாக எழுநூற்று இருபது கலம் ஆகும். அவற்றுள் இறைவனுக்கு அமுதுபடியாக, எட்டு நாழி மரக்காலால் அளந்து கொடுக்கப்பட்டது. அவ் அளவு முப்பது நாழி எனப்படுகிறது. உமையம்மையின் அமுதுபடியாக முப்பத்திரண்டு நாழி நெல் கொடுக்கப்பட்டது.

### 131–144. 'மிளகுமுப்பிடிக்கு.........இப்பரிசுஇயற்றி'

மூன்றுபிடி மிளகு, உருக்கிய நெய் உழக்கு அரை, தயிர் முந்நாழி, அடைக்காய், பரிசாரகர், இந்தனம் ஆகியவற்றிற்கு முறையே ஐந்து நாழி, முந்நாழி, அறுநாழி, பன்னிரு உழக்கு, அறு நாழி, முந்நாழியுமாக ஒருகலம் நெல் கொடுக்கப்பட்டது. (தயிருக்கு அறுநானாழி, பரிசாரகர் நால்வருக்கு ஆறு நாழி வீதம் எனக் கொள் ளினும் சரியாக வரவில்லை.) ஆறு இருது காலத்திற்கும் இவ்வாறு கொடுக்கப்பட்டது.

### 145–157. 'புதுமலர் விரிந்து . . . . தந்த பின்னை'

பிற இடங்களிலும் ஆலயத்திற்குரிய நிவந்தமாகப் பல நிலங்கள் விடப்பட்டன. அவற்றுள் புள்ளூர், மோட்டுக்கல், ஆலஞ்செறு, தெங்காச்செறு, இலுப்பைக்கால், நெல்லாலி, புல்லாலி ஆகிய இடங்களில் விடப்பட்ட முப்பத்திரண்டு மாநிலம் அந்தணருக்குரிய அருச்சனாபோக நிவந்தமாக அளிக்கப்பட்டது.

### 157–202. 'தடமலர்ப் பொய்கை . . . . நானாழியும்'

மலர்ப் பொய்கையும் சோலையும் பொன்னாலானமதிலையும் உடைய அச்சிவபுரத்தாற்குக் கோவல் அந்தணரிடமிருந்து பெற்றுக் கொடுத்த நிலங்கள் பல. அவையும் முற்கூறியபடியே பன்னிரண்டு சாண் நீளமுடைய கோலால் நூற்று அறுபது குழிகொண்டமா அளவினையடையதாக அளந்து கொடுக்கப்பட்டன.

பூண்டி ஒப்புத்தொறு, பகவந்தக்கழனி, துழான்வேலி, உகாயம் பள்ளம், கணியக்கழனி போன்ற கழனிகளில் ஐந்நூற்று இருபத்தி ரண்டு கலம் நெல் வருவாயுடைய நிலங்கள் அளந்து விடப்பட்டன. இவற்றுள் முன்கூறியது போலவே மூன்று காலத்திற்குமுரிய நெய், தயிர், அடைக்காய், அருச்சகர் போன்றவற்றிற்காக நெல் ஒதுக்கப் பட்ட அளவுகள் முறைப்படுத்தப்பட்டுள்ளன.

### 203-226. 'ஓராண்டினுக்கு......மிகவெளிப் படுத்தோன்'

இராசராசன் பிறந்த நட்சத்திரமாகிய ஐப்பசித் திங்கள் சதய நன்னாளில் எண்பது திருவிளக்குகள் ஏற்றித் திருவிழா முதலியன செய்தற்குரிய நெல்விளை நிலம் ஒதுக்கிவிடப்பட்டது. முதலில் உள்ள மூன்றே முக்காலே யரைக்கால் வேலிநிலம் இதற்காக ஒதுக் கப்பட்டதாகும். இதனுள் முப்பத்திரண்டு நாடக மகளிர் உட்பட, இருந்தவத்தோர், யோகி, கடிகையன் போன்றோருக்கும் நிலத்து வருமானம் பங்கிட்டு அளிக்கப்பட்டது. இவையனைத்தையும் இராச ராசன் தகுதி அறிந்து தன் அவையிலேயே வெளியிட்டான்.

### 227-249. 'அன்பதுவேலியில்......நாடுகிழவோனே'

வீதிவிடங்கனாகிய இறைவன் திருக்கோயில் கொண்டு

விளங்குவதும், சிறந்த சோலைகள் நிறைந்து பலவகை வளங்களை உண்டாக்கும் காவிரி பாய்ந்து நலந்தருவதுமாகிய பொன்னி நாட்டுத் தலைவன் முதலாம் இராசராசன் பலவகைச் சிறப்பு களையும் பெற்று விளங்கியவன் என்பதை உணர்த்தும் அடிகள் இவை. முழுமையான விளக்கம் பெற இயலவில்லை. ஐம்பது வேலி ஒன்பது வேலி என்னும் ஊர்களை உடைய உரவோன் ; அம்பர் நாடன் ; ஆலங்குடிக்கோன் ; மூர்நாடன் ; மணற்குடிநாடன் ; நேரியன் ; நித்தவிநோதன் ; தன் காரியமல்லது பிறவற்றை நினை யாதவன் ; ஆண்களில் சிறந்த தலைமை வாய்ந்தவன் ; கற்பகம் போன்ற பலவகை உயர்வுகளை உடையவன் ; தலைமை வாய்ந்த புயங்களை உடையவன் ; கொடியவர்களின் கொடுமை நீங்கவும் இவ்வுலகத்தில் துன்பம் நீங்கவும் நாட்டினைத் தூய்மை செய்து இந்நில உலகில் புலிக்கொடியை உயர்த்தியவன் ; மதிசூடி வலம்புரி இடம் புரியுடைய இடபத்தில் வீற்றிருப்பவனாகிய சடைமுடியை யுடைய இறைவனின் நெற்றிக்கண்ணையும், நிலவுலகத்து மானிடர் நினைந்த தடையுடைக் கண்ணையும் சிந்தாமணியையும் போன்று சொழர்குலத்துத் தோன்றி, புகழ் வளர்த்தவன் இராசராசன் ஆவான்.

வெண்பா

1. அன்பது வேலி என்னும் ஊரில் தலைவன், வீதிவிடங்கன் என்றும், கம்பன் என்றும் பெயருடைய இராசராசனின் அலுவலருள் ஒருவன் திருக்கோவலூரில் எழுந்தருளிய இறைவனுக்குப் பொற்பூ ஒன்றினை முடியின் மேல் சூட்டி மகிழ்ந்தான்.

2. வேலியூர் வாழும் தலைவனாகிய அக்கம்பன் மூன்று கழஞ்சு பொன்னால் மணிப்பட்டமும் பூவுமாகிய அணி ஒன்றினை மிக அழகாகச் செய்து அவ் இறைவனுக்குக் கட்டினான்.

3. இராசராசனது இருபத்து ஏழாவது ஆட்சியாண்டில் வேலியூரில் வாழும் தலைவனாகிய கம்பன் என்பவன், மூவேந்த வேளான் என்பவன் விண்ணப்பிக்க, அதன் பேரில் நீர்வளமிக்க கோவலூர்விரட்டத்தில் இறைவன் எழுந்தருளுதற்கு நூறு கழஞ்சு பொன்னால் இலிங்கமொன்று செய்து அமைத்தான். மேலும் அந்த இலிங்கத்திற்குத் தொண்ணூற்றுமூன்று கழஞ்சு வெள்ளியால் பீடம் ஒன்று செய்து, அதன் மேல் ஐந்து கழஞ்சு பத்துமாப் பொன்னால் தகடு செய்து அமைத்தான்.

## 3

# முதலாம் இராசேந்திரன்

(கி. பி. 1012–1044)

ஸ்வஸ்திஸ்ரீ
திருமன்னி வளர இருநில மடந்தையும்
போர்ச்செயப் பாவையும் சீர்தனிச் செல்வியும்
தன்பெருந் தேவியர் ஆகி [1]இன்புற
[2]நெடிதியல் ஊழியுள் இடதுறை நாடும்
துடர்வன வேலிப் படர்வன வாசியும் 5
சுள்ளிச் சூழ்மதில் கொள்ளிப் பாக்கையும்
நண்ணற்கு [3]அருமரண் மண்ணைக் கடக்கமும்
[4]பொருகடல் ஈழத்து அரசர்தம் முடியும்
[5]ஆங்கவர் தேவியர் ஓங்கெழில் முடியும்
முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த 10
சுந்தர முடியும் இந்திரன் ஆரமும்
[6]தெண்திரை ஈழ மண்டலம் முழுவதும்
எறிபடைக் கேரளர் முறைமையிற் சூடும்
குலதனம் ஆகிய பலர்புகழ் முடியும்
செங்கதிர் மாலையுங் சங்கதிர் வேலைத் 15
தொல்பெருங் காவல் பல்பழந் தீவும்
செருவில் [7]சினவி இருபத்து ஒருகால்
அரைசுகளை கட்ட பரசு ராமன்
மேவருஞ் சாந்திமத் [8]தீவரண் கருதி
இருத்திய செம்பொன் திருத்தகு முடியும் 20
பயங்கொடு பழிமிக [9]முயங்கியில் முதுகிட்டு
ஒளித்தசய சிங்கன் அளப்பரும் புகழொடும்
பீடியல் இரட்ட பாடி ஏழரை
இலக்கமும் நவநிதிக் குலப்பெரு மலைகளும்
விக்கிரம வீரர் சக்கரக் கோட்டமும் 25
முதிர்பட வல்லை மதுரமண் டலமும்

---

1. இன்புறு. 2. நெடுதுயல், நெடுதுயர். 3. அருமுரண். 4. பொருதடர். 5. ஆங்கவன். 6. தென்றிசை. 7. சினவில். 8. திவவரண். 9. முசங்கியில்.

[10]காமிடை வளைய நாமணைக் [11]கோணமும்
[12]வெஞ்சிலை வீரர் பஞ்சப் பள்ளியும்
[13]பாசுடைப் பழன மாசுணித் தேசமும்
அயர்வில்வண் கீர்த்தி யாதிநக ரவையில் 30
சந்திரன் தொல்குலத் [14]திந்திர ரதனை
விளையமர்க் களத்துக் கிளையொடும் பிடித்துப்
பலதனத் தொடுநிறை குலதனக் குவையும்
கிட்டருஞ் செறிமிளை யொட்ட [15]விஷயமும்
பூசுரர் சேர்நல் [16]கோசல நாடும் 35
தன்ம பாலனை வெம்முனை யழித்து
[17]வண்டமர் சோலைத் தண்ட புத்தியும்
இரண சூரனை [18]முரணுறத் தாக்கித்
[19]திக்கணை கீர்த்தித் தக்கண லாடமும்
கோவிந்த சந்தன் மாவிழிந் தோடத் 40
தங்காத சாரல் வங்காள தேசமும்
தொடுகடல் சங்கு [20]கொட்டன்மகி பாலனை
வெஞ்சமர் [21]வளாகத்து அஞ்சுவித் தருளி
ஒண் திறல் யானையும் பெண்டிர்பண் டாரமும்
நித்தில நெடுங்கடல் உத்தர லாடமும் 45
[22]வெறிமலர்த் தீர்த்தத்து எறிபுனல் கங்கையும்
அலைகடல் நடுவுள் பலகலம் செலுத்திச்
சங்கிராம [23]விசையோத் துங்க வன்மன்
ஆகிய கடாரத்து அரசனை வாகயம்
பொருகடல் கும்பக் கரியொடும் [24]அகப்படுத்து 50
உரிமையில் பிறக்கிய பெருநிதிப் பிறக்கமும்
ஆர்த்தவன் அகநகர்ப் போர்த்தொழில் வாசலில்
[25]விச்சா தரதோ ரணமும் [26]முத்தொளிர்
[27]புனைமணிப் புதவமும் கனமணிக் கதவமும்
[28]நிறைசீர் விசயமும் துறைநீர்ப் பண்ணையும் 55
[29]நன்மலை [30]யூரெயில் [31]தொன்மலை யூரும்
ஆழ்கடல் அகழ்சூழ் [32]மாயிரு டிங்கமும்

---

10. தாமடைவளையமும், 11. கோணையும், 12. வெஞ்சின. 13. பாசடை. 14. திரதரனை. 15. விஷையமும். 16. கோசலை. 17. வண்டுறை. 18. முரணுகத். 19. திக்கெண், திக்கணை. 20. ஒட்டல், காடுஅடர். 21. விளாகத்து. 22. எறிமணல். 23. விஜயோத்துங்கபன்மன். 24. அகப்படப்பிடித்து. 25. விஜயதர. 26. மொய்த் தொளிர், 27. பன்மணி. 28. நிறைஶ்ரீ. 29. வன்மலை, மன்மலை. 30. வாரையில். 31. தென்மலையூரும். 32. மாஜிரிடிங்கமும்.

கலங்கா [33]வல்வினை இலங்கா அசோகமும்
[34]காப்புறு நிறைபுனல் மாப்பப் பாளமும்
காவலம் புரிசை [35]மேவிலிம் பங்கமும் 60
விளைப்பந் [36]தூருடை வளைப்பந் [37]தூரும்
கலாமுதிர்க் கடுந்திறல் இலாமுரித் தேசமும்
கலைத்தக் கோர்புகழ்த் தலைத்தக் கோலமும்
[38]தீதமர் வல்வினை மாதமா லிங்கமும்
[39]தேனக் கலர்பொழில் மானக்க வாரமும் 65
[40]தொடுகடற் காவல் கடுமுரண் கடாரமும்
[41]மாப்பொரு தண்டாற் கொண்ட
கோப்பர கேசரி பன்ம ரான
உடயார் ஸ்ரீஇராசேந்திரசோழ தேவர்க்கு யாண்டு
முப்பதாவது —

---

33, வல்விறல் 34. கோப்புறு; கோப்புற, 35. மேவலிம்பங்கமும், 36. தாறுடை, 37. தூறும், 38. திதமர்வல்விறல், 39. தேனக்கவார்பொழில், 40. தொடுமுரண், 41. மாப்பெருந்தண்டாற்.

# முதலாம் இராசேந்திரன்

## முன்னுரை

சோழப் பேரரசின் மன்னர் மன்னனாக விளங்கியவன் முதலாம் இராசராசன். அவன் பட்டத்தரசி திரிபுவனமாதேவி என்னும் சிறப்புப் பெயர் பெற்ற வானவன் மாதேவியே முதலாம் இராசேந்திரனை ஈன்றெடுத்த பேறுபெற்றவள் ஆவாள். இதனை,

> " யாண்டு நாலாவது திருவெண்காட தேவர்க்கு ஸ்ரீ
> இராசராசதேவர் நம்பிராட்டியார் தம்பிரானடிகள்
> வானவன் மாதேவியார் திரிபுவன மாதேவியார் ஸ்ரீ இராசேந்திர
> சோழதேவர் தங்களாச்சி உடையபிராட்டியார் சந்திராதித்தவல்
> எரிய வைத்த......"[1]

என்னும் கல்வெட்டுத் தொடர் அறிவிக்கிறது.

தந்தையைப் போன்ற சிறப்பு வாய்ந்த இராசேந்திரன் தன் நாட்டை மேலும் விரிவுபடுத்தினான். தந்தையை அடுத்துத் தஞ்சையில் முடிசூடினான். மாதேவடிகள், குந்தவை ஆகிய இருவரும் இராசேந்திரனின் உடன்பிறப்புகளாய்த் தோன்றியவர்கள். மார்கழித் திருவாதிரை நாளே இராசேந்திரனின் பிறந்த நாள் ஆகும்.

> "இராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு முப்பத்தொன்றாவது
> திருவொற்றியூருடைய மகாதேவர்க்கு உடையார் ஸ்ரீ
> இராசேந்திர சோழ தேவர் திருநாள் மார்கழித் திருவாதிரை
> ஞான்று நெய்யாடியருள வேண்டுமிசத்துக்கு......"[2]

என்னும் கல்வெட்டுத் தொடர் இராசேந்திரனது பிறந்த நாளைத் தெரிவிக்கிறது.

இராசராசனின் சிறிய தந்தை உத்தமசோழன், மதுராந்தகன் என்ற இயற்பெயர் பெற்றவன். அவன் ஆட்சியில் இளவரசுப் பட்டம் பெற்று, பதினறு ஆண்டு காலம் அவனிடம் அரசியல் அனுபவம் பெற்றவன் இராசராசன். எனவே தன் சிறிய தந்தையின் இயற்பெயராகிய மதுராந்தகன் என்னும் பெயரைத் தன் மகனுக்குச் சூட்டித் தன் அன்பையும் நன்றியுணர்வையும் வெளிப்படுத்தினான்.

ஆனால் தன் ஆட்சியில் அவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டிய போது இராசேந்திரன் என்னும் பெயரையும் சூட்டினான். இப்பெயரே இயற்பெயராய் நிலைபெற்றது.

---

1. தெ. இ. க. தொகுதி 5 - எண் 982 - பக். 368.
2. ,, தொகுதி-5 - எண் 1354 - பக். 492.

## மெய்க் கீர்த்தி

'திருமன்னி வளர' என்பது இராசேந்திரன் மெய்க்கீர்த்தியின் தொடக்கமாக அமைந்த மங்கல மொழித்தொடர். இவனது மூன்றாம் ஆண்டு முதல் மெய்க்கீர்த்தி காணப்படுகிறது. அம்முதல் மெய்க்கீர்த்தியிலேயே இத்தொடர் அமைந்துள்ளது. இந்த முழு மெய்க்கீர்த்தியும் இவனது பதின்மூன்றாம் ஆட்சி வரை வளர்ந்துள்ளது. அதன் பிறகு முப்பதாம் ஆட்சியாண்டு வரை இதே மெய்க்கீர்த்தி காணப்படுகிறது. எனவே பதின்மூன்றாம் ஆண்டிற்குப் பிறகு போர் எதுவும் இன்றி, ஆட்சியில் அமைதி நிலவியது என்பது புலனுகிறது.

இவனது ஆட்சியில் செல்வம் நிலைத்து வளர்ந்தது. நில மடந்தை, வெற்றிமடந்தை, புகழ் மடந்தை ஆகியோர் அவனுக்குத் துணைவியராகி விளங்கினர். இடைதுறை நாடு முதலாகக் கடாரம் ஈறாக உள்ள பல நாடுகளை வென்று, தனது நாட்டை விரிவு படுத்தினான். முறைப்படி பரகேசரி என்னும் பட்டப்பெயரைப் பெற்றான் என்பன இவனது மெய்க்கீர்த்தியில் காணப்பெறும் பொதுச்செய்திகள் ஆகும்.

### விளக்கம்

#### 1–3. "திருமன்னிவளர.........இன் புற"

இராசேந்திரனது ஆட்சியில் செல்வமானது நாளும் வளர்ந்து நிலைபேறுடையதாயிற்று. நிலமடந்தை இவனுக்குத் துணைவியாகி இன்புற்றாள். அதாவது பல நாடுகளை வென்று தன் நாட்டை விரிவுபடுத்தினன் ஆதலின் பரந்த நிலவுலகம் முழுமையும் இவனுக்குச் சொந்தமாயிற்று. அந்நிலவுலகம் முழுமையும் இவனது செங்கோல் ஆட்சியில் இன்பமுற்று விளங்கியது. இதேபோல இவன் ஈடுபட்ட போர்த்தொழில்கள் அனைத்திலும் வெற்றிமடந்தை இவனை அணைந்து இன்பமடைந்தாள். இவற்றால் புகழ் என்னும் மடந்தையும் இவனுக்கே உரியவளாகி மகிழ்ந்திருந்தாள். இக்கருத்துடன் கூடிய இத்தொடர்கள் இவனது வெற்றியையும் புகழையும் விளக்குவன.

#### 4. "நெடிதியல் ஊழியுள்"

இரண்டு ஆண்டுகள் இளவரசனுகவும் முப்பத்தொரு ஆண்டுகள் பேரரசனுகவும் செங்கோல் நடத்தியவன் ஆதலின் இவனது ஆட்சிக்காலம் ஊழி என்று சிறப்பிக்கப்படுகிறது. நாட்டின் நலங் கருதி நீண்ட காலம் நடைபெற்ற-நடத்தப்பெற்ற-செங்கோலாதலின் நெடிது இயல் என்ற அடைமொழியோடு அவ்வூழி கூறப்படுகிறது.

#### 4-12 "இடைதுறைநாடும்......ஈழமண்டலம் முழுவதும்"

இடைதுறை நாடு - கிருஷ்ணை, துங்கபத்திரை என்னும் இரு

ஆறுகளுக்கும் இடைப்பட்ட நிலப்பகுதி இடைதுறைநாடு எனப் பட்டது. இது இன்றைய மகாராஷ்டிர இராச்சியத்தைச் சேர்ந்த ரெய்ச்சூர் மாவட்டப் பகுதி எனலாம்.

வனவாசி – கங்கபாடிக்கு வடக்கிலும், நுளம்பபாடிக்கு மேற்கிலு மாக அமைந்த நிலப்பகுதி வனவாசி எனப்பட்டது. அது இன்றைய கர்நாடக மாநிலத்தின் வடமேற்குப் பகுதியாகும். இந்நாட்டின் நாற்புறமும் அடர்ந்த காடுகள் சூழ்ந்திருந்தன. அவையே சிறந்த அரணாக விளங்கின. இதனையே 'தொடர் வனவேலிப் படர் வனவாசி' என்ற தொடர் சுட்டுகிறது.

கொள்ளிப்பாக்கை–ஐதராபாத் நகரத்திற்கு வடகிழக்கே 72 கி.மீ. தொலைவில் உள்ளது. இப்பொழுது குல்பாக் என்ற பெயரை உடையது. சுள்ளி என்ற பெயரையுடைய ஆச்சாமரங்கள் நிறைந்த காடுகளை உடையது. சிறந்த மதிலையும் உடையுதாக விளங்கியது. அதாவது காட்டரணும் மதிலரணும் சூழ்ந்ந நகரம் கொள்ளிப் பாக்கை. இதனை 'சுள்ளிச் சூழ்மதில் கொள்ளிப்பாக்கை' என்ற தொடர் சுட்டுகிறது.

மண்ணைக்கடக்கம் – இராட்டிர கூடர்களின் தலைநகரமாக (பிறகு மேலைச் சாளுக்கியர் தலைநகர்) விளங்கிய மானியக்கேடம் என்பதே மண்ணைக்கடக்கம் எனப்பட்டது. இக்காலத்து 'மால் கெட்' என்று வழங்கப்படுகிறது. அது பகைவர்கள் நெருங்க முடியாத அரிய அரண்களை உடைய நகரம் ஆதலின் 'நண்ணற்கருமரண் மண்ணைக்கடக்கம் என்று சிறப்பித்துக் கூறப்பட்டது. 'நண்ணற் கருமுரண் மண்ணைக்கடக்கம்' எனக்கொண்டு, பகைவர் நெருங்குதற்கரிய வலிமை பொருந்திய நகரம் எனவும் கூறுவர்.[3]

இடைதுறை நாடு முதலிய நான்கும் மேலைச் சாளுக்கியர் ஆட்சிக்கு உட்பட்டிருந்தவை. இராசராசன் காலத்தில் இராசேந்திரன் வென்ற நாடுகள் இவை என்பது இராசராசன் மெய்க்கீர்த்தியால் அறியப்படுவதாகும். மேலைச் சாளுக்கிய மன்னன் சத்தியாசிரயனை இராசேந்திரன் வென்றான் என்ற செய்தி இதனை உறுதிப் படுத்துகிறது.

ஈழ மண்டலம் இராசராசன் நடத்திய சிங்களப் போரில் தோற்று ஓடியவன்சிங்கள மன்னன் ஐந்தாம் மகிந்தன், அவன் தன் உரிமை விரும்பி மீண்டும் பெரும்படையைத் திரட்டிக் கொண்டு சோழர் ஆண்ட பகுதியைத் தாக்கத் தொடங்கினான். அதனால் தன் தந்தை வென்ற நாட்டின் மீது மீண்டும் இராசேந்திரன் போர் தொடங்க வேண்டியதாயிற்று. இப்போரில் வெற்றி பெற்ற இராசேந்

---

3. சோழர் வரலாறு - பக். 217.

திரன் ஈழ நாட்டு மன்னர்களுக்குரிய முடியினையும் அவருடைய தேவியர்க்குரிய முடியினையும் கவர்ந்து தன் நாடு திரும்பினான்.

முதலாம் பராந்தக சோழனிடம் தோல்வியுற்ற பாண்டியன் இராசசிம்மன் சிங்கள மன்னன் உதவியை நாடிச் சென்றான். சிங்கள மன்னன் துப்புலன் உதவி செய்வதாகக் கூறிக் காலம் தாழ்த்தினான். காத்திருப்பதால் பயன் இல்லை என்று உணர்ந்த இராசசிம்மன் தன் தாயின் பிறந்த நாடாகிய சேரநாட்டை நோக்கிப் புறப்பட்டான். புறப்படுமுன் தன் முன்னோர் வழி தனக்குக் கிடைத்த சுந்தர முடியையும் பிற அரசச் சின்னங்களையும் சிங்கள மன்னனிடம் அடைக்கலமாக வைத்துச் சென்றான்.

பாண்டி நாட்டை வென்ற பராந்தகன் மதுரையில் முடிசூட்டு விழா நடத்த ஏற்பாடுகள் செய்தபோது பாண்டியர்க்குரிய முடியும் பிற அரசச் சின்னங்களும் அங்கு இல்லாமையை அறிந்தான். அவை இருக்கும் இடம் அறிந்து சிங்களத்தின் மீது படையை அனுப்பினான். போரில் பராந்தகன் படை வெற்றி பெற்றது. ஆயினும் முடியும் பிறவும் மறைத்து வைக்கப்பட்டு விட்டதனால் அவற்றைக் கைப்பற்ற முடியவில்லை. அந்தச் சுந்தர முடியையும் இந்திரன் ஆரம் முதலாகிய அரசச் சின்னங்களையும் இராசேந்திரன் கவர்ந்து வந்தான்.

"முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த
சுந்தர முடியும் இந்திரன் ஆரமும்" என்னும் இவ்வடிகள் இராசேந்திரனின் இச்செயல்களை உணர்த்துகின்றன. மேலும் அலை சூழ்ந்த ஈழ மண்டலம் முழுவதையும் தன் நாடு ஆக்கினான் என்பதையும் 'தெண்திரை ஈழ மண்டலம் முழுவதும்' என்னும் அடியால் அறிய முடிகிறது.

### 13-15. "எறிபடைக் கேரளர்.,....மாலையும்"

இவ்அடிகள் இவன் சேரநாட்டின் மீது படையெடுத்துச் சென்றான் என்பதை உணர்த்துவன. சேர மன்னருக்கு வழிவழி உரிமை உடையதாக இருந்ததும், சேர மன்னரின் குலச் செல்வமாக விளங்கியதும், பிற மன்னர்களால் புகழப்பெற்றதுமாகிய மணி முடியையும், ஒளிமிக்க நவரத்தினமாலையையும் தனக்குச் சொந்தமாக்கிக் கொண்டது இப்படையெடுப்பின் சிறப்பாகக் கூறப்படுகிறது.

### 15-16. "சங்கதிர் வேலை......பழந்தீவும்"

சேரநாட்டுப் போரை முடித்து மாலத் தீவுகளாகிய பழந்தீவினையும் கைப்பற்றினான். பழந்தீவு என்னும் கடல் சூழ் நிலப்

பரப்பினைச் சங்குகள் ஒலிக்கும் கடலால் சூழப்பட்ட பழந்தீவு; கடலரணாகிய சிறந்த காவலையுடைய பழந்தீவு; பலவாகிய பழந் தீவு என்று சிறப்பிக்கின்றன இத்தொடர்கள்.

## 17-20. "செருவில் சினவி......திருத்தகு முடியும்"

இருபத்தொரு தலைமுறைகளாக அரசர்களைக் கருவறுத்து வந்தான் பரசுராமன். அவனால் மன்னர்கள் அடைந்த துன்பங் களை உணர்ந்தான் இராசேந்திரன். ஆனால் பரசுராமனைக் காண இயலாமையால் அவனால் அமைக்கப்பெற்ற சாந்திமத் தீவினைக் கைப்பற்றினான். அடைதற்கரிய அரண்களையுடையது அத்தீவு. அங்கு பரசுராமனால் வைக்கப்பட்டிருந்ததாகக் கருதப் பட்ட செம்பொன் முடியைக் கவர்ந்து கொண்டான்.

## 21-24. "பயங்கொடு பழிமிக......குலப்பெரு மலைகளும்"

இராசேந்திரன் மேலைச் சாளுக்கிய மன்னனாகிய சயசிங்கனை முயங்கி என்னுமிடத்தில் தோற்கடித்து இரட்டபாடி ஏழரை இலக்கத்தைத் தன் ஆட்சியில் இணைத்துக்கொண்டு, மலை போன்ற பொருட்குவியலுடன் தன் நாடு திரும்பினான்.

முயங்கி (முசங்கி எனவும் வழங்குகிறது) என்பது பல்லாரி மாவட்டம், ஹார்பன அள்ளி வட்டத்திலுள்ள உச்சங்கிதுர்க்க மாகும்.

முயங்கிப் போரில் தோல்வியைத் தழுவிய சயசிங்கன் பயங்கர மான பழிக்கு ஆளாகித் தன் புகழையெல்லாம் இழந்தான்.

## 25-29. "விக்கிரமவீரர்......மாசுணித் தேசமும்"

### சக்கரக் கோட்டம் முதலியன—

கங்கை நீரைக் கொணர்ந்து தன் புதிய தலைநகரைத் தூய்மைப் படுத்த எண்ணிய இராசேந்திரன் வட நாட்டுப் படை யெடுப்பைத் தொடங்கினான். அப்படை எடுப்பின் முதலில் கொள்ளப்பட்டது சக்கரக் கோட்டம். இது விசாகப்பட்டினம் மாவட்டத்தின் வடமேற்கே மத்திய மாநிலத்தில் உள்ள வத்ச இராச்சியத்தில், இந்திராவதி ஆற்றின் தென் கரையில் உள்ள நிலப்பரப்பாகும். அதன் தலைநகர் இராசபுரம். அந்நகரமே இன்று சித்திரக்கோட்டா என வழங்கப்படுகிறது. அங்கு அரசாண்ட மன்னவர் நாகர் மரபினர் எனப்பட்டனர். மாசுணித் தேசம் என்பதும் நாகர் நாடு என்ற பொருளில் வந்த பெயரே. மதுர மண்டலம், நாமணைக் கோணம், பஞ்சப்பள்ளி ஆகிய

பகுதிகள் சக்கரக் கோட்டம், மாசுணித் தேசம் ஆகியவற்றை அடுத்து அமைந்தவை ஆகும். ஆற்றங்கரையில் அமைந்த நாடுகள் ; நாகர் மரபினர் வாழ்ந்த நாடுகள். எனவே அவை வல்லமை மிக்க வீரர் நிறைந்த சக்கரக் கோட்டம்; முதிர்ந்த பெருங்காடுகளை அரணாக உடைய மதுர மண்டலம்; சோலைகள் நெருங்கிச் சூழ்ந்த நாமணைக் கோணம்; கொடிய வில்லை உடைய வீரர் நிறைந்த பஞ்சப்பள்ளி; பசுமையான மருத நிலம் நிறைந்த மாசுணித் தேசம் என்றெல்லாம் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

## 30-35. "அயர்வில்வண் கீர்த்தி.....கோசலநாடும்"

**ஒட்ட விஷயம்; கோசல நாடு** - மத்திய மாநிலத்தில் உள்ள சட்டிஸ்கார் என்ற பகுதி பூர்வதேசம் என்று வழங்கப்பட்டது. அப்பூர்வதேசம் தென்கோசலத்தைச் சார்ந்தது. தென் கோசலத்தில் இருந்தவன் இந்திரரதன். எனவே கோசலமும், அதனை அடுத்த ஒட்டர தேசமாகிய ஒரிசா மாநிலப் பகுதியும் இந்திரரதனுக்குச் சொந்தமானவை என்று தெரிகிறது. இந்திரரதனுக்கும் இராசேந்திரன் படைக்கும் நிகழ்ந்த போர் ஆதிநகர் என்னுமிடத்தில் நடைபெற்றுள்ளது. எனவே மிகு புகழுடைய ஆதிநகர் என்று சிறப்பிக்கப்பட்டது. அப்போரில் ஒட்டரதேயத்தையும் கோசல நாட்டையும் கைக்கொண்டனர் இராசேந்திரன் படைவீரர்.

சந்திர குலத்துத் தோன்றியவன் இந்திரரதன். அவனையும் அவன் சுற்றத்தினரையும் அப்போர்க்களத்தில் சிறை செய்தனர் அப்படைவீரர். பலவகைச் செல்வங்களையும் கவர்ந்து சென்றனர். சோழர்படை கைப்பற்றிய ஒட்டர தேயம் செறிந்த காவற் காடுகளையுடையது. கோசலநாடு சிறந்த அந்தணர் நிறைந்தது.

## 36-45. "தன்ம பாலனை......உத்தரலாடமும்"

**தண்டபுத்தி** - வங்காளத்திலுள்ள மிதுனபுரி மாவட்டத்தின் தெற்கு, தென்மேற்குப் பகுதிகள் அடங்கிய நாடு தண்டபுத்தி எனப்பட்டது. சொர்ண ரேகை என்னும் ஆற்றின் இரு மருங்கிலுமாக அமைந்தது. ஒட்டர தேயத்துக்கும் வங்காளத்திற்கும் இடைப்பட்ட நிலப்பகுதி எனலாம். உத்தரலாடத்தை ஆண்ட மகிபாலனின் ஆட்சிக்கு உட்பட்ட குறுநில மன்னன் தன்மபாலன் என்பவன் தண்டபுத்தியை ஆண்டு வந்தான். சோழர்படை அவனை அழித்து நாட்டைக் கைப்பற்றியது.

**தக்கணலாடம்** - தக்கணலாடம் என்பது பிகார், வங்காள மாநிலங்களில் கங்கைஆற்றின் தென்கரையிலமைந்த பகுதியாகும். தண்டபுத்தி மண்டலத்தின் வடக்கே அமைந்தது. மிகு புகழ் பெற்ற

இப்பகுதியை மகிபாலனுக்கு அடங்கிய குறுநில மன்னன் இரண சூரன் ஆண்டு வந்தான். சோழர்படை அவனைத் தாக்கி அப் பகுதியைக் கைப்பற்றியது.

**வங்காள தேசம்** – கிழக்கு வங்காளம் வங்காள தேசம் என்றே அழைக்கப்பட்டது. குளிர் மிகுந்த பகுதி. அதனை ஆண்ட கோவிந்தசந்தனும் மகிபாலனின் பேரரசுக்கு உட்பட்ட சிற்றரசன் ஆவான். சோழர் படைக்குத் தோற்றுத் தன் குதிரையைப் போர்க் களத்தே விட்டு விட்டு அதனின்றும் இறங்கி ஓடி விட்டான். வங்காள தேசம் சோழர் வசமாயிற்று.

**உத்தரலாடம்** – கங்கையாற்றின் தென்கரையில் பீகார், வங்காள மாநிலங்களில் அமைந்தது உத்தரலாடம். தண்டபுத்தி மண்டலத்தின் வடக்கு, கிழக்கு ஆகிய திசைகளில் அமைந்த பகுதி. ஒரு பகுதி கடற்கரை உடையது. உத்தரலாடத்தை ஆண்ட பேரரசன் மகிபாலன் என்பவனை எதிர்த்த சோழர்படை, போர்க் களத்தில் அஞ்சி ஓடச் செய்தது. அவனுடைய யானை, உரிமை மகளிர், செல்வம் அனைத்தையும் கவர்ந்து உத்தரலாடத்தையும் கைப்பற்றியது.

## 46. "வெறிமலர்த் தீர்த்தத்து.........கங்கையும்"

நறுமணமிக்க மலர்களையுடைய தூய்மையாகிய கங்கைநீருடன் பலநாட்டுப் பொருள்களையும் கொண்டு தன் நாடு திரும்பினர் சோழர். கங்கை நீருடன் வெற்றி கொண்டு வரும் தன் படையைக் கோதாவரிக் கரையில் எதிர்கொண்டான் இராசேந்திரன்.

## 47-66. "அலைகடல் நடுவுள்.........கடாரமும்"

கடாரம்—

"குளிறு தெண்திரைக் குரை கடாரமும்
 கொண்டு மண்டலம் குடையுள் வைத்ததும்"[4].

என்பதனால் கடாரம் என்பது ஒரு கடற்கரைப்பட்டினம் என்பது தெளிவாகிறது. இது மலேயாத் தீவின் தென்பகுதியில் மேற்குக் கரையில் அமைந்துள்ள நகரமாகும். இன்று கெடா என வழங்கப் படுகிறது. இதனை ஆண்ட சங்கிராம விசையோத்துங்க வன்மன் எனபவனோடு இராசேந்திரன் போர் புரிந்து சிறைசெய்தான். இப்போர் வாகயம் என்னுமிடத்தில் நடைபெற்றது. அவனது பெருஞ்செல்வத்தையும், வித்தியாதர தோரணத்தையும், பட்டத்து

4. கலிங். பரணி 202.

யானையையும் கவர்ந்து வந்தான். ஆனால் அங்கு தன் ஆட்சியை நிறுவினான் இல்லை. இக்கடாரப் படையெடுப்பில் விசையோத்துங்க வன்மன் ஆளுகைக்கு உட்பட்டிருந்த பல சிறு நாடுகள் கைப்பற்றப்பட்டுள்ளன. அவை-

**விசயம்** - சுமத்திரா எனப்படும் சொர்ணத்தீவில் உள்ள பாலம்பாங்க் என்னும் நாடு அக்காலத்து ஸ்ரீ விசயநாடு எனப் பட்டது. இந்நாடு தமிழகத்துடன் வாணிகத் தொடர்பு கொண் டிருந்தது.

**பண்ணை** - இது சுமத்திராத் தீவின் கிழக்குக் கரையோரம் அமைந்துள்ளது. எனவே துறைநீர்ப் பண்ணை என்ற அடையோடு கூறப்படுகிறது. இன்று பனி, பனை என வழங்கப்படுகிறது.

**மலையூர்** - இதுவும் சுமத்திராத் தீவின் கடற்கரைப் பட்டின மாகும். மலையூர்எயில் என்று சிறப்பித்து வழங்கிய பெரிய மதில் சூழ்ந்த நாடு. இன்று ஜம்பி என்னும் பகுதியே மலையூர் என்பர்.

**மாயிருடிங்கம்** - ஸ்ரீ விசயப்பெருநாட்டின் வடபகுதியில் அமைந்த குறுநில அரசுகளுள் ஒன்று. ஜி-லோ-டிங்க் (இ-ரு-டிங்கம்) என்று வழங்கப்பட்டது. கடலையே அகழியாகக் கொண்டது.

**இலங்காசோகம்** - மலேயாத் தீபகற்பத்தின் தென் பகுதியில் அமைந்த நாடு.

**பப்பாளம்** - கிரா என்னும் பூசந்தியை அடுத்து அமைந்த நிலப்பகுதி. இதுவும் கடலைக் காப்பாகக் கொண்டது எனப்படு கிறது. மா பப்பாளம் என அடையொடு கூறப்பட்டுள்ளது.

**மேவிலிம்பங்கம்** - சிறந்த காவலையுடைய மதில் சூழ்ந்த நாடு.

**வளைப்பந்தூர்** - என்பது விளைப்பந்தூருடையது என்ற அடையோடு கூறப்படுகிறது. இவை இன்று எந்தப்பகுதி என அறிய இயலவில்லை.

**இலாமுரி** - சுமத்திராவின் வடபகுதியில் இருந்த நாடு.

**தக்கோலம்** - கிராபூசந்திக்குத் தெற்கே மலேயாவின் மேற் புறத்திலுள்ளது தகோபா மாவட்டம். அதன் தலைநகர் தகோபா. அதுவே தக்கோலம் எனப்பட்டது. தக்கோலம் அல்லது தக்கோலி என்பது கற்பூரம், ஏலம், இலவங்கம் போன்ற மணப்பொருள்களில்

ஒன்று. அப்பொருள் தக்கோலத்திலிருந்து தமிழகத்தில் இறக்குமதி செய்யப்பட்டது. எனவே இந்நகரம் தமிழகத்தோடு வாணிகத் தொடர்புடையது என்பது புலனாகிறது. சிறந்த கலைஞர்களால் புகழப்பட்டது ஆதலின் தலைத்தக்கோலம் எனப்பட்டது.

**தமாலிங்கம்** - மலேயாவின் கீழைக்கரையில் குவாண்டன் என்னும் ஆறு கடலொடு கலக்குமிடத்தில் உள்ளது தமாலிங்கம். இன்று தெமிலிங் என்று வழங்கப்படுகிறது. மா தமாலிங்கம் என்று சிறப்பிக்கப்படுகிறது.

**நக்கவாரம்** - வங்கக் கடலில் உள்ள நிக்கோபார் தீவுகளை நக்கவாரம் என்று வழங்கி வந்தனர். அங்கிருந்து வரும் ஒருவகைத் தென்னங்கன்றுகளை நக்கவாரம் பிள்ளை என்று கூறும் வழக்கு இன்றும் உள்ளது.

இவை அனைத்தும் அடங்கிய பெருநிலப்பரப்பு ஸ்ரீ விசயநாடு எனப்பட்டது. இவற்றின் பெருநகரமாகிய கடாரம் என்ற பெயராலும் இப்பெரு நிலப்பரப்பு குறிப்பிடப்படுகிறது.

ஸ்ரீ விசயநாட்டுச் சூளாமணிவர்மன் நாகப்பட்டினத்தில் சூளாமணிபன்ம விகாரம் என்னும் பெயரால் பௌத்தப்பள்ளி ஒன்றினைக் கட்டினான். அதற்கு முதலாம் இராசராசன் ஆனை மங்கலம் என்னும் ஊரைப் பள்ளிச்சந்தமாகக் கொடுத்தான். இச்செயலை,

> "கிடாரத்து அரையன் சூளாமணி பன்மன் .... நாகப்பட்டினத்து
> எடுப்பிக்கின்ற சூளாமணிபன்மவிஹாரத்துப் பள்ளிக்கு
> வேண்டும் நிவந்தத்துக்கு க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுப்
> பட்டனக் கூற்றத்து ஆனைமங்கலம் பள்ளிச்சந்தம்

.........இறுப்பதாக"[5] என்னும் பெரிய லெய்டன் செப்பேட்டு வரிகள் உணர்த்துகின்றன. இதில் கூறப்படும் சூளாமணிவர்மனின் பெயரனே இராசேந்திரனிடம் தோல்வியுற்ற சங்கிராம விசையோத் துங்க வன்மன் ஆவான்.

முதலாம் இராசேந்திரன் சோழமன்னர் அரச முறைப்படி பரகேசரி என்னும் பட்டப்பெயரோடு முடி சூடியவனாவான்.

**முடிவு** - மிகப்பரந்த நாடுகளில் படையெடுத்தவன் இராசேந் திரனே. அவனுடைய படையெடுப்பு கங்கை முதல் கடாரம் வரை பரந்துள்ளது. இதனை,

---

5. கல்வெட்டு (ஓர் அறிமுகம்) பக்-30-31

''களிறு கங்கைநீர் உண்ண மண்ணையில்
காய் சினத்தொடே கலவு செம்பியன்
குளிறு தெண்திரைக் குரை கடாரமும்
கொண்டு மண்டலம் குடையுள் வைத்ததும்''[6]
'.......................................தண்டு ஏவிக்
கங்கா நதியும் கடாரமும் கைக்கொண்டு
கங்கா புரிபுரந்த கற்பகம்''[7]
''கங்கா நதியும் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியர்கோன்''[8]

என்னும் கூற்றுகள் வலியுறுத்துகின்றன. இவற்றுள் கங்காபுரி என்றது கங்கை கொண்ட சோழபுரத்தையே ஆகும்.

கங்கை நீர்க் கொண்டு வந்து தன் புதிய தலைநகரைத் தூய்மை செய்ததும், சோழகங்கம் ஏரியில் அந்நீரைக் கலந்ததுமாகிய சிறப்புச் செயல்களைச் செய்துள்ளான். கங்கைநீர் கொண்டு திரும்புங்கால் வேங்கை நாட்டில் இருந்த தன் தங்கை குந்தவையின் மகன் இராசராச நரேந்திரனுக்கு வேங்கை நாட்டை அளித்து முடி சூட்டு விழா நடத்தி, தன்மகள் அம்மங்காதேவியை அவனுக்கு மணம் முடித்து வைத்தான் என்பனவும் அவன் வரலாற்றுச் செய்திகளாகும்.

---

6. கலிங். பரணி-202 ; 7. விக்கிரம சோழன் உலா-34-36.
8. குலோத். உலா-49-50.

4

# முதலாம் இராசாதிராசன்

(கி.பி. 1018–1054)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

திங்களேர் [1]பெறவளர் அங்கதிர்க் [2]கடவுள்
தொல்குலம் விளங்கத் தோன்றி மல்கிய
வடதிசைக் கங்கையும் தென்திசை இலங்கையும்
குடதிசை மகோததையும் குணதிசைக் கடாரமும்
[3]தண்டினில் கொண்ட தாதைதன் மண்டல 5
வெண்குடை [4]நிழலெனத் தண்குடை நிழற்றித்
திசைதொறும் செங்கோல் ஓச்சி [5]இசைகெழு
தென்னவன் மானா பரணன் பொன்முடிப்
[6]பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வேணாட் டரசைச் சேணாட் டொதுக்கிக் 10
கூவகத் [7]தரசைச் சேவகந் தொலைத்து
வேலைகெழு காந்தளூர்ச் சாலைகல [8]மறுத்ததற்பின்
தன்குலத் தவனிபர் நன்குதரு தகைமையில்
அரசிய லுரிமை முறைமையி லேத்தி
[9]வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர் 15
வல்லவர் முதலாய் வணங்கவீற் றிருந்து
தராதலம் படைத்த திக்கேழும் துதிகெழு
செயங்கொண்ட சோழ னென்னும் [10]மதிகெழு
கோவிராச கேசரிபன்மரான உடையார் ஸ்ரீ இராசாதிராச
தேவர்க்கு யாண்டு 26ஆவது..........

---

1. பிறவளர். 2. கமர்ட்டொல்குலம். 3. தண்டாற் கொண்ட, 4. நிழற்கீழ். 5. மலிகெழு. 6. ஆநாப்பருமணி. 7. அரசனை. 8. மறுத்தளித்து. 9. வில்லவன் வானவன். 10. பதிகெழு.

## மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்திஸ்ரீ

திங்களேர் தருதன் தொங்கல்வெண் குடைக்கீழ்
நிலமகள் நிலவ மலர்மகள் புணர்ந்து
செங்கோல் ஓச்சிக் கருங்கலி கடிந்துதன்
சிறிய[1]தா தையையும் திருத்தமை யனையும்
குறிக்கொள்தன் இளங்கோக் களையும் நெறியுணர் 5
தன் திருப் புதல்வர் தம்மையும் துன்றெழில்
வானவன் வில்லவன் மீனவன் கங்கன்
இலங்கையர்க் கிறைவன் பொலங்கழற் பல்லவன்
கன்ன குச்சியர்க் காவலன்எனப் பொன்னணிச்
சுடர்மணி மகுடம் சூட்டிப் படர்புகழ் 10
ஆங்கவர்க்கு அவர்நாடு அருளிப் [2]பாங்குறு
மாதா தைமுன் வந்த போதலர்
தெரியல் விக்கிரம நாரணர்தன் சக்கரன்
அடிபடுத் தருளிக் கந்தவன் அவதரித்து
ஒருபதாம் நாளால் திருமணி மௌலி 15
வாழியா பன்எதிர் சோழனெனப் புனைந்து
மன்னுபல் ஊழியுள் தென்னவர் மூவருள்
மானா பரணன் பொன்முடி ஆனாப்
[3]பருமணிப் பசுந்தலை பொருகளத் தரிந்து
வார்அள வியகழல் வீரகே ரளனை 20
முனைவயிற் பிடித்துதன் ஆனைக் கிடுவித்து
அத்திவாரணக் களிற்றால் உதைப்பித் தருளி
அந்தமில் பெரும்புகழ் சுந்தர பாண்டியன்
[4]கொற்றவெண் குடையும் கற்றைவெண் கவரியும்
சிங்கா தனமும் வெங்களத்து இழிந்துதன் 25
முடிவிழத் தலைவிரித்து அடிதளர்ந் தோட
தொல்லை முல்லையூர் துரத்தி ஒல்கலில்
வேணாட்டு அரசைச் சேணாட்டு ஒதுக்கி
மேவுபுகழ் இராமகுட மூவர்கெட முனிந்து
[5]மிடல்கெழு வில்லவன் குடர்மடிக் கொண்டுதன் 30
நாடுவிட்டு ஓடிக் காடுபுக்கு ஒளிப்ப

---

1. தாதையும். 2. பாங்கவர், 3. பருமதிட், 4. ஒற்றை, 5. மிடல் கொழு.

வஞ்சியம் புதுமலர் மலைந்தாங்கு எஞ்சலில்
வேலைகெழு காந்தளூர்ச் சாலைகலம் [6]அறுப்பித்து
ஆகவ மல்லனும் அஞ்சக் [7]கேவுதன்
தாங்கரும் படையால் ஆங்கவன் சேனையுள் 35
கண்டப் பய்யனும் கங்கா தரனும்
வண்டமர் களிற்றொடு மடியத் திண்திறல்
விருதர் விக்கியும் விசையா தித்தனும்
[8]தருமுரட் சாங்க மய்யனும் முதலினர்
சமர பீருவொத் துடைய [9]நிமிர்சுடர் 40
பொன்னோடு அய்ங்கரிப் புரவியொடும் பிடித்துத்
தன்னாடை யிற்சயங் கொண்டு [10]துன்னார்
கொள்ளிப் பாக்கை உள்ளெரி மடுப்பித்து
ஒருதனித் தண்டால் பொருகடல் இலங்கையர்க்
[11]கோமான் விக்கிரம பாகுவின் மகுடமும் 45
முன்றனக்கு உடைந்த தென்றமிழ் மண்டலம்
முழுவதும் இழந்து ஏழ்கடல் ஈழம்
[12]புக்க இலங்கேச னாகிய விக்கிரம
பாண்டியன் பருமணி மகுடமும் காண்டகு
[13]தன்னது ஆகிய கன்னகுச் சியினும் 50
ஆர்கலி ஈழம் சீரிதென் றெண்ணி
உளங்கொள் நாடுதன் னுறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
பொருகளத் தஞ்சிதன் கார்க்களி றிழிந்து
கவ்வையுற் றோடிக் காதலி யொடுந்தன் 55
றவ்வையைப் பிடித்துத் தாயை மூக்கரிய
ஆங்கவ மானம் நீங்குதற் காக
மீண்டும் வந்து வாட்டொழில் [14]புரிந்து
வெங்களத்து உலந்தஅச் சிங்களத் தரைசன்
பொன்னணி முடியும் கன்னரன் வழிவந்து 60
உறைகொள் ஈழத் தரைசனா கியசீர்
வல்லவன் மதன ராசன் எல்லொளித்
தடமணி முடியும் கொண்டு வடபுலத்து
இருகா லாவதும் பொருபடை நடாத்தி

---

6. அறுத்து. 7. கௌதன்; கேதுவந்தன். 8. கருமுரட். 9. விரிசுடர். 10. ஒன்னார். 11. கோமகன்.. 12. இலங்கேசுரனாகிய. 13. தன்னது ஆக்கித்தன். 14. உழந்து.

கண்டரன் தினகரன் நாரணன் கணவதி 65
வண்டலர் தெரியல் மதுசூ தனனென்று
எனைப்பல வரையரை முனைவயிற் றுரத்தி
வம்பலர் தருபொழில் கம்பிலி நகருள்
சளுக்கியர் மாளிகைத் [15]தகர்ப்பித்து இளக்கமில்
வில்லவர் மீனவர் வேள்குலச் சளுக்கியர் 70
வல்லவர் கௌசலர் வங்கணர் கொங்கணர்
சிந்துரர் ஐயணர் சிங்களர் பங்களர்
அந்திரர் முதலிய அரைசரிடு திரைகளும்
ஆறிலொன்று அவனியுள் கூறுகொள் [16]பொருள்களும்
உகந்துநான் மறையவர் முகந்துகொளக் கொடுத்து 75
விசுவலோகத்து விளங்க மனுநெறி நின்று
அஸ்வமேத யாகஞ்செய் தரசுவீற் றிருந்த
சயங்கொண்ட சோழன் உயர்ந்த பெரும்புகழ்
கோவிராச கேசரி பன்ம ரான
உடையார் ஸ்ரீ இராசாதிராசதேவர்க்கு 80
யாண்டு 30 ஆவது

## 6

### மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

திங்களேர் தருதன் தொங்கல்வெண் [1]குடைக்கீழ்
நிலமகள் நிலவ மலர்மகள் புணர்ந்து
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தந்தையர் [2]தமயர் தம்பியர் தன் திரு
[3]மைந்தரென் றிவரை மணிமுடி சூட்டிக் 5
கன்னி காவலர் தென்னவர் மூவருள்
வானகம் [4]இருவருக் கருளிக் கானகம்
[5]ஒருவனுக் களித்துப் பொருசிலைச் சேரலன்

---

15. தகர்ப்பிக் குளக்கமில். 16. பொன்களும்.
1. குழைநிழற்கீழ். 2. தமயன். 3. மைந்தனென்றிவரை. 4. ஒருவனுக்.
5. இருவருக்.

வேலைகெழு காந்தளூர்ச் சாலைகல [6]மறுத்து
[7]இலங்கையர்க் கரசையும் அலங்கல்[8]வல் லபனையும் 10
கன்ன குச்சியர்க் [9]காவலனையும் பொன்னணி
முடித்தலை தடிந்துதன் கொடிப்படை ஏவிக்
கன்னா டகர்[10]விடு கடகரி புரளத்
தன்னா டையிற்றமிழ்ப் பரணிகொண் டொன்னார்
[11]வச்சிர நெடுவாள் விச்சயன் [12]வெருநெளித்து 15
அஞ்சி ஓடத்தன் [13]வஞ்சியம் படையால்
ஆங்கவன் பிதாவை மாதாவொடு [14]சதர்மலி
[15]வீங்குநீர்ப் பூண்டூர் வெஞ்சமத் [16]தகப்படுத்து
[17]அயப்படை ஆகவ மல்லன் பயத்தொடும்
[18]வரவிடும் ஒற்றரை [19]வெருவரப் பிடித்து 20
ஆங்கவர் [20]மார்பில் ஆகவ மல்லன்
[21]யாங்ஙனம் அஞ்சினன் என்னநன் கெழுதிச்
செலுத்திய [22]பின்னைத்தன் [23]புலிக்கொடிப் படைஞர்
ஒட்டவரி [24]வாரண வரசைக் கடல்புரைச்
சிறுதுறைப் பெருந்துறைத் தெய்வவீம ரசியென்று 25
உறுதுறை மூன்றிலும் [25]ஒளிர்புன லாட்டுவித்து
[26]ஆங்கவர் ஏத்தக் கிரியினில் ஓங்கிகல்
உழுவையே றெழுதி உயர்ஜயஸ் தம்பம்
எழுல்பெற நிறுத்தித்தன் கழல்பணிந் தொழுகும்
[27]அரசர்க ளோடுசென் றாடிப் பொருபுலி 30
[28]வீரக் கொடியொடு தியாகக்கொடி யெடுத்து
ஒன்னலர் கவர்ந்த தொன்னிதிப் பிறக்கம்
[29]இரவலர் ஆனோர்க்கு ஈந்தவன் தண்டத்துக்கு
[30]அவர்வெல் புரவி நுளம்பனும் காளி
தாசனும் விளம்பரும் தார்ச்சா முண்டனும் 35
[31]போர்க்கொம் மய்யனும் வில்லவர் அரசனும்

---

6. மறுப்பித்து ; மறுத்தருளி. 7. இலங்கைக் கரசையும் 8. வல்லவனையும். 9. காவலன்றன்னையும். 10. விடுகரிபுரன, 11. வஞ்சிர. 12. வெருவி. 13. வஞ்சிப்படையால். 14. சதாமலிவிங்குதன். 15. வீங்குநீர் புண்டுர ; விரம்பூண்டுர. 16. தடலேர். 17. அப்படை. 18. அவர்விடும் ஒற்றரை. 19. வெருவப்பிடித்து. 20, மார்வில். 21. ஆங்கனும். 22, பின்தன் 23. புலிப்படைஏவி. 24. வாரணக்கடல்புரை. 25. உள்புனலாட்டி. 26 ஆங்கவன் ஏதக் கிரியில். 27. அரசரோடு செண்டாடிப். 28.. வீரக்கொடியெடுத்து. 29. இரவலர்க்கீந்து வல்லிவன் விடுதண்டத்துக். 30. அவன்வில் புரவி. 31. பொற்கொம்மயனும்.

வெஞ்சமத் [32]திரியஅவர் பெருநிதி கவர்ந்து
[33]கூர்ச்சரை சாரணை உப்பளர் கொய்மலர்
பசுந்தலை [34]தராததயி லப்பன் [35]தடிந்துமுன்
[36]தகைவன தப்பைமுன் அப்பகை செகுத்து 40
உப்பளன் [37]வழியிற் தப்பிய வரசர்
ஆங்கது [38]மீட்க மாட்டாது தனது
பூங்கழல் சரணெனப் [39]புக்கவர்க் கருளித்
தட்முடி மீட்டுக் கொடுத்து அவரரண்
அவருக் களித்த தடங்கவன தப்பையைப் 45
பறித்துடன் கொண்டு [40]போது றைப்புனல்
இரட்ட பாடியெரி மடுத்தவ் விரட்டம்
ஏழரை இலக்கமும் மதிமுன் ஆண்டு
அறத்துறந் தஞ்சியும் அஞ்சா சுரத்து
வெஞ்சமங் கருதி விடவந்த பெற்கடை 50
முன்பெரி தவர்க்குக் குறைவரைந் தொன்னலர்
அறைகழல் தன்புகழ் . . .மா பாட்டரில்
ஒருவனைப் பெண்ணுடை உடுத்தி ஒருவனை
அஞ்சு சிகைபடச் சிரப்பித்து நொந்தழி
ஆகவ மல்லியும் ஆகவ மல்லனும் 55
என்றுபெயர் எடுத்து அன்றவன் விடுத்த
பெற்கடை தன்னுடன் போக்கி வற்குடன்
விட்டினி விடாதுசென் றொட்டி முதுகிடப்
பொருதுதன் கதப்புலி தண்டின் [41]முன்னோர்
கைமலை தடவிக் கல்யாண புரம்என்னுந் 60
தொல்நகர் துகளெழத் தகைப்பித் தன்னகர்
அரசுறை கருமா ளிகைப்பொடி யாக்கி
ஆங்கது காத்து நின்ற பூங்கழல்
அடலா கத்தன் முதலினர் கட களிற்று
அரசர் முப்பத்து [42]ஐங்கரி யோடும் 65
பரியொடும் பட்டுகப் பொருதுஅப் பெருநகர்
விசைய ராசேந் திரன்என் றர்ங்கிக
வீராபி ஷேகம் செய்து சீர்கெழு

---

32, ஆங்கவர். 33. கூற்றரானுளப்பன். 34. தாரதை; தராத்தயிலப்பன். 35. தடிந்து முந்கொண்டு. 36. தகைவந்த பழைமுன்றை அப்பகை. 37. வழியிற் பிறந்த. 38. மிழக்க. 39. புகுந்தவரணவர்க்களித்த. 40. போந்தபின் 41. முன்னோர்தமியந்நெறி......க்கைய்மலைதடவி. 42. ஐங்கரியொடும்.

விசுவலோ கத்து விளங்குமனு நெறிநின்று
அசுவமே தஞ்செய் தரசுவீற் றிருந்த 70
[43]ஜயங்கொண்ட சோழன் உயர்ந்த பெரும்புகழ்
கோவிராசகேசரி வன்மரான உடையார் ஸ்ரீ ராசாதிராச
தேவர்க்கு யாண்டு 33ஆவது......

# முதலாம் இராசாதிராசன்

## முன்னுரை

சோழப்பேரரசை நிறுவியவன் முதலாம் இராசராசன். அதனை மேலும் விரிவுபடுத்தி வலிவுடையதாகச் செய்தவன் அவன் மகன் இராசேந்திரன். முதலாம் இராசேந்திரனின் மக்களுள் முதலாம் இராசாதிராசன் இராசேந்திரனை அடுத்து பட்டத்திற்கு வந்தான். இவனை அடுத்து இரண்டாம் இராசேந்திரன், வீர ராசேந்திரன் ஆகியோர் சோழப் பேரரசின் பட்டம் எய்தினர். இவர்கள் மூவருமே முதலாம் இராசேந்திரனின் மக்களாவர்.

முதலாம் இராசாதிராசன் பூர நாளில் பிறந்தவன். தன் தந்தை புதியதாக அமைத்த கங்கை கொண்ட சோழபுரத்தையே தன் தலைநகராகக் கொண்டவன். இவனுடைய மெய்க்கீர்த்திகள் நான்கு வகையாக அமைந்துள்ளன. ஒன்று 'திங்களேர் பெறவளர் அங்கதிர்க் கடவுள்' என்ற தொடக்க அடியினை உடையது. இரண்டாவது 'திங்களேர் தருதன் தொங்கல்வெண்குடைக்கீழ்' என்னும் அடியோடு தொடங்குகிறது. மூன்றாவது 'திங்களேர் தருதன் தொங்கல்வெண் குடைக்கீழ்' என்ற தொடக்க அடியினையே உடையதாயினும் நான்காவது அடிமுதல் முழுமையாக வேறுபட்ட அடிகளோடு அமைந்துள்ளது. நான்காவது 'திருக்கொடியொடு தியாகக் கொடி எடுத்து' என்று தொடங்கும் சிறிய அளவினையுடையது.

## மெய்க்கீர்த்திச் செய்திகள்

1. இராசாதிராசனின் தந்தையாகிய இராசேந்திரன் வடக்கே கங்கையும், தெற்கே இலங்கையும், மேற்கே பெருங்கடலும், கிழக்கே கடாரமும் ஆகிய நான்கு எல்லைக்குட்பட்ட பரந்த நிலப்பரப்பைத் தன் ஆணையின்கீழ்ப் பெற்றிருந்தான். இராசாதிராசனும் அந்த நிலப்பரப்பைத் தன் வெண்கொற்றக்குடை நிழலில் செங்கோலோச்

43. ஜயங்கொண்ட..... லாகி பேரெண்டிசை நிறைந்தகிர் .....யாண்டு.

சினான். மேலும், பாண்டிநாடு, வேணாடு, கூவகம், காந்தளூர்ச் சாலை போன்ற பிற நாடுகளிலும் படையெடுத்துச் சென்றிருக்கிறான். செயங்கொண்ட சோழன் என்னும் சிறப்புப்பெயரையும் பெற்றவன். இராசகேசரி என்னும் பட்டப்பெயர் உடையவன்.

2. இராசாதிராசன் தன் ஆட்சியில் தன் சிறிய தந்தை, தமையன், தம்பியர், தன் மக்கள் ஆகியோருக்குத் தன் நாட்டில் சில பகுதிகளை ஒதுக்கி அவர்களுக்கு முடி சூட்டினான்.

மானாபரணன், வீரகேரளன் ஆகிய இரு பாண்டிய மன்னரையும் வென்றான். சுந்தரபாண்டியனைத் தோற்றோடச் செய்தான். வேணாட்டு மன்னன், இராமகுட நாட்டு மன்னன், சாளுக்கிய மன்னன் ஆகியோரைப் போரில் தோற்கடித்தான். ஆகவமல்லனின் படைத் தலைவர்களாகிய கண்டப்பய்யன், கங்காதரன், சாங்கமய்யன், ஆகியோரைக் கொன்றான். ஆகவமல்லனின் மக்களாகிய விக்கியண்ணன், விசயாதித்தன் ஆகியோரையும் வென்றான். கொள்ளிப்பாக்கைக்கு எரியூட்டினான். இலங்கை மன்னன் விக்கிரமவாகுவை வென்று, பாண்டியர் முடியைக் கவர்ந்தான். வீரசலாமேகனை வென்று, அவன் தாயையும் மனைவியையும் தமக்கையையும் சிறை செய்தான். சீவல்லபன் என்னும் கன்னர மன்னன், கண்டரன், தினகரன், நாரணன், கணபதி, மதுசூதனன் என்னும் வடபுல மன்னர் ஆகியோரைத் துரத்தினான். வில்லவர், மீனவர், சாளுக்கியர் . . . போன்ற பல மன்னர்களை அடக்கி அவர்கள் அளித்த திறைப் பொருள்களை மறையவருக்கு அளித்தான். அசுவமேத யாகம் செய்து அரசு வீற்றிருந்தான்.

3. இராசாதிராசன் தன் செங்கோலாட்சியில் தந்தை, தமையர், தம்பியர், மக்கள் ஆகியோருக்கு மணிமுடி சூட்டினான். பாண்டிய மன்னர் மூவருள் இருவரைக் கொன்று ஒருவனைத் தோற்றோடச் செய்தான். காந்தளூர்ச்சாலை கப்பற்படையை அழித்தான். இலங்கை, கன்னகுச்சி ஆகிய நாட்டு மன்னரைக் கொன்றான். விச்சயன் போன்ற பல சாளுக்கிய மன்னர்களை வென்றான். படைத்தலைவர்களைப் புறங்காட்டி ஓடச் செய்தான். சாளுக்கியர் மாளிகைக்கு எரியூட்டினான். ஆகவ மல்லனின் ஒற்றரைப் பிடித்து அவர்கள் மார்பில் ஆகவ மல்லனின் அச்சத்தை எழுதித் துரத்தினான். சிறுதுறை, பெருந்துறை, தெய்வ வீமரசி என்ற மூன்று நீர்த்துறைகளிலும் தன் யானைப் படையை நீராடச் செய்தான். இவ்வாறு விரக்கொடியும் தியாகக் கொடியும் எடுத்து, தான் கவர்ந்த பொருள்களை இரவலர்க்கு அளித்தான், கூர்ச்சரர் முதலிய அரசர்களை வென்றான். தம்மிடம் அடைக்கலம் புகுந்தவர்களுக்குரிய நாட்டை அவர்களுக்கே அளித்தான். ஆகவ மல்லனின் ஆட்களில் ஒருவனுக்கு ஐங்குடுமி வைத்தும், ஒருவனுக்குப் பெண்ணுடை உடுத்

தியும் முறையே ஆகவமல்லன், ஆகவமல்லி எனப் பெயரிட்டு இழிவு படுத்தினான். கல்யாணபுரம் என்னும் நகரை அழித்து, மாளிகையைப் பொடியாக்கி அவ்விடத்திலேயே விசய ராசேந்திரன் என்ற பெயரோடு விசயாபிஷேகம் செய்துகொண்டான்.

4. 'திருக்கொடியொடு தியாகக்கொடி எடுத்து' என்று தொடங்கும் சில வரிகளோடு கூடிய மெய்க்கீர்த்தி மேற்கூறிய செயல்களுள் சிலவற்றை உட்கொண்டுள்ளது.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

### 1-2. "திங்களேர் . . . . . தோன்றி மல்கிய"

சோழர் சூரிய குலத்தைச் சேர்ந்தவர் என்பது மரபு.
"செங்கதிர்ச் செல்வன் திருக்குலம் விளக்கும்" [1]
"செஞ்சுடர் மௌலி வெஞ்சுடர் வானவன்
வழிமுதல் வந்த மகிபதி" [2]

இவ்வடிகளுள் கூறப்படும் (இராசராசன் மெய்க். புதியது) செங்கதிர்ச் செல்வன், வெஞ்சுடர்வானவன் என்பன சூரியனைக் குறிப்பன. ஞாயிற்றின் கதிர்களால் திங்கள் ஒளி பெறுகின்றான் என்பது அறிவியல் முடிபு. எனவே திங்களுக்கு அழகூட்டி நிற்பவன் சூரியன் எனச்சுட்டி, அச்சூரிய குலத்தோன்றலாய் விளங்கியவன் இராசாதிராசன் என்பதை விளக்குகின்றன இவ்வடிகள்.

### 3-7. "வடதிசை.........செங்கோல் ஓச்சி"

இராசாதிராசன் தன் தந்தையாகிய இராசேந்திரனுடைய நாடு முழுவதையும் தன் செங்கோலின்கீழ்க் கொண்டு நல்லாட்சியை நடத்தினான். இராசேந்திரனுடைய நாடு வடக்கே கங்கையையும், தெற்கே இலங்கையையும், மேற்கே கடலையும், கிழக்கே கடாரத்தையும் எல்லையாகக் கொண்டு விளங்கியது. பெரும்படையை உடையவன் இராசேந்திரன் ஆதலின் அப்படை வலிமையால் இப்பரந்த நிலப்பரப்பைத் தன்னது ஆக்கினான் என்பதைத் 'தண்டினில் கொண்ட தாதை' என்னும் தொடர் உணர்த்துகிறது. "மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பர கேசரி" என்றே கூறுகிறது இராசேந்திரன் மெய்க்கீர்த்தி.[3]

### 7-9. "இசைகெழு தென்னவன்.........பொருகளத்து அரிந்து"

---

1. மணிமேகலை - பதிகம், வரி. 9; 2. இராசராசன் மெய்க். 2. 8-9
3. இராசேந்திரன் மெய்க்கீர்த்தி - வரி- 67

தந்தை வென்றளித்த நாடுகளோடு இராசாதி ராசன் போர் செய்து பெற்ற நாடுகளுள் பாண்டிய நாடும் ஒன்று. பாண்டிய மன்னர் தன்னுரிமை பெற அடிக்கடி கிளர்ச்சி செய்து வந்தனர். அதனால் மீண்டும் பாண்டிய நாட்டுப்போர் மேற்கொள்ளப்பட்டது. பாண்டியன் மானாபரணன் என்பவனின் மணிமுடியணிந்த தலையை அரிந்து பாண்டி நாடு கைக்கொள்ளப்பட்டது.

## 10-19. "வேணாட்டு அரசை....ராசாதிராச தேவர்க்கு"

சேர நாடு சில பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுத் தனித்தனி சேர வம்ச அரசர்களால் ஆளப்பெற்று வந்தது. அப்பகுதிகளுள் ஒன்று வேணாடு. சேர நாட்டின் தென்கோடியில் அமைந்த பகுதி. இன்று திருவாங்கூர் எனப்படுவது இதுவே. சேர மன்னரும் தன்னுரிமை பெற்று அரசாள எண்ணி நாட்டில் கிளர்ச்சி செய்தனர். அதனால் சோழர்தம் ஆட்சியை நிலை நிறுத்தச் சேரர் மீது போர் தொடுக்க வேண்டியதாயிற்று. அவ்வாறு தொடுத்த போருள் வேணாட்டு அரசனைக் கொன்றான் இராசாதிராசன்.

கூவகம் – வேணாட்டுப்போரில் சேரருக்கு உதவிய கூவக நாட்டு மன்னனைத் தோற்கடித்து ஓடச்செய்தான்.

**காந்தளூர்ச்சாலை** – கடலால் சூழப்பட்ட காந்தளூர்ச்சாலையில் சேரரின் கப்பற்படையினை அழித்தான். இப்போர்களையெல்லாம் முடித்த இராசாதிராசன் சோழர்குல மன்னராகிய தம் முன்னோர் ஆண்ட சிறந்த முறையிலேயே தன் நாட்டில் செங்கோல் செலுத்தினான். அவ்வாறு ஆண்ட காலத்துத் தன் ஆட்சியில் அடங்கிய சேரர், பாண்டியர், சாளுக்கியர் போன்ற பல மன்னரும் தன்னடி பணிய, செயங்கொண்ட சோழன் என்ற புனைப்பெயர் பெற்று ஆண்டு வந்தான். சோழ மன்னர் அரசியல் முறைப்படி பெறும் பட்டப் பெயர்களில் இராசாதிராசன் இராசகேசரி என்ற பட்டப் பெயர் பெற்றவன்.

## மெய்க்கீர்த்தி – 2

## 1–3. "திங்களேர்தரு . . . . . கருங்கலி கடிந்து"

இராசாதிராசனின் வெண் கொற்றக்குடை அழகிய மாலைகளை உடையது; நிலவு போன்ற அழகும் தண்மையும் உடையது. அக்குடைக்கீழ்ச் செங்கோல் செலுத்திய இராசாதிராசன் பரந்த நிலவுலகத்தையும் மிகுந்த செல்வத்தையும் தனக்கே உரியனவாகக் கொண்டிருந்தான். கொடிய துன்பங்களை நாட்டை விட்டோட்டினான்.

## 4-11. "தன் சிறிய தாதையையும் . . . அவர் நாடருளி"

இராசாதிராசனின் சிறிய தந்தை இராசராசனின் சிறிய தந்தை யாகிய உத்தமசோழன் வழியில் தோன்றிய எறிவலி கங்கை கொண்ட சோழனாவான். இராசாதிராசனின் தமையன் சுந்தர சோழ பாண்டியன் ; தம்பியர் இரண்டாம் இராசேந்திரன், வீர மகேந்திரன், வீர ராசேந்திரன், ஆகியோர் ; மக்கள் யாவர் என்பது தெரியவில்லை. இவர்களுக்குத் தான் பெற்ற நாடுகள், பலவற்றையும் கொடுத்து, முடிசூட்டி, ஒவ்வொரு பகுதியையும் ஆளச் செய்தான். அவர்களுக்கு முடி சூட்டிய போது முறையே வானவன், வில்லவன், மீனவன், கங்கன், இலங்கையர்க்கிறைவன், பல்லவன், கன்னக் குச்சியர்க் காவலன் என்ற பட்டப் பெயர்களையும் சூட்டினான்.

### 11–16. "பாங்குறு மாதாதை...சோழனெனப் புனைந்து"

இராசேந்திரன் பட்டம் பெற்ற ஐந்தாம் ஆண்டிலேயே இராசாதி ராசனுக்கு இளவரசுப் பட்டம் கட்டித் தனக்குத் துணையாக வைத்துக் கொண்டான். எனவே இராசாதிராசன் தன் தந்தையை எதிர்த்த மன்னர் பலரையும் தானே படைத் தலைமை தாங்கி வென்றான் என்ற செய்தி பரவலாக அமைந்துள்ளது. தந்தையோடு இருபத்தாறு ஆண்டு காலம் உடனிருந்து அரசியல் அனுபவம் பெற்றுப் பல போர்களை நிகழ்த்திப் பல பட்டப் பெயர்களையும் பெற்றுத் தன் தந்தையின் பின் பேரரசனானான்.

### 17-33. "மன்னுபல் ஊழியுள்.........கலம் அறுப்பித்து"

முப்பத்தாறு ஆண்டுகள் சிறப்புற ஆண்டவனாதலின் இவனது ஆட்சிக் காலம் மன்னுபல் ஊழி என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. இராசேந்திரன் ஆட்சியில் சோழ அரசுக்கு உட்பட்டிருந்த பாண்டிய மன்னர் தங்கள் நாட்டு ஆட்சியினைத் தாங்களே பெற வேண்டும் என்ற நோக்கத்தால் கிளர்ச்சி செய்யத் தொடங்கினர். அதனால் இராசாதிராசனும் அவர்கள்மீது போர் தொடுக்க வேண்டியதாயிற்று. அப்போரில்

1) மானாபரணன் என்னும் பாண்டியனின் முடியணிந்த தலையை வெட்டி வீழ்த்தினான்.

2) வாரால் கட்டப்பட்ட வீரக் கழலணிந்த வீர கேரளன் என்னும் பாண்டியனைப் போர்க்களத்தில் பிடித்துத் தன் அத்தி வாரணம் என்னும் யானையைக் கொண்டு உதைக்கச் செய்தான்.

3) பாண்டி நாட்டின் மற்றுமொரு பகுதிக்குத் தலைவனாக விளங்கியவன் சுந்தர பாண்டியன். அவன் மிகுந்த புகழ் பெற்ற வீரன். இருப்பினும், இராசாதிராசனுடைய படைக்குத் தோற்று, குடையையும் கவரியையும் போர்க்களத்தில் இழந்தான், சிங்காதனத்தையும் இழந்து, மணிமுடி கீழே விழத் தலைவிரி கோல

மாய்க் கால்கள் சோர்வு அடையுமாறு ஓடினான். ஓடிய அவனை இராசாதிராசன் முல்லையூர் வரை துரத்தியடித்தான். என்றும் தளராத வேணாட்டு மன்னனுடன் போர் செய்து அவனை மேலுலகு அடையச் செய்தான். எலிமலைக்கு அண்மையில் உள்ள இராமகுடநாட்டில் காரிவர்மன் என்னும் மூஷிக வமிசத்தைச் சேர்ந்த மன்னன் ஆண்டு வந்தான். அவன் இராமகுட மூவர் திருவடி என்று சிறப்பிக்கப்பட்டவன். சுமார் அறுபது ஆண்டுகள் அரசு புரிந்தவன். அவனையும் அழித்தான்.

பாண்டியரைப் போலவே தங்கள் நாட்டைத் தாங்களே ஆள விரும்பிய சேரரும் கிளர்ச்சி செய்து வந்தனர். அவர்களை அடக்க இராசாதி ராசன் போர் தொடுத்தான். போரில் சேரன் தன் குடல் அறுமாறு தன் நாட்டை விட்டு ஓடிக் காட்டில் புகுந்து ஒளித்துக் கொண்டான். இச்சேர மன்னன் இராச சிம்மன் என்பவன் ஆவான். இவ்வாறு சேரரோடு நடத்திய போரில் இராசாதிராசன் வஞ்சி சூடினான்.

வஞ்சி சூடுதல் என்பது நாடுபெறும் விருப்பத்தால் மன்னர் ஒருவரோடு ஒருவர் போர்செய்தல் ஆகும். இது வஞ்சித்திணை எனப்படும். இங்கு வெற்றி பெற்றதைக் குறிக்கும்,

"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே"[1]

என்பது தொல்காப்பியம். கடற்கரைப் பட்டினமாகிய காந்தளூர்ச் சாலையில் இருந்த கப்பற்படையினையும் அழித்தான்.

### 34-43 "ஆகவமல்லனும்.....உள்எரி மடுப்பித்து"

மேலைக் சாளுக்கிய மன்னன் இரண்டாம் சய சிங்கனுக்குப் பிறகு அவன் மகன் சோமேசுவரன் பட்டம் எய்தினான். இவனையே சோழர் கல்வெட்டுகள் ஆகவமல்லன் என்று குறிப்பிடுகின்றன. இவ் ஆகவமல்லன் வேங்கை நாட்டின் மீது படையெடுத்தான். வேங்கை நாட்டை ஆண்ட இராசராச நரேந்திரன் (இராசராசனின் மகள் குந்தவையின் மகன் ; இராசேந்திரன் மகள் அம்மங்கா தேவியின் கணவன்) தன் மாமனாகிய இராசேந்திரனின் உதவியை நாடினான். இராசேந்திரன் தன் மகனைப் படையுடன் அனுப்பினான். சோழர்படையுடன் போர் செய்ய வேண்டிய நிலை ஆகவமல்லனுக்கு ஏற்பட்டது. (கேவுதன் சோழர் படையில் ஒரு படைத்தலைவன் போலும்) போரில் ஆகவமல்லனின் படைத் தலைவர்களாகிய கண்டபய்யன், கங்காதரன் ஆகியோர் கொல்லப் பட்டனர். அவர்களது யானைப்படை அழிக்கப்பட்டது. ஆகவ

1. தொல்பொருள் 62.

மல்லனின் மக்களான விக்கியும் விசயாதித்தனும் சாங்கமய்யன் என்பவனுடன் சேர்ந்து அஞ்சி ஓடுபவர்போல ஓடி ஒளிந்தனர். இவ்வாறு மேலைச் சாளுக்கியப் படை அழிவும் தோல்வியும் அடைந்தது. அவர்களுக்குரிய மிகுந்த செல்வத்தையும் யானை, குதிரைகளையும் சோழர் கைப்பற்றினர். கொள்ளிப் பாக்கைக்கு (குல்பர்க்) எரியூட்டினர்.

## 44-45. "ஒருதனித் தண்டால்.........மகுடமும்"

இராசேந்திரனின் படையெடுப்பில் தோற்ற சிங்கள மன்னன் ஐந்தாம் மகிந்தன் இறந்தபின் அவன் மகன் காசிபன், விக்கிரமபாகு என்ற பெயருடன் இலங்கையை ஆண்டுவந்தான். பெரும்படையுடன் சென்ற இராசாதிராசன் அவனைக் கொன்று அவனது முடி முதலியனவற்றைக் கவர்ந்தான்.

## 46-49. "முன் தனக்கு உடைந்த...பருமணிமகுடமும்"

மானாபரணன், வீரகேரளன், சுந்தரபாண்டியன் ஆகியோர் இராசாதிராசனுடன் நிகழ்த்திய போரில் அடைந்த அல்லலையும் அதன் முடிவையும் கண்ட விக்கிரம பாண்டியன் பயந்து ஈழ நாட்டுக்குச் சென்று மறைந்தான். அதனால் மேலே குறிப்பிட்ட மூன்று மன்னரின் ஆட்சிக்குட்பட்ட பாண்டிய நாட்டுப் பகுதிகளோடு விக்கிரம பாண்டியன் பகுதியும் சோழர் ஆட்சிக்கு உட்பட்டது. எனவே தென் தமிழ்மண்டலம் முழுவதும் இழந்தவன் எனப்படுகிறான். ஈழநாடு புகுந்த பாண்டிய மன்னன் ஏற்கனவே திருமணமுறையில் உறவு பூண்டிருந்த தன் தாய்வழிப் பாட்டனாகிய இலங்கை மன்னனின் அடைக்கலம் பெற்று இலங்கையின் ஒரு பகுதியாகிய ரோகண நாட்டை ஆண்டு வந்தான். ஈழப் போரினை மேற்கொண்ட இராசாதிராசன் அவனை வென்று முடி முதலியவற்றைக் கவர்ந்து வந்தான்.

## 49-60. "காண்டகு தன்னது ஆகிய......பொன்னணி முடியும்"

கன்ன குச்சி நாட்டையும் இராசாதிராசன் தாக்கினான். அதனால் அந்த நாட்டை ஆண்ட வீரசலாமேகன் இந்த நாட்டைக் காட்டிலும் ஈழ நாடே சிறந்தது என்று கருதி, தன் உறவினருடன் சென்று சிங்கள நாட்டில் தன் அரசை நிறுவி ஆண்டு வந்தான். இராசாதிராசன் அங்கும் சென்று வீரசலாமேகனை எதிர்த்தான். போரில் அடைந்த துன்பத்தால் பயந்த வீரசலாமேகன் தன் யானையினின்றும் குதித்து ஓடி ஒளிந்தான். இராசாதிராசனின் படைவீரர், வீரசலாமேகனின் மனைவி, தமக்கை ஆகியோரைச் சிறை செய்தனர். அவன் தாயை மூக்கரிந்து அவமானப்படுத்தினர். அச்செய்தியறிந்த வீரசலாமேகன் தனக்கு உண்டான அவமானம்

நீங்க மீண்டும் வந்து போர் புரிந்தான். அம்முறை தோற்று உயிரிழந்தான். சோழர் அச்சிங்கள மன்னன் முடியினைக் கவர்ந்து வந்தனர்.

### 60-63 "கன்னரன் வழிவந்து.........முடியும்கோண்டு"

கன்னர மரபில் தோன்றி ஈழத்தின் ஒரு பகுதியை ஆண்டுவந்த சீவல்லபன்மதனராசன் என்பானை வென்று ஒளிமிக்க அவனது அவனது முடியையும் கவர்ந்தனர்.

### 63-69, "வடபுலத்து.........மாளிகைத் தகர்ப்பித்து"

இராசாதிராசன் தந்தை காலத்து மேலைச் சாளுக்கிய மன்னர் முழுவதுமாக அழிக்கப் படவில்லை. அவர்களால் தன் உறவினரான கீழைச்சாளுக்கியர் தொல்லை அடைந்து வந்தனர் என்பதை உணர்ந்த இராசாதிராசன் இரண்டாவது முறையாக அவர்கள்மீது படை யெடுத்தான். இப்போர் கம்பிலி நகரத்தில் நடைபெற்றது. இந்நகர் பல்லாரி மாவட்டத்தைச் சார்ந்த ஆஸ்பெட் வட்டத்தில் உள்ளது. இப்போரில் மேலைச் சாளுக்கியக் குறுநில மன்னர் களாகக் கருதப்படும் தலைவர்களாகிய கண்டரன், தினகரன், நாரணன், கணவதி, மதுசூதனன் போன்ற பலர் புற முதுகிட்டு ஓடி ஒளிந்தனர். அந்நகருள் இருந்த சாளுக்கியர் மாளிகைத் தகர்த் தெறியப்பட்டது. இராசாதிராசனின் வெற்றித் தூண் ஒன்று இக்கம் பிலி நகரத்துள் நிறுவப்பட்டது. 'கம்பிலிச் சயத்தம்பம் நட்டதும்'[1] என்னும் பரணிப் பாடல் அடியும் இதனை உணர்த்து கின்றது.

### 69-80. "இளக்கமில் வில்லவர்........தேவர்க்கு"

மிகுவீரம் உடையவர்களாகிய சேரர், பாண்டியர், மேலைச் சாளுக்கியர் முதலாக ஆந்திரர் ஈறாக உள்ள அனைத்து அரசர் களும் இராசாதிராசனுக்குத் திறை செலுத்தி வந்தனர். தன் ஆட்சிக்குட்பட்ட பகுதிகளில் ஆறில் ஒரு கடமையாக—வரிப் பொரு ளாகப்பெற்று வந்தான். இப் பொருள்களை எல்லாம் நான்மறை அந்தணர் முதலியோருக்கு மகிழ்ச்சியோடு பகிர்ந்து கொடுத்து மனுநெறி தவறாது செங்கோல் செலுத்தி வந்தான். சிறந்த அசுவ மேத யாகத்தையும் செய்து நாடுகாத்து வந்த இராசாதிராசன் இராசகேசரி என்னும் பட்டத்தைப் பெற்றிருந்தான்.

---

1. கலிங்கத்துப் பரணி - பா. 204.

## மெய்க்கீர்த்தி-3

### 1–5. "திங்களேர்தரு.........மணிமுடி சூட்டி"

மெய்க்கீர்த்தி இரண்டில் குறிப்பிட்டது போன்ற தொடக்கக் கருத்துகளை யுடையது.

திங்கள் போலும் குடைக்கீழ் செல்வம் மிகுந்து, பரந்த நிலத்திற்கு உரியவனானான். தான் வென்ற நாடுகளுக்குத் தன் சிறிய தந்தை, தமையன், தம்பியர், புதல்வர் ஆகியோரை மன்னராக்கினான்.

### 6-12. "கன்னி காவலர் . . . . .முடித்தலை தடிந்து"

பாண்டியர் மூவருள் மானாபரணன், வீரகேரளன் ஆகியோரைக் கொன்றான். சுந்தரபாண்டியனைக் கானகம் துரத்தினான். வில்லவன் எனப்படும் சேரனுடைய கடற்கரை நகரமாகிய காந்தளூரில் இருந்த கப்பற்படையை அழித்தான். இலங்கை மன்னர்கள் விக்கிரம பாகு, சீவல்லபன்; கன்னகுச்சி நாட்டு மன்னன் வீரசலாமேகன் ஆகியோரைக் கொன்றான்.

### 12–14. "தன் கொடிப் படைஏவி. . . பரணி கொண்டு"

புலிக்கொடி ஏந்திய தன் போர்ப் படையை அனுப்பி கன்னாடகரது யானைப் படையை அழித்து, பரணி பாடும் அளவினதாகிய பெரும் வெற்றியடைந்தான்.

### 14-18. "ஒன்னார் வச்சிர...வெஞ்சமத்து அகப் படுத்து"

நெடும் பகைவர்களாகிய மேலைச் சாளுக்கியர்மீது படையெடுத்தான். முதலில் கிருஷ்ணை ஆற்றங்கரையிலுள்ள பூண்டூர் என்னுமிடத்தில் நடந்த போரில் தெலுங்க விச்சயன் என்னும் சாளுக்கியத் தலைவன் அஞ்சி ஓடினான். அவனுடைய தாய் தந்தையர் சிறை பிடிக்கப் பட்டனர்.

### 19–23. "அயப்படை ஆகவமல்லன்......செலுத்திய பின்னை"

மேலைச் சாளுக்கியப் பேரரசனான ஆகவமல்லன் சோழர் படையின் த்ன்மையை அறிந்து வருமாறு ஒற்றர் சிலரை அனுப்பினான். இராசாதிராசன் அவர்களைப் பிடித்து, அவர்கள் மார்பில் ஆகவமல்லன் அஞ்சி ஓடிய நிலையைக் குறித்து அழகாக எழுதி அவர்களைத் துரத்தி விட்டான்.

### 23–30. "தன் புலிக் கொடிப் படைஞர்.......சென்றாடி"

மேலைச் சாளுக்கியருக்குச் சொந்தமான கடல் போன்று மிகவும் பரந்த நீர் நிலைகளாகிய சிறுதுறை, பெருந்துறை, தெய்வ வீமரசி என்னும் மூன்று நீர்த் துறைகளிலும் தனது பட்டத்து யானையை நீராட்டினான். இந்நீர்த்துறைகள் முறையே துங்க பத்திரை, கிருஷ்ணை, பீமா என்னும் பேராறுகளிலுள்ள நீர்த் துறைகளாகும். அவர்களுக்கே உரிய வராகக்குன்று என்னும் மலையில் தங்களுக் குரிய புலிப் பொறி பொறித்த வெற்றித் தூண் ஒன்றினை அழகுற நிறுத்தினான். இச் செயல்கள் அனைத்திலும் கீழைச் சாளுக்கியர் போன்ற பல அரசர்கள் இராசராசனுக்குத் துணையாக இருந்து வந்தனர்.

### 30-33. "பொருபுலி வீரக் கொடியொடு ... ஆனோர்க்கு ஈந்து"

இவ்வாறு தான் பெற்ற வெற்றிகளால் இராசாதிராசன் புலிக் கொடி யாகிய வீரக் கொடியோடு தியாகக் கொடியையும் நிலை நாட்டினான். சாளுக்கிய நாட்டில் கவர்ந்த பொருள்களை யெல்லாம் தகுதி வாய்ந்த இரவலர்க்கு வாரி வழங்கினான்.

### 33-46. "அவன் தண்டத்துக்கு...பறித்துடன் கொண்டு"

இச் செயல்களைக் கண்ட சாளுக்கியப் பேரரசனான ஆகவமல் லன் பெரும் படையுடன் வந்து மீண்டும் சோழரை எதிர்த்தான். அப்போரிலும் சாளுக்கியர் தோற்றனர். சிறந்த புரவியினையுடைய படைத் தலைவர்களாகிய நுளம்பன், காளிதாசன், சாமுண்டன், கொம்மய்யன், வில்லவராசன் போன்றோர் புறங்காட்டி ஓடினர். கூர்ச்சர மன்னன் ஒருவன் கொல்லப்பட்டான். உப்பளர் போன்ற பல பகையரசர்களும் தோற்கடிக்கப்பட்டனர். குறுநில மன்னர் சிலர் சோழனிடம் அடைக்கலம் புகுந்துவிட்டனர். அவர்களுக்குரிய அரசினை அவரவர்க்கே மீண்டும் கொடுத்தான். (இங்கு, சில வரிகள் விளக்க மற்றுள்ளன.)

### 46-57. "துறைப் புனல் இரட்டபாடி . . . . . தன்னுடன் போக்கி"

அடுத்து நீரால் சூழப்பட்ட இரட்டபாடியை எரியூட்டினன். பின் இரட்டபாடி ஏழரை இலக்கமாகிய பகுதியைத் தன் அரசுடன் இணைத்துச் கொண்டான். போரில் தோற்று மேலும் போரிட பயந்து கானம் சென்று ஒளித்துச் கொண்ட ஆகவ மல்லனால் அனுப்பப்பட்டுச் சோழர் புகழ் பாடிவந்த இருவருள் ஒருவனுக்குப் பெண் உடை உடுத்தி ஆகவ மல்லி என்று பெயர் சூட்டி, மற்ற வனுக்கு ஐங்குடுமி வைத்து (தலையை ஐந்து பகுதியாகச் சவரம் செய்து) ஆகவ மல்லன் என்று பெயர் சூட்டி அவமானப் படுத்தித் துரத்தினான்.

## 58-66. "இனி விடாது சென்று. . . .பட்டுகப் பொருது"

இச் செயலால் வெகுண்ட ஆகவமல்லன் மீண்டும் சென்று போரிட்டான். இராசாதிராசன் தன் படையுடன் சென்று கலியாண புரம் என்னும் சாளுக்கிய நகரத்தைத் தாக்கினான். அப்போரில் துதிக்கையுடைய மலைகளையும் (யானைகளை), அந்நகரையும் அழித்தான். அரச மாளிகையைத் தூள் தூளாக இடித்து அழித் தான். அவ் அரண்மனையைக் காத்து நின்ற ஆகத்தன் முதலிய யானை வீரர், குதிரை வீரர்களாகிய தலைவர்கள் பலர் (முப்பத்து ஐவர்) அழிக்கப்பட்டனர். இச் செயல்களை,

"...............................................
கடியரண்கொள் கல்யாணர் கட்டறக்
கிம்புரிப்பணைக் கிரிஉகைத்தவன்
கிரிகள் எட்டினும் புலிபொறித்ததும்"[1]

என்னும் பாடல் விளக்குகிறது.

## 66-71. "அப்பெருநகர் . . . . உயர்ந்த பெரும் புகழ்"

இவ் வெற்றிக்கு அறிகுறியாக விசயராசேந்திரன் என்னும் சிறப்புப் பெயரோடு கலியாணபுரம் என்னும் அந் நகரிலேயே வீராபிஷேகம் செய்து கொண்டான். பின் தன் நாடு திரும்பிய இராசகேசரிவன்மரான இராசாதிராசன் அசுவமேதயாகம் முதலி யன செய்து மனு நெறிவறாது செங்கோல் செலுத்தினான்.

1. கலிங்கத்துப் பரணி - 204.

# 7

# இரண்டாம் இராசேந்திரன்

(கி. பி. 1051–1063)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

இரட்டபாடி ஏழரை இலக்கமும் கொண்டு
கொல்லா புரத்து ஜயஸ்தம்பம் நாட்டிப்
பேராற் றங்கரைக் கொப்பத்து
ஆகவ மல்லனை அஞ்சு வித்தவன்
ஆனையுங் குதிரையும் பெண்டிர்பண் டாரமும் 5
அடங்கக் கொண்டு
விஜயாபி ஷேகம் பண்ணி
வீரசிம்மா சனத்து வீற்றிருந் தருளிய
கோப்பர கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீ இராசேந்திர தேவர்க்கு யாண்டு 10
ஒன்பதாவது. . . .

# 8

**மெய்க்கீர்த்தி-2**

ஸ்வஸ்தி ஸ்ரீ

[1]திருமகள் [2]மருவிய செங்கோல் [3]வேந்தன்தன்
முன்னோன் சேனை பின்னது வாக
[4]எதிரமர் பெறாது எண்டிசை நிகழப்
பறையது [5]கறங்கின வார்த்தை கேட்டு
இரட்டபாடி ஏழரை இலக்கமும் கொண்டு 5
கொல்லா புரத்துஜெய ஸ்தம்பம் நாட்டி
[6]பேராற்றங் கொப்பத்து வந்தெதிர் பொருத

---

1. திருமருவிய. 2. விரும்ப. 3. வளவன். 4. முன்னெதிர் சென்று எதிர் பெறாது. 5. கறங்க. 6. பேராற்றங்கரை.

ஆகவ மல்லன்தன் அடல்சேனை எல்லாம்
பாரது நிகழப் [7]பசும்பிணம் ஆக்கி
ஆகவ மல்லன் புறக்கிட் டோடஅவன் 10
ஆனையும் குதிரையும் ஒட்டக நிரைகளும்
பெண்டிர்பண் டாரமும் அகப்படப் பிடித்து
[8]விபவமும் கொண்டு விஜயாபி ஷேகம்பண்ணி
வீரசிங்கா சனத்து வீற்றிருந் தருளிய
கோப்பர கேசரி வன்ம ரான 15
உடையார் ஸ்ரீ இராசேந்திர தேவர்க்கு யாண்டு
ஒன்பதாவது-

## 9

**மெய்க்கீர்த்தி –3**

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமகள் [1]மருவிய செங்கோல் வேந்தன்தன்
[2]முன்னோன் சேனை பின்னது வாக
முன்னெதிர் சென்று இரட்ட பாடி
ஏழரை இலக்கமும் கொண்டுதன் னாணையில்
[3]முன்னாணை செல்ல [4]முந்நாள் தவிர்த்துக் 5
கொல்லா புரத்துஜயஸ் தம்பம் நாட்டி
எதிரமர் பெறாது எண்டிசை நிகழப்
[5]பறையது கறங்க ஆங்கது கேட்டுப்
பேராற் றங்கரைக் கொப்பத்து வந்து
[6]எதிரமர் பொருத ஆகவ மல்லன் 10
தன்பெருஞ் சேனை எலாம்படப் பொருது
பாரது நிகழப் பசும்பிண மாக்கி
ஆங்கவன் அஞ்சிப் புறக்கிட் டோட
மற்றவன் ஆனையும் குதிரையும் ......
ஒட்டகத் தோடு பெண்டிற்பண் டாரமும் 15
கைக்கொண்டு விஜையாபி ஷேகம் பண்ணி
வீரசிம்மா சனத்து வீற்றிருந் தருளிய
கோப்பர கேசரி வன்ம ரான
உடைார் ஸ்ரீ இராசேந்திர தேவர்க்கு யாண்டு 9 ஆவது

---

7. படப்பொருது. 8. விபலமும்.

1. நிலவிய ; விரும்ப. 2. முன்னோன். 3. முந்நாணை. 4. முந்நாந் தவிர்த்து. 5. பறையங் கறங்க. 6. வந்தெதிர் பொருத.

## 10

### மெய்க்கீர்த்தி-4

ஸ்வஸ்திஸ்ரீ

[1]திருமாதர் புவியெனும் பெருமாதர் இவர்தம்
மாதே வியர்க ளாக [2]மீதொளிர்
வெண்குடை உயர்த்துத் திண்கலி பெயர்த்துத்தன்
சிறிய தாதை யாகிய [3]எறிவலி
கங்கை கொண்ட சோழனைப் பொங்கிகல் 5
இருமுடிச் சோழ னென்றும் பொருமுரண்
தன்திருத் தம்பியர் தம்முள் வென்றிகொள்
மும்முடிச் சோழனைத் [4]தெம்முனை அடுதிறல்
சோழ பாண்டியன் என்றும் கோழிமன்
தொடுகழல் வீர சோழனைத் தொல்புகழ்க் 10
கரிகால சோழ னென்றும் பொருதொழில்
வாள்வலித் தடக்கை மதுராந் தகனைச்
சோழ கங்கன் என்றும் தோள்வலி
மேவிகல் பராந்தக தேவனைத் தோள்வலி
சோழ அயோத்திய இராச னென்றும் 15
[5]திருவுளத்து அன்பொடு கருது காதலருள்
இத்த லம்புகழ் இராசேந்திர சோழனை
உத்தமச் சோழ னென்றும் தொத்தணி
முகையவிழ் அலங்கல் முடிகொண்ட சோழனை
இகல்விசை யாலயன் என்றும் [6]புகர்முகத்து 20
ஏழுஉயர் களிற்றுச் சோழகே ரளனை
வார்சிலை சோழ கேரளன் என்றும்
திண்திறல் கடாரம் கொண்ட சோழனைத்
தினகரன் குலத்துச் சிறப்பமர் சோழ
சனக ராச னென்றும் [7]கனைகடல் 25
படிகொண்ட பலபுகழ் முடிகொண்ட சோழனைச்
சுந்தர சோழ னென்றும் செந்தமிழ்ப்
[8]பிடிகலி இரட்ட பாடிகொண்ட சோழனைத்
தொல்புவி ஆளுடைச் சோழ கன்ன
குச்சிய ராச னென்றும் பின்னும்தன் 30

---

1. திருமாது. 2. நீதியுள். 3. பெருவலி. 4. தெம்முனைய. 5. துயரத்து. 6. தொழில்மிகு. 7. கனைகழல். 8. பீடியல்.

காதலர் காதலர் தம்முள் மேதகு
கதிராங் கனைகழல் மதுராந் தகனை
வெல்படைச் சோழ வல்லபன் என்று
மானச் சிலைக்கையோ ரானைச்சே வகனை
நிருபேந்திர சோழ னென்றும் பருமணிச் 35
சுடர்மணி மகுடஞ் சூட்டிப் படிமிசை
நிகழு நாளினுள் இகல்வேட் டெழுந்துசென்
றொண்திறல் இரட்ட மண்டல மெய்தி
நதிகளும் நாடும் பதிகளு மனேகமும்
அழித்தனன் வளவனென்னு மொழிப்பொருள் கேட்டு 40
வேகவெஞ் சளுக்கி ஆகவ மல்லன்
பரிபவம் எனக்கீதென் றெரிவிழித்து எழுந்து
செப்பருங் [9]கீர்த்திக் கொப்பத் தகவையில்
உடன்றெதி [10]ரேன்றமர் தொடங்கிய பொழுதவன்
செஞ்சர மாரிதன் குஞ்சர [17]முகத்தினும் 45
தன்திருத் தொடையிலுங் குன்றுறழ் புயத்திலும்
தைய்க்கவுந் தன்னுடன் கதக்களிறு ஏறிய
தொடுகழல் வீரர்கள் மடியவும் வகையுற்
றொருதனி யனேகம் பொருபடை வழங்கியும்
மொய்ம்பமர் சளுக்கி தம்பிஜய சிங்கனும் 50
போர்ப்புலி கேசியும் தார்த்தச பன்மனு
மானமன் னவரில் மண்டலி அசோகையனும்
ஆன வண்புகழ் ஆளுமா ரையனும்
தேனமர் மட்டவி மூலங்கல்மொட் டையனும்
திண்திறல் நன்னிநுளம்பனு மெனுமிவர் முதலியர் 55
எண்ணிலி யரைசரை விண்ணகத் தேற்றி
வன்னிய ரேவனும் வயப்படைத் துத்தனும்
கொன்னவில் படைக்[12]குண்ட மயனும் என்றின
வெஞ்சின வரைசரோ டஞ்சிய சளுக்கி
குலகுல குலைந்து தலைமயிர் விரித்து 60
முன்னுற நெளித்துப் பின்னுற நோக்கிக்
கால்பறிந் தோடி மேல்கடல் பாயத்
துரத்திய பொழுதச் செருக்களத் தவன்விடு
சத்துரு பயங்கரன் கரபத்திரன் [13]மூல

---

9. தீர்த்தக். 10. உடன்றமர். 11. குவட்டிலும். 12. குண்டமனும். 13. முதல்.

பத்திர சாதிப் பகட்டரை சனேகமும் 65
எட்டுநடைப் பரிகளும் ஒட்டக நிரைகளும்
வராகவெல் கொடிமுதல் இராசபரிச் சின்னமும்
ஒப்பில் சத்தியவ்வை சாங்கப்பைஎன் றிவர்முதல்
தேவியர் குழாமும் பாவையர் ஈட்டமும்
[14]இனையன பிறவும் முனைவயிற் கொண்டு 70
விசையாபி ஷேகம் செய்துதென் றிசைவயிற்
போர்ப்படை நடாத்திக் கார்க்கட லிலங்கையில்
[15]விறற்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகனைக்
கதக்களிற் றொடும்படக் கதிர்முடி [16]கடிவித்து
இலங்கையற் கிறைவன் மானா பரணன் 75
காதல ரிருவரைக் களத்திடைப் பிடித்து
மாப்பெரும் புகழ்மிக வளர்த்த
கோப்பர கேசரி பன்மரான
உடையார் ஸ்ரீ இராசேந்திர தேவர்க்கு யாண்டு
எட்டாவது-

## 11

### மெய்க்கீர்த்தி-5

ஸ்வஸ்திஸ்ரீ

திருமாதர் புவியெனும் பெருமாதர் இவர்தம்
மாதே வியர்க ளாக நீதியுள்
நிகழும் நாளினுள் இகல்வேட் டெழுந்து
செற்றரு [1]முனைக்கொப் பத்து ஆகவ
மல்லனொடு [2]போர்ச்சயம் புரியும் காலை 5
[3]அரிநிகர் தன்திருத் தமைய னாகிய
.................................னில் ராசாதி ராசன்முன்
நேராம் அரசரை நெடுவிசும் பேற்றி
அந்தர [4]வாளத்து அரம்பையர் எதிர்கொள
இந்திர லோகம் எய்திய பின்பு 10
குந்தளர் [5]நற்படை குடைந்துதன் கடற்படை
கெடக்கண் டஞ்சல் அஞ்சலென் றருளித்தன்

---

14. எனையன. 15. மிடற்படை. 16. தடிந்துகொண்டருளி.
1. மணிக்கொப்பத்து. 2. பொரு ஜெயம். 3. அருநிகர். 4. வானத்து. 5. ஆடறபப·

குஞ்சர [6]மேறிக்கன் னாடகர்மேற் கூற்றெனத்
தெரிகணை [7]கடாவிப் பொருபடை வழங்கி
[8]மொய்ம்பியல் சளுக்கி தம்பிசய சிங்கனும் 15
போர்ப்புலி கேசியும் தார்த்தச பன்பனும்
நன்னி நுளம்பனும் எனுமிவர் முதலியர்
எண்ணிலி யரசரை விண்ணகத் தேற்றி
ஆயிடை எதிர்ந்த கார்சிலை துரந்த
செஞ்சர மாரிதன் குஞ்சர முகத்தினும் 20
தன்திருத் தொடையினும் குன்றுறு புயத்தினும்
தாக்கவுந் தன்னுடன் கதக்களிறு ஏறிய
தொடுகழல் வீரர் மடியவும் வகையாது
ஒருதனி அனேகம் பொருபடை வழங்கி
மொய்ம்பியல் சளுக்கி[9]தன் மிக்கவே ழத்தை 25
மிடல்கெட மீட்டுவித்து ஒற்றரை வெருவ
[10]வன்னுறத் துரந்து (உ)ற்சயன் மற்றவன்
தற்படை போகவிட்டு அப்பகடு இழிந்து
குலகுல குலைந்து தலைமயிர் விரித்து
[11]முன்னுற நெளித்துப் பின்னுற நோக்கி 30
வன்னிய ரேவனும் [12]வன்படைத் துத்தனும்
கொன்ன வில்படைக் [13]குண்ட மய்யனும்
என்றின வெஞ்சின அரசரோடு அஞ்சி
வெருவி[14]விழித் தோட [15]வென்கொண் டாங்குறும்
கரபத் திரமுதல் பொருகளிறு அநேகமும் 35
[16]பரியின் தொகுதியும் உரியதே வியரையும்
வராகவெல் கொடிமுதல் இராசபரிச் சந்தமும்
[17]இனையன பிறவும் முனைவயிற் [18]கொண்டு
போர்க்கல னாகத்துப் பார்த்திவ ரானோர்
முன்னரும் செய்தறி யாதன பின்நான் 40
செய்துமென்று எண்ணற் கரியது கைக்கலந்து
அன்றினர் படைதடர்த் தன்திரு மேனியில்
பசும்புண் பொழிநீர் புதமப் புனலால்

---

6. மேற்றித்தன் நடர்மேல். 7. முதலியர். 8. மொய்ம்புயல்; மொய்ம்பமர் 9. தளமிக்க. 10. வன்நுரத்துய்த்த. 11. மின்னுற; வென்னுற. 12. வயற் படைத்; வன்பரடை. 13. குணமயனும்; குண்டமனும். 14. விழுந்தோட. 15. மேன்கொண்டான் குருமதிர். 16. பரியற்று ஓடிய குருதியும். 17. இனையனர். 18. கவர்ந்து.

நீக்கின போல [19]நோக்கருங் களத்தே
விசையாபி ஷேகம் விசைமிகச் செய்து 45
வீரசிங் காசனம் திரியவிட்டுப் போந்து
காங்கா புரிபுகுந் தருளி இன்றுதொறும்
யாவரும் செய்தறி யாதன செய்யா
நின்றுஇக லொழுக்கம் [20]நேர்ந்து தன்திருக்
காதல னான [21]போதலர் தெரியல் 50
கங்கை கொண்ட சோழனையும் ஆங்கவன்
திருமக னான இருநிலங் காவலன்
ஆள வந்தபெரு மானையும் வென்றிகொள்
தன்திருத் தம்பியர் தம்முள் வன்திறல்
வளவன் மும்முடிச் சோழனையும் களப்படை 55
வீரசோ ழனையும் வெல்படைமது ராந்தகனையும்
பாரணி திரள்தோள் தன்திருமகன் இராசேந்திர
சோழனையும்
தராபதி இருமுடிச் சோழன் ராசாதிராசன்
சுருதி[22]நன் குணருஞ் சோழ பாண்டியன்
வார்சிலைத் தானைக் கரிகால சோழனென்றும் 60
சோழகங்கன் தொடுகழல் உத்தம சோழனென்றும்
[23]சுடர்நவ மணிபுனை திருமுடி சூட்டித்
தென்னவர் முதலியர் நிருபரைத் தாங்கவர்
இருநிலம் ஆள நிலமவர்க் கருளிக்
கார்க்கடல் இலங்கையில் போர்ப்படை நடாத்தி 65
மிடர்படைக் கலிங்கர்மன் வீரசலா மேகனைக்
கதக்களிற் றோடுங் கதிர்முடி தடிந்து
அதன்பின் [24]போந்து எயில்கொப் பத்து
வந்தழி சளுக்கி வந்து எய்திய
பரிபவம் [25]இந்நா ளிகலமர் செய்து 70
நீங்குவன் என்று சிந்தையுள் கருதி
இன்ப மாயினன் இன்றுபந் தமர்பல
வீரந் தலைநின் றுவர்க்கடல் கிளந்த
தெனப்படை பரப்பி வந்து தோன்றிஅன்
ஆர்கலி முடக்காற் றமர்புரிய வந்த 75
தண்ட நாயகன் வாலா தேவனும்

---

19. அக்கருங்களத்தே. 20. தேர்ந்து. 21. ஓதலர்தருங்கால். 22. மென் குணர். 23. சுடர்நறு. 24. போந்தையில் கொப்பத்து 25. இந்நாகிலமர்.

திண் திறல்வல் லியர்முதல் பலபடை அரசரும்
போர்க்களத் தவிய இருகையன் முதலினர்
மன்னவர் தம்மொடு மைந்தன்விக் கலனொடு
தன்னிலை யழிந்து சளுக்கிகெட் டுடைதர
மண்டமர் புரிந்துதன் தண்டின்முன் [26]தான்சென்று 80
ஒருதனி வேழமுற்று [27]உடலியாங்கு அவனை
இருமடி மேன்மேன் கொண்டருளிப் பொருவழி
மாப்பெரும் புகழ்மிக வளர்த்த கோப்பர
கேசரிபன்ப ரான உடையார் ஸ்ரீ இராசேந்திர தேவர்க்கு
யாண்டு 9 ஆவது......

# இரண்டாம் இராசேந்திரன்

## முன்னுரை

முதலாம் இராசேந்திரனின் மக்களுள் சோழப் பேரரசின் பட்ட மெய்தியோர் மூவர். அவர்களுள் முதலாம் இராசாதிராசனை அடுத்துப் பட்ட மெய்தியவன் இவ் இரண்டாம் இராசேந்திரன். தன் தமையன் ஆட்சியில் இளவரசுப் பட்டம் பெற்று அவனுடன் இருந்து அரசியல் அனுபவம் பெற்றவன்.

கங்கை கொண்ட சோழபுரமே இவனது தலை நகராக விளங் கியது.

## மெய்க்கீர்த்திகள்

1. 'இரட்டபாடி ஏழரை இல்க்கமும் கொண்டு' என்ற தொடக்கத் தினை உடைய சில வரிகளால் ஆன மெய்கீர்த்தி.
2. 'திருமகள் மருவிய செங்கோல் வேந்தன்' என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி.
3. இதே தொடக்க அடியொடு இடையே சிறுசிறு மாற்றங்களை உடைய மெய்க்கீர்த்தி.
4. 'திருமாதர் புவியெனும் பெருமாதர் இவர்தம்' என்ற தொடக்க அடியினை உடைய நீண்ட மெய்க்கீர்த்தி.
5. இதே தொடக்க அடியோடு பலவகை மாற்றங்களை உடையது.

---

26. பின்சென்று. 27. உடைந்துடன் ஓட ஆங்கவனை.

## மெய்க்கீர்த்தி-1

இரண்டாம் இராசேந்திரன் இரட்டபாடி ஏழரை இலக்கத்தைக் கைப்பற்றினான். அப்பகுதியின் சிறந்த நகரமாகிய கொல்லாபுரத்தில் வெற்றித் தூண் ஒன்றினை நிறுவினான். கிருஷ்ணைப் பேராற்றின் கரையில் அமைந்த கொப்பம் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் ஆகவ மல்லனைத் துரத்தி அவனது யானை, குதிரை, மகளிர், செல்வம் அனைத்தையும் கவர்ந்து கொப்பத்திலேயே விசயாபிஷேகம் செய்து கொண்டான். இவன் பரகேசரி என்னும் பட்டம் பெற்றவன்.

## மெய்க்கீர்த்தி-2

இரண்டாம் இராசேந்திரன் மிகுந்த செல்வத்தை யுடையவன்; நீதி தவறாதவன். கொப்பத்துப் போரில் தன் தமையன்படை பின் வாங்கியது அறிந்து, தானே படைத் தலைமை தாங்கிப் போரில் வெற்றியைத் தேடித்தந்தவன். இரட்டபாடியைக் கொண்டு, கொல்லாபுரத்து வெற்றித் தூண் நாட்டியவன். மீண்டும் கொப்பத்தில் நடைபெற்ற போரில் ஆகவமல்லன் தோற்றோட, அவன் படைகளைக் கொன்று குவித்து, அவனது யானை, குதிரைகளையும் பிற செல்வத்தையும் கவர்ந்து விசயாபிஷேகம் செய்து விளங்கினான்.

## மெய்க்கீர்த்தி-3

மெய்க்கீர்த்தி இரண்டின் பொருளுடையதே. சிறு சிறு மாற்றங்களோடு கூடிய தொடர்களை உடையது.

## மெய்க்கீர்த்தி-4

இரண்டாம் இராசேந்திரன் தன் சிறிய தந்தை முதல் பெயரன் ஈறாகப் பலருக்கும் பட்டப் பெயர் கொடுத்து ஆங்காங்கு ஆளும் உரிமையும் வழங்கினான். ஆகவ மல்லனுடன் கொப்பத்துப் போர் நிகழ்த்தி, அவன் வீரர் பலரைக் கொன்று வாகை சூடினான். அவன் பொருள் பலவற்றைக் கவர்ந்து வந்தான். இலங்கைப் போரில் விரசலாமேகனை வென்றான்.

## மெய்க்கிர்த்தி-5

தன் தமையன் செய்த கொப்பத்துப் போரில் அவனுக்குத் துணையாய்ச் சென்றான். தமையன் போரில் இறந்துபட, வீரர்களை அஞ்சேல் என்று கூறி உற்சாகப்படுத்தி அப் போரில் பெரும்

வெற்றியைத் தேடினான். ஆகவ மல்லனும் அவனுக்குத் துணையாய் வந்த பல மன்னரும் படைத் தலைவரும் தோற்று ஓடச் செய்து அவர்களுடைய உரிமைப் பொருள்களையும் மகளிரையும் கவர்ந்து சென்றான். அக்களத்திலேயே விசயாபிஷேகம் செய்து கொண்டதோடு, சோழப் பேரரசின் மன்னனாகவும் முடி சூட்டிக் கொண்டான். தன் சிறிய தந்தை முதல் பெயரன் ஈறாகப் பலருக்கும் தன் நாட்டின் பகுதிகளை அளித்து, அந் நாடுகளுக்கு அவரவர்களையே அரசர்களாக்கிச் சிறப்புற ஆளச் செய்தான். அடுத்து இலங்கை மீது போர் தொடுத்து, அங்கிருந்த கலிங்க மன்னன் வீரசலா மேகனை அழித்தான். மீண்டும் சாளுக்கியர் தொடங்கிய முடக்காற்றுப் போரில் தலைமை தாங்கி வாலா தேவன் முதலிய பல மன்னரைக் கொன்று ஆகவ மல்லனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தான்.

### விளக்கம்

முதல் மூன்று மெய்க்கீர்த்திகளின் செய்திகளும் விரிவான நான்காம், ஐந்தாம் மெய்க்கீர்த்திகளில் அடங்குவதால் இவற்றின் விளக்கம் தனியே தரப்படவில்லை.

## மெய்க்கீர்த்தி-4

### 1-3. "திருமாதர் புவியெனும்......கலிபெயர்த்து"

செல்வத்திற் குரியவளாகிய திருமகளும், நிலத்திற்குரியவளாகிய நிலமகளும் இரண்டாம் இராசேந்திரனுக்கு உரிமை பூண்டவர்களாக விளங்கினர். தன் சிறந்த செங்கோலினால் கொடிய துன்பத்தை நாட்டிலிருந்து ஓட்டினான்.

### 4-36. "தன் சிறிய தாதையாகிய.....மகுடம் சூட்டி"

1. தன் சிறிய தந்தை — எறிவலி கங்கை கொண்ட சோழனுக்கு— இருமுடிச் சோழன் என்று பட்டம் சூட்டினான் இதே போலத் தன் தம்பியருள்,
2. மும்முடிச் சோழனுக்கு — சோழ பண்டியன் என்றும்
3. உறையூரை ஆண்ட வீர சோழனுக்கு — கரிகால சோழன் என்றும்
4. மதுராந்தகனுக்கு — சோழகங்கன் என்றும்
5. தோள்வலி பராந்தக தேவனுக்கு — தோள்வலி சோழ அயோத்தியராசன் என்றும் பட்டப் பெயர்களைச் சூட்டினான். மேலும் தன் மக்களுள்,
6. இராசேந்திர சோழனுக்கு — உத்தம சோழன் என்றும்
7. அலங்கல் முடி கொண்ட சோழனுக்கு — விசயாலயன் என்றும்

8. சோழ கேரளனுக்கு — வார்சிலை சோழ கேரளன் என்றும்
9. கடாரம் கொண்ட சோழனுக்கு — சோழ சனகராசன் என்றும்
10. பல புகழ் முடி கொண்ட சோழனுக்கு—சுந்தர சோழன் என்றும்
11. இரட்டபாடி கொண்ட சோழனுக்கு — சோழ கன்னகுச்சிய ராசன் என்றும் பெயர் சூட்டிச் சிறப்பித்தான். இவர்களைப் போலவே தன் பெயரர்களுக்கும் நாடளித்துப் பட்டப் பெயர் சூட்டி யிருக்கிறான். அவர்களுள்,
12. மதுராந்தகனுக்கு — சோழ வல்லபன் என்றும்
13. ஆனைச் சேவகனுக்கு — நிருபேந்திர சோழன் என்றும் பட்டப் பெயர் சூட்டினான். இவர்கள் அனைவரையும் தன் நாட்டில் ஒவ்வொரு பகுதிக்கும் உரிய சிற்றரசர்களாக நியமித்து ஆங் காங்கு முடி சூட்டு விழாவும் நடத்திச் சிறப்பித்தான்.

### 36-63. "படிமிசை நிகழும் நாளினுள்... துரத்திய பொழுது"

இவ்வாறு தன் பரந்த நிலப் பகுதியினைப் பாதுகாக்கவும், நல்நெறி நடத்தவும் உரிய ஏற்பாடுகளைச் செய்து முடித்த இராசேந் திரன் தன் தமையன் இராசாதிராசன் போர்க்களத்தில் பகைவர் அம்புக்கு இலக்கானான் என்ற செய்தியறிந்தான். உடனே தானே தலைமை தாங்கிப் போர்ப் படையை நடத்தி இரட்டபாடியை அடைந்து அந்நாட்டின் பகுதிகள் பலவற்றையும் அழித்து மேலே படையெடுப்பைத் தொடர்ந்தான்.

தன்னுடைய நாட்டில் சோழர் புகுந்து நாடுகளையும் நதிகளை யும் அழித்தனர் என்ற செய்தி யறிந்தான் சாளுக்கியப் பேரரசன் ஆகவமல்லன். இச்செயல் என் வீரத்திற்கு இழுக்கினைத் தருவ தாகும் என்று வெகுண்டு எழுந்தான். கிருஷ்ணைப் பேராற்றங் கரையில் அமைந்த கொப்பம் என்னுமிடத்தில் சோழரை எதிர்த்துப் போரிடத் தொடங்கினான்.

அப்போரில் ஆகவமல்லன் பொழிந்த அம்புகள் சோழ மன்னன் யானையின் முகத்தில் தைத்தன. இராசேந்திரனின் தொடை களிலும் குன்றுபோன்ற புயங்களிலும் ஊடுருவிப் பாய்ந்தன. அவன் அம்புகளினால் இராசேந்திரனுடன் வந்த சிறந்த யானைகளின் மீதிருந்து போர் புரிந்த வீரர் பலர் மடிந்தனர். ஆயினும், இராசேந் திரன் தன்னிடமிருந்த போர்க் கருவிகளைப் பயன்படுத்தி ஆகவ மல்லனின் தம்பியராகிய சயசிங்கன், புலிகேசி, தசபன்மன் ஆகி யோரைக் கொன்றான். அவர்களுக்குத் துணையாக வந்த குறுநில மன்னர்களாகிய அசோகையன், ஆரையன், மொட்டையன், நன்னி நுளம்பன் போன்ற எண்ணற்ற அரசர்களைக் கொன்று வானுலகு எய்துவித்தான்.

மேலும் போர் செய்ய அஞ்சிய ஆகவ மல்லன் நெஞ்சு நடுங்கி, தலைமயிர் விரித்து, பயந்து நெளிந்து, பின்நோக்கி ஓடி, மேல் கடலில் பாய்ந்து ஒளியுமாறு துரத்தினான். அஞ்சி ஓடிய ஆகவ மல்லனுடன் வன்னியர் ஏவன், துத்தன், குண்டமய்யன் போன்ற வலிமிக்க அரசர் பலரும் அஞ்சி ஓடினர்.

## 63–71. "அச்செருக்களத்து...விசையாபிஷேகம் செய்து"

அஞ்சி ஓடிய ஆகவமல்லன் அப்போர்க்களத்தில் இழந்து சென்ற பட்டத்து யானைகளாகிய சத்துருபயங்கரன், கரபத்திரன், மூலபத்திரன், என்பவற்றைக் கைப் பற்றினான். விரைந்த, போர் நடையையுடைய குதிரைகள், ஒட்டகக் கூட்டங்கள், மேலைச் சாளுக்கியர் சின்னமாகிய வராகக் கொடிகள் போன்ற அரசச் சின்னங்கள் பல சோழரிடம் சிக்கின. **சத்தியவ்வை, சாங்கப்பை** என்னும் கோப்பெருந்தேவியர் முதலாகப் பாவையர் பலரும் பிற மகளிரும் இராசேந்திரனின் அடிமைகள் ஆயினர்.

இவற்றை யெல்லாம் பெற்ற இராசேந்திரன் அப்போர்க்களத்திலேயே (விசையாபிஷேகம்) வெற்றிவிழா நடத்தியதோடு சோழப் பேரரசின் மன்னனாக முடிசூட்டு விழாவினையும் நடத்திக் கொண்டான். இவனது கொப்பத்து வெற்றியும் முடிசூட்டு விழாவும்,

"ஒரு களிற்றின் மேல் வருகளிற்றை யொத்து
உலகு உயக்கொளப் பொருது கொப்பையில்
பொருகளத்திலே முடிகவித்தவன்
புவிகவிப்பதோர் குடை கவித்ததும்"[1]

என்னும் இலக்கியப் பாடலாகவும் நிறை நிற்கின்றன.

## 71-79. "தென் திசை வயிற்...ஸ்ரீ இராசேந்திர தேவர்க்கு"

தன் நாடு திரும்பிய இராசேந்திரன் தென்திசை நோக்கில் படையெடுத்து ஈழ நாட்டைத் தாக்கினான். அப்பொழுது இலங்கையின் ஒரு பகுதியை ஆண்டவன் **வீரசலாமேகன்** என்னும் கலிங்க மன்னன் ஆவான்.

"தன்னது ஆகிய கன்னகுச் சியினும்
ஆர்கலி ஈழம் சீரிதென் றெண்ணி
உளங்கொள் நாடுதன் உறவொடும் புகுந்து
விளங்குமுடி கவித்த வீரசலா மேகன்
.........................................
வெங்களத்து உலந்தஅச் சிங்களத்து அரசன்"[2]

என்னும் வரிகளில் சுட்டப்படும் கன்னகுச்சி மன்னன் **வீரசலா மேகன்** இராசாதி ராசனால் கொல்லப்பட்டவன். இங்கு சுட்டப்

1. கலிங்கத்துப்பரணி. 105. 2. இராசாதிராசன் மெய்க். வரி. 50-59.

படுவன் கலிங்க மன்னன் வீரசலா மேகன். இருவரும் வெவ்வேறு மன்னராகக் கருதப்படுகின்றனர்.[3]

3. இவ்வீரசலாமேகனையும் அவனது யானையையும் கொன்று அவனை முடி இழக்கச் செய்தான். அவன் தமயன் இராசாதி ராசனால் கொல்லப்பட்ட மானாபரணனின் மக்கள் இருவர் இலங் கையின் ஒரு பகுதியை ஆண்டு வந்தனர். அவர்கள் இருவரையும் சிறை செய்து பெரும் புகழ் பெற்றவன் இரண்டாம் இராசேந்திரன். பரகேசரி பட்டம் பெற்றவன்.

## மெய்க்கீர்த்தி-5

### 1-2. "திருமாதர் புவியெனும்......தேவியர்களாக"

திருமகளும் நிலமகளும் இரண்டாம் இராசேந்திரனின் உரிமைத் தேவியர்களாக விளங்கச் சிறந்த செல்வமும், பரந்த நிலவுலகமும் பெற்றுத் திகழ்ந்தான்.

### 2-10. "நீதியுள் ரிகழும்......எய்திய பின்பு"

அவன் சிறந்த மனுநெறி நடத்தி வந்த பொழுது, தன் தமைய னாகிய இராசாதிராசனுடன் போர்ப்படை தாங்கிச் சென்றான். மேலைச் சாளுக்கிய மன்னன் ஆகவமல்லனொடு கிருஷ்ணை யாற்றங்கரையிலுள்ள கொப்பம் என்னுமிடத்தில் பெரும் போர் நிகழ்ந்தது. திருமாலை யொத்து பகைவரை அழிக்கும் சிறந்த போர்க் கருவிகளையுடைய இராசாதிராசன் தன்னை எதிர்த்த மன்னர் பலரைக் கொன்று விண்ணுலகம் அடையச் செய்தான். ஆனால் அப்போரின் முடிவில், வானுலகத்து தேவ மகளிர் எதிர் கொள்ள அவனும் விண்ணுலகு அடைந்தான்.

### 11-18. "குந்தளர் நற்படை......விண்ணகத் தேற்றி"

மேலைச் சாளுக்கியரின் வீரம் மிக்க படைவீரர், கடல் போலும் பரந்த தன் படையிடை ஊடுருவிச் சென்று அழித்தனர். தன் படைவீரர் அழிவதைக் கண்ட இராசேந்திரன் தன் யானை மீதேறி அஞ்சாதீர்! அஞ்சாதீர்!! என்று கூறித் தன் படையை ஊக்குவித் துத் தானும் போரில் இறங்கினான். கன்னாடகராகிய மேலைச் சளுக்கியர்மேல் கூற்றுவனைப் போலப் பாய்ந்து சிறந்த, தேர்ந் தெடுக்கப்பட்ட அம்புகளையும் பிற கருவிகளையும் வீசி, வீரம் மிக்க சாளுக்கிய மன்னனான ஆகவமல்லனின் தம்பியர் சயசிங்கன், புலிகேசி, தசபன்மன் ஆகியோரையும் அவர்களுக்குத் துணையாகி வந்த நன்னிநுளம்பன் போன்ற எண்ணற்ற மன்னர்களையும் கொன்று விண்ணகம் அடையச் செய்தான்.

---

3. சோழர் வரலாறு பக். 269.

**19-34. "ஆயிடை எதிர்ந்த.........வென்கொண்டு"**

தன்னை எதிர்த்த சாளுக்கியருடைய கரியவில்லானவை உமிழ்ந்த அம்புத் திரள்கள் தன்னுடைய யானையின் முகத்தில் தாக்கின; தன்னுடைய அழகிய தொடைகளிலும் குன்று போலும் பருத்த தோள்களிலும் தாக்கின. தன்னுடன் யானை மீதேறி போர் புரிந்த யானை மறவர் பலர் மடிந்தனர். இருப்பவும் தான் ஒருவனே பல கணைகளையும் பிற கருவிகளையும் ஏவி ஆகவமல்லனின் யானை வலியிழக்குமாறு செய்தான். ஆகவமல்லன் தன் படை யழியத் தானும் தன் யானையை விட்டுக் கீழே குதித்து உள்ளம் நடுங்கி. தலைமயிர் விரித்து, அஞ்சி நெளித்து பின்நோக்கி ஓடத் தொடங்கினான். ஆகவமல்லனுடன் துணைநின்று போர் புரிந்த வன்னியர்ஏவன், துத்தன், குண்டமய்யன் போன்ற பல வீரம் மிக்க அரசரும் சோழருக்கு அஞ்சி ஆகவமல்லனுடன் ஓடத் தொடங்கி னர். இவ்வாறு பகைவர் வெருவி ஓடுமாறு செய்து போரில் வெற்றி கண்டான் இராசேந்திரன்.

**34-38. "ஆங்குறும் கரபத்திரமுதல்.........முனைவயிற் கொண்டு"**

வெற்றி பெற்ற அப்போர்க்களத்தில் பகைவர் விட்டுச் சென்ற கரபத்திரன் முதலாகிய போர்க் களிறு பலவும், குதிரைத் தொகுதி கள் பலவும், இராசேந்திரனுக்கு உரியவாயின. மேலும் பகை மன்னரின் கோப்பெருந் தேவியர் பலரும் கைக் கொள்ளப்பட்டனர். மேலைச் சாளுக்கியரின் கொடியாகிய வராகக் கொடி முதலிய அரசச் சின்னங்கள் பல இப்போர்க்களத்தில் கைப்பற்றப் பட்டன.

**39-45. "போர்க்கலனாகத்து...... விசை மிகச் செய்து"**

போர்க் கலன்கள் பலவற்றையும் அணிந்த மார்பினை உடைய வீரமன்னர் ஒருவரும் இதுவரை செய்யாத அருஞ் செயலைச் செய் வேன் என்று எண்ணிய இராசேந்திரன், தன் தமையன் இறக்கத் தங்கள் படை தோல்வியைத் தழுவும் நிலையில் இருந்ததை மாற்றிப் பெருவெற்றி எய்தியதற்கு அறிகுறியாக அப்போர்க் களத்திலேயே மிகச்சிறப்பாக விசையாபிஷேகம் செய்து மகிழ்ந்தான். இச்செயல் பகைவர் அம்புகளால் துளைக்கப்பட்டுத் தன் உடம்பிலிருந்து பொழிந்த புண்ணீரைத் தூய தண்ணீர் கொண்டு கழுவியது போன்றதொரு அருஞ்செயலாக விளங்கியது.

**46-64. "வீரசிங்காசனம்......நிலமவர்க் கருளி"**

அடுத்து அக்களத்தே சோழப் பேரரசனானதற்குரிய முடி சூட்டு விழாவினையும் நடத்தி சிங்காசனம் ஏறினான். மீண்டும் அங்கிருந்து தன் தலைநகராகிய கங்கைகொண்ட சோழபுரத்தை அடைந்தான். அங்கு வந்த பின்பும் இன்றுவரை மன்னர் யாரும்

செய்தறியாத செயலைச் செய்ய எண்ணினான். அதன் படியே தன் நாடு காக்கும் பொறுப்பைப் பலரிடமும் பகிர்ந்து கொடுத்து ஆட்சியைச் சிறப்புறச் செய்தான். அச்செயலின்படி அவன் தம்பி யர், மக்கள், பெயரர் போன்ற பலருக்கும் அரசு பொறுப்பளிக்கப் பட்டுப் பட்டப் பெயர்களும் சூட்டப்பட்டன. அப்பட்டங்களாவன.

இராசேந்திரனின் சிறிய தந்தையாகிய
கங்கை கொண்ட சோழன் — இருமுடிச் சோழன் ராசாதிராசன்
அவன் தம்பியருள்,

1. மும்முடிச் சோழன் — சோழ பாண்டியன்
2. வீரசோழன் — கரிகால சோழன்
3. மதுராந்தகன் — சோழ கங்கன்

அவன் மக்களுள்
இராசேந்திர சோழன் — உத்தம சோழன்

முன்னால் தரப்பட்டுள்ள மெய்க்கீர்த்தியில் காணப் பெறும் செய்திகள் ஒத்துக் காணப்படுகின்றன வெனினும் சில பெயர்கள் இங்கு சுட்டப் பெறவில்லை. இப்பட்டப் பெயருடன் கூடிய தன் சுற்றத்தினராகிய மன்னர்கள் அனைவருக்கும் ஒளிமிக்க நவமணி கள் பதிக்கப் பெற்ற முடிகளை அணிவித்துச் சிறப்புச் செய்து, பாண்டிய மன்னர் முதலாக மன்னர் பலரை வென்று தான் கவர்ந்த நிலப் பகுதிகளை ஆட்சி செய்யுமாறு அவர்களுக்கு அளித்தான்.

### 65–67. "கார்க்கடல் இலங்கையில். . .கதிர்முடிதடிந்து"

கரிய கடலால் சூழப்பட்ட இலங்கையின் மீது படையெடுத்துச் சென்றான் இராசேந்திரன். அப்பொழுது இலங்கையில் அரசாண்ட கலிங்க மன்னன் வீரசலாமேகனையும் அவனது யானையையும் அழித்து அவனது முடியை வீழ்த்தினான்.

### 68–83. "அதன்பின் . . . . . இராசேந்திர தேவர்க்கு"

கொப்பத்துப் போரில் தோல்வியுற்ற ஆகவமல்லன், அது போன்று பல போர்களிலும் சோழரிடம் தான் பெற்ற அவமானத் தைப் போக்கிக் கொள்ளக் கருதியிருந்தான். இராசேந்திரன் படை இலங்கை நோக்கிச் சென்றிருப்பதை அறிந்து, பெரும்படை ஒன்றைத் திரட்டி வந்து கிருஷ்ணை ஆற்றங் கரையில் இருந்த சோழர் படை யுடன் எதிர்த்தான். இராசேந்திரன் விரைந்து சென்று போரைத் தொடங்கினான். இப்போர் முடக்காறு என்ற இடத்தில் நடை பெற்றது.

சாளுக்கியப் படைத் தலைவன் வாலாதேவனும், வலிமைமிக்க படையுடை மன்னர் பலரும் போர்க்களத்து இறந்துபட்டனர்.

ஆகவமல்லனின் மகன் விக்கிரமாதித்தன், இருகையன் முதலிய பிற மன்னர்கள் ஆகியோருடன் ஆகவமல்லன் தன் நிலை அழிந்து தோல்வியுற்று ஓடி ஒளிந்தான். இவ்வாறு இரண்டாவது முறை யாகச் சாளுக்கியரே தொடங்கிய போரில் தன் படைகளுக்கு முன் தானே சென்று பெரும்போர் நிகழ்த்தி, ஒரு தனியானையானது சென்று போர்க்களத்தைக் கலக்கியது போல கலக்கிப் பெரும்புகழ் பெற்றான் பரகேசரி வன்மனாகிய இராசேந்திரன்.

## 12

# இராசமகேந்திரன்

(கி.பி. 1060–1063)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

திருமகள் விளங்க இருநில மடந்தையை
ஒருகுடை நிழற்கீழ் இனிதுநிற்பப் புணர்ந்து
தருமநெறி நிற்ப மனுநெறி நடாத்திய
கோவிராச கேசரிவன்ம ரான
உடையார் ஸ்ரீ இராசமகேந்திர தேவர்க்கு யாண்டு
2 ஆவது

## 13

**மெய்க்கீர்த்தி-2**

ஸ்வஸ்திஸ்ரீ

அடல்களிற்றால் ஆகவ மல்லனை
முடற்காற்றில் முதுகிடு வித்து
மற்றவன்செய சிங்க னோடும்
வருதண்டினைப் பொருதண்டினால்
வெற்றிகொண்டு வெண்குடைநிழல் 5
வீரசிங்கா தனத்து வீற்றிருந்தருளின
கோவி ராசகேசரி வன்மரான
உடையார் ஸ்ரீ இராசமகேந்திர தேவர்க்கு யாண்டு
3 ஆவது

# இராசமகேந்திரன்

## முன்னுரை

''அடல் களிற்றால் ஆகவ மல்லனை
முடக் காற்றில் முதுகிடுவித்து
... ..........................................
கோவிராச கேசரிவன்மரான உடையார்
ஸ்ரீ இராச மகேந்திர தேவர்க்கு''[1]

''முரட்சளுக்கியை முடக்காற்றில்
முதுகு கண்டு முனிவாறி............
இகல்வீர ராசேந்திரன்''[2]

என்னும் மெய்க்கீர்த்தித் தொடர்கள் முடக்காற்றுப் போரினைப் பற்றித் தெரிவிக்கின்றன. இவற்றுள் ஒன்று இராச மகேந்திரனைப் பற்றியது. மற்றொன்று வீரராசேந்திரனைப் பற்றிக் கூறுவது. எனவே இவ்விருவரும் இரண்டாம் இராசேந்திரனோடு முடக்காற்றுப் போரில் பங்கு கொண்டுள்ளனர் என்பது தெரிகிறது. அவர்கள் இருவரும் இராசேந்திரனின் தம்பியர் ஆவர். இராசமகேந்திரன் மூத்தவன்; வீரராசேந்திரன் இளையவன்.

''தரும நெறிநிற்ப மனுநெறி நடாத்திய
கோவிராச கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீ இராச மகேந்திர தேவர்க்கு''

என்னும் இராசமகேந்திரனது மெய்க்கீர்த்தித் தொடர்கள் இவன் மனுநெறி தவறாது செங்கோல் செலுத்தியவன் என்பதை வற்புறுத்துகின்றன.

''பனுவலுக்கு முதலாய வேதம் நான்கில்
பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கள்
மனுவினுக்கு மும்மடிநான் மடியாம் சோழன்
மதிக்குடைக்கீழ் அறம்தளிர்ப்ப வளர்ந்த வாறும்''[3]

''பாடரவத் தென்னரங்க மேயாற்குப் பன்மணியால்
ஆடரவப் பாயல் அளித்தோனும்''[4]

என்பன போன்ற இலக்கியத் தொடர்களும், இராச மகேந்திரனின் அற நெறி, இறைப்பணி முதலியவற்றை எடுத்துக் காட்டுகின்றன. இவை இராசமகேந்திரனைக் குறிப்பவை என்பது உரையாசிரியர்களால் தெளிவாக்கப்படுகிறது. இவ்விலக்கியங்களுள் இரண்டாம் இராசேந்திரனை அடுத்து இராச மகேந்திரன் குறிப்பிடப்படுவதால் இராசேந்திரனை அடுத்துப் பட்டமெய்தியவன் இவனே என்பது

---

1. தெ இ. க. தொகுதி-7, எண் 743. பக். 379. 2. ஷை 3, எண் 84.
3. கலிங். பரணி-206 ; 4. விக். உலா-40-41.

பெறப்படுகிறது. மேலும் இராசேந்திரன் பர்கேசரி எனவும், இராச மகேந்திரன் இராசகேசரி எனவும் பட்டம் பெற்றுள்ளனர். ஆனால் இராச மகேந்திரனை அடுத்து பட்டம் எய்திய வீரராசேந்திரனும் இராசகேசரி என்னும் பட்டப் பெயரே பெற்றுள்ளான். இதனால் இராசமகேந்திரன் இளவரசனாக இருந்த போதே அரசாட்சி பெறா மலே - இராசேந்திரன் பேரரசனாய் இருந்த போதே - இறந்து பட் டான். ஆதலின் அடுத்துப் பட்டம் எய்திய வீரராசேந்திரன் இராச கேசரி பட்டத்தைப் பெற்றான் என்று கொள்ள முடிகிறது.

இராச மகேந்திரனுடைய மெய்க்கீர்த்திகளாகக் கிடைத்துள் ளவை இரண்டு. ஒன்று 'திருமகள் விளங்க இருநில மடந்தையை' என்ற தொடக்கத்தோடு ஐந்தே வரிகளையுடைய மெய்க்கீர்த்தி. மற்றது 'அடல் களிற்றால் ஆகவ மல்லனை' என்ற தொடக்கத் தினை உடையது. எட்டு அடிகளை உடையது.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

*1-5.* "திருமகள் விளங்க......இராசமகேந்திர தேவர்க்கு"

இராசமகேந்திரன் சிறந்த செல்வத்தினை உடையவனாக விளங்கினான். அதேபோலத் தன் ஒப்பற்ற குடையின் கீழ் பரந்த நிலவுலகம் இனிது வாழும் பெருமையைப் பெற்றான். அறநெறி பிறழாது மனுநெறிவழியில் தன் செங்கோலினை நடத்தி வந்தான். இராசகேசரி பட்டம் புனைந்திருந்தான்.

### மெய்க்கீர்த்தி-2

*1-8.* "அடல்களிற்றால்......தேவர்க்கு"

மேலைச் சாளுக்கிய மன்னன் ஆகவ மல்லன் பலமுறை சோழரி டம் தோல்வியுற்றதால் நேர்ந்த அவமானத்தைப் போக்கிக் கொள்ள எண்ணி இராசேந்திரனோடு போர் தொடங்கினான். அப்போர் கிருஷ்ணைப் பேராற்றங்கரையில் உள்ள முடக்காறு என்னுமிடத்தில் நடைபெற்றது. அப்போரில் இராசேந்திரனுக்குத் துணையாய் நின்று களிற்றின் மீதிருந்து போரிட்டுத் தன் வலிமை பொருந்திய களிற்றி னைக் கொண்டு ஆகவ மல்லனைப் புறமுது கிட்டு ஓடுமாறு செய் தான். ஆகவ மல்லனின் தம்பி செயசிங்கன் தலைமையில் வந்த பெரும்படையினைத் தன் பொரு படையுடன் நின்று வெற்றி கொண் டான்.

இவ் இராசமகேந்திரன் இளவரசுப் பட்டம் பெற்றவன் ஆதலின் குடை நிழல் சிங்காதனத்திருந்து செங்கோல் நடத்திய இராசகேசரி என்று சிறப்பிக்கப்படுகிறான்.

# 14

# வீர இராசேந்திரன்

(கி. பி. 1063–1070)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

[1]வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்
செங்கோ லோச்சிக் கருங்கலி கடிந்து
தென்னனைத் தலைகொண்டு சேரனைத் திறைகொண்டு
சிங்கள தேசம் அடிப்படுத்து வெங்களத்து
ஆகவ மல்லனை ஐம்மடி [2]வென்கண்டு 5
வேங்கை நாடு மீட்டுக் கொண்டு
தன்னுடன் பிறந்த முன்னவர் விரதம்
முடித்துத் தன்கழல் அடைந்தமன் னவர்க்குக்
கிடாரம் எறிந்து கொடுத் தருளி . . . .
வந்தடி [3]பணிந்த விசயா தித்தற்கு 10
மண்டல மருளித் தன்னடி யடைந்து
அருளு கின்ற [4]விக்கிரமா தித்தனை
எண்டிசை நிகழக் கண்டிகை சூட்டி
இரட்ட பாடி ஏழரை இலக்கமும்
எறிந்துகொடுத் தருளின கூடல்சங் கமத்து 15
ஆகவ மல்லனை அஞ்சு வித்து
விக்கலனையுஞ் சிங்கணனையும் உடைபுறங் கண்டு
[5]மற்ற வன்மகா தேவிய ரோடும்
வஸ்து வாக னங்கைக் கொண்டு
[6]இரண்டாம் [7]விசையும் குறித்த களத்து 20
ஆகவ மல்லனை அஞ்சு வித்து
வேங்கை நாடு [8]மீட்டுக் கொண்டு
தன்னுடன் பிறந்த முன்னவர் விரதம்

---

1. விரமெய். 2. மென்கண்டு. 3. பணிந்த சளுக்கி விசயாதித்தற்கு 4. விக்கிரமாதித்தனன். 5. மற்றவர்மா தேவியோடும். 6. இருகாலாவதும். 7. விசையிலும். 8. மீட்டருளி.

முடித்து மூன்றாம் விசையும்[9]சோ மேஸ்வரன்
கட்டின கண்டிகை [10]அவிழ்ப்பதன் முன்னம் 25
கம்பிலி சுட்டுக் கரடிக் [11]கல்லில்
ஜயஸ்தம்பம் நாட்டித் தேவநா தன்முதல்
மாசா மந்தரைச் சக்கரக் கோட்டத்துத்
துரத்தி யவர்களுக் குரிய தாரம்
பிடித்துக் கன்ன [12]குச்சியும் மீட்டு 30
எல்லை கடந்து நிலையிட்டு
விஜய சிம்மா சனத்து
உலகமுடை யாளொடும் வீற்றிருந் தருளின
கோவிராச கேசரி வன்ம ரான 35
உடையார் ஸ்ரீவீர இராசேந்திர தேவர்க்கு யாண்டு
7 ஆவது
வெறிகுறித்த களந்தன்னில்
போர்க்களத்துப் புறங்கண்டு
இரட்டகோனைப் புரட்டடக்கி
இகல்வீர ராசேந்திரன்
நிலங்கொண்டு பொதுநீக்கி யாள்கின்ற
ஜயங்கொண்ட சோழமண்டலத்து
களத்தூர் கோட்டத்துக் களத்தூர் நாட்டுத்
தன்கூற்று தேவதானத்துத் திருக்கழுக் குன்றத்து
ஸ்ரீமூலஸ்தானமுடைய மாதேவர்க்கு

## 15

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருவளர் திரள்புயத் திருநில வலயந்
தன்மணிப் பூணெனத் தாங்கிப் பன்மணிக்
கொற்றவெண் குடைநிழற் குவலயத் துயிர்களைப்
பெற்ற தாயினும் பேணி மற்றுள
அறைகழ லரையர்தன் னடிநிழ லொதுங்க 5
உறைபிலத் துடைகலி யொதுங்க [1]முறைசெய்து

---

9. சோமீஸ்வரங்கட்டிக். 10. அவிழ்ப்பத்தன்முன்னங். 11. கறடிகல்லில்
12. குச்சியுமிட்டு. 1. முறைமையில்.

அரும்பெறல் தமையனை ஆளவந் தானை
இரும்புவி புகழும் இராசாதி ராசன்
. . . . புகழொளி மணிமுடி சூட்டித்
தன் திருப் புதல்வனாகிய மதுராந் தகனை 10
வாளேந்து தானை [2]சோழேந் திரனென
எண்திசைத் திகழ எழில்முடி சூட்டித்
தொண்டைமண் டலங்கொடுத் தருளித் [3]திண் திறல்
மைந்த னாகிய கங்கைகொண்ட சோழனை
ஏழுய ரியானைச் சோழபாண்டியன் என்று 15
[4]ஈண்டுயர் மணிமுடி இசைபெறச் சூட்டிப்
பாண்டிமண் டலங்கொடுத் தருளி ஆண்டகை
வடிகொண்ட கதிர்வேல் முடிகொண்ட சோழனைச்
சுந்தர [5]சோழனெனச் சுடர்முடி சூட்டி
அந்தமில் பெருஞ்சிறப் பருளித் தன்கிளை 20
எவ்வேறு உலகத் தவர்க்குரிய அகலிடம்
வேறுவேறு அருளி இகல்முனை யிருந்து
[6]விரைமலர்த் தெரியல் விக்கலன் றன்னொடு
வரிசிலைத் தடக்கை மாசா மந்தரைக்
கங்க பாடிக் களத்திடை நின்றுந் 25
துங்கபத் திரைபுகத் துரத்தி யாங்கவர்
வேங்கைநன் நாட்டிடை மீட்டுமவர் விட்ட
தாங்கரும் பெருவலித் தண்டுகெடத் தாக்கி
மாதண்ட நாயகன் சாமுண்ட ராயனைச்
செற்றவன் சிரத்தினை யறுத்து மற்றவன் 30
ஒருமக ளாகிய விருகையன் றேவி
நாகலை யென்னுந் தோகையஞ் சாயலை
முகத்தொடு மூக்குவே றாக்கிப் பகைத்தெதிர்
மூன்றாம் விசையினும் ஏன்றெதிர் பொருது
பரிபவந் தீர்வனெனக் கருதிப் பொருபுனற் 35
கூடல் சங்கமத் தாகவ மல்லன்
மக்க ளாகிய விக்கலன் சிங்கணன்
என்றிவர் தம்மொடு மெண்ணில்சா மந்தரை
வென்றடு தூசிமுனை விட்டுத் தன்றுணை
மன்னருந் தானும் பின்னடுத் திருந்து 40

2. சோழிந்திரன். 3. திண்திரள். 4. திண்துயர். 5. சோழனின. 6. விருந்தொடு மலைக்கும் விக்கலன்.

வடகட லென்ன வகுத்தவத் தானையைக்
கடகளி றொன்றாற் கலக்கி யடல்பரிக்
கோசலைச் சிங்கணைக் கொடிபட முன்னர்த்
தூசிவெங் களிற்றொடுந் துணித்துக் கேசவ
தண்ட நாயகன் தார்கேத் தரையன் 45
திண்டிறல் மாரயன் சினப்போத் தரையன்
நிரேச்சய னிகல்செய்பொற் [2]கோதைமூ வத்தியென்று
ஆர்த்தடு துப்பில் அனேகசா மந்தரைச்
சின்னா பின்னஞ் செய்து பின்னை
முதலி யான மதுவண னோட 50
விரித்த தலையொடு விக்கல னோடச்
செருத்தொழி லழிந்து சிங்கண னோட
[3]அண்ணன் முதலியர் அனைவரும் அமர்போர்ப்
பண்ணிய பகடிழிந் தோட நண்ணிய
ஆகவ மல்லனும் அவர்க்குமுன் னோட 55
வேகவெங் களிற்றினை விலக்கி வாகைகொண்டு
அங்கவர் தாரமும் அவர்குல தனமும்
சங்கும் தொங்கலும் தாரையும் பேரியும்
[4]வெண்சா மரையு மேக டம்பமும்
சூகரக் கொடியும் மகரதோ ரணமும் 60
ஒட்டக நிரையும் உலோகா சனமும்
புட்பகப் பிடியும் பொருகளிற் றீட்டமும்
பாய்பரித் தொகையொடும் பறித்துச் சேயொளி
வீரசிங் காதனம் பார்த்தொழ வேறி
[5]எழில்தர உலக முழுதுடை யாளொடும் 65
விசையமணி மகுடம் [6]இசையுடன் சூட்டி
திசைதொறும் செங்கோல் செலுத்தி இசைவின்றி
தத்துமாப் புரவிப் பொத்தப்பி வேந்தனை
வாரணை வன்கழற் கேரளன் தன்னைச்
சனநா தன்றன் [7]தம்பியைப் போர்களத் 70
தலங்கல்சூழ்ப் பசுந்தலை யரிந்து பொலங்கழற்
தென்னனைச் சீவல் லவன்மகன் சிறுவன்
மின்னவில் மணிமுடி வீரகே சரியை
மதவரை யொன்றா லுதைப்பித்து உதகையிற்

---

2. தொகை மூவத்தி வென்றார். 3. அண்ணலர். 4. வெல்கடம்பும்
5. எழில்தரு. 6. எய்ந்து எழில்கொள். 7. நம்பியைப்.

கேரளர் தங்குலச் செங்கீரை யோடும் 75
வேரறப் பரிந்தோடி மேல்கடல் [8]வீழ
வாரண மருதுளி செலுத்தி வாரியில்
எண்ணருங் களிற்றின் இரட்டரைக் கவர்ந்த
கன்னியர் களிற்றொடுங் கட்டிப் பண்ணுப்
பிடியொடு மாங்கவர் விடுதிறை கொண்டுமீண்டு 80
கொண்டாற் றுறவிற் குறித்தவெம் போரிற்
தண்ட நாயகர் தம்மில் திண்திறல்
மல்லியண் ணனையு மஞ்சிப் பயனையும்
பில்குமதக் களிற்றுப் பிரமதே வனையுந்
தண்டார் அசோகையன் தன்னையும் ஒண்திறல் 85
சத்தியண் ணனையும் சந்திவிக் கிரகப்
பத்தி யண்ணன் தன்னையும் அத்தகு
தேமரு தெரியல் வீமயன் றன்னையு
மாமதி வங்கா ரனையும் நாமவேற்
கங்கனை நுளம்பனைக் காடவர் கோனை 90
மங்குமத யானை வைதும்ப ராயனை
இருந்தலை யரிந்து பெரும்புனற் றனாது
கங்கை மாநகர் புகுந்தபின் திங்களின்
வழிவரு சளுக்கி பழியொடு வாழ்வதிற்
சாவது சால நன்றென்று ஏவமுற்று 95
உன்னிய சிந்தையு னாகி முன்னம்
புதல்வரும் தானும் முதுகிட் டுடைந்த
கூடலே களமெனக் குறித்தக் கூடலில்
வாரா தஞ்சினர் மன்ன ரல்லர்
போர்ப்பெரும் பழிப்பிரட்ட ராக வென்றி 100
யாவரு மறிய எழுதிய சபத
மேவரும் ஓலை விடையொடும் கொடுத்து
இரட்ட பாடிப் பிரட்டரில் மேதகு
கங்கா கேத்தனை ஏவ அங்கவன்
வந்தடி வணங்கி வாசகம் உணர்த்தலும் 105
சிந்தையும் முகமும் திருப்புயம் இரண்டும்
ஏந்தெழில் உவகையொடு இருமடங்கு பொலியப்
போந்தப் போர்க்களம் புகுந்து [9]கரந்தையில்

8. ஒலித்தலும். 9. காந்தையில்.

வல்லவர் கோனை வரவு காணாது
சொல்லிய நாளின் மேலுமோர் திங்கள் 110
பார்த்தி ருந்த பின்னைப் பேர்த்தவன்
கால்கெட வோடி மேல்கட லொளித்தலும்
தேவ நாதனும் சித்தியும் கேசியும்
மூவரும் தனித்தனி முதுகிடப் பாவரும்
இரட்ட பாடி ஏழரை இலக்கமு 115
முரட்டொழில் அடக்கி முழங்கெரி யூட்டி
வெங்கதப் புலியேறு வியந்து விளையாடத்
துங்கபத் திரைக்கரைச் செயபத் திரத்தூண்
நானிலம் பரச நாட்டி மேனாள்
வந்த பிரட்டனை வல்லவ னாக்கிச் 120
[10]சுந்தரக் கண்டிகை [11]கட்டிப் (பின்னும்)
புரசை யானைப் புழைக்கையிற் பிழைத்திவ்
உலக மறிய ஓடிய பரிசொரு
பலகையிற் பழுதற எழுதிய பின்னை
சார்த்தின உரையுஞ் சளுக்கி பதம்பெற்ற 125
பூத்தின மார்வொடும் பூட்டிப் பேர்த்துந்
தான்கைக் கொண்ட வேங்கைநன் னாடு
மீட்டுக் கொண்டலால் மீள்கிலங் கேட்டுநீ
வல்ல னாகில் வந்துகாக் கென்று
சொல்லி யெடுத்தவத் தானை விசைய 130
வாடையொடு அடுத்தபே ராற்றிற் றடுத்த
சனநா தனையும் தண்டநா யகனாம்
இனமார் கடகளிற்று இராசமய் யனையும்
முப்பர சனையு முதலாக உடைய
அப்பெருஞ் சேனையை அடவியிற் பாய்ச்சிக் 135
கோதா விரியிற் றன்போ தகநீர்
உண்ணக் கலிங்க முங்கடந் தப்பால்
சக்கரக் கோட்டத்து அப்புறத் தளவு
மேவருந் தானைத் தாவடி செலுத்தி
வேங்கைநன் நாடு மீட்டுக் கொண்டுதன் 140
பூங்கழற்கு அடைக்கலம் புகுந்த படைக்கலத்
தடக்கை விசையா தித்தற்கு அருளி

10. சுதாக். 11. குட்டிப்.

விசைகொடு மீண்டுவிட்டு அருளி இகலிடைப்
பூண்டசயத் திருவொடுங் கங்கா புரிபுகுந்து
அருளி அங்கே ராசாதி ராசனெனத் 145
[12]தராதிப ராகத்தம் நியமத்து இயற்றிப்
படியில் மன்னவ ரடிதொழு தேத்த
இனமணிப்பீடத் திருந்து வேங்கைநன் னாட்டினிற்
இருநிதிப் பிறக்கம் வரிசையிற் காட்டி கொண்ட
ஆழியு நிகளமும் [13]அகற்றி ஆங்கவர் 150
வாழிய விரதமாற்றிப் பூழிமஞ்
செய்துவரம் பாகச் செங்கோல் செலுத்தி
மேதினி விளக்கி மீதுயர் வீரத்
தனிக்கொடி தியாகக் கொடியொடு மேற்பவர்
வருக என்று நிற்பப் போர்த்தொழில் 155
உரிமை யில்எய்தி யரசுவீற் றிருந்து
மேவரு மனுநெறி விளக்கிய
கோவிராச கேசரி வர்ம ரான
உடையார் ஸ்ரீவீர இராசேந்திர தேவர்க்கு யாண்டு
அஞ்சாவது

# வீர ராசேந்திரன்

## முன்னுரை

முதலாம் இராசேந்திரன் மக்களுள் இராசாதிராசனும், இரண்டாம் இராசேந்திரனும் முறையே சோழப் பேரரசின் மன்னர்களாய் விளங்கினர். அடுத்த மகனான இராசமகேந்திரன் தன் தமையன் இரண்டாம் இராசேந்திரன் ஆட்சியில் இளவரசனாக விளங்கி மனுநெறி பிறழாது ஆண்டு சிறப்பெய்தினான். ஆயினும் தன் தமையன் ஆட்சியில் இருக்கும்போதே இறந்து பட்டான். ஆதலின் அவனுக்கு இளையவனாகிய வீர ராசேந்திரன் இரண்டாம் இராசேந்திரனுக்குப் பின் பட்டம் எய்தினான். எனவேதான் இரண்டாம் இராசேந்திரன் பரகேசரி என்னும் பட்டமும், வீர ராசேந்திரன் இராசகேசரி என்னும் பட்டமும் முறையாகப் பெற்றிருந்தனர்.

வீர ராசேந்திரன் ஆவணி மாதம் ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவன். ஆதலால் ஆயில்ய நாளில் ஆலயங்களில் திருவிழா முதலியன நடக்க நிவந்தங்கள் அளித்துள்ளான். இதனை,

---

12. தராபதியராகத்து இயற்றி. 13. தழற்றி.

''கோ இராசகேசரி வன்மரான ஸ்ரீ வீர ராசேந்திர தேவர்க்கு யாண்டு 2 ஆவது...திருவெண் காடுடையார்...வீர . ராசேந்திர தேவர் பிறந்தருளின ஆயிலியத் திரு நாள்களால் திருமஞ்சனமாடிய ருளித் திருவிழா எழுந்தருளுகைக்கு.........நிவந்தங்களுக்கு.........''[1] என்னும் திருவெண்காட்டு ஆலயத்திற்குரிய நிவந்தச்செய்தி உறுதிப் படுத்துகிறது.

தந்தையின் தலைநகரமாகிய கங்கை கொண்ட சோழபுரமே இவனுக்கும் தலைநகரமாக விளங்கியது. இவனுடைய மெய்க்கீர்த்தி களாக இரண்டு வகை மெய்க்கீர்த்திகள் கிடைத்துள்ளன.

''வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்'' என்ற தொடக்கத்தினை உடைய மெய்க்கீர்த்தி ஒன்று.

''திருவளர் திரள்புயத்து இருநில வலயம்'' என்று தொடங்கும் நீண்ட மெய்க்கீர்த்தி மற்றொன்று''.

## மெய்க்கீர்த்திகள்

1. வீரத்தைத் துணையாகவும், தியாகத்தை அணியாகவும் பெற்ற வீர ராசேந்திரன், பாண்டியமன்னன் வீரகேசரி, கேரள மன்னன் சனநாதன் தம்பி, இலங்கை மன்னன் விசயபாகு ஆகி யோரை வென்றான். கூடல் சங்கமம், கம்பிலி ஆகிய இடங்களில் நடைபெற்ற போர்களில் ஐந்துமுறை ஆகவ மல்லனைத் தோற்கடித் தான். தான்வென்ற இரட்டபாடியை ஆகவ மல்லன் மகனுக்கே கொடுத்தருளினான்.

2. எல்லாச் செல்வங்களையும் ஒருங்கே பெற்றவன் வீர ராசேந்திரன். தன் தமையன், மக்கள் ஆகியோருக்குத் தனது நாட்டினைப் பிரித்துக் கொடுத்து அரசுபுரியச் செய்தான். தான் போர்க்கோலம் பூண்டு போரிலேயே ஈடுபட்டிருந்தான்,

கங்கபாடிப் போரில் விக்கிரமாதித்தனை வென்றான். கூடல் சங்கமப் போரில் ஆகவ மல்லனை வென்று, பலவகைப் பொருள் களைக் கவர்ந்து வந்தான். கங்கைகொண்ட சோழபுரத்தில் வந்து முடிசூடி விளங்கினான்.

மீண்டும் தொடங்கிய போரில் பொத்தப்பி மன்னன், கேரள மன்னன் சனநாதன் தம்பி, பாண்டிய மன்னன் வீரகேசரி ஆகி யோரை வென்றான். மீண்டும் சேர நாட்டு உதகையில் போர் புரிந்து சேரரை வென்றான். ஆகவ மல்லன் நான்கு முறையாகப்

---

1. தெ. இ. க. தொ-5. 976-பக்கம். 365.

பெற்ற தோல்வியால் அவமானமுற்று அதனைப் போக்கிக் கொள்ள எண்ணி ஐந்தாம் முறையாகப் போருக்கு அழைத்தான். ஆனால் குறித்த நாளில் குறிப்பிட்ட களத்திற்கு அவன் வரவில்லை. அத னால் சினங்கொண்ட சோழன் அந்நாட்டில் புலிக்கொடியினைப் பறக்கவிட்டு வெற்றித்தூண் நட்டுத்திரும்பினான்.

கோதாவரியில் தன் யானைகளை நீருண்ணச் செய்து, தன் நாடு திரும்பினான், போரில் பெற்ற பெரும்பொருளை யெல்லாம் தன் வீரர்களுக்கு வரிசையறிந்து வழங்கி அவர்களின் போர் விர தத்தை முடித்து வைத்தான்.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

#### 1–2. "வீரமே துணையாகவும்......கருங்கலி கடிந்து"

வீரராசேந்திரனுக்கு என்றும் வீரமே துணையாக இருந்தது. தியாகத்தையே தனது அணிகலனாகக் கொண்டிருந்தான். நாட்டில் துன்பம் ஏதும் இல்லாமல் நீக்கி நீதி நெறி நடத்தினான்.

#### 3-5. "தென்னனைத் தலைகொண்டு......வென்கண்டு"

'வீரராசேந்திரன் கங்கை கொண்ட சோழன் என்னும் தன் மகனுக்குச் சோழ பாண்டியன் என்று பெயர் சூட்டிப் பாண்டிய மண்டலத்தில் பொறுப்பை அளித்திருந்தான். ஆனால் தன்னுரிமை பெற விரும்பிய பாண்டிய மன்னன் சீவல்லபனின் மகன் **வீரகேசரி** அடிக்கடி கலகம் விளைவித்து வந்தான். எனவே, பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வீரகேசரியைக் கொன்று தன் மகனது ஆட்சியை நிலை நிறுத்தினான்.

இதேபோல் தன் உரிமை பெற விரும்பி, கிளர்ச்சி செய்து வந்த கேரள மன்னனாகிய **சனநாதன் தம்பியைக்** கொன்று சேரரைத் திறை செலுத்துமாறு செய்தான்.

இலங்கையில் **ரோகண நாடு** தவிர்த்த பிற பகுதிகள் சோழர் ஆட்சிக்குட்பட்டிருந்தது. ரோகண நாட்டில் **விசயபாகு** தனி யாட்சி செலுத்தி வந்தான். சிங்கள நாடு முழுமையும் தன் ஆட்சி யின் கீழாக வேண்டும் என்று விரும்பிய விசயபாகு அதற்கான முயற்சிகளைச் செய்து வந்தான். அதை அறிந்த சோழன் தன் படையை அனுப்பி அவனை அடக்கினான்.

ஐந்து முறை மீண்டும் மீண்டும் படையெடுத்த ஆகவ மல்லனை ஐந்து முறையும் வென்றான். (விளக்கம் கீழ் அடிகளுள் வருகிறது)

### 6-11. "வேங்கை நாடு மீட்டு......மண்டலமருளி"

சாளுக்கியருடன் நடத்திய ஐந்தாவது போரில் வேங்கை நாட்டை மீட்டு அவ்விடத்திலேயே தன் அடிபணிந்து அடைக்கலம் புகுந்த கீழைச் சாளுக்கிய மன்னன் விசயாதித்தனுக்கு அந் நாட்டைக் கொடுத்தருளினான்.

இதேபோல, தன்னிடம் அடைக்கலம் புகுந்த கடாரத்து அரசன் பொருட்டுக் கடாரத்தின்மீது படையெடுத்து அதனை வென்று அம்மன்னனுக்குக் கொடுத்தருளினான்.

### 11-34 "வந்தடி பணிந்த......இராசகேசரி வன்மரான"

கூடல் சங்கமத்தில் தானாக வந்து போர் தொடுத்த ஆகவ மல்லனைத் தோற்கடித்து, விக்கலன், சிங்கணன் ஆகியோரைப் புறங்கொடுத்து ஓடுமாறு செய்தான். அப்போரில் ஆகவ மல்லனின் தேவியரையும் பெரும் பொருளையும் யானை, குதிரை முதலிய படைகளையும் கைப்பற்றினான்.

இரண்டாம் முறை, ஆகவ மல்லனோடு போர் செய்து வேங்கை நாட்டை மீண்டும் கைப்பற்றினான். மூன்றாம் முறை கம்பிலி என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் பெரு வெற்றி கொண்டு இடை துறை நாட்டிலுள்ள கரடிக் கல்லில் வெற்றித் தூண் ஒன்றினை நாட்டினான். தேவநாதன் முதலாய பல படைத்தலைவர்களைச் சக்கரக் கோட்டத்துக் கப்பால் துரத்தியடித்து கன்ன குச்சியைக் கைப்பற்றி அவர்களுக்குரிய மகளிரையும் அடிமைப் படுத்தி வந்தான். இறுதியாகத் தன்நாடு திரும்பி விசய சிம்மாசனத்து உலக முடையா ளொடும் வீற்றிருந்து அரசு செலுத்திய வீர ராசேந்திரன் இராச கேசரி என்ற உரிமைப்பட்டத்தைப் பெற்றிருந்தான்.

இவற்றுள் ஆகவ மல்லனின் இரண்டாம் மகன் விக்கிரமாதித் தனுக்கு இரட்ட பாடியை வென்று கொடுத்தருளிய செய்தி ஆகவ மல்லனின் மறைவிற்குப்பின் நடந்ததாகக் கருதப்படுகிறது. அதா வது ஆகவ மல்லன் இறந்தபின் அவன் மக்களாகிய இரண்டாம் சோமேசுவரனும் விக்கிரமாதித்தனும் மாறுபாடு கொண்டனர். அவர் களின் தம்பி சயசிங்கன் விக்கிரமாதித்தனுக்குத் துணை புரிந்தான், கோவாவில் இருந்த கடம்பர்குல மன்னன் சயசேசியும் துணை வனானான். சயகேசியின் துணையால் இவர்கள் வீர ராசேந்திர னுடன் நட்பு பூண்டனர். எனவே வீரராசேந்திரன் மீண்டும் இரட்டபாடியை மீட்டு அவனுக்களித்தான்[1] என்பன பதினொன்றா வது அடிமுதல் பதினைந்தாவது அடிவரையுள்ள செய்திகளை விளக்குகின்றன.

---

1. சோழர் வரலாறு. பக். 288-289.

## மெய்க்கீர்த்தி-2

### 1-5. "திருவளர் திருப்புயத்து . . . . . . முறை செய்து"

திருமகள் அவனது புயங்களிலே வீற்றிருக்கிறாள் என்பது அவனது செல்வ மிகுதியைப் புலப்படுத்துகிறது. இப்பரந்த நிலவுல கத்தை மணிகள் பதித்த ஆபரணமாக அணிந்திருக்கிறான் என்பது அவன் பரந்த நிலப்பரப்பின் ஆட்சிப் பொறுப்பைப் பெற்றிருந்தான் என்பதைப் புலப்படுத்துகின்றது. பல மணிகளால் ஆகிய வெண் கொற்றக் குடையை உடைய அவன், தன் ஆட்சியின் கீழ் இருந்த இவ்வுலகங்களைப் பெற்ற தாய்போல இருந்து பாதுகாத்தான். ஆனால் வீரக் கழலணிந்த மன்னர் பலரும் அவனை அண்டி வாழ்ந்து வரும்படியாகவும், தன் நாட்டிடை உள்ள துன்பங்கள் நீங்கும்படியாகவும் நெறிமுறை வழுவாது அரசு செலுத்தி வந்தான்.

### 6-21. "அரும்பெறல் தமையனை . , . . . அருளி"

தன் ஆட்சியின் கீழ் இருந்த நாடுகளைப் பிரித்துத் தன் சுற்றத் தினரிடம் ஒப்படைத்து அவர்களுக்கே முடி சூட்டி முழு உரிமை களை வழங்கிச் சிறப்பித்தான். இவ்வாறு செய்த செயல் ஆட்சி நல்ல முறையில் நடக்கச் செய்ததோடு தான் எப்பொழுதும் போர்க் கோலம் கொண்டவனாகவே விளங்கவும் உதவியாக இருந்தது. அவன் ஏற்பாட்டின்படி,

1. ஆளவந்தான் என்னும் பெயருடைய அவன் தமையனுக்கு இராசாதிராசன் என்று பட்டப்பெயர் கொடுத்துத் தன் நாட்டில் ஒரு பகுதிக்கு அரசனாக்கி முடி சூட்டினான். இவன் யார் என்பதும் எப்பகுதியை ஆண்டான் என்பதும் அறிய இயல வில்லை.

2. தன் மக்கள் மூவருள் மதுராந்தகன் என்பவனுக்கு சோழேந் திரன் என்ற பட்டப் பெயர் கொடுத்துத் தொண்டை மண்டலத் தின் அரசனாக்கி மணிமுடி சூட்டினான்.

3. கங்கைகொண்டசோழன் என்னும் மற்றொரு மகனைப் பாண்டி மண்டலத்தின் மன்னனாக்கி முடி சூட்டி, சோழபாண்டியன் என்ற பெயரையும் சூட்டினான்.

4. முடி கொண்ட சோழன் என்னும் மூன்றாம் மகனுக்குச் சுந்தர சோழன் என்ற பெயரோடு மணிமுடி சூட்டிச் சிறப்பித்தான். அவனுக்குத் தனிநாடு அளித்ததாகத் தெரியவில்லை. எனவே அவனைத் தனக்குத் துணையாகத் தன் ஆட்சிப் பகுதி யாகிய கங்கைகொண்டசோழபுரப் பகுதியிலேயே வைத்துக்

கொண்டதாகக் கொள்ளலாம். இவனே அடுத்து, சோழப் பேரரசின் பட்டத்திற்கு வந்த அதிராசேந்திரனாக இருத்தல் வேண்டும். இவ்வாறு தன் சுற்றத்தினருக்கு எந்த எந்த பகுதியை முடி சூட்டினானோ அவ்வப் பகுதிகளை வெவ் வேறாகப் பிரித்து அளித்து ஆட்சி நடைபெறச் செய்தான்.

21–25. "இகல் முனை இருந்து .....புகத்துரத்தி"

நாட்டு ஆட்சி முறைகளுக்குரிய ஏற்பாடுகளைச் சிறப்புற செய்து முடித்த வீரராசேந்திரன் தன் காலம் முழுவதையும் போர் முனையிலேயே கழித்தான். இம் மெய்க்கீர்த்தியில் அவ்வாறு தொடங்கிய போருள் கங்கபாடிப் போர் முதலில் குறிப்பிடப்படுகிறது. சோழர் ஆட்சிக்கு உட்பட்டிருந்த நுளம்பபாடி, வனவாசி ஆகிய வற்றின் வட எல்லை மேலைச் சாளுக்கியரின் தென் எல்லையாக அமைந்திருந்தது. அவ் எல்லையை ஆகவ மல்லனின் இரண்டாம் மகன் விக்கிரமாதித்தன் கண்காணித்து வந்தான். வீரராசேந்திரன் தன் மக்களின் முடி சூட்டு விழா போன்றவற்றில் ஈடுபட்டிருந்தபோது விக்கிர மாதித்தன் சோழர் எல்லைக்குள் படையோடு நுழைந்தான். செய்தியறிந்த வீரராசேந்திரன் கங்கபாடியில் விக்கிரமாதித்தனோடு போர் தொடுத்தான். அதன் முடிவில் அவனையும் வில்லேந்திய படைவீரர் பலரையும் கங்கபாடியிலிருந்து துங்கபத்திரை யாற்றுக் கப்பால் துரத்தியடித்தான்.

25–32. "ஆங்கவர் வேங்கை......மூக்குவேறாக்கி"

வேங்கை நாட்டு மன்னன் இராசராச நரேந்திரன் இயற்கை எய்தியதறிந்த ஆகவமல்லன் வேங்கை நாட்டின் மீது தன் படையை ஏவினான். இராசராசப் பேரரசன் மகள் குந்தவையை விமலாதித்தனுக்கு மணம் செய்தது முதலாக உறவு முறையால் இணைந்திருந்த வேங்கை நாட்டைக் காக்கும் பொறுப்புடைய வீர ராசேந்திரன் இரண்டாவது முறையாகச் சாளுக்கியப் போரைத் தொடங்க வேண்டிய தாயிற்று, ஆகவ மல்லனால் அனுப்பப்பட்ட வலிமைமிக்க பெரும்படையைத் தாக்கினான். அப்படைத் தலைவ னாக வந்த சாமுண்டராயனைக் கொன்றான். அச் சாமுண்ட ராயனின் மகளும், ஆகவமல்லனின் படைத்தலைவர்களுள் ஒரு வனாகிய இருகயன் என்பானின் மனைவியுமாகிய இருகயன் தேவி என்னும் மறு பெயர் பெற்ற நாகலை என்பவளைப் பிடித்து மூக்கை அறுத்து அவமானப் படுத்தினான்.

32-66. "பகைத் தெதிர் ........ செங்கோல் செலுத்தி"

எவ்வாறேனும் சோழரை முறியடித்துத் தன் பகையை வேரோடு அழிக்க வேண்டும்; கீழைச் சாளுக்கிய நாட்டைத் தன் நாட்டுடன் இணைத்துக் கொள்ள வேண்டும்; தனக்கு ஏற்பட்ட அவமானம்

நீங்க வேண்டும் என்ற ஆழ்ந்த கருத்துடைய ஆகவ மல்லன் பெருங் கடல் போன்றதொரு படையைத் திரட்டினான். தன் மக்களாகிய **விக்கலன், சிங்கணன்** என்னும் இருவரையும், அப் பெரும் படையுடன் தூசிப்படையாக அமைத்துப் போரின் முன்னால் அனுப்பினான். ஆகவ மல்லன் தனக்குத் துணையாக வந்த மன்னருடன் அப்படையின் பின்னால் நின்றான். இவ்வாறு பல காலம் திட்டமிட்டு அமைத்த பெருங்கடல் போன்ற சேனையுடன் சென்று, கிருஷ்ணை ஆற்றங் கரையில் துங்கபத்திரையாறு வந்து கலக்கும் இடத்தில் அமைந்த கூடல் சங்கமம் என்னுமிடத்தில் வீர ராசேந்திரனை எதிர்த்தான். ஆகவ மல்லன் வடகடலென்ன வகுத்த அச் சேனையுடன் வந்து எதிர்த்த பெரும் போர் இதுவே. ஆதலின் சோழர்-சாளுக்கியர் போர்களில் கூடல் சங்கமப் போர் மிகவும் சிறப்பித்துப் பேசப் படுகிறது.

"குந்தளரைக் கூடல்சங் கமத்து வென்ற
கோன்அபயன் குவலயம்காத் தளித்த பின்றை"[1]

"... ................................கூடலார்
சங்கமத்துக் கொள்ளும் தனிப்பரணிக்கு எண்ணிறந்த
துங்கமத யானை துணித்தோனும்"[2]

"பாட வரிய பரணி பகடொன்றின்
கூடல் சங்கமத்துக் கொண்டகோன்"[3]

இவ் இலக்கிய அடிகள் வீர ராசேந்திரனின் இக்கூடல் சங்கமத்துப் போரினைச் சிறப்பித்துக் கூறுவனவே,

சோழன் தன் கடகளிறு ஒன்றினாலேயே இக் கடல் போலும் பெரும்படையினைக் கலக்கியழித்தான். தூசிப் படையின் முன்னர் வந்த யானைகளைக் கொன்று கொடிகளை அழித்தான். படைத் தலைவர்களான **கேசவன், கேத்தரையன், மாரய்யன், போத்தரையன், நிரேச்சயன், பொற்கோதை, மூவத்தி** என்ற அனேக வீரர்களைச் சின்னா பின்னமாகச் சிதைத்தான். படைத் தலைவன் **மதுவணனும்**, ஆகவமல்லனின் மக்கள் **விக்கிரமாதித்தன், சயசிங்கன்** ஆகியோரும் புறங்கொடுத்து, யானை மேலிருந்து குதித்துப் போர்த் தொழிலை விட்டு, விரித்த தலையோடு ஒருவருக்கு முன் ஒருவராக ஓடத் தொடங்கினர். ஆகவமல்லன் அவர்களுக்கெல்லாம் முன்னாக விரைந்து ஓடினான்.

ஆகவ மல்லனின் யானையை விலக்கிப் போரில் வாகை சூடிய சோழன், ஆகவ மல்லனின் மனைவியரைச் சிறை பிடித்து, அந்நாட்டுச் செல்வம் முழுவதையும் கவர்ந்தான். சாளுக்கியரின்

---

1. பரணி. 206 2. விக். உலா - 42-44. 3. இராசராச. உலா - 49 - 50

அரசச் சின்னங்களாகிய சங்கு, மாலை, தாரை, பேரி, வெண்சாமரை, மேகடம்பம், வராகக் கொடி மகர தோரணம், சிம்மாசனம் போன்ற பொருள்களையும் பட்டத்து யானையாகிய புட்பகப் பிடி, ஒட்டகநிரை, யானைத்திரள், குதிரைக் கூட்டம் போன்ற படைத் திரளையும் கவர்ந்து தன் நாடு திரும்பினான். கங்கை கொண்ட சோழபுரத்தில் வந்து பட்டத்தரசி உலக முழுதுடையாளொடும் வெற்றி மணிமுடி சூடி எண்திசை மன்னரும் புகழச் செங்கோல் செலுத்தினான்.

### 66-73. "இசைவின்றி தத்துமா . . . . . உதைப்பித்து"

வெற்றி விழா கொண்டாடிய வீரராசேந்திரன் சிம்மாசனத்தில் நிலையாக இருக்க விருப்பமில்லாதவனானான். மீண்டும் படையுடன் புறப்பட்டான். வடபெண்ணையாற்றுக்கு வடக்கே கிழக்குக் கடற்கரை ஓரமாக அமைந்த பொத்தப்பி நாட்டைத் தாக்கினான். சிறந்த குதிரைப் படையையுடையவனாகிய பொத்தப்பி வேந்தனை வென்றான். ஏற்கனவே தன் ஆட்சிக்குக் கீழிருந்த சேரர்கள் தன் உரிமை பெற விரும்பி அடிக்கடி கிளர்ச்சி செய்து வந்தார்கள். எனவே சேர நாட்டின் மீது படையெடுத்துச் சென்று கேரளனாகிய சனநாதன் தம்பியைக் கொன்றான். தன் மகன் கங்கை கொண்ட சோழன் என்பவனுக்குச் சோழ பாண்டியன் என்று பெயர் சூட்டிப் பாண்டி மண்டலத்தின் ஆட்சிப் பொறுப்பை அளித்திருந்தான். ஆனால் அப்பாண்டிய மன்னன் சீவல்லபனின் மகன் வீரகேசரி என்பவன் சோழனுக்கு அடங்காமல் அடிக்கடி கலகம் விளைவித்து வந்தான். எனவே தன்மகன் ஆட்சியை நிலை நிறுத்தப் பாண்டி நாட்டின் மீது படையெடுத்து மதயானை ஒன்றினால் வீர கேசரியை உதைக்கச் செய்து கலகத்தை அடக்கி வந்தான்.

### 73-79. "உதகையில் கேரளர் ... விடுதிறை கொண்டு"

சேர நாட்டின் சிறந்த நகரமாகிய உதகையின் மீது படையெடுத்தான். அவனது படையெடுப்பிற்கு அஞ்சிய சேரர் தங்கள் குழந்தைகளோடு ஓடத் தொடங்கினர். அவர்கள் ஓடி மேலைக் கடலில் விழுமாறு யானைகளை விட்டுத் துரத்தினான். அந் நாட்டுக் கன்னியர் பலரைக் களிற்றின்மீது ஏற்றிக் கட்டிக் கொண்டு வந்தான். மேலும் பல களிறுகளையும் பிடிகளையும் கவர்ந்து அவர்கள் அளித்த திறைப்பொருள்களையும் பெற்றுத் தன் நாடு திரும்பினான்.

### 79-72. "மீண்டும் கொண்டாற்றுறவில் ......... கங்கை மாநகர் புகுந்தபின்"

நான்காவது முறையாகச் சாளுக்கியர் மீது படையெடுத்தான். இப்போர் முன் ஏற்பாட்டோடு ஓராற்றங் கரையில் நடைபெற்றது.

(கிருஷ்ணையாற்றங் கரையாக இருத்தல் வேண்டும்.) இப்போரில் சாளுக்கியப் படைத்தலைவர்களாக விளங்கிய **மல்லியண்ணன், வீமய்யன், வங்காரன்** ஆகியோர் கொல்லப்பட்டனர். சாளுக்கிய ருக்குத் துணையாக வந்த **கங்கன், நுளம்பன், காடவர்கோன், வைதும்பராயன்** போன்ற மன்னர்களும் உயிரிழந்தனர். இந்த வெற்றியோடு சோழன் தன்னுடைய கங்கை கொண்ட சோழபுரத் திற்குத் திரும்பினான்.

92-104. "திங்களின் வழிவருசளுக்கி......வாசகம் உணர்த்தலும்"

வீர ராசேந்திரனிடமே நான்குமுறை தோல்வியுற்ற சந்திர குலத் தோன்றலாகிய ஆகவ மல்லன் பழியோடு வாழ்வதைவிட இறப்பதே சிறந்தது என்று முடிவு செய்தான். அதனால் மீண்டும் போரிட எண்ணினான். முன்பு தானும் தன் மக்களுமாகப் படை யெடுத்துப் போரிட்டுத் தோல்வியடைந்த போர்க்களமாகிய கூடல் சங்கமமே சிறந்த இடம் எனத் தேர்ந்தெடுத்தான். இரட்டபாடி வீரர்களுள் ஒருவனாகிய **கங்கா கேத்தன்** என்பவன் மூலம் ஒரு ஓலை அனுப்பினான். அவ் ஓலையில் கூடலில் தன்னோடு போர் புரிய வரவேண்டும் என்ற கருத்தில் **'கூடலில் போருக்கு வராது அஞ்சியவர்கள் மன்னர் அல்லர்; போருக்கு அஞ்சி ஓடும் பெரும் பழிக்குரிய புரட்டரே ஆவர்'** என்று எழுதியிருந்தான். இவ்வாறு சபதத்தோடு கூடிய ஓலையைப் பலரும் அறியுமாறு கொடுத்தனுப் பினான். கங்கா கேத்தன் சோழ மன்னனிடம் ஓலையைச் சேர்ப் பிக்கச் செய்தி அறிந்தான் சோழன்.

105-115. "சிந்தையும் முகமும்......முழங்கெரியூட்டி"

வீரராசேந்திரன் ஓலை கண்டு பெருமகிழ்ச்சி அடைந்தான், அகமும் முகமும் மகிழ்ச்சியால் இருமடங்கு பொலிவு எய்தின. வீரம் மிக்க தோள்கள் இரண்டும் பூரித்தன. உடனே படையுடன் போர்க் களத்தை அடைந்தான், கூடல் சங்கமத்தின் அருகில் சாளுக்கியப் படை வரும் வழியிலேயே கரந்தை என்னுமிடத்தில் காத்திருந்தான். ஓலையில் குறிப்பிட்ட நாளுக்கு மேலும் ஒரு மாதம் எதிர்பார்த்துக் காத்திருந்தான். சாளுக்கியர் வராமையினால் சினங் கொண்ட சோழன் இரட்டபாடிப் பகுதியில் புகுந்தான். அங்கிருந்த **தேவ நாதன், சித்தி, கேசி** ஆகிய படைத்தலைவர்களை வென்று இரட்ட பாடிக்கு எரியூட்டினான்.

குறித்த நாளிலோ, சில நாள் கழித்தோ ஆகவ மல்லன் போருக்கு வராமைக்குரிய காரணம் அவன் நோயினால் இறந்து பட்டதேயாகும். ஆனால் இம் மெய்க்கீர்த்தியின் 110-111 ஆவது வரிகள் ஆகவ மல்லன் கால்கெட ஓடி மேல் கடல் ஒளித்தான் என்று குறிப்பிடுகின்றன.

116-125. "வெங்கதப் புலியேறு...மார்வொடும் பூட்டி"

சோழன் தனது புலிக் கொடியினை அந்நாட்டில் பறக்க விட்டுத் துங்கபத்திரை யாற்றங்கரையில் பரந்த நிலவுலகம் புகழு மாறு வெற்றித் தூண் ஒன்றினையும் நாட்டினான். ஆனால் தான் கைப்பற்றிய இரட்டபாடி ஏழரை இலக்கப் பகுதிக்கு முன்பு தன்னி டம் ஆகவ மல்லனின் ஓலையைக் கொண்டுவந்த கங்கா கேத்தன் என்னும் பிரட்டனைத் தலைவனாக்கினான். பின்பு ஆகவ மல்லன் தன் யானைக்குப் பயந்து பலரும் அறிந்து இகழுமாறு ஓடி ஒளித்துக் கொண்டான் என்ற செய்தியை ஒரு பலகையில் எழுதி அவன் உருவத்தின் மார்பில் அணிவித்து அவமானப் படுத்தினான்.

125-134. "போர்த்துந் தான்.....அடவியிற் பாய்ச்சி"

மீண்டும் தாங்கள் போர் மேல் சென்று அந்த வேங்கை நாட்டை மீட்டுக் கொண்ட பிறகே திரும்புவோம்; வல்லவர்களானால் வந்து பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று நாடறியச் சொல்லித் தன் சேனையோடு நாட்டில் புகுந்தான். விசயவாடா வையடுத்த ஆற்றங்கரையில் சாளுக்கியர் படை எதிர்த்துப் போரிட்டது. அப் பகுதியின் தலைவனாக இருந்த சனநாதன், படைத் தலைவர் களான இராசமய்யன், முப்பரசன் ஆகியோர் பெரும் படையுடன் வந்து போரிட்டனர். முடிவில் அவர்கள் அனைவரும் தோற்று ஓடிக் காட்டில் புகுமாறு துரத்தியடிக்கப் பட்டனர்.

135-142. "கோதாவரியில்......விட்டு அருளி"

கோதாவரியாற்றில் தங்கள் யானைகளை நீருண்ணச் செய்த னர். ஆற்றைக் கடந்து கலிங்கம், சக்கரக் கோட்டம் ஆகிய பகுதி களைத் தாண்டிப் படையுடன் சென்ற சோழன் வேங்கை நாட்டை மிக எளிமையாக மீண்டும் தனக்குரிய தாக்கிக் கொண்டான். அவ் விடத்திலேயே தன்னிடம் அடைக்கலம் புகுந்து வணங்கிய விசயா தித்தன் என்னும் கீழைச் சாளுக்கியத் தலைவனாகிய மன்னனுக்கு அந்நாட்டை அளித்தான்.

142-156. "இகலிடை......இராசகேசரி வர்மரான"

சாளுக்கியப் போரில் பெற்ற பெரும் வெற்றியோடு திரும்பிய வீர ராசேந்திரன் தன் தலை நகராகிய கங்கை கொண்ட சோழபுரம் அடைந்து 'இராசாதிராசன்' என்னும் சிறப்புப் பெயரோடு பல மன்னர்கள் வணங்க மணிப்பீடத்து விற்றிருந்தான். வேங்கை நாட்டுப் போரில் கவர்ந்து வந்த பெரும் பொருளை யெல்லாம் படை வீரர்களுக்கு வரிசையறிந்து வழங்கி அவர்கள் கொண்ட போர் விரதத்தை முடித்து வைத்தான். இவ்வாறு போர்த் தொழில் தனக்கே உரியது என்ற பெருமையோடு வீரக் கொடி உயர்த்தி

னான். வேண்டியவர் வருக எனத் தியாகக் கொடியும் பறக்க விட்டான். சிறந்த மனுநெறி வழுவாது அரசோச்சினான் இராச கேசரி வீரராசேந்திரன்.

## 16

### மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்திஸ்ரீ

[1]புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல்வாய்ப்பத் திருமகளும் சயமகளும் சிறந்துவாழ
[2]வெண்மதிபோல் குடைவிளங்க வேல்வேந்தர் அடி
வணங்க
மண்மடந்தை [3]மனங்களிப்ப மனுநீதி தழைத்தோங்கச்
சக்கரமுஞ் செங்கோலும் திக்கனைத்துஞ் செல
நடக்கக் 5
கற்பகாலம் புவிகாக்கப் [4]பொற்மமைந்த முடிபுனைந்து
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவன முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளிய கோப்பர கெசரி வன்மரான
திரிபுவனச் சக்கர வர்த்திகள் ஸ்ரீ வீர ராசேந்திர தேவர்க்கு
யாண்டு 5 ஆவது நாள் இருநூற்று நாற்பத்தைந்தினால்-

### முன்னுரை

வீர ராசேந்திரனின் மெய்க்கீர்த்திகளுள் ஒன்றாக,

"புயல் வாய்த்து வளம் பெருகப் பொய்யாத நான்மறையின்" என்று தொடங்கும் இம் மெய்க்கீர்த்தியும் கிடைத்துள்ளது. இதே மெய்க்கீர்த்தியோடு இடையே சில அடிகள் மட்டும் சேர்க்கப்பட்ட மெய்க்கீர்த்தி மூன்றாங்குலோத்துங்கனுடையதாகக் காணப்படு கிறது. மேலும் வீர ராசேந்திரன் இராச கேசரிப் பட்டம் பெற்றவன்.

---

1. புயல்வாய்ப்ப. 2. வெண்மதிபொற்குடை. 3. உளங்களிப்ப.
4. பொற்பமைத்த.

இம் மெய்க்கீர்த்தியுள் பரகேசரிவர்மன் என்ற தொடர் காணப்படு கிறது. இதனைக் கல்லில் வெட்டியவர்களின் பிழையாக கொண் டால் வீர ராசேந்திரனுக்குரியதாக அமையும். இக் காரணம் பற்றி இதனைத் தனியாகக் கொடுக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

## மெய்க்கீர்த்தி-விளக்கம்.

### 1–10. "புயல்வாய்த்து வளம்பெருக......தேவர்க்கு"

வீர இராசேந்திரனது ஆட்சியில் சோழ நாட்டில் மழைவளம் பெருகியது. நான்மறையின் ஒழுக்கங்கள் நடைமுறையில் செயல் பட்டன. அவனிடம் செல்வமும் வெற்றியும் நாளும் பெருகி வளர்ந் தன. வெண்கொற்றக் குடையானது நிறைமதிபோல் விளங்கித் தண்ணளி செய்தது. அவனுக்கு அடங்கிய மன்னர் பலரும் வணங்கி நின்றனர். நாட்டில் மனுநெறி தழைக்க நிலமகளும் மகிழ்ச்சி யடைந்தாள். சோழனின் ஆணைச்சக்கரமும் செங்கோல் முறை யும் எல்லாத் திசைகளிலும் பரந்து நடைபெற்றன. இவ்வாறு சிறந்த முறையில் பல ஊழிக் காலம் சோழநாட்டைக் காக்கும் பொறுப்பில் சோழப் பேரரசின் மணிமுடியினைச் சூடி விளங்கினான் வீர இரா சேந்திரன். சிம்மாசனத்தில் புவனமுழுதுடையாள் என்னும் தேவி யுடன் விளங்கிய இவன் பரகேசரிப்பட்டம் பெற்றிருந்தான்.

17

# அதி ராசேந்திரன்

(கி.பி. 1067–1070)

ஸ்வஸ்தி ஸ்ரீ

திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டிலம்
மன்னுயிர் தோறும் [1]இன்னருள் சுரந்து
[2]நிறைநிழல் பரப்பி நிற்ப முறைமையிற்
செங்கோல் திசைதொறும் செல்லத் தங்கள்
குலமுதற் பருதியின் [3]வலிசேர் புவனிக்கும் 5
ஒற்றை யாழி யுலாவ நற்றவத்
திருமலர்ச் செல்வியும் இருநிலப் பாவையும்
கீர்த்தியுங் கிள்ளையும் போர்த்தனிப் பூவையும்
மதுவையிற் புணர்ந்து பொதுமை துறந்துதன்
உரிமைத் தேவிய ராக மரபினில் 10
[4]சுடர்மணி மகுடம் சூடி நெடுநில
மன்னவர் முறைமுறை தன்னடி வணங்க
வீரமும் தியாகமும் ஆரமெனப் புனைந்து
வீர சிம்மா சனத்து உலக
முழுதுடை யாரொடும் வீற்றிருந் தருளி 15
மாப்புகழ் மனுவுடன் வளர்த்த
கோப்பர கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீ அதிராசேந்திர தேவர்க்கு யாண்டு 3ஆவது

## அதி ராசேந்திரன்

### முன்னுரை

வீர ராசேந்திரன் இராசகேசரிப் பட்டம் பெற்றவன். அடுத்து சோழப் பேரரசனாக விளங்கிய முதல் குலோத்துங்கனும் இராச கேசரியே. எனவே இவ் இருவருக்குமிடையே அரசு பூண்ட பர கேசரி அதிராசேந்திரன் ஆவான். இவன் வீர ராசேந்திரனின் மகன். இவனுடைய மெய்க்கீர்த்தி,

---

1. நின்றருள். 2. திறைநிழல். 3. வலந்நொழிநிவர்க்கு; வலந்நேர் புனிவர்க்கு.
4. போர்த்தடம் சூட்டி.

"திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டிலம்" என்னும் தொடக்கத்தை உடையது.

## மெய்க்கீர்த்தி

எல்லாச் செல்வமும் பெற்று, அதனால் புகழ் பெற்று விளங்கிய அதிராசேந்திரன் ஆட்சியில் போர் ஏதும் நிகழவில்லை. அமைதி யான ஆட்சி நிலவியது. தன் முன்னோர் வென்றளித்த நாடு களுக்கு உரிமை பூண்டு, மன்னர் பலரும் திறைசெலுத்த மனுநெறி நின்று புகழை வளர்த்தான்.

## விளக்கம்

### 1-10. "திங்களேர் மலர்ந்து......தேவியராக"

அதிராசேந்திரனது ஆட்சியில் அவனது வெண் கொற்றக் குடை நிலவினைப் போல மக்களுக்குக் குளிர்ச்சி ஊட்டியது. உயிர் களிடத்தில் கருணை கொண்டு அவ் உயிர்களைக் காப்பாற்றியது. அவனுடைய நெறி முறைகள் எல்லாத் திசைகளிலும் புகழுடன் பரவின. அவனது குலம் சூரிய குலம். அச் சூரியன் வலம் வரும் இப் பரந்த நிலம் முழுவதும் அவனது ஆணை உலாவி வந்தது. அதனால் திருமகளாகிய செல்வ மகளும், நிலமகளும், வெற்றி மகளும் ஆகிய மடந்தையர், தாங்கள் யாவருக்கும் பொதுவானவர்கள் என் பதை விட்டு அதிராசேந்திரனுக்கே உரிய தேவியராகி அவனை மணந்தனர். புகழும் பெருமையும் என்றும் நீங்காதிருந்தன.

### 10-18. "மரபினில் சுடர்மணி மகுடம்...அதிராசேந்திர தேவர்க்கு"

சோழ மரபின்படி தந்தைக்குப் பிறகு சோழ நாட்டின் அர சுரிமை பெற்று முடி சூடினான். தான் படையெடுத்துக் கைப்பற்றிய நாடுகள் இல்லையாயினும் தன் முன்னோரின் அரசுக்குத் திறை செலுத்திய மன்னர் பலரும் வந்து தொழுது நின்றனர். தன் ஆட்சி யில் வீரத்தையும் தியாகத்தையுமே தனக்கு மாலையாகப் பெற்றி ருந்த அதிராசேந்திரன் உலக முழுதுடையாளொடும் வீர சிம்மா சனத்து விற்றிருந்து பரகேசரி என்னும் பட்டப் பெயரோடு மனுநெறி வழுவாது பெரும் புகழினை வளர்த்துக் கொண்டான்.

18

# முதலாம் குலோத்துங்கன்

(கி.பி. 1070-1120)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

திருமன்னி [1]விளங்கும் இருகுவ டனையதன்
தோளும் வாளும் துணையெனக் [2]கேளலர்
[3]வஞ்சனை கடந்த வயிரா கரத்துக்
குஞ்சரக் குழாம்பல வாரி யெஞ்சலில்
சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத் 5
திக்கு நிகழத் திறைகொண் டருளி
அருக்க னுதையத் தாசையி லிருக்கும்
கமலம் அனைய நிலமகள் தன்னை
முந்நீர்க் குளித்த [4]வ்ந்நாள் திருமால்
ஆதிக் கேழல் ஆகி[5]எடுத் தன்ன 10
யாதுஞ் சலியா வகையினிது எடுத்துத்
தன்குடை [6]நிழற்கீழ் இன்புற இருத்தித்
[7]திகிரியும் புலியும் திசைதொறும் நடாத்திப்
புகழுந் தருமமும் புவிதொறும் நிறுத்தி
வீரமும் தியாகமும் மானமும் கருணையும்தன் 15
உரிமைச் [8]சுற்றமாகப் பிரியாத் [9]தராதலம்
நிகழச் சயமும் தானும்வீற் றிருந்து
குலமணி மகுடம் முறைமையில் சூடித்
தன்கழல் தராதிபர் சூடச் செங்கோல்
நாவலம் புவிதொறும் நடாத்திய 20
கோவிராச கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு
2 ஆவது

---

1. விளங்க. 2. கேழலர்; கென்றவர். 3. வருசனை. 4. வன்னாள். 5. எடுத்தந. 6. நிழலில். 7. திகிரியாம் புலியாம்; கீர்த்தியும் புலியும். 8. சுற்றம்; சுற்றமாக்கி. 9. தலநிகழ்.

## மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்திஸ்ரீ

பூமேல் அரிவையும் [1]போர்ச்செயப் பாவையும்
தேமே வியதிருப் புயங்களில் திளைப்பவங்
கோமே விலங்கு [2]கோட்டிய யானையும்
யானுமென் கையில் துலங்கு பொற்......
படையுமெய்த் துணையென் றருளிப் பலங்கிளர் 5
தாரா வரசர் தாமிசை கொள்ளப்
போர்த்திரு வொடுபெரும் புகழ்நிறுத்தி நீரார்
கடல்சூழ் உலகில் கடும்போர் மன்னர்
அடற்போர் வம்மென் றறைகூவருள் படர்புகழ்
[3]அயிரா பதத்தோ டயிரா பதமென 10
வயிரா கரத்து வாரணம்வாரி செயிராப்
பொன்வேங்கை நாடும் பொருகடல் இரட்டமும்
தன்வேங்கை நாட்சக்கரம் நடாத்தி முன்னாள்
வெற்றிக் கொடியொடு வீரமும் ஓங்கக்
கொற்றக் குடைக்கீழ் கொடைக்கொடி ஏந்தி
பெற்றக்கோன் 15
திருப்புக லூர்தென் திருவனைய புகழ்நிறை
புவன முழுதுடை யாளொடும் வீர
சிம்மா சனத்து வீற்றிருந் தருளின
கோவிராச கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு
6-ஆவது......

---

1. பொற்செயப்பாவையும். 2. கொட்டி(ய) 3. அயிராபதத்தொடயிரா.

## மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

புகழ் சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்
பொன்னேமி யளவும் தன்னேமி [1]நடப்ப
விளங்குசய மகளை யிளங்கோப் பருவத்துச்
சக்கரக் கோட்டத்து விக்கிரமத் தொழிலாற்
புதுமணம் புணர்ந்து [2]மதவரை யீட்டம் 5
வயிரா கரத்து [3]வாரி அயிர்முனைக்
[4]குந்தள வரசர் தன்தள மிரிய
வாளுறை கழித்துத் தோள்வலி காட்டிப்
போர்ப்பரி நடாத்திக் [5]கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடித் தென்றிசை 10
தேமரு கமலப் பூமகள் பொதுமையும்
புவிமகள் தனிமையும் தவிர்த்துப் புனிதப்
[6]பொன்னி யாடை நன்னிலப் பாவையின்
திருமணி மகுட [7]முரிமையிற் சூடித்
தன்னடி யிரண்டும் தடமுடி யாகத் 15
தொன்னில வேந்தர் [8]சூட [9]முன்னை
[10]மனுவாறு [11]பெருகக் கலியாறு [12]வறப்பச்
[13]செங்கோல் திசைதொறும் செல்ல வெண்குடை
இருநில [14]வளாக மெங்கணும் [15]தனாது
[16]திருநிழல் வெண்ணிலாத் திகழ வொருதனி 20
மேருவிற் புலிவிளை யாட [17]வார்கடற்
தீவாந் தரத்துப் [18]பூபாலர் திறைவிடு
கலஞ்சொரி களிறுமுறை நிற்ப விலங்கிய

---

1. நடாத்தி. 2. வன்களிற்றீட்டம் ; மதுவரையீட்டம் ; மதுவரைவிட்ட. 3. வாரியல் முனை ; வாரிஅயல்முனை. 4. கொந்தள. 5. கீர்த்தி வரநிறுத்தி. 6. நனியாடை; பொன்னியாடையும். 7. முறைமையில். 8. சூடிய ; சூடி. 9. பொன்னி. 10. மதுவாறு ; மதுவாறாக. 11. பெருக்கி. 12. வறுப்ப. 13. செங்கோலினாவல். 14. விளாக. 15. தந்து. 16. திருநில ; இருநில 17. ஆழ்கடல்.. 18. பூவர்திறை விடுத்த.

தென்னவன் கருந்தலை [19]பருந்தலைத் திடத்தன்
பொன்னகர்ப் புறத்திடைக் கிடப்ப [20]இந்நாள் 25
பிற்குலப் பிறைபோல் நிற்பிழை யென்னும்
சொல்லெதிர் கோடிற் றல்லது தன்கை
[21]வில்லெதிர் கோடா [22]விக்கலன் கல்லதர்
நங்கிலி துடங்கி மணலூர் நடுவெனத்
துங்க பத்திரை [23]யளவும் எங்ஙனும் 30
அளத்தியில் இட்ட களிற்றினது ஈட்டமும்
பட்ட[24]வெம் பரியும் விட்டதன் மானமும்
கூறின வீரமும் கிடப்ப வேறின்
மலைகளு முதுகு நெளிப்ப இழிந்த
நதிகளும் சுழன்றுடைந் தோட விழுந்த 35
கடல்களுந் தலைவிரித் தலமரக் குடதிசைத்
தந்நா ளுகந்து [25]தானும் தானையும்
பன்னா ளிட்ட பலபல முதுகும்
[26]பயந்தெதிர் [27]மாறிய சயப்பெருந் திருவும்
[28]பழியிகந்து கொடுத்த புகழின் செல்வியும் 40
[29]வாளார் ஒண்கண் மடந்தையர் ஈட்டமும்
[30]மீளாது [31]கொடுத்த வெங்கரி நிரையும்
கங்கமண் டலமும் சிங்கண மென்னும்
[32]பாணி யிரண்டும் ஒருவிசைக் கைக்கொண்டு
[33]ஈண்டிய [34]புகழொடு பாண்டி [35]மண்டலங் 45
கொள்ளத் திருவுளத் தடைத்து வெள்ளம்
[36]வருபரித் தரங்கமும் [37]பொருபரிக் [38]கலங்களும்
[39]தந்திர வாரியும் [40]உடைத்தாய் வந்து
வடகடல் தென்கடல் [41]படர்வது போலத்
தன்பெருஞ் சேனையை யேவிப் பஞ்சவர் 50
ஐவரும் பொருத [42]போர்க்களத் தஞ்சி
[43]வெரிநளித் தோடி அரணனெனப் புக்க
காடறத் துடைத்து நாடடிப் படுத்து

---

19. பருந்தலைத்துக்கிடப்ப. 20. பந்நாளும். 21. வில்லது. 22. வேள்குலத்தரசர். 23. புக. 24. வெங்களிறும். 25. தாதையும் தானும். 26. பயத்தெதிர் ; பயப்பெதிர். 27. மாதி ; மாற. 28. பழியுகந்து. 29. வாளாவிட்ட. 30. மீட்டிக் 31. விட்ட. 32. பரணி. 33. கண்ணிய. 34. புகழொடும். 35. மண்டலமும். 36. ஒரு பரித்துரங்கம். 37. வருபரிக். 38. குலங்களும். 39. சுந்தரவாரி. 40. உடைதா. 41. பாய்வது. 42. மொய்க்களத். 43. வெருநெளித்.

மற்றவர் தம்மை வனசரர் திரியும்
[44]பொற்றை வெஞ்சுர மேற்றிக் கொற்ற 55
விசையத் தம்பந் திசைதொறும் நிறுத்தி
முத்தின் சலாபமு முத்தமிழ்ப் [45]பொதியிலு
மத்தவெங் கரிபடு [46]மய்யச் சையமும்
கன்னியுங் கைக்கொண்டு புனிதத் [47]தென்னாட்டு
எல்லை காட்டிக் [48]குடமலை நாட்டுள்ள 60
சாவே றெல்லாந் தனிவிசும் பேற
மாவே றியதன் மருதனித் தலைவரைக்
குறுகலர் குலையக் கோட்டா றுட்பட
நெறிதொறும் நிலைகளிட்டு அருளித் [49]திறல்கொள்
வீரசிம் மாசனந் திரிய[50]விட் டருளிப் 65
வடதிசை வேங்கை மண்டலங் கடந்து
தாங்கலர் கலிங்கமும் கனல்எரி பரப்ப
விலங்கல்போல் விலங்கிய வேந்தர் விட்டவெங்
களிறொடு பட்டுமுன் புரள்பொரு கோபத்
தொடுபோர் முகமதிர் வருகோ மட்டையன் 70
மாதவன் எதிர்பட எங்கராயன் இகலவர்
எச்சணன் மாப்பிறளா(மூா) மதகரி இராசணன்
தண்டுபதி ஆகிய தலைச்சே னாபதி
மண்டலி தாமய னெண்பர்த் திசைமுகன்
பொத்தயன் கேத்தணன் செருச்சே னாபதி 75
என்றிவர் அனைவரும் வென்றவேழத் தொடுபட்டு
மற்றவர் கருந்தலை யோடு வெண்ணிணங்
கழுகொடு பருந்தலை எங்கணும் பரப்ப
உயர்த்துக் கருங்கட லடையத் தராதரம்
(தெரிந்து) திரந்து கலிங்க மேழும்கைக் கொண்டு 80
பொங்கொளி யாரமும் திருப்புயத் தலங்கலும்
வீரமும் தியாகமும் விளங்கப் பார்மிசைச்
சிவனிடத் துமையெனத் தியாக வல்லி
உலகு உடையா ளிருப்ப அவளுடன்
கங்கைவீற் றிருந்தென மங்கையர் திலதம் 85
ஏழிசை வல்லபி ஏழுலக முடையாள்

---

44. பொற்ற. 45. பொதியினில். 46. இமையச்சைவமும். 47. வேணாட்டு.
48. கடல்மலை. 49. மறிபுனல். 50. இருந்தருளி.

வாழிகை [51]மலர்ந்தினி திருப்ப வூழியும்
திருமா லாகத்துப் பிரியா தென்றும்
திருமக [52]ளிருந்தென வீரசிம்மா சனத்து
உலகமுடை யாளொடு வீற்றிருந் தருளிய 90
கோவிராச கேசரி வன்ம ரான

திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு நாற்பத்தைந்தாவது துலாஞாயிற்று பூர்வபட்சத்து வியாழக்கிழமையும் சப்தமியும் பெற்ற உத்திராடத்து நாள்.

## 21

### மெய்க்கீர்த்தி-4

ஸ்வஸ்தி ஸ்ரீ

புகழ்மாது விளங்க சயமாது விரும்ப
நிலமகள் [1]நிலவ மலர்மகள் புணர
உரிமையிற் சிறந்த மணிமுடி சூடி
மீனவர் நிலைகெட வில்லவர் குலைதர
விக்கலன் சிங்கணன் மேல்கடல் பாய 5
ஏனை மன்னவர் [2]இரியலுற் றிழிதரத்
திக்கனைத் துந்தன் சக்கரம் நடாத்தி
விஜயாபி ஷேகம் பண்ணி அருளிய
செம்பொன் வீர சிம்மா சனத்து
[3]அவனி முழுதுடை யாளொடும் வீற்றிருந் 10
தருளிய கோவிராச கேசரி பன்மரான
சக்கரவர்த்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு
யாண்டு நாற்பத்தாறாவது.

51. அமர்ந்தினிதிருப்ப. 52. திகழ்ந்தென.
1. வளர. 3. இரியலுட்டோட ; இரிதலத்திழிதர. 3. உலகுடையாளொடும் ; புவனமுழுதுடையாளொடும்.

## 22

### மெய்க்கீர்த்தி-5

ஸ்வஸ்திஸ்ரீ

பூமியும் திருவும் தாமெய்ப் புணர
விக்கிர மத்தால் சக்கரம் நடாத்தி
விசயாபி ஷேகம் பண்ணி வீர
சிம்மா சனத்துப் புவன முழுதுடை
யாளொடும் வீற்றிருந் தருளின 5
கோவிராச கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர்க்கு யாண்டு
4 ஆவது......

## 23

### மெய்க்கீர்த்தி-6

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமன்னு பாவை காமுற்று முயங்க
இருநிலக் கிழத்தியைத் திருமணம் புணர்ந்து
(கலைமுயற் செல்வி முதன்மைப்)
போர்மகள் காப்பச் சீர்மகள் போற்ற
வானிலப் புரவி இரவிகுலம் விளங்க
பாற்கடல் [1]தெய்வம் பள்ளி நீங்கி 5
நாற்கடல் வட்ட நாடொறுந் திருத்தி
எண்டிசை யானை தண்டுடன் நிற்பக்
காவல் தெய்வம் ஏவல் கேட்ப
கலிப்பகை ஓட்டிப் புலிக்கொடி எடுத்துத்
[2]தென்னவர் கேரளர் தெலுங்கர் சிங்களர் 10
கன்னடர் [3]விலாடர் கலிங்கர் முதலாய்க்

---

1. தேவர்கள். 2. தெக்கலர் சேரலர். 3. கலிங்கர் கடாரர்.

கொற்றவர் வந்து குடிமை செய்ய
ஒற்றை வெண்குடை உலகு கவிப்ப
ஊழிப் பல்கொடி ஆழி நடாத்திச்
செம்பொன் வீர சிம்மா சனத்துத் 15
திரிபுவன முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளிய கோவிராச கேசரி வன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கு யாண்டு 2 ஆவது......

## முதலாம் குலோத்துங்கன்

முன்னுரை

சோழப் பேரரசன் முதலாம் இராசராசன் தன் மகள் குந்தவை யைக் கீழைச் சாளுக்கிய மன்னன் விமலாதித்தனுக்குத் திருமணம் செய்து கொடுத்தான். அக்குந்தவையின் மகனே நரேந்திரன். தப்பாட்டனாகிய இராசராசனின் பெயருடன் இணைத்து இராச ராச நரேந்திரன் என்றே பெயர் சூட்டப் பெற்றான். அவன் தன் தாய்மாமனான முதலாம் இராசேந்திரனின் மகள் அம்மங்கா தேவியை மணந்தான். அவர்களின் மகனே இம் முதலாம் குலோத் துங்கன் ஆவான்.

இவன் தாய்வழியில் சோழப் பேரரசர் மரபைச் சார்ந்தவன்; இவனுடைய தாய் மாமனாகிய இரண்டாம் இராசேந்திரனின் அரண் மனையில்-கங்கை கொண்ட சோழபுரத்தில்-பிறந்தவன் ; தாய்ப் பாட்டனாகிய முதலாம் இராசேந்திரன் இவன் பிறக்குமுன் இயற்கை எய்திவிட்டான்; தந்தை மரபாகிய கீழைச் சாளுக்கியர் மரபைக் காட்டிலும் சோழர் மரபு அக்காலத்தில் மிகச் சிறந்து விளங்கியது. இவ்வகைக் காரணங்களால் இவன் பாட்டியாகிய அம்மங்கா தேவி யின் தாய், இறந்து பட்ட தன் கணவன் பெயராகிய இராசேந்திரன் என்ற பெயரை இவனுக்குச் சூட்டினாள்.[1]

இவன் பூச நட்சத்திரத்தில் பிறந்தவனாதலின் கோயில்களில் விழா முதலியன பூசநாளில் நடைபெற ஏற்பாடுகள் செய்யப் பெற்றன. இதனை.

"கோவிராச கேசரி வர்மரான ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவர்க்கு

1. தெ. இ. க. தொகுதி 1-எண் 39. பக். 49-52.

யாண்டு 42-ஆவது ..சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர் திருநட்சத்திரமான பூசம் திருநாள் எழுந்தருளுவித்து"[2] என்பது போன்ற கல்வெட்டுகள் பல உணர்த்துகின்றன.

இவன் தந்தை இராசராச நரேந்திரன் தான் ஆட்சி செய்த போதே இவனுக்கு வேங்கை நாட்டு இளவரசனாகப் பட்டம் சூட்டி விஷ்ணுவர்த்தனன் என்னும் அபிஷேகப் பெயரும் கொடுத்தான். தந்தைக்குப் பின் வேங்கை நாட்டின் மன்னனானான்.[1]

அதி ராசேந்திரனுக்குப் பிறகு அவன் தம்பியோ, மகனோ இல்லாத காரணத்தாலும் இரண்டாம் இராசேந்திரன் மகள் மதுராந்தகியை மணந்திருந்த வேங்கை நாட்டு மன்னன் விஷ்ணு வர்த்தனன் தாய்வழி உரிமை பாராட்டிச் சோழப் பேரரசின் மன்னனாக அமர்த்தப்பட்டான்.

## மெய்க்கீர்த்திகள்

1. 'திருமன்னி விளங்கும் இருகுவ டனையதன்'
2. 'பூமேல் அரிவையும் போர்ச் செயப் பாவையும்'
3. 'புகழ்சூழ்ந்த புணரி அகழ்சூழ்ந்த புவியில்'
4. 'புகழ்மாது விளங்க சயமாது விரும்ப'
5. 'பூமியும் திருவும் தாமெய்ப் புணர'
6. 'பூமன்னு பாவை காமுற்று முயங்க'

என்னும் தொடக்கங்களையுடைய ஆறு மெய்க்கீர்த்திகள் முதலாம் குலோத்துங்கனுடைய மெய்க்கீர்த்திகளாக முழுமையாகக் கிடைக்கின்றன. மேலும்,

"திருமகள் செயமகள் திருப்புயத் திருப்ப" (14-ஆம் ஆண்டு)
"திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கு" (47-ஆம் ஆண்டு)

போன்ற பல மெய்க்கீர்த்திகள் இரண்டொரு அடிகளோடு முடிவனவாகவும் குறையுடையனவாகவும் கிடைத்துள்ளன.

## மெய்க்கீர்த்திகளின் சுருக்கம்

1. குலோத்துங்கன் தன் கன்னிப் போராகச் சக்கரக்கோட்டப் போரினை நிகழ்த்தித் தாராவர்ஷனை வென்றான். பின் தாய்வழி உரிமை பாராட்டிச் சோழநாட்டின் மணிமுடி புனைந்து மன்னர் பலரும் தன் அடிபணிய, சோழநாட்டை ஆண்டுவந்தான்.

---

2. ,, தொகுதி 6-எண் 167, பக். 82.
1. தெ. இ. க. தொகுதி-4. எண் 1187, 1281-பக். 409, 446. (தெலுங்கு)

2. சக்கரக் கோட்டப் போரில் வென்று வயிராகரத்தில் குந்தள அரசனையும் வென்றான். பின் வேங்கைநாடு, இரட்டமண்டலம் ஆகியவற்றை வென்று அரசுவீற்றிருந்தான்.

3. சக்கரக் கோட்டம், வயிராகரம் ஆகிய இடங்களில் வெற்றி பெற்று சோழ நாட்டின் மணிமுடி சூடி நாட்டில் செல்வச் செழிப்பை உண்டாக்கினான். பிறகு நங்கிலி என்னுமிடத்தில் விக்கிரமாதித் தனை வென்றான். அளத்திப் போரில் பல பொருள்களைக் கவர்ந்து வந்தான். பின் பாண்டியமன்னர் ஐவரை வென்று எல்லாத்திசையி லும் வெற்றித் தூண் நிறுத்தினான். குமரிவரை தன் நாட்டு எல்லை யைப் பரப்பினான். கோட்டாற்றில் சேரரை வென்று அங்கு தன் படையை நிறுத்தினான். கருணாகரனை அனுப்பி கலிங்கத்தை வென்றான். ஏழிசைவல்லபி என்னும் பட்டத்தரசியோடு இருந்து அரசாண்டான்.

4. தாய்வழி உரிமையில் சோழ நாட்டின் முடி புனைந்த குலோத்துங்கன் பாண்டியரையும் சேரரையும் வென்று அடக்கி னான். நங்கிலியில் வேங்கை நாட்டு மன்னனைவென்று, சிங்கண நாட்டையும் கைப்பற்றி அரசு வீற்றிருந்தான்.

5, 6. இவை பொதுவான செய்திகளைக் கூறும் சுருங்கிய மெய்கீர்த்திகளாகும்.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி–1

**1-6. "திருமன்னி விளங்கும்......திறை கொண்டருளி"**

செல்வ மடந்தை வீற்றிருக்கும் குலோத்துங்கனின் தோள்கள் இரண்டும் இரண்டு குன்றுகளுக்கு இணையானவை. அந்த தோள் களும் தான் ஏந்திய வாளுமே தனக்குத் துணையாகக் கொண்டு, சோழப் பேரரசின் பெரும் பகைவர்களாகிய குந்தளர்களுக்குச் சொந்தமான தீச் செயல்களையுடைய வயிராகரத்தில் அக்குந் தளரை வென்று அவர்களுடைய யானைப் படைகளைக் கவர்ந் தான், சக்கரக் கோட்டத்தையாண்ட தாராவர்ஷன் என்னும் மன்னனை அடக்கித் திறை கொண்டான்.

**7–12. "அருக்கன் உதயத்து......இன்புற இருத்தி"**

இரணிய கசிபன் நிலமடந்தையைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலிடை ஒளித்தான். அந்நாளில் திருமால் வராக வடி வெடுத்து, மலர்ந்து மணம் வீசச் சூரிய உதயத்தை எதிர் பார்த்துக் கொண்டிருக்கும் தாமரை போன்று விளங்கிய அந்நில மடந்தையை

மீட்டான், அது போல இந்நிலவுலகத்தைப் பகை மன்னரிடமிருந்து மீட்டுத் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்து மக்கள் இன்புறுமாறு செய்தான்.

13-21. "திகிரியும் புலியும்......இராசேந்திர சோழ தேவர்க்கு"

தன் ஆணைச் சக்கரமும் புலிக் கொடியும் எல்லாத் திசைகளிலும் விளங்கச் செய்தான். தான் பெற்ற புகழ் பரவ நாடு முழுவதும் தருமம் நிலை பெறச் செய்தான். வீரமும் மானமும் கருணையுமே தனக்கு உரிமைச் சுற்றமாக விளங்க, இந்நில வுலகில் அவை என்றும் தன்னை விட்டுப் பிரியாவாறு காத்து விளங்கிய இராசகேசரி குலோத்துங்கன் தன் தாய் வழி உரிமை கொண்டு சோழ நாட்டு மன்னனாகி, மன்னர் பலரும் தன் அடி வணங்கித் திறை செலுத்த, செங்கோல் நடத்தி வந்தான்.

இம் மெய்க்கீர்த்தி குலோத்துங்க சோழனுக்குரியதே. முதலாம் இராசேந்திரன் மனைவியும், குலோத்துங்கன் தாய் அம்மங்கா தேவியின் தாயுமாகிய குலோத்துங்கன் பாட்டியார், இயற்கை எய்திய தன் கணவன் நினைவாக இவனுக்கு வைத்த இயற்பெயர் இராசேந்திரன் என்பதே, அப்பெயரே இம்மெய்க்கீர்த்தியில் குறிப்பிடப் பட்டுள்ளது.

## மெய்க்கீர்த்தி-2

1-5. 'பூமேல் அரிவையும் . . . . . துணையென்றருளி'

குலோத்துங்கனுடைய அழகிய புயங்களை விட்டு நீங்காது திருமகளும் வெற்றி மடந்தையும் என்றும் மகிழ்ச்சியோடு வீற்றிருந்தனர். தானும், தன் வலிமை மிக்க யானையும், தன் கையில் விளங்கும் சிறந்த போர்க்கருவிகளுமே தனக்குத் துணையென்னும் எண்ணத்தோடு கூடிய குலோத்துங்கன் தன் கன்னிப்போரினை மேற்கொண்டான்.

5-11. 'பலங்கிளர் தாராவரசர் .... வாரணம் வாரிசெயிரா'

முதன் முதலாகச் சக்கரக்கோட்டத்தின் மீது படையெடுத்தான். அந்நாட்டையாண்ட படைபலம் பொருந்திய தாராவர்ஷன் என்னும் மன்னனை வென்று தன் வெற்றிப் புகழை நிலைநிறுத்தினான். மேலும், கடல் சூழ்ந்த இவ்வுலகில் போர் பலம் மிக்க அரசர்கள் யாவராயினும் போருக்கு வாருங்கள் என்று அறை கூவல் விட்டு வயிராகரத்தை அடைந்தான். அங்கு குந்தள அரசரோடு போர் தொடங்கினான். மிகுந்த புகழுடைய இந்திரன் யானையாகிய ஐராவதத்தோடு மற்றொரு ஐராவதம் பொருவது போலப் போர்

செய்து, பகைவரது கடல் போன்ற யானைப் படையினைக் கொன்று குவித்தான்.

12–20. "பொன்வேங்கை நாடும் . . . . . குலோத்துங்க
சோழ தேவர்க்கு"

தொடர்ந்து வேங்கை நாடு, இரட்டமண்டலம், ஆகிய இடங்களை வென்று, அந்நாடுகளில் தனது புலி ஆணை நடைபெறுமாறு செய்தான். இவ்வாறு பெற்ற பல வெற்றிகளோடு வீரம் விளங்கத் தன் ஆட்சியில் கொடைக் கொடியினைப் பறக்க விட்டுத் திருப்புகலூர் இறைவனோடு வீற்றிருக்கும் உமாதேவியாரைப் போன்ற, புகழ் நிறைந்த புவனமுழுதுடையாளொடும் வீரசிம்மாசனத்து வீற்றிருந்தான் இராசகேசரிவர்மனாகிய குலோத்துங்கன்.

**விளக்கம்**

**மெய்க்கீர்த்தி-3**

1–10. "புகழ்சூழ்ந்த புணரி . . . . வாகை சூடி"

இப்பரந்த நிலவுலகம் பரந்த கடலையே அகழியாகக் கொண்டது. அந்த நிலப்பகுதியில் சூரியன் உள்ளளவும் தன் ஆணைச்சக்கரம் நடைபெறும்படியான பெருஞ்செயலை ஆற்றியவன் குலோத்துங்கன். விஷ்ணுவர்த்தனன் என்ற பெயருடன் இளவரசனான உடனே தன் தாய்மாமன் வீரராசேந்திரன் நடத்திய வடநாட்டுப் போரில் ஒரு படைக்குத் தலைமை தாங்கிச் சக்கரக் கோட்டத்துப் போரை நடத்தினான்.

'சக்கரக் கோட்டத்துத் தாரா வரசனைத்
திக்கு நிகழ்த் திறைகொண் டருளி'

என்னும் மெய்க்கீர்த்தித் தொடரால் சக்கரக்கோட்டத்தை ஆண்ட தாராவர்ஷன் என்னும் அரசனை வென்று திறை கொண்டான் என்பது தெரிகிறது. இதுவே குலோத்துங்கனின் கன்னிப்போர். இதில் பெற்ற வெற்றியினால் வெற்றித் திருமணத்தை முதன் மணமாகச் செய்து கொண்டான். வயிராகரம் என்றவிடத்தில் நடைபெற்ற பெரும் போரில் தன் வாளினால் தோள் வலிமையைக் காட்டியும் குதிரை மீதிருந்து போர் செய்தும் குந்தள நாட்டு மன்னர் போர்க்களத்தினின்றும் ஓடி ஒளியுமாறு செய்து தன் புகழை நிறுத்தி வடதிசைப் போரில் வாகை சூடினான். இப்போர் நிகழ்ச்சிகளை,

"புரம்எரி மடுத்த பொழுது, அதுஇது-எனத்திகிரி புகைஎரி
குவிப்ப வயிரா
கரம்எரி மடுத்து அரசர் கரம்எதிர் - குவிப்பது ஒரு கடவரை
தனைக் கடவியே"

"தனுக்கோட்ட நமன்கோட்டம் - பட்டதுசக் கரக்கோட்டம்" [1]

என்று சிறப்பிப்பார் செயங்கொண்டார்.

## 10-14. "தென்திசை .... உரிமையிற் சூடி"

அதிராசேந்திரனுக்குப் பிறகு தென்னாட்டில் அரசுரிமை பெறுவோர் இல்லாத நிலை ஏற்பட்டு அதனால் செல்வமடந்தை சோழருக்கே உரியவள் என்ற நிலை மாறி இருந்தது. நிலமடந்தை தன்னை உரிமையாக ஏற்பவர் இன்றித் தனிமையடைந்திருந்தாள். இந்த இரு நிலையையும் நீக்கக் காவிரியாற்றைத் தனக்கு ஆடையாகப் பெற்று அழகுற விளங்கிய சோழநாடாகிய நிலமடந்தையைத் தன் தாய்வழி உரிமை பாராட்டி முடிசூட்டித் தனக்கு உரிமையாக்கிக் கொண்டான்.

## 15-25. "தன்னடி இரண்டும் ... புறத்திடைக் கிடப்ப"

குலோத்துங்கனுடைய பாதங்களைத் தங்கள் முடிகளாக அணிந்த மன்னர் பலர் அவனுக்கு அடங்கி வாழ்ந்தனர். நாட்டில் மனுநெறியாகிய ஆறு பெருக்கெடுத்து ஓடியது. துன்பமாகிய ஆறு வறண்டு வற்றியது. எல்லாத் திசையும் அவனது செங்கோல் நடைபெற்றது. அவனது வெண்கொற்றக் குடையின் நிழல் நாடு முழுவதும் நிலவொளியாகத் திகழ்ந்தது. இச்சிறப்புகளோடு மேருவில் அவன் இலச்சினையாகிய புலிக்கொடியானது பறந்தது. சோழர் ஆட்சிக்குட்பட்ட தீவுகளில் அரசு செலுத்திய மன்னர்கள் திறைப் பொருளாக மரக்கலங்களின் மூலம் அனுப்பிய களிறுகள் நாட்டில் நிறைந்திருந்தன. அவனுக்கு மாறாக நடந்து கொண்ட பாண்டியன் தலையானது பருந்துகள் கொத்தித் தின்னும் நிலையில் அவன் தலை நகருக்கு வெளியே கிடந்தது.

## 25-45. "இந்நாள் .... ஈண்டிய புகழொடு"

சிறந்த வில் வீரனாகிய விக்கிரமாதித்தனோடு கோலார் மாவட்டத்திலுள்ள நங்கிலி என்னுமிடத்தில் ஒரு போரை நிகழ்த்திய குலோத்துங்கன், மணலூர் வழியாகத் துங்கபத்திரையாறு வரை அவனைத் துரத்தியடித்தான். இடையே இருந்த அளத்தி என்னுமிடத்தில், வீரமும் மானமும் இழந்து, பகைவர் விட்டுச் சென்ற யானை, குதிரைகளாகிய தொகுதியையும் கவர்ந்து வந்தான். இவ்வாறு பெரும் பொருளுடன் படைகளும் அவனுமாக நாடு திரும்புங்கால் அவர்கள் ஏறிக்கடந்த மலைகள் முதுகு நெளிந்தன ; இறங்கிக் கடந்த ஆறுகள் சுழன்று கலங்கி உடைந்து ஓடின. விழுந்து கலக்கிய கடல்கள் பரந்து அலறின. வெற்றியும் புகழும் ஒருங்கே

1. கலிங். பரணி-253, 255.

பெற்ற குலோத்துங்கன் கங்கமண்டலம், சிங்கணம் என்னும் பகுதி களையும் வென்று அந்நாடுகளிலிருந்து பெற்ற யானை நிரை, மடந்தையர் கூட்டம் ஆகியவற்றுடன் திரும்பினான். இச்செய்தியை,

> சரிகளம் தொறும் தங்கள் செயமகள் -
> தன்னைமன் அபயன் கைப்பிடித்தலும்
> பரிகளும் களிறும் தனராசியும் -
> பரிபோகம் கொடுத்தனர் பார்த்திபர்[1]

என்று கலிங்கத்து பரணியும் புகழ்ந்து கூறும்.

## 45-60. 'பாண்டி மண்டலம் . . . எல்லை காட்டி''

ஆட்சி மாறும் போதெல்லாம் தங்கள் நாட்டைத் தாங்களே முழுமையாகப் பெற வேண்டும் என்று கிளர்ச்சி செய்து வந்த பாண்டியரும் சேரரும் குலோத்துங்கன் காலத்தும் அதே செயலில் ஈடுபட்டனர். எனவே பாண்டி மண்டலத்தின் மீது படையெடுக்க நினைத்தான் குலோத்துங்கன். வெள்ளம் போல வரும் குதிரை களாகிய அலைகளையும், போர்ப்பரிகளாகிய கலங்களையும் (ஒன்று கரி என்றிருத்தல் வேண்டும்) போர் வீரர்களாகிய கடலையும் உடன் கொண்டு புறப்பட்டான். பாண்டிய நாட்டைச் சிறுசிறு பகுதிகளாகக் கொண்டு ஆண்டு வந்த ஐந்து மன்னர்களும் திரண்டு வந்தனர். அவர்களோடு வடகடல் தென்கடல் ஒன்றோடொன்று மோதுவது போலப் போரினை நிகழ்த்தினான். அக்களத்தில் அஞ்சி ஓடிய பாண்டியர் காட்டிடை அடைக்கலமாகப் புகுந்தனர். சோழன் அக்காட்டையும் அழித்துப் பாண்டியரை பொட்டல் நிலமாகிய பாலை நிலத்தில் துரத்தியடித்தான். எல்லாத் திசையிலும் வெற்றித் தூண்களை நிறுத்தினான். பாண்டியர்களுக்குச் சொந்தமான முத்துக் குளிக்கும் பகுதிகள், முத்தமிழ் விளங்கும் பொதியில் கூற்றம் யானைகள் மிகுந்த சய்யமலை, கன்னியாகுமரிப் பகுதி ஆகியவற் றைக் கைப்பற்றினான். இவ்வாறு வென்ற பகுதிகளையுள்ளடக்கித் தன் நாட்டின் தென் எல்லையாகக் குமரி நாட்டை நிறுவினான்.

## 60-65. "குடமலை நாட்டுள்ள......திரியவிட்டருளி''

அதிராசேந்திரன் மறைந்தபின் பாண்டியரைப் போலவே சேரரும் தங்கள் நாட்டைத் தங்களுக்கு உரிமையாக்கிக் கொள்ளும் முயற்சியில் ஈடுபட்டனர். அதை அறிந்த சோழன் சேரரை அடக்க அந் நாட்டின் மீதும் படையெடுத்தான், குமரி முனைக்கு வடக்கே யுள்ள கோட்டாறு என்னுமிடத்தில் தொடங்கி பல இடங்களில் போரிட்டுச் சேரரை அடக்கியதோடு, அம்மன்னர்களின் வேண்டு கோளுக் கிணங்கி அவர்கள் நாட்டை அவர்களுக்கே கொடுத்துத் தனக்குத் திறை செலுத்தும் முறையை ஏற்றுக் கொண்டான்.

---

1. கலிங். பரணி-256.

ஆயினும் மீண்டும் அவர்கள் கிளர்ச்சி செய்யாதவாறு நிலையான வலிமிக்க தன் படையினை ஆங்காங்கு நிறுத்தினான்.

66-80. "வடதிசை வேங்கை......ஏழும்கைக் கொண்டு"

குலோத்துங்கன் காஞ்சியில் சென்று தங்கியிருந்தான். மன்னர் பலரும் வந்து திறை செலுத்தினர். திறை செலுத்தாதவர் உளரோ என வினவினான்.

"வடகலிங்கர்பதி அவன் இரண்டு விசை
வருகிலன் திறைகொடு"[1]

என்றனர் அமைச்சர். வெகுண்டு அவனை இங்கு கொண்டு வாருங்கள் என்று பணித்தான், கருணாகரத் தொண்டைமான் விடைபெற்றுப் பெரும்படையுடன் புறப்பட்டான். இதுவே கலிங்கப் போருக்குக் காரணமாயிற்று.

குலோத்துங்கனது படை வேங்கை மண்டலத்தைக் கடந்து வட கலிங்கத்தை அடைந்தது.

"கடையில் புடைபெயர் கடல்ஒத்து அமரர்
கலங்கும் பரிசு கலிங்கம் புக்கு
அடையப் படர்எரி கொளுவிப் பதிகளை
அழியச் சூறைகொள் பொழுதத்தே"[2]

இவ்வாறு அப்படை கலிங்கத்தை எரியூட்டிச் சூறையாடியது. இச் செயலை யறிந்து,

"அந்தரம் ஒன்று அறியாத வடகலிங்கர்
குலவேந்தன் அனந்த பன்மன்"[3]

வெகுண்டு பெரும்படையை ஏவினான். படைத்தலைமை ஏற்று வந்த மட்டையன், மாதவன், இராசணன், பொத்தயன், கேத்தணன் என்போரும் தலைமைப் படைத் தலைவன் தாமயன், கலிங்க மன்னனின் அமைச்சன் எங்கராயன் போன்றோரும் அக்களத்தே கொல்லப்பட்டனர். அவர்களின் யானைகள் பல அழிந்தன இறந்துபட்ட உயிர்களின் தலைகளையும், உடல்களையும் கழுகுகளும் பருந்துகளும் கொத்தித் தூக்கிச் சென்று கடலில் போட்டன.

இவ்வாறு கலிங்கம் முழுவதையும் வென்ற தொண்டைமான் அக்களத்திலிருந்து பெற்ற களிறுகளுடன் கலிங்க நாட்டுப் பொருள்கள் பலவற்றைக் கவர்ந்து வந்து குலோத்துங்கன் அடிபணிந்தான், இது கருணாகரன் போர்ச் செயல் என இலக்கியங்கள் கூறுகின்றன.

1. கலிங். பரணி-339. ; 2. கலிங். பரணி-371. 3. கலிங். பரணி-376. ;

"கடற் கலிங்கம் எறிந்துசயத் தம்பம் நாட்டிக்
கடகரியும் வடமாவும் தனமும் கொண்டு
சுடர்ப்படைவாள் அபயன்அடி அருளி னோடும்
சூடினான் வண்டையர்கோன் தொண்டை மானே"[1]

என்பது பரணி, ஆனால், கலிங்கம் ஏழும் கைக் கொண்டு, பொங் கொளியாரமும் திருப்புயத்தலங்கலும், வீரமும் தியாகமும் விளங்கும் பார்மிசை...விரசிம் மாசனத்து உலகமுடையாளொடு வீற்றிருந் தருளிய கோவிராச கேசரி என்றே மெய்க்கீர்த்தி கூறுகிறது.

81-93. "பொங்கொளியாரமும்.........குலோத்துங்க சோழ தேவர்க்கு"

கலிங்க வெற்றியோடு குலோத்துங்கன் ஆரமும் அலங்கலும் அணிந்தவனாய் வீரமும் தியாகமும் விளங்க வீற்றிருந்தான். அவ னுடன் தியாகவல்லி உலகுடையாள் வீற்றிருந்தாள். இக்காட்சி சிவனிடத்து உமை வீற்றிருந்தது போலும் இருந்தது, தியாகவல்லி யோடு மற்றொருபுறம் மகளிருக்குத் திலகம் போல விளங்கும் ஏழிசை வல்லபி ஏழுலகமுடையாள் மகிழ்ச்சியோடு வீற்றிருந்தாள். இது உமையுடன் கங்கை ஒரு புறத்து வீற்றிருந்தது போலும் விளங்கியது.

ஊழிக் காலம் முழுமையும் திருமாலின் மார்பை விட்டுப் பிரியாது வீற்றிருக்கும் திருமகளைப்போல உலகமுடையாள் இருக்க வீர சிம்மாசனத்து வீற்றிருந்தான் இராசகேசரி வர்மரான குலோத் துங்கன்.

## மெய்க்கீர்த்தி-4

1-3. "புகழ்மாது விளங்க......மணிமுடி சூடி"

குலோத்துங்கனிடம் என்றும் புகழ் என்னும் நங்கை வீற்றிருந் தாள்: வெற்றி மடந்தை பெரும் விருப்பத்தோடு வசித்தாள்; நில மடந்தை நிலையாகி இருந்தாள்; செல்வ மகள் விரும்பி வந்தணைந் தாள். இவ்வாறு பலவகைச் செல்வங்களைப் பெற்ற அவன் தன் தாய்வழி உரிமையோடு சோழ நாட்டின் மணி முடியினைச் சூடி னான்.

4-11. "மீனவர் நிலைகெட.........குலேத்துங்க சோழ தேவர்க்கு"

தன் ஆட்சியின் கீழிருந்த பாண்டியர் ஐவர் தங்கள் உரிமை விரும்பி கிளர்ச்சி செய்தனர், அவர்கள் ஐவரும் தங்கள் நிலை அறிந்து பொட்டல் நிலங்களில் ஓடுமாறு துரத்தினான். அதேபோல

1. கலிங். பரணி-472.

கிளர்ச்சி செய்த சேரரோடு கோட்டாறு என்னுமிடத்தில் போரிட்டுத் திறை செலுத்தச் செய்தான்.

விக்கிரமாதித்தன் என்னும் வேங்கை நாட்டு மன்னனை நங்கிலி என்னுமிடத்தில் நடத்திய போரில் மேல் கடல் வரை துரத்தினான். சிங்கண நாட்டு மன்னனையும் அவ்வாறே துரத்தி மற்ற மன்னவர்களும் அடி பணிய எல்லாத்திக்கிலும் தன் ஆணையைச் செலுத்தி வெற்றி விழா கொண்டாடி வீர சிம்மாசனத்து வீற்றிருந்தான் இராசகேசரி குலோத்துங்கன்.

### மெய்க்கீர்த்தி-5

1-7. "பூமியும் திருவும்.........தேவர்க்கு"

இராசேந்திர தேவன் என்று குறிப்பிடும் இம் மெய்க்கீர்த்தி குலோத்துங்கனுடையதே. இவனிடம் நிலமகளும் திருமகளும் குடிகொண்டிருந்தனர். வீரச்செயல்களோடு ஆணை செலுத்தி வெற்றி விழா பெற்றுப் புவனமுழுதுடையாளொடும் வீர சிம்மாசனத்து வீற்றிருந்தான் இராசகேசரி குலோத்துங்க சோழன்.

### மெய்க்கீர்த்தி-6

1-12. "பூமன்னு பாவை.........குடிமை செய்ய"

திருமகளும் நிலமகளும் நிலவினர். வெற்றியும் புகழும் ஓங்கின, சூரிய குலம் விளக்கமுற்றது. பாற்கடலில் வீற்றிருக்கும் திருமால் பள்ளி நீங்கி கடல் சூழ்ந்த நிலவுலகைத் திருத்தினான். எட்டுத்திக்கு யானைகளும் படைகளும் முறையாகக் காவல் புரிந்தன. குலோத்துங்கனின் கட்டளையைக் கேட்டுக் காவல் தெய்வம் பணிசெய்தது. கலியாகிய பகைவன் ஓடி ஒளிந்தான். புலிக்கொடி எங்கும் பறந்தது. பாண்டியர் முதலாகிய மன்னர் பலரும் வந்து பணிவிடை செய்து நின்றனர்.

13-18. "ஒற்றை வெண்குடை.........சோழ தேவர்க்கு"

ஒப்பற்ற வெண் கொற்றக்குடையானது உலக முழுமைக்கும் தண்ணளி செய்து விளங்கியது. இவ்வாறான சிறப்புகளோடு பல காலம் தனது ஆணைச் சக்கரத்தைச் செலுத்தி வந்த குலோத்துங்க சோழன் இராசகேசரிப் பட்டம் பெற்றுத் திரிபுவன முழுதுடையாளொடு வீர சிம்மாசனத்து அரசு வீற்றிருந்தான்.

# 24

# விக்கிரம சோழன்

(கி. பி. 1118–1135)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமாலை மிடைந்து பொன்மாலை [1]திகழ்தரப்
பாமாலை [2]மலிந்த [3]பருமணித் [4]திரள்புயத்து
இருநில மடந்தையொடு சயமக ளிருப்பத்
[5]தன்றுணை மார்பந் தனதெனப் பெற்றுத்
திருமகள் ஒருதனி யிருப்பக் கலைமகள் 5
சொற்றிறம் புணர்ந்த கற்பின ளாகி
விருப்பொடு நாவகத் திருப்பத் திசைதொறும்
திகிரியொடு செங்கோல் நடப்ப அகில
புவனமும் கவிப்பதோர் புதுமதி போல
வெண்குடை மீமிசை [6]நிற்பக் [7]கருங்கலி 10
யொளித்துவன் [8]பிலத்திடைக் கிடப்பக் குளத்திடைத்
தெலுங்க வீமன் விலங்கல்மிசை யேறவும்
கலிங்க [9]பூமியைக் கனலெரி பருகவும்
வேங்கை மண்டலங் கடந்து தாங்கலர்
கலிங்க மேழும் கனலெரி பரப்பி 15
ஐம்படைப் பருவத்து வெம்படை [10]தாங்கி
வேங்கை மண்டலத்து ஆங்கினி திருந்து
வடதிசை [11]வாகை சூடித் தென்றிசைத்
தருமமும் தவமும் தானமுந் தழைப்ப
வேதமும் மெய்ம்மையும் [12]ஆதியுகம் போலத் 20
[13]தலைத்தலை சிறப்பவந் தருளி வெலற்கரும்
போர்ப்புலி [14]ஆணை பார்த்திவர் சூட

---

1. திகழ. 2. மலிந்து ; மலர்ந்து. 3. பன்மணி. 4. தாள்புயத்து ; புயத்தின். 5. தன்வரைமார்பன் ; கனவரை மார்வந். 6. நிழற்ற. 7. கார்கலி. 8. பலத்திடை. 9. மண்டலம் கனையெரி பரப்பி. 10. தாங்கியும் ; தாங்கி வந்தருளி. 11. அடிபடுத்தருளித். 12. ஆதியுல கம்போல். 13. தலைசிறப்ப. 14. யானை

[15]திருமணி மகுடம் முறைமையிற் சூடி
மன்னுயிர்க் கெல்லாம் இன்னுயிர்த் தாய்போல்
தண்ணளி பரப்பித் [16]தனித்தனி புரந்து 25
மண்முழுதுங் களிப்ப [17]மணிநா வொடுங்க
கோயில் கொற்ற வாயில் புறத்துத்தன்
விசயமும் புகழு மேன்மே லோங்க
[18]ஊழி ஊழியிம் மாநிலங் காக்கத்
திருமணிப் பொற்றோட்டு எழுதுபத் தாண்டு 30
[19]வருமுறை முன்னே மன்னவர் சுமந்து
[20]திறைநிறைத்துச் [21]சொரிந்த செம்பொற் குவையாற்
தன்குல நாயகன் தாண்டவம் [22]புரியுஞ்
செம்பொன்அம் பலஞ்சூழ் திருமா ளிகையும்
கோபுர வாயிற் [23]கூடசா லைகளும் 35
உலகுவலங் கொண்ட ஒளிவிளங்கு நேமிக்
குலவரை உதயக் குன்றமொடு நின்றெனப்
பசும்பொன் [24]வேய்ந்த [25]பனிவளர்ப் பீடமும்
விசும்பொளி தழைப்ப விளங்குபொன் வேய்ந்து
இருநிலந் தழைப்ப இமையவர் களிப்பப் 40
பெரிய திருநாள் பெரும்பெயர் விழாவெனும்
உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்
அம்பலம் நிறைந்த அற்புதக் கூத்தர்
இம்பர் [26]வாழ்வு எழுந்தருளு தற்குத்
திருத்தேர்க் கோயில் செம்பொன் [27]வேய்ந்து 45
பருதிரள் முத்தின் [28]பயில்வடம் பரப்பி
நிறைமணி மாளிகை நெடுந்திரு வீதிதன்
திருவளர் [29]பெயரால் செய்துசமைத் தருளிப்
பைம்பொற் [30]குவித்த பரிகலம் முதலாற்
செம்பொற் கற்பகத் தொடுபரிச் [31]சின்னமும் 50
அளவில் லாதன ஒளிபெற வமைத்துப்
[32]பத்தா மாண்டிற் சித்திரைத் திங்கள்

---

15. சுடர்மணி மகுடம் ; மன்னிய உரிமையில் மணிமுடி சூடி ; நிறைமணி மகுடம்.
16. மண்முழுதுங் களிப்ப ; தனித்தனி பார்த்து. 17. மனுநெறி வளர்த்து.
18. வாழிவாழியிம். 19. வருதிறை. 20. உள்ளிறை. 21. குவித்த.
22. பயிலும். 23. கூடசாளரமும். 24. மேய்ந்த. 25. பலிவளர். 26. வாழ.
27. மேய்ந்து. 28. பல்வடம். 29. பியரால். 30. குழித்த. 31. சந்தமும்.
32. பத்தர்மாண்பிற்.

அத்தம் பெற்ற ஆதித்த வாரத்துத்
திருவளர் மதியின் திரயோதசிப் பக்கத்து
இன்னன பலவும் இனிதுசமைத் தருளித் 55
[33]தன்னொரு குடைநிழற் தலமுழுதுந் [34]தழைப்பச்
செழியர்வெஞ் சுரம்புகச் சேரலர் கடல்புக
அழிதரு சிங்களர் அஞ்சிநெஞ் சலமரக்
கங்கர் திறையிடக் கன்னடர் வெந்நிடக்
கொங்கர் ஒதுங்கக் கொங்கணர் சாயமற்று 60
எத்திசை மன்னரும் தத்தமக்கு அரணெனத்
திருமலர்ச் சேவடி உரிமையில் [35]இறைஞ்சத்
தொல்லையே மூலகுந் [36]தொழுதெழத் தோன்றிய
முல்லை [37]வாணகை முக்கோக் கிழானடி
உமையொடுஞ் சங்கரன் [38]இமையச் சிமையத்து 65
இருந்தெனப் பொருந்தி யுடனினி திருப்ப
ஆங்கவன் மகிழும் கங்கையொப் பாகிய
தெரிவையர் திலதம் தியாக பதாகை
புரிகுழல் மடப்பிடி புனிதகுண வனிதை
திருபுவன முழுதுடையா ளிவன்திரு வுள்ளத்து 70
[39]அருள்முழு துடையா ளெனவுட னிருப்பச்
ஊழியந் நெடுமால் ஆகத்துப் பொருந்தி .
பிரியா தென்றுந் திருமகள் இருந்தென
மாதர் மடமயில் பூதலத் தருந்ததி
அரணியல் கற்பில் தரணிமுழு துடையாள் 75
இவன்திரு மார்வத்து அருளொடும் இருப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்து
முக்கோக்கிழா னடிகளோடும் வீற்றிருந் தருளிய
கோப்பர கேசரி வன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம சோழ 80
தேவர்க்கு யாண்டு ஐஞ்சாவது.

---

33. ஒருகுடை நிழற்கீழ். 34. கவிப்ப. 35. இறைஞ்சி ; சூடி. 36. தொழு செழித் தோன்றி. 37. வாணிசை. 38. இமையத்து இசைய. 39. தரணிமுழு.

## 25

### மெய்க்கீர்த்தி–2

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமாது புணரப் புவிமாது [1]வளர
நாமாது [2]விளங்க ஜயமாது [3]விரும்பத்
[4]தன்னிரு பதமலர் மன்னவர் சூட
மன்னிய [5]உரிமையில் மணிமுடி சூடிச்
செங்கோல் சென்று திசைதொறும் [6]வளர்ப்ப 5
வெங்கலி [7]நீங்கி மெய்யறந் தழைப்பக்
கலிங்கம் இரியக் கடல்மலை [8]நடாத்தி
வலங்கொள் ஆழி [9]வரைஊழி நடாத்தி
இருசுடர் அளவும் ஒருகுடை [10]நிழற்கீழ்
முக்கோக் கிழான்அடிக ளோடும் செம்பொன் 10
வீரசிம்மா சனத்து வீற்றிருந் தருளிய
கோப்பர கேசரி பன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் உடையார் ஸ்ரீ விக்கிரம
சோழ தேவர்க்கு யாண்டு 10–ஆவது.

## 26

### மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

கோக்கவி மூர்க்க ஸ்ரீவிக்கிரம சோழ தேவர்க்குத்
திருவெழுத் திட்டுச் செங்கோல் ஓச்சி
வெள்ளி வெண்குடை மிளிர ஏந்தி
நாடுவளம் படுத்து நையுங்குடி ஓம்பி
ஆறில்ஒன்று கொண்டு அல்லவை கடிந்து 5
கோவீற் றிருந்து குடிபுறங் காத்து
பெற்ற குழவிக்கு உற்றநற் றாய்போல
திருமிகு சிறப்பில் செய்யா நின்ற
திருநல்லி யாண்டு நாற்பத்தொன் றாவது

---

1. மலர. 2. மகிழ. 3. நிலவ ; பெருக. 4. கன்னிரு. 5. உரிமையால். 6. நடப்ப. 7. நீங்க. 8. நடப்ப. 9. வரைஆழி ; வரையாது. 10. நிழற்ற.

# விக்கிரம சோழன்

## முன்னுரை

முதல் குலோத்துங்கன் மகன் விக்கிரமன். சோழப்பேரரசின் ஒரு பகுதியாகிய வேங்கை நாட்டின் பொறுப்பை ஏற்றிருந்தான். ஆட்சித்திறமையுடையவனாதலின் சோழநாட்டின் இளவரசனாகப் பட்டம் சூட்டப் பெற்றான். முறைப்படி பரகேசரி என்னும் பட்டம் பெற்றவன்.

> ''பெரிய திருநாள் பெரும்பெயர் விழாவெனும்
> உயர்பூரட் டாதி உத்திரட் டாதியில்''

என்னும் இம்மெய்க்கீர்த்தி அடிகள் இவனது பிறந்த நட்சத்திரத்தை உணர்த்துகின்றன.

மூன்று வகையான மெய்க்கீர்த்திகள் இவனுக்கு உரியனவாகக் கிடைத்துள்ளன. அவற்றில் ஒன்று ''பூமாலை மிடைந்து பொன் மாலை திகழ்தர'' என்று தொடங்குகிறது. மற்றொன்று 'பூமாது புணரப் புவிமாது வளர' என்ற தொடக்க அடியினை உடையது, 'கோக்கவி மூர்க்க' என்று தொடங்கும் சிறிய அளவிலானது ஒன்று.

## மெய்க்கீர்த்திகள்

1. எல்லா வகையான செல்வமும் கல்வியும் நிரம்பப் பெற்றிருந்த விக்கிரம சோழன் நாட்டில் எவ்விதத் துன்பமும் இல்லாதவாறு ஆட்சி செய்தான்.

இளமைப் பருவத்திலேயே காகுளம் என்னுமிடத்தில் தெலுங்க வீமனை வென்று வேங்கை நாட்டை ஆண்டு வந்தான், தந்தை குலோத்துங்கனின் அழைப்பின் பேரில் சோழநாடு வந்து இளவரசனானான். தந்தைக்குப்பின் சோழப் பேரரசனானான். போர் அதிகமில்லாமல் அமைதியான ஆட்சியை நடத்தினான். அவன் ஆட்சியில் துன்பம் நீங்கியது; குறை ஏதும் இல்லாதாயிற்று. குறுநில மன்னர் செலுத்திய திறைப்பொருள்கள் குவிந்தன. அதனால் தில்லைத் திருச்சிற்றம்பல தேவருடைய பொன்னம்பலத்தைச் சுற்றிலும் அமைந்த திருமாளிகை, கூடசாலை, பலிபீடம் போன்றவை பொன்னால் வேயப்பட்டன. மன்னவன் தன் பிறந்த நாளில் பெரிய திருவிழா நடத்த ஏற்பாடு செய்தான். அவ்விழாவில் தேர்த் திருவிழா ஒன்றும் நடைபெறச் செய்தான். பொன்பரிச் சின்னங்கள் பலவற்றை ஆலயத்தில் வைக்க ஏற்பாடு செய்தான்.

முக்கோக் கிழானடிகள், திரிபுவனமுடையாள், தரணி முழுதுடையாள் என்னும் மூன்று தேவியருள் முக்கோக்கிழானடிகளே அவனுடைய பட்டத்தரசியாக விளங்கினாள்.

2. தந்தையின் கட்டளைப்படி சோழப் பேரரசின் மன்னனானான் விக்கிரம சோழன். கலிங்கப்போரில் வெற்றிமாலை சூடிய மன்னன் சூரிய, சந்திரர் உள்ளவரை தன் புகழ் நிலைபெறுமாறு நல்லாட்சியினை நடத்திய சோழன் முக்கோக்கிழானடிகள் என்னும் தேவியைப் பட்டத்தரசியாகக் கொண்டு அரசு வீற்றிருந்தான்.

3. நாட்டை வளம்படுத்தியவிக்கிரம சோழன், குடிகளைப் பாதுகாப்பதில் குழந்தைக்குத் தாய்போல விளங்கினான்.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

1-11. "பூமாலை மிடைந்து......பிலத்திடைக் கிடப்ப"

விக்கிரம சோழனின் திரள்புயங்கள் பூமாலையும் பொன் மாலையும் திகழப் பாமாலையால் புகழப் பெற்று விளங்குகிறது. அப்புயங்களில் நில மடந்தையும் வெற்றி மடந்தையும் பொருந்தியிருக்கிறார்கள். திருமகளாகிய செல்வமடந்தை அவனது மார்பகத்தைத் தனதாகவே கொண்டிருக்கிறாள். சொல் வன்மையுடையவளாகிய கலை மகள் அவனது நாவில் வீற்றிருக்கிறாள். இவ்வாறு எல்லா நலங்களும் பெற்றிருந்த விக்கிரமன் எல்லாத் திசையிலும் தன் ஆணைச் சக்கரமும் செங்கோலும் நடைபெறச் செய்தான். அவனுடைய வெண் கொற்றக் குடையானது உலகம் முழுவதற்கும் மேலிருந்து தன் நிழலைத் தரும் வெண்ணிலாவினைப் போல உலகுக்குத் தண்ணளி செய்தது. கொடிய துன்பங்களைத் தரும் கலியானது நாட்டைவிட்டு அகன்று கொடிய பாதாளத்தில் சென்று ஒளிந்தது. இச் சிறப்புகளுக்குரிய தொடக்கப் போர்கள் தொடரும் அடிகளால் விளங்குகின்றன.

11-18. "குளத்திடைத் தெலுங்கவீமன்...வாகை சூடி"

விக்கிரம சோழனுக்கு முன் அவனுடைய சகோதரர் இருவர் மாறி மாறி சோழப் பேரரசின் கீழ் வேங்கை நாட்டை ஆளும் பொறுப்பேற்று இருந்தனர். அப்போது கலிங்கத்தை ஆண்ட தெலுங்கவீமன் சோழருக்கு அடங்கி ஆட்சி செய்து வந்தான். அவன் தன்உரிமை பெற்றவனாய்த் தன் நாட்டை ஆள வேண்டுமென்று விரும்பி கிளர்ச்சி செய்து வந்தான். எனவே விக்கிரம சோழன் ஸ்ரீகாகுளம் என்னுமிடத்தில் போரிட்டுத் தெலுங்க வீமனைத் தோற்கடித்தான். தோற்றோடிய வீமன் மலையிடை ஒளிந்தான். தென் கலிங்கத்தைத் தீக்கு இரையாக்கினான்.

மீண்டும் வட கலிங்கத்தையும் வென்று எரியூட்டி வடதிசை வெற்றியை நிலை நாட்டினான். ஐம் படைதாங்கும் இளமைப் பருவத்திலேயே இவ்வாறு படைதாங்கிச் சென்று வாகை சூடி வேங்கை நாட்டை ஆண்டு வந்தான்.

### 18-29. "தென்திசைத் தருமமும்...மாநிலம் காக்க"

வடதிசை வாகை சூடி வேங்கை நாட்டை ஆண்ட விக்கிரம சோழன், தந்தை குலோத்துங்கனின் அழைப்பை ஏற்றுத் தென்னாடு வந்தான். இளவரசனாக இருந்த விக்கிரமன் தந்தை இறந்த பின் சோழ நாட்டின் முடியினை ஏற்றான். அவன் ஆட்சியில் போர் அதிகம் இல்லாமையால் தருமம், தானம், தவம் ஆகியவை தழைத்தன. மனு ஆண்ட பழைய காலம் போல வேதமும் மெய்ம்மையும் சிறந்து விளங்கின. புலிக் கொடியுடைய சோழ மன்னனின் ஆணையை மன்னர் பலரும் ஏற்று நடந்தனர். நாட்டியில் உயிர்களுக்கெல்லாம் தாயைப் போல இருந்து தனித்தனியே ஒவ்வொரு உயிரின் நலனையும் கவனித்து உலகமே மகிழுமாறு அளி செய்தான். குறை கூற விரும்புவோர் ஒலிக்கும் மணி ஒலி அவனது அவையில் ஒலிக்காமல் ஒடுங்கிவிட்டது. அரண்மனை வாயிலில் வெற்றிக் கொடியும் புகழ்ச்சிச் சின்னங்கலும் விளங்கின. இவ்வாறு மாநிலம் காவல் புரிந்தான்.

### 30-39. "திருமணிப் பொற்றோட்டு...பொன் வேய்ந்து"

விக்கிரமன் பட்டம் ஏற்ற பத்தாமாண்டு பொன் ஏட்டில் பொறிக்க வேண்டிய சிறப்பினைப் பெற்றது. அவனது ஆட்சியில் குறுநில மன்னர் செலுத்திய திறைப் பொருள்கள் பெரும் பொற்குவியலாக அமைந்தன. அவற்றைக் கொண்டு தங்கள் குலநாயகனாக் விளங்கும் தில்லைச் சிற்றம்பலமுடைய தேவருக்குப் பல தொண்டுகளைச் செய்தான். அவற்றுள் இறைவன் திருநடம் புரியும் பொன்னம்பலத்தைச் சுற்றி எடுக்கப் பெற்றிருந்த திருமாளிகையும், கோபுர வாயிலில் அமைந்த கூட சாலைகளும், சிறந்த பலிபீடமும் ஆகிய இவை யாவும் பொன்னால் வேயப் பெற்ற செயல் மிகச் சிறப்புடையதாகும். பொன் வேய்ந்து விளங்கிய இவை சூரியன் தோன்றும் உதய கிரிக்குச் சமமாகத் தோன்றி ஆகாயத்தைப் பொன் மயமாக்கின. உலகை வலமாக வரும் ஒற்றைச் சக்கரத்தையும் ஒளிமிக்க கதிர்களையும் உடைய சூரியன் உதிக்கும் உதயகிரியினைக் குலகிரி என்று கூறுகிறது மெய்க்கீர்த்தி, சோழன் சூரிய குலத்தவன் ஆதலின்.

### 40-55. "இருநிலம் தழைப்ப...... இனிது சமைத்தருளி"

பொன்னம்பலத்தைப் பொன் வேய்ந்த விக்கிரம சோழன் தன் பிறந்த நட்சத்திரமாகிய உத்திரட்டாதியில் பெரிய திருவிழா

என்னும் திருவிழாவினை நடத்த ஏற்பாடுகள் செய்தான். அவ் விழாவில் இந்நிலவுலகம் செழிக்குமாறும், இமையவர் மகிழ்ச்சி அடையுமாறும் திருச்சிற்றம்பலத்தில் எழுந்தருளியுள்ள கூத்தர் பெருமான் இவ்வுலக மக்களிடையே எழுந்தருளி அருள்புரிய வேண்டி தேர்த்திருவிழா ஒன்றும் நிகழ்த்தப் பெற்றது. கூத்தர்பிரான் வீதிவலம் வருவதற்குரிய தேராகிய அக்கோயிலையும் பொன்னால் வேய்ந்தான். மேலும் அத்தேர் சிறந்த முத்துக்களால் ஆகிய வடங் களால் நிரப்பப்பட்டது. அத்தேரோடும் வீதியாகிய திருச்சுற்று மாளிகைக்கு மன்னன் பெயரால் விக்கிரமசோழன் திருமாளிகை என்னும் பெயர் வைக்கப்பட்டது. ஆலயத்திற்குரிய பொன்னா லாகிய உண்கலம் முதலாகக் கற்பகம் ஈறாக அமைந்த அனைத்துப் பரிச்சின்னங்களும் அளவற்றவை அமைக்கப்பட்டன. இவ்வாறான அனைத்துச் செயல்களும் விக்கிரம சோழனின் பத்தாம் ஆட்சி யாண்டு சித்திரைத் திங்கள், அத்த நட்சத்திரம் பெற்ற ஞாயிற்றுக் கிழமை, வளர்மதி திரயோதசி நாளில் (15-4-1128) முடிக்கப் பட்டன.

### 56-66. "தன் ஒருகுடை நிழல்......உடனினி திருப்ப"

பாண்டியர், சேரர், சிங்களர், கங்கர், கன்னடர், கொங்கர், கொங்கணர் போன்ற பல மன்னர்களும் தமக்குப் பாதுகாப்பு தரும் பேரரசனாகக் கொண்டு சோழன் மலரடிகளை வணங்கி நின்றனர். இக்கூற்று சோழநாட்டின் பரந்த நிலப்பகுதியினை எடுத்துக் காட்டு கிறதே தவிர இந்நாடுகள் விக்கிரமசோழனால் புதிதாகக் கைப்பற்றப் பட்டவை என்று கொள்ளமுடியாது. முல்லை போன்று ஒளி பொருந்திய நகையினை உடையவளாகிய முக்கோக்கிழானடிகள் என்னும் பட்டத்தரசி எல்லா மன்னரும் தொழ வீரசிம்மாசனத்து விக்கிரமசோழனுடன் வீற்றிருந்தாள். இந்நிலை பனிமலையின் உச்சி யில் உமையம்மையுடன் வீற்றிருக்கும் சிவபெருமானைப் போன்று காட்சியளித்தது.

### 67-81. "ஆங்கவன் மகிழும்....விக்கிரமசோழ தேவர்க்கு"

பெண்களுக்குத் திலதம் போன்றவளும், சிறந்த தியாக உள்ள மும், அழகிய கூந்தலும், தூய்மையான குணமும் உடையவளு மாகிய திரிபுவனமுழுதுடையாள் என்னும் மனைவி சிவனிடத்தில் கங்கை வீற்றிருப்பது போல வீற்றிருந்தாள்.

மகளிருள் மயில் போன்றவளும், நிலவுலகத்து அருந்ததி போன்ற வளுமாகிய கற்புடைய தரணி முழுதுடையாள் என்பவளும் அருள் உள்ளத்தோடு வீற்றிருந்தாள். இவள் மன்னனுடன் வீற்றிருந்த நிலை ஊழிக் காலத்தில் திருமாலின் மார்பகத்தை விட்டு என்றும் பிரியாது திருமகள் வீற்றிருப்பது போலும் காட்சியளித்தது. இவ்வாறு

வீரசிம்மாசனத்தில் முக்கோக்கிழானடிகளோடும் விற்றிருந்தான் பரகேசரி விக்கிரமசோழன். தேவியர் மூவருள் முக்கோக்கிழானடிகள் என்பவளே பட்டத்தரசியாக விளங்கினாள்.

## மெய்க்கீர்த்தி-2

### 1-6. "பூமாது புணர......மெய்யறம் தழைப்ப"

திருமகளும் நிலமகளும் கலைமகளும் வெற்றி மகளும் விக்கிரமனிடம் ஒருங்கே விரும்பியிருந்தனர். தங்கள் ஆட்சிக்குட்பட்ட மன்னர் பலரும் அடிவணங்கி நின்றனர். தந்தை முடி சூடிய படியே விக்கிரம சோழன் தானும் சோழப்பேரரசின் முடி மன்னனானான். எல்லாத் திசையிலும் தன் செங்கோல் இனிது நடைபெறச் செய்தான். கொடிய துன்பம் நாட்டை விட்டு நீங்க நாட்டில் அறம் தழைத்தது.

### 7-14. "கலிங்கம் இரிய.........விக்கிரமசோழ தேவர்க்கு"

கலிங்க நாடு அழியுமாறு தன் படையினை நடத்திச் சென்று சூரிய, சந்திரர் உள்ளவரை தன் ஆணை நடைபெறுமாறு அரசாண்டான் விக்கிரமசோழன். செங்கோல் சிறப்புற சோழப்பேரரசின் வீரசிம்மாசனத்தில் முக்கோக்கிழானடிகளாகிய தன் பட்டத்தரசியோடு வீற்றிருந்தான் பரகேசரி விக்கிரமசோழன்.

## மெய்க்கீர்த்தி-3

இது கோவை மாவட்டம், தாராபுரம் வட்டம், பிரமியம் என்னுமூரிலுள்ள திருவலஞ்சுழிநாதசுவாமி கோயில் கல்வெட்டில் அமைந்துள்ள மெய்க்கீர்த்தி.[1] கொங்குச் சோழமன்னன் விக்கிரமசோழ தேவர் என்று குறிப்பிடுகிறார் பதிப்பாசிரியர். ஆட்சியாண்டு நாற்பத்தொன்றாவது என்று காணப்படுவதால் முதலாம் குலோத்துங்கன் மகனாகிய விக்கிரமசோழனின் இவன் வேறானவன் என்று கருத முடிகிறது. பெயர் ஒற்றுமையால் இங்கு சேர்க்கப்படுகிறது.

### 1-9. "கோக்கவிழ்க்க......நாற்பத்தொன்றாவது"

விக்கிரமசோழன் சிறந்த புலமை வாய்ந்தவன் என்பதும் சிறந்த கவித்திறமை பெற்றவன் என்பதும் தெரிகிறது. நாட்டின் பொறுப்பினை ஏற்று, வெண்கொற்றக்குடை ஏந்திய விக்கிரமன் மனுநெறி வழுவாது அரசாண்டு நாட்டினை வளம் பெறச் செய்தான். வருந்தும் குடிமக்களைப் பாதுகாப்பதில் பெற்ற குழந்தையைப் பேணி வளர்க்கும் தாய் போல விளங்கினான். தீயசெயல்களையும் தீயநெறி முறைகளையும் அடியோடு நீக்கி ஆறில் ஒரு கடமையாக வரி வாங்கினான். இவ்வாறு குடிமக்களைக் காக்கும் மன்னனாக விளங்கிய சிறப்புடைய அவனது ஆட்சியாண்டு நாற்பத்து ஒன்றில்......

1. கொங்கு - 15.8.1976 - பக். 9-10.

# 27

# இரண்டாம் குலோத்துங்கன்

(கி.பி. 1133-1150)

**மெய்க்கீர்த்தி–1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமருவிய புவியேழும்
 புவிசூழ்ந்த பொருப்பேழுந்தன்
நிழல்மருவிய தனிவெண்குடை
 நீடூழிகள் நிலாப்பரப்பக்
கோடாத தனிச்செங்கோல்
 கொள்கை சான்ற அறுசமயமும்
வாடாதவைம் பூதங்களும்
 மறைநான்கும் முத்தமிழும்
[1]இருபிறப்பினோ டொருமுதலாய்
 வருநாணமும் களிக்கறியும் 5
பருவமாரியும் பலவிளைவும்
 பழுதின்றி முழுதுமாகக்
கடலிடையெழு சுடரன்ன
 கதனன்ப ரவிரொளி
அடலாழிமா நிலத்துக்கண்
 டகரெனும் வல்லிருள்
முதலற வெறிந்திட்
 டெய்தி மன்னவர்க்கு
இடியுரும் ஒத்துளத்
 திசையிலும் மற்றுலாவ 10
பொருபுலியும் புல்வாயும்
 ஒருதுறைநீ ருடனுண்ண
உள்வெருவுற் றுடல்நடுங்கும்

---

1. அருபிறப்பினோடு.

புள்ளுமாவு முடன்புணர்ந்து
கடுங்குலைஞர் குரம்பைநிழல்
இடும்பையின்றி இனிதுவைக
மறந்தலைநின் றொருவரொரு
வரையிறந்து அலையுறாது
இனிதொழுக பெரும்புலவரு
மருங்கவிஞரு நாப்புறுநல் 15
இசைப்பாணரும் [1]கோடியருங்
குயிலுவரும் நாடுநாடுசென்
றிரவலராய் இடும்பை நீங்கிப்
புரவலராய்ப் புகழ்படைப்பச்
செல்லென்னத் தென்னவருஞ்
சிலையானைச் சேரலரு
மாவியானைக் காலிங்கரும்
வராகக்கொடி வடவிரட்டரும்
வேழிக்கொடி விறல்வேந்தரும்
வீணைக்கொடிச் சிங்களரும் 20
பாழிப்படை [2]பரமன்னரும்
மணிநிறை வொடுகழலைப்
[3]பொன்னார்தந்த தனித்தண்டில்
தன்மப்புலி தழைத்தோங்க
நாமாது சிறந்தோங்க
திருமுழுது நயந்துபுல்கப்
பூமாது திருமார்பிற்
பொலிவெய்தி வீற்றிருப்பத்
திருமடந்தையெண் திசைவிளங்கத்
[4]திருப்புயமெனும் பொருப்பிரண்டினும் 25
[5]போர்மடந்தையும் நிலமடந்தையும்
பிரியாது புணர்ந்திருப்பப்
பெருநாள் முதற்கும்
பிறப்புடன்முன் மூன்றுலகு
ஏத்தவரு நாயகி
திருமடந்தையும் படிதோற்கு

---

1. கொடியவரும். 2. பறமன்னரும். 3. பொன்னார்தந்த. 4. திருப்புய மென்னும். 5. போர்மடந்தை நிலமடந்தையும்

மாதர் மஞ்ஞையும்
பருதிகுலந் தனிவிளங்கப்
பாரிலெழு சந்திரோதயம் 30
திருவாணை உடனாணைத்
திசைநடாத்தும் தியாகவல்லி
கலக வெங்கதிர் மணிமுடி கவித்துப்
புவனநறுந் துணைப்பூங்கொம்பு புவனமுழு துடையாளும்
புகுந்தனைய பெருங்கற்பில்
மலாடகுல மணிவிளக்குத்
திருந்துநித்தில(த) மணிமுறுவல்
தெரிவைமுக்கோக் கிழானடிகளும் 35
ஊழியூழி பிரியாது
வாழிமணம் புணர்ந்திருப்பச்
செம்பொன் வீர
சிம்மா சனத்துப்
புவனமுழு துடையாளொடும்
வீற்றிருந் தருளிய
கோவிராச கேசரி
பன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ 40
தேவர்க்கு யாண்டு உஆவது தனு ஞாயிற்று
அமரபட்சத்து நவமியும் திங்கட்கிழமையும்
பெற்ற அத்தத்தினாள்…………

## 28

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்திஸ்ரீ

[1]பூமன்னு பதுமம் பூத்த ஏழுலகும்
தாமுன்செய் தவத்தால் பருதிவழித் தோன்றி
[2]நெடுமா லிவனென நெடுமுடி சூடி
இருநில மகளை உரிமையிற் புணர்ந்து

---

1. பூமன்னி யாணர் பொழில்ஏ ழுலகும். 2. சுரதரு வெனநெடுஞ் சுடர்முடி சூடி.

திருமகள் பணைமுலைச் செஞ்சாந் [3]தளைந்து - 5
[4]பருவரை மார்பம் பனிவரை நிகர்ப்பச்
செயமகள் செழுந்தண் சந்தனச் சுவட்டால்
புயமிரு கயிலைப் பொருப்பெனத் [5]தோன்ற
[6]நாமகள் தானமும் கோமகள் செவ்வாய்ப்
பவளச் சேயொளி படைத்தனன் யானெனத் 10
தவள [7]நன்நிறந் தனித்துடை [8]யோனெனப்
புகழ்மகள் சிந்தை மகிழும்நன் [9]னாளிலும்
ஒருகுடை நிலவும் பொருபடைத் திகிரி
வெயிலினுங் கருங்கலி இருளினைத் துரப்ப
நீடுபல் லூழி [10]ஏழ்கடல் புறத்திலும் 15
கோடாச் செந்தனிக் கோலினி துலாவ
மீனமும் சிலையும் [11]சிதைந்துவா னுயரப்
பொன்நெடு மேருவில் புலிவீற் றிருப்ப
[12]உம்பரி யானை ஓரெட் டினுக்குந்
தம்ப மென்னத் தனித்தனி திசைதொறும் 20
விசையத் தம்பம் நிற்பப் பசிபகை
[13]ஆதி யானது தீது நீங்கி
மன்னுயிர் தழைப்ப மனுவாறு விளங்க
மாதவர் தவமும் மங்கையர் கற்பும்
ஆதி யந்தணர் ஆகுதிச் [14]சுடரும் 25
மீதெழு கொண்டல் [15]விசும்புதண் புனலும்
மேதினி வளனும் சாதி ஒழுக்கமும்
நீதி யறமும் பிறழாது [16]நிகழப்
பாவும் பழனப் பரப்பும் பணைக்கை
மாவு மல்லது [17]வன்றளைப் படுதல் 30
கனவிலும் கண்டாற் கரிதென [18]வருந்தி
[19]புடையிலும் பல்வேறு [20]புள்ளின மல்லது
[21]சிறையெனப் படுதல் இன்றி நிறைபெருஞ்
செல்வமோ டவனிவாழ் பல்லவர் தெலுங்கர்
மாளவர் கலிங்கர் கோசலர் கன்னடர் 35

---

3. அணிந்து. 4. பருமணி மார்வந் மணிவரை நிகர்ப்ப. 5. தோன்றி 6. திருமகள் தானும்எங் கோமகள். 7. நன்நிரை. 8. யேனெனப். 9. நானெனும். 10. எழினும்; எழுகடல். 11. சிதைத்து வானுயர். 12. உபரி. 13. யாதினிது நீங்கி. 14. புகையும்; கனலும். 15. வீசுதண். 16. நிற்ப. 17. வன்றணைப்படுதலின்றி. 18. வருந்தி. 19. சுனையிலும். 20. புள்ளினு. 21. சினையெனப்.

கடாரர் தென்னவர் கேரளர் சிங்கணர்
கொங்கணர் சேதியர் திரிகத்தர் வங்கர்
அங்கர் வத்தவர் அவந்தியர் மத்திரர்
கங்கர் சோனகர் கைகயர் சீனரென்று
அறைகழல் வேந்தரும் [22]பல்லாணை சூழ 40
முறைமையி [23]லுரிந்த திறைகொணர்ந் திறைஞ்சவும்
[24]அம்பொன் மலர்க்கொடி செம்பியன் கிழானடி
ஒருமருங் குடனமர்ந் திருப்ப [25]அருள்புரி
சிமையப் பொற்கோட் டிமையப் பாவையும்
[26]சிவனருள் பெற்று புவன முழுதுடை 45
யாளிவள் திருமணி மார்வத் தருள்முழு
துடையா ளெனவுட னிருப்பச் செம்போன்
வீரசிம் மாசனத்து புவன முழுதுடை
யாளொடும் வீற்றிருந் தருளிய
கோவிராச கேசரி பன்ம ரான 50
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க
சோழ தேவர்க்கு யாண்டு 7 ஆவது

## 29

மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

[1]பூமேவு வளர்திருப் பொன்மார்பு புணர
நாமேவு கலைமகள் நலம்பெரிது சிறப்ப
விசைய மாமகள் வெல்புயத் திருப்ப
[2]இசையின் செல்வி எண்டிசை [3]வளர்ப
நிருபர்வந் திறைஞ்ச நீணில மடந்தையைத் 5
திருமணம் புணர்ந்து [4]திருவளர் [5]திருமா
மணிமுடி கவித்தென மணிமுடி சூடி

---

22. எல்லா அரசரும். 23. வரிந்த. 24. பேரிளம் பொற்கொடி ; மடக்கொடி ; குலக்கொடி. 25. வாழ்புரி. 26. சிவனும் போல.

1. பூமேய ; பூமேவி. 2. இசையும் செல்வியும். 3. விளங்க ; விளக்க. 4. சீர்வளர் நாவளர். 5. தருமம் அணிமுடி.

மல்லை ஞாலத்துப் [6]பல்லுயிர்க் கெல்லாம்
எல்லையில் இன்பம் [7]இயல்பினில் எய்த
வெண்குடை [8]நிழற்றச் செங்கோல் ஓச்சி 10
வாழிபல் லூழி ஆழி நடப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
[9]புவன முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளிய கோவிராசகேசரி வன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க 15
சோழ தேவர்க்கு யாண்டு
ஏழாவதின் எதிராவது........

# இரண்டாம் குலோத்துங்கன்

## முன்னுரை

கங்கை கொண்ட சோழபுரத்தைத் தலைநகராகக் கொண்டு சோழப்பேரரசின் முடி சூடி அமைதியான முறையில் அரசாண்டவன் விக்கிரம சோழன் மகன் இரண்டாம் குலோத்துங்கன் ஆவான். இவன் இராசகேசரி என்னும் பட்டம் பெற்றவன்.

இவனுடைய மெய்க்கீர்த்திகளாகக் கிடைத்துள்ளவை மூன்று. அவற்றுள் "பூமருவிய புவிஏழும் புவிசூழ்ந்த பொருப்பேழும்" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி ஒன்று,

"பூ மன்னு பதுமம் பூத்த ஏழுலகும்" என்ற தொடக்கத்தினை யுடையது ஒன்று.

"பூமேவு வளர்திருப் பொன்மார்பு புணர" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தி ஒன்று.

## மெய்க்கீர்த்திகள்

1. குலோத்துங்கனது ஆட்சியில் அறுசமயம் முதலான எல்லா அறநெறிகளும் தழைத்தன. பருவமழை தவறாது விளைவு பெருகியது. எல்லா உயிர்களும் பகை இன்றி இனிது வாழ்ந்தன. மன்னர் பலரும் திறை கொணர்ந்து குவித்தனர். திருமகளும், கலைமகளும்,

---

6. பல்லுயிரெல்லாம். 7. இசைவினில். 8. நிழல். 9. அவனி.

போர்மகளும் நிலமகளும் சோழனைப் பிரியாது விளங்கினர். தியாக வல்லி, முக்கோக்கிழானடிகள் ஆகிய தேவியர் வீற்றிருக்கச் சிம்மா சனத்து அரசு வீற்றிருந்தான் குலோத்துங்கன்.

2. திருமால் இவன் என்னுமாறு சோழநாட்டின் மணிமுடி சூடி விளங்கிய குலோத்துங்கன் திருமகள் முதலாய செல்வமகளிரை பெற்று புகழுடன் விளங்கினான். மேருவில் புலிக்கொடி பறக்க, எல்லா அறமும் தழைக்க, மன்னவர் பலரும் திறை செலுத்திப் பணிந்து நிற்கத் தேவியருடன் அரசு வீற்றிருந்தான்.

3. திருமகள், கலைமகள், செயமகள், இசைமகள் ஆகியோர் தன்னிடம் விரும்பி வாழ, நிலமகளைத் தன் உரிமையுடையவளாக மணந்து சோழநாட்டின் முடிசூடி விளங்கினான் குலோத்துங்கன்.

உயிர்கள் இன்பம் அடைய தண்ணளி செய்து, செங்கோல் செலுத்தி இராசகேசரி என்னும் பட்டப்பெயருடன், தேவியர் உடன் வீற்றிருக்கச் சிம்மாசனத்து வீற்றிருந்து அரசு செலுத்தினான்.

### விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

*1–6.* 'பூ மருவிய புவிஏழும்......பழுதின் றிமுழுதுமாக''

இரண்டாம் குலோத்துங்கனது நிலமாகிய ஏழு உலகமும் அந் நிலத்து விளங்கும் ஏழு மலையும் அவனது வெண் கொற்றக் குடை யினால் நீண்ட காலம் தண்ணளி செய்யப்பட்டன.

ஏழுலகு : பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், சனலோகம், தபோலோகம், மகாலோகம், சத்தியலோகம்.

ஏழுமலை : கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏம கூடம், நீலகிரி.

அவனது செங்கோல் என்றும் வளைந்தது இல்லை. சிறந்த கொள்கைகளையுடைய ஆறு வகை சமயங்களும் நாட்டில் பரவி இருந்தன. அவை : சைவம், வைணவம், சாக்தம், சௌரம், கணா பத்தியம், கௌமாரம் என்பன. ஐம்பூதங்களாகிய நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் ஆகியவை தங்கள் தொழிலில் குறையாது விளங்கின. இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வனம் என்று சொல்லப்படும் நான்கு வேதங்களும் ஓதப்பட்டு வந்தன. இயல், இசை, நாடகம் என்னும் மூவகைத் தமிழும் தழைத்து வளர்ந்தன. இம்மை, மறுமை என்னும் இருவகைப் பிறவியும் ஒப்பற்றவனாகிய ஒருவனைத் தலை வனாகக் கொண்டு விளங்கின. தீச்செயல்களுக்கு நாணுதலும்

மகிழ்ச்சிக்குரிய செயல்களும் மிகுந்திருந்தன. பருவமழை தவறிய தில்லை. அதனால் பலவகை விளைவுகளும் பெருகின. இவ்வாறு நாட்டில் எவ்விதக் குறைபாடும் இன்றி, எல்லா வகையிலும் நாடு உயர்வு பெற்றிருந்தது.

7–18. "கடலிடையெழு...புகழ் படைப்பச் செல்லென்ன"

கடலிடையே தோன்றும் சூரியனின் கதிர்கள் உலக இருளைப் போக்குவது போன்று குலோத்துங்கனின் செங்கோலானது கடலால் சூழப்பட்ட இப்பரந்த நிலவுலகத்திலிருந்த கீழ்மக்களாகிய கொடிய இருளை வேரோடு களைந்து எறிந்தது. ஆனால் அவனது செங் கோல் பகை மன்னருக்கு இடியேறு போன்று எல்லாத் திசையிலும் உலாவியது. அவன் நாட்டில் புலியும் கலைமானும் ஒரு துறையில் நீருண்டு உலாவின. ஒன்றையொன்று கண்டு அஞ்சும் பறவைகளும் மிருகங்களும் ஒருங்கு கூடி கானகத்திலிருந்த கொடிய வேடுவர் களின் குடிசை நிழலிலேயே எவ்விதத் துன்பமும் இன்றி வசித்தன.

நாட்டில் வீரம் நிறைந்திருந்தது. ஆயினும் ஒருவரையொருவர் காரணமின்றி துன்புறுத்தினாரில்லை.

பெரும் புலவர்கள், சிறந்த இசைப் பாணர்கள், நாடகக் கலை ஞர்கள், நரம்புக் கருவி இசைக்கும் குயிலுவர்கள் போன்ற இரவலர் பலருடைய வறுமையைப் போக்கிய பெரும் புரவலனாய் விளங்கிப் புகழ் பெற்றான் குலோத்துங்கன்.

18-26. "தென்னவரும்.....பிரியாது புணர்ந்திருப்ப"

தென்னாட்டு மன்னராகிய பாண்டியர், வில்லையும் யானை யையும் உடைய சேரர், பெரும் யானைப் படையுடைய கலிங்கர் வராகக் கொடியையுடைய இராட்டிர கூடர், வேழிக்கொடியினை யுடைய வீரம் மிக்க மன்னர், வீணைக் கொடியையுடைய சிங்களர் பெருங்கடற்படையையுடைய தலைமை வாய்ந்த பிற மன்னர் போன்ற பலரும் தங்கள் திறைப்பொருள்களால் குலோத்துங்கனது வீரக்கழலணிந்த திருவடிகளைப் பொன்மயமாக நிரப்பினர். தனது சிறந்த படையின் துணைகொண்டு தனது புலிக்கொடி தருமக்கொடி யாகத் தழைக்குமாறு செய்தான். அவனிடம் கலைமகள் சிறந்து விளங்கினாள். எல்லா வகையான செல்வங்களும் விரும்பியடைந் தன. திருமகளாகிய செல்வ மடந்தை அவனது மார்பகத்தில் அழ கோடு வீற்றிருந்ததோடு அவனது நாடு முழுமையும் விளங்கச் செய் தாள். குன்றினை நிகர்த்த அவனுடைய இரண்டு புயங்களிலும் வெற்றிமகளும் நிலமகளும் என்றும் பிரியாது சேர்ந்திருந்தனர்.

27–40. "பெருநாள் முதற்கும்.....குலோத்துங்க சோழ தேவர்க்கு"

பிறந்தநாள் முதலாக இம்மூவுலகும் புகழுமாறு தோன்றியவளும் மாதர் குல மயில் போன்றவளும் சூரிய குலமாகிய சோழர் குலம் மேன்மை பெறுமாறு வந்து அமைந்தவளும் உலகில் வந்து பிறந்த பிறைச்சந்திரனைப் போன்றவளும் சோழனது ஆணையோடு தனது ஆணையையும் இணைத்து எல்லாத் திசையும் செல்லுமாறு நடத்துபவளுமாகிய புவனமுழுதுடையாள் தியாகவல்லி சூரியகுலத்தின் பட்டத்தரசியாக முடிசூடி குலோத்துங்கனுடன் ஒருபுறம் வீற்றிருந்தாள்.

எல்லா வகையிலும் அவளை நிகர்த்த பெருங் கற்புடையவளும் சேதி நாட்டை ஆண்ட செம்பியன் மகளாக, மலாடர் குலத்தில் அரசிளங்குமரியாகத் தோன்றியவளும், சிறந்த முத்தினை நிகர்த்த புன்னகையினை உடையவளும் ஆகிய முக்கோக் கிழானடிகள் குலோத்துங்கனை மணம் புரிந்து என்றும் பிரியாது வீற்றிருந்தாள். இவ்வாறு வீரசிம்மாசனத்துப் புவனமுழுதுடையாளொடும் வீற்றிருந்தான் இராசகேசரி குலோத்துங்கன்.

## மெய்க்கீர்த்தி-2

### 1-8. "பூமன்னு பதுமம்.....பொருப்பெனத் தோன்ற"

திருமகள் விளங்கும் தாமரை மலர்ந்து விளங்கும் இப்பரந்த உலகத்தே குலோத்துங்கன் தான் முன் செய்த தவத்தால் சோழர் குலமாகிய சூரிய குலத்தில் வந்து தோன்றினான். தனக்கே உரிய அரசகுலவழி உரிமையினால் சோழ நாடாகிய நிலமகளை மணந்து, இவன் திருமாலேயாவான் என்று உலகம் கூறுமாறு அந்நாட்டின் மணிமுடியினையும் ஏற்றான்.

குன்றனைய தனது மார்பகத்தில் திருமகள் மார்பிலணிந்த சந்தனத்தைத் தாங்கியதால் அம்மார்பு இமயமலையை நிகர்த்துத் தண்ணென விளங்கியது. அவனுடைய இரண்டு புயங்களும் வெற்றி மகளை அணைந்து அவள் அணிந்திருந்த சந்தனச் சுவட்டினை ஏற்றதால் அவை கயிலை மலையை நிகர்த்து விளங்கின.

### 9-16. "நாமகள் தானமும்........கோல் இனிது உலாவ"

குலோத்துங்கனிடம் புகழாகிய மடந்தை மகிழ்ந்து வீற்றிருந்தாள். அவளிடம் கலைமகளின் சிறப்பும் அவளது இருப்பிடமாகிய வெண்டாமரையின் நிறமாகிய முல்லை போன்ற வெண்ணிறமும் நிறைந்திருந்தது. அதேபோல கலைமகளது பவளத்தையொத்த வாயினது செம்மை நிறமும் பொருந்தியிருந்தது. இவையனைத்தும் நிறைந்த புகழ் நிலைத்திருந்தது. அப்பெரும் புகழோடு அவனு

டைய வெண்கொற்றக் குடை நிழலில் அமைந்த அவனது ஆணைச் சக்கரம் எரிக்கும் வெயிலினால் கொடிய கலியாகிய இருளானது அகன்றது. இவ்வாறான வளையான செங்கோலோடு நடந்த அவனது ஆட்சியின் சிறப்பு கடல் கடந்தும் பரவியது.

17–28. "மீனமும் சிலையும்......பிறழாது நிகழ"

மீனக் கொடியுடைய பாண்டியரும் வில் கொடியுடைய சேரரும் வானுலகடைய, பொன் போன்றும் ஒளியுடைய மேரு மலையில் புலிக்கொடி பறந்து விளங்கியது. எட்டுத் திசைகளிலும் நிற்கும் திக்கு யானைகள் எட்டினையும் நிலையாகத் தாங்கும் தூண்களைப் போல வெற்றித்தூண்கள் எட்டுத் திக்கிலும் நிறுத்தப்பட்டன. மக்களிடையே பசி, பகை முதலியன சிறிதும் இல்லாமல் மக்கள் மகிழ்ச்சியோடு வாழுமாறு நாட்டில் மனுநெறி நடைபெற்றது. தவசிகள் சிறந்த முறையில் தவநெறி பூண்டனர். மங்கையர் கற்பு நெறி வழுவாது வாழ்ந்தனர். அந்தணர் யாகத்தீயில் பொழியும் அவியுணவின் மிகுதியால் அவ் ஆகுதித் தீ சுடர் விட்டு எரிந்தது. மேகக் கூட்டம் நிறைந்த விசும்பு மிகுந்த மழையினைப் பொழிந்தது. இவற்றால் நாடு வளமுடையதாகி சாதிகளுக்குரிய ஒழுக்கங்கள் தவறாமலும் நீதிநெறிகள் பிறழாமலும் நாட்டில் அமைதி நிலவியது.

29-50. "பாவும் பழனப் பரப்பும்......குலோத்துங்க சோழ தேவர்க்கு"

பாடல்கள் தளைகளால் கட்டப்பட்டன. மருத நில வயல்கள் தளைகளாகப் பிரித்துப் பயிரிடப்பட்டன. பருத்த துதிக்கையினை யுடைய யானைகள் கட்டுத் தளைகளில் பிணிக்கப்பட்டன. இவற்றைத் தவிர நாட்டில் கொடிய தளைப்படுதல் என்பது காண இயலாதாயிற்று. பறவைகளைத் தவிர சிறைப்பட்டவர் என்பவர் நாட்டில் எவரும் இலராயினர். இவ்வாறு பலவகைச் செல்வங்களும் நிறைந்த குலோத்துங்கனது ஆட்சியில் பல்லவர் முதலாகச் சீனர் ஈறாக உள்ள அனைத்து மன்னர்களும் அவனது ஆணைக்குட் பட்டுத் தங்கள் தங்கள் முறைப்படி திறைப்பொருள்களைக் கொண்டு வந்து வணங்கி நின்றனர்.

இராசகேசரி என்னும் பட்டம் பெற்ற குலோத்துங்க சோழன் மலர்க்கொடி போல்பவளாகிய சேதி நாட்டுச் செம்பியன் கிழானடி யாகிய முக்கோக் கிழானடிகள் உடன் வீற்றிருக்கவும் இமையப் பாவையாகிய உமையம்மை சிவனிடத்து வீற்றிருப்பது போல புவனமுழுதுடையாளாகிய தியாகவல்லி சோழனது அருள் பெற்று அவனது மார்பகத்தில் வீற்றிருப்பது போல உடனிருக்கச் செம் பொன் வீரசிம்மாசனத்து வீற்றிருந்து நாட்டினைப் பாதுகாத்தான்.

## மெய்க்கீர்த்தி-3

### 1-7. "பூமேவு வளர் திரு.... .மணிமுடி சூடி"

திருமகள் மார்பகத்திலும், கலைமகள் நாவகத்திலும், வெற்றி மகள் இரு புயங்களிலும் வீற்றிருக்க விளங்கினான் குலோத்துங்கன். புகழ் மடந்தை அவனது புகழை எட்டுத் திசைகளிலும் பரப்பினாள். பல மன்னரையும் பணியச் செய்து நில மடந்தையைத் திருமணம் புரிந்து நாட்டின் முடியையும் சூடி விளங்கினான்.

### 8–15. "மல்லை ஞாலத்து......குலோத்துங்க சோழ தேவர்க்கு"

தன் ஆட்சிக்குட்பட்ட நிலவுலகத்திலுள்ள எல்லா உயிர்களும் அளவற்ற மகிழ்ச்சியடையுமாறு தனது வெண் கொற்றக் குடையினால் அருள் புரிந்து செங்கோலோச்சினான். இவ்வாறு பல காலம் தன்னுடைய ஆணைச் சக்கரம் நாட்டில் நடைபெறுமாறு இராசகேசரி குலோத்துங்க சோழன் புவனமுழுதுடையாளொடு செம்பொன் வீரசிம்மாசனத்து வீற்றிருந்தருளினான்.

# 30

# இரண்டாம் இராசராசன்

(கி.பி. 1146–1163)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமருவிய திருமாதும் புவிமாதும் செயமாதும்
நாமருவிய கலைமாதும் புகழ்மாதும் நயந்துபுல்க
அருமறை விதிநெறி அனைத்துந் தழைப்ப
வருமுறை யுரிமை மணிமுடி சூடித்
திங்கள் வெண்குடைத் திசைக்களிறு எட்டுந் 5
தங்கு தனிக்கூடந் தானென விளங்கக்
கருங்கலி [1]படிமிசைச் செங்கோல் துறப்பப்
[2]பொருவலி யாழி [3]புவிவளர்த் துடன்வர
வில்லவர் இரட்டர் மீனவர் சிங்களர்
பல்லவர் தெலிங்கர் பார்த்திவர் பணிய 10
எண்ணருங் கற்பில் மண்ணகம் புணர்ந்து
செம்பொன் வீர சிம்மா சனத்து
உலகுடை முக்கோக் கிழானடிக ளோடும்
வீற்றிருந் தருளிய கோப்பர கேசரி
வன்மரான திரிபுவனச் சக்கர வர்த்திகள் 15
ஸ்ரீ இராச ராச தேவர்க்கு யாண்டு பதினைந்தாவது
தை மாசத்துப் பூர்வபட்சத்து புனர்பூசமும்
சதுர்த்தசியும் வியாழக் கிழமையுமான நாள்......

---

1. பட்டிகை. 2. பொருகதிராழி. 3. பலி வளர்த்துடன் வர.

மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ
பூமருவிய பொருப்பேழும் [1]புனைநித்தி லத்தாம
நெடுங்குடை பொழிந்த தவளாவெண்ணிலாக் [2]குளிர்
பொதியச்
[3]சுடர்சக்கர வெற்பிற்றன் நடைச்சக்கரம் வெயிலெறிப்பச்
சினப்புலியுஞ் செங்கோலும் அனைத்துயிர்க்குங் காவல்
பூணப்
[4]பணியணைமிசைப் பரஞ்சோதி பாற்கடல்நின்
றெழுந்தருளி 5
மணிநெடுமுடி கவித்தானென மண்மடந்தையைக் கைப்
பிடித்து
மலர்மடந்தை மணியார வரைமார்பிற் குடிவாழ
புலமடந்தை கொழுநனாகிப் போர்மடந்தையை மணம்
புணர்ந்து
பருதிமுதற் குலம்விளங்கச் சுருதிகள்......னவெ ரருள்
வாய்ப்ப
[5]விழுந்தஅரி சமயத்தை அள......எடுத் தாதியுகம் 10
கொழுந்துவிட்டுத் தழைத்தோங்கக் கோமாதறங் குளிர்
தூங்க
மாரிவாய்த்து வளஞ்சுரக்கத் தாரணியோர் பிணிநீங்க
நல்லோர்தங் கற்புயர நான்மறையோர் துறைவளர
எல்லோருந் தனித்தனியே வாழ்ந்தனம்யாம் என
மகிழ்ந்து
ஒருவருடன் ஒருவர்க்கும் ஒன்றினுடன் ஒன்றுக்கும் 15
வருபகைய கத்தின்றி விழைந்துகாத லுடன்சேர
இந்தி ரன்முதற் திசாபாலர் எண்மரும்ஒரு வடிவாகி
வந்தபடி யெனநின்று மனுவாணை தனிநடாத்திய
[6]படியானையே பிணிப்புண்பன
வடிமணிச்சிலம்பே யரற்றுவன
[7]செல்லோடையே கலக்குண்பன

---

1. புனைநித்தலத்தாம. 2. குளிரபொதிய. 3. சுடற்சக்கா. 4. ப..ய..ணமிசை. 5. விழுந்த அறிசமய. 6. பாடியானையெ. 7. செலொடையே கலக்கு...ண்பன

[8]வருபுனலே சிறைப்படுவன 20
[9]மாவே வடுப்படுவன
[10]மாமலரே கடியவாயின
[11]காவுகளே கொடியவாயின
கள்ளுண்பன [12]வண்டுகளே
பொய்யுடையன [13]வரைவேயே
போர்மலைவன எழுகழனியே
[14]மைய்யுடையன நெடுவரையே
மருளுடையன [15]இளமான்களே
கயற்குலமே பிறழ்ந்தொழுகும்
[16]கைத்தாயரே கடிந்தொறுப்பார் 25
இயற்புலவரே பொருள்வைப்பார்
இசைப் பாணரே கூடஞ்செய்வார்
என்று கூறி இவன்காக்கும் திருநாட்டி னியல்இதுவென
நின்றுகாவல் நெறிபூண்டு நெறியல்லது நினையாது
தந்தையில்லோர் தந்தையாகியுந் தாயரில்லோர்
தாயராகியும்
மைந்தரில்லொரு மைந்தராகியும் மன்னுயிர்கட்
குயிராகியும் 30
விழிபெற்ற பயனென்னவும் மெய்பெற்ற அருளென்னவும்
[17]மொழிபெற்ற பொருளென்னவும் முகம்பெற்ற
பனுவலென்னவும்
எத்துறைக்கும் இறைவனென்னவும் யாஞ்செய்......

# இரண்டாம் இராசராசன்

## முன்னுரை

சோழப் பேரரசினை அமைதியோடு அரசாண்ட இரண்டாம் குலோத்துங்கனின் மகனாகிய இரண்டாம் இராசராசன், சேதி நாட்டை யாண்ட மலாடர் குல மன்னன் செம்பியனின் மகள் முக்கோக்கிழானடிகளைத் தன் தாயாகப் பெற்றவன் ஆவான். பரகேசரி என்னும் பட்டம் பெற்ற இவன் கங்கை கொண்ட சோழ புரத்தையே தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான்.

---

8. வருபுனலெய், 9. மாவேய். 10. மாமலரேய். 11. காவுகளேய். 12. வண்டுகளேய். 13. வரைவேயெய். 14. மைய்யுடையன. 15. இள மான்களேய். 16. கைத்தாயரேய். 17. மொழி (பெற்ற).

## மெய்க்கீர்த்திகள்

இவனுடைய மெய்க்கீர்த்திகளாகக் கிடைத்துள்ளவை இரண்டு. அவற்றுள் ஒன்று "பூமருவிய திருமாதும் புவிமாதும் செயமாதும்" என்று தொடங்குகிறது. மற்றொன்று, "பூமருவிய பொருப்பேழும் புனை நித்தி லத்தாம" என்ற தொடக்க அடியினையுடையது.

1. செல்வம் பலவும் விளங்க, சோழ நாட்டின் மணிமுடியினை உரிமையாற் சூடிய இராசராசன் தன் முன்னோரிடம் தோற்றுத் திறை செலுத்தி வந்த மன்னர் அனைவரும் திறை செலுத்திப் பணிந்து நிற்குமாறு நாட்டில் அமைதி நிலவப் பரகேசரிப் பட்டத்துடன் அரசு வீற்றிருந்தான்.

2, பாற்கடலிலிருந்து எழுந்தருளிய திருமால் சோழநாட்டின் முடிபுனைந்தருளிய தன்மை போல இராசராசன் சோழநாட்டின் அரசுரிமையை ஏற்றான். நாடு வளம் சுரக்க, எல்லா அறமும் தழைக்க அரசு செலுத்திய அவனுடைய ஆட்சியில் யானைகளே பிணிக்கப்பட்டன ; ஓடைகளே கலக்கம் பெற்றன ; ஆற்று நீரே சிறை செய்யப்பட்டன......இவ்வாறான இயற்கைச் செயல்களைத் தவிர துன்பம் அடைந்த உயிர்கள் எதுவுமே நாட்டில் இல்லையாம் படி அனைத்துயிர்க்கும் தந்தையும் தாயுமாகி நலம் புரியும் ஆட்சியினைச் செலுத்தி வந்தான்.

### விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

1-16. "பூமருவிய திருமாதும்......இராசராச தேவர்க்கு"

திருமகள், நிலமகள், செயமகள், கலைமகள், புகழ்மகள் ஆகிய ஐவரும் இரண்டாம் இராசராசனிடம் விரும்பி அடைந்தனர். அவன் அரிய மறைகள் விதித்த சோழ அரசின் நெறிமுறைகள் ஓங்குமாறு முறைப்படி தந்தைக்குப் பின் சோழப் பேரரசின் மன்னனாக முடிசூடி, திங்களை யொத்த அவனது வெண் கொற்றக் குடையானது அவனது ஆட்சியில் திசைக் களிறுகள் எட்டும் தங்கும் தனிக் கூடமாக விளங்கியது. அதனால் கொடுமையை விளைவிக்கும் கலி என்பவன் தனது செங்கோலை இழந்தான். சோழனின் சிறப்பு வாய்ந்த ஆணைச் சக்கரம் நாட்டைச் செழிக்கச் செய்து வந்தது சேரர், இராட்டிரகூடர், பாண்டியர், சிங்களர், பல்லவர், தெலிங்கர் போன்ற பல மன்னரும் பணிந்து நிற்ப இம்மண்ணுலகைக் காத்து வந்த பரகேசரி இராசராசன் செம்பொன் வீரசிம்மாசனத்தில் உலகுடை முக்கோக்கிழானடிகளோடு வீற்றிருந்தான்.

## மெய்க்கீர்த்தி-2

### 1–11. "பூமருவிய பொருப்பேழும் . . . . குளிர்தூங்க"

முத்து மாலைகளால் அழகு செய்யப்பட்டு விளங்கும் இராச ராசனின் வெண்கொற்றக் குடையானது இப்பூவுலகில் நிலைபெற் றுள்ள ஏழு மலைகளிலும் குளிர்ந்த நிலவு போன்று ஒளி வீசியது. சூரியன் தோன்றும் மலையாகிய பொதிய மலையில் அவனது ஆணைச்சக்கரம் ஒளி வீசியது. சோழனது செங்கோலும் போர் வலிமை பெற்ற புலிக்கொடியும் நாட்டு உயிர்களைக் காத்து நின்றன. பாம்பணையில் பள்ளி கொள்ளும் திருமால் பாற்கடலினின்றும் எழுந் தருளி நாட்டின் மணிமுடியினைச் சூடி விளங்கினாற் போன்று இராசராசன் சோழ நாடாகிய நிலமகளைத் தனக்கு உரியவளாக மணந்து கொண்டான். செந்தாமரையில் விளங்கும் திருமகள், மணி களால் ஆன மாலையணிந்த மலை போன்ற அவனது மார்பில் தங்கி வாழ்ந்து வந்தாள். நிலமடந்தையின் கணவனாகி போர் மடந் தையை மனைவியாக்கிக் கொண்ட இராசராசன் தான் பிறந்த சூரியகுலம் மேம்பாடடையுமாறு மறைநெறி வழுவாது அருள் பெருக வும் சமயங்கள் யாவும் வளர்க்கப்பட்டு ஆதியுகத்தில் நடைபெற்ற நடைமுறை மக்களிடையே பரவி வளரவும் அரசாட்சியில் குளிர்ச்சி நிலவவும் செய்து அரசாண்டான்.

### 12-16. "மாரி வாய்த்து . . . . . காதலனுடன் சேர"

இராசராசனின் நெறி வழுவா ஆட்சியினால் நாட்டில் முறை யான மழை வாய்க்கப் பெற்று வளமை ஓங்கியது. மக்கள் பிணி யின்றி வாழ்ந்தனர். நல்லோர் தம் நற்செயல்களால் கற்பு நெறி உயரச் செய்தனர். நான் மறை ஓதும் செயல் மேம்பட்டது. யாம் வாழ்ந்தோம் என ஒவ்வொருவரும் மகிழ்ச்சியடைந்தனர். உயர் திணையில் ஒருவரோடு ஒருவரும், அஃறிணையில் ஒன்றோடு ஒன்றும் தங்களுக்குள் பகை சிறிதளவுமில்லாமல் அன்போடு, விரும்பி, சேர்ந்து வாழ்ந்தனர்.

### 17-26. "இந்திரன் முதல் . . . . கூடஞ்செய்வார்"

இந்திரன், அக்கினி, இமயன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகிய எட்டுத் திசைப் பாலரும் ஒரு வடி வெடுத்து வந்தனர் என்று சொல்லுமாறு நின்று மனுநெறி முறையில் தன் ஆணையைச் செலுத்தினான். எனவே, இராசராசனுடைய ஆட்சியில் பிணிப்பு, அரற்றல், கலக்கம், சிறை, வடு, கொடுமை, கள், பொய், போர், மை, மருட்சி, பிறழ்ச்சி, கடிதல் போன்ற தீமைகள் ஒன்றும் இல்லாது ஒழிந்தன. எனவே. அவன் நாட்டில் பிணிக்கப் பட்டவை யானைகள் மட்டுமே; கட்டுண்டு கொடுமைப் படுத்தப் பட்டவர் யாருமேஇல்லை. அழகிய மணி பொருந்திய

சிலம்புகள் மட்டுமே ஒலி எழுப்பின; துன்பத்தால் அரற்றொலி உடையவர் எவரும் இல்லை. நீரோடும் ஓடைகளே கலக்கபட்டன; உள்ளம் கலங்கினவர் ஒருவரும் காணப்படவில்லை. ஓடி வரும் தண்ணீரே பெரிய நீர்நிலைகளில் சிறைப்படுத்தப்பட்டன; வேறு யாருக்கும் சிறை என்பதே கிடையாது. மாம் பிஞ்சுகளே வடு என்னும் பெயரைப் பெற்றன; ஆனால் வடுவுற்றார் என்று கூறப் பட்டோர் யாரும் இல்லை. சோலைகளில் காணப்படும் அழகிய வண்டுகள் மொய்க்கப்பட்ட மலர்களே மணம் மிக்கு விளங்கின; கடிய தன்மை வாய்ந்தவர் எவருமே நாட்டில் இல்லை. அச் சோலைகளே படரும் கொடிகளையுடையனவாக இருந்தன; கொடியவை என்று கூறத்தக்க உயிர்கள் எதுவுமே இல்லை. வண்டுகளே மலரில் மொய்த்துத் தேனாகிய கள்ளினை உண்டு திரிந்தன; வேறு கள் உண்டு மயங்கினார் யாரும் இலர். மலை களில் உள்ள மூங்கில்களே கணுக்கள் எனப்படும் பொய்யினைப் பெற்றிருந்தன; வேறு யாரும் பொய் கூறினார் இல்லை. நன்கு விளைந்த கழனிகளே வைக்கோல் போர்களைக்குவித்தன; பகை யால் நாட்டில் போர் என்பதே இல்லாதாயிற்று. உயர்ந்த மலை களே கரிய நிறத்தைப் பெற்றிருந்தன. குற்றமுடையோர் எவரும் இலர். மான்கள் மட்டுமே மருளுந் தன்மையுடையனவாய் இருந் தன; எதனாலும் மருளும் நிலை யாருக்கும் ஏற்படவில்லை. மீன் கள் மட்டுமே பிறழ்ந்து பிறழ்ந்து வாழும் இயல்பினைப் பெற்றி ருந்தன; வாழ்க்கையில் பிறழ்ந்து தவறிழைத்தவரைக் காண முடியாது. வளர்ப்புத் தாய்மார்கள் மட்டுமே தங்கள் குழந்தை களைக் கடிந்து தண்டனையளித்து வந்தனர், வேறு தண்டனை பெற்றவர் யாரும் இல்லை. சிறந்த புலவர்களே தங்கள் பாடல் களில் பொருளைச் செறித்து வைத்தனர்; வேறு யாருக்கும் பொருளைச் சேர்த்து வைக்கும் அவசியம் ஏற்படவில்லை. இசைப் புலமை வாய்ந்து பாடிப் பரிசில் பெறும் பாணர்களே, இசையினைக் கருவி இசையுடன் கூட்ட முயற்சி செய்வர். முயற்சியால் கூட்டி வைக்கும் நிலையில் பிரிவுடையார் யாரும் இல்லை.

### 27-33. "என்று கூறி......இறைவன் என்னவும்"

இராசராசனுடைய நாட்டின் இயல்பு இதுவே என்று யாவரும் புகழ்ந்து கூறுமாறு நெறி நின்று நாட்டைக் காவல் செய்தான். நெறியுற்ற செயல்களை உள்ளத்தாலும் நினைத்தானில்லை. தாய் தந்தையர் அற்றவர்களுக்குத் தானே தாயும் தந்தையுமாக இருந்து உதவி செய்தான். மக்களினடயே தானும் ஒருவனாக இருந்தும் உலக உயிர்களுக்கெல்லாம் சிறந்த உயிர்த்துணையாக விளங்கியும் உயிர்களைப் பாதுகாத்தான். விழி பெற்றதற்குப் பயன் இதுவே என்னுமாறு சிறந்தனவற்றையே காணும் பேற்றினை நாட்டில் அமைத்தான். உடல் பெற்றதன் பயன் முழுமையாயிற்று என்று

எண்ணுமாறு அருள்புரிந்து காத்தான். மொழி என்றால் சிறந்த பொருளுடையதே என்னுமாறு போல சிறந்த பொருள் உடைய ஆட்சியைச் செலுத்தும் மன்னனாக விளங்கினான்.

இவ்வாறு எல்லாச் செயல்களையும் சிறப்புற இயக்குவிக்கும் இறைவனாக விளங்கிய இராசராசன் மக்கள் செய்த தவத்தால் அவர்களுக்கு மன்னனாக வாய்த்தான் என்பதாகச் சிறப்பிக்கப் படுகிறான்.






# இரண்டாம் இராசாதிராசன்

(கி. பி. 1163-1178)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

கடல்சூழ்ந்த [1]பார்மாதரும் பூமாதரும் கலைமாதரும்
அடல்சூழ்ந்த [2]போர்மாதரும் சீர்மாதரும் அமர்ந்துவாழ
நாற்கடல்சூழ் புவிஏழும் [3]பாற்கடல் [4]புகழ்பரப்ப
ஆதியுகம் [5]ஆமென்னச் [6]சோதிமுடி புனைந்தருளி
[7]அறுசமயமும் ஐம்பூதமும் [8]நெறிநின்று [9]புவிகாக்கத் 5
தென்னவரும் சேரலரும் தெலிங்கர்களும் கன்னடரும்
சிங்களரும் கொங்கணரும் கலிங்கர்களும் விராடர்களும்
பல்லவர்கள் முதலாய பார்மன்னர் வந்திறைஞ்ச
கொற்றவர் வந்து குடிமை செய்ய
ஒற்றை வெண்குடை உலகுதனி கவிப்ப .10
[10]வாழி பல்லூழி ஆழி நடாத்திச்
செம்பொன் வீர சிம்மா சனத்து
[11]உலகுடை முக்கோக் கிழானடிக ளோடும்
வீற்றிருந் தருளிய கோவிராசகேசரி பன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள்
மதுரையும் ஈழமும் கொண்டருளின 15
ஸ்ரீ ராசாதி ராச தேவர்க்கு யாண்டு 4 ஆவது
நாள் 323 இனால்.........

---

1. பார் மன்னரும்; சீர்மாதரும். 2. ஜெயமாதரும். 3. பாற்கடல் சூழ் 4. புகழ் பரவ. 5. வந்ததெனச். 6. அழகுமுடி. 7. அறுவகையும். 8. அருளில் வழிஅறம் தழைப்ப. 9. பாலிப்ப. 10. ஊழி ஊழி வரும் செங்கோல் எழுபாரும் இனிதளிப்ப. 11. புவன முழுதுடையாளொடும்.

## 33

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமருவிய [1]திசைமுகத்தோன் படைத்தபெரும் புவி
விளங்க
தேமருவிய பசுந்துளவித் [2]திருநெடுமால் இவனென்ன
நீராழி புடைத்து தயகுலத் தவதரித்து
[3]கருங்கலியின் இருளொதுங்கக் கதிர்வெண்குடை நிலா
வெறிப்ப
வருங்கதிரின் வெயில்விரிக்கும் மணிமகுடம் புனைந்
தருளி 5
மண்களிப்பவும் மனங்களிப்பவும் மலர்மடந்தையர் முதல்
மங்கையர்
கண்களிப்பவும் தண்ணளிப்பெருங்
கருணையால்முதற் காவல்பூண்டு
செம்பொன் வீர சிம்மா சனத்து
புவன முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளிய கோவிராச கேசரி வன்மரான 10
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராசாதிராச
தேவர்க்கு யாண்டு 5ஆவது......

## 34

### மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

கடல்சூழ்ந்த பாரேழும் திசையெட்டும் காத்துநின்று
தடமாமதி எனவிளங்கித் தரளவெண்குடை நிலாவெறிப்ப
[1]ஆழிவரை வரப்பாக அடற்கலியைப் பிலத்தொதுக்கி
ஊழிதொறும் புகழோங்க ஓராழி வெயில்பரப்பக்
கயல்சிலையில் சால்விளைய களிறாரெயில் கரங்
குவிப்பப் 5

---

1. திசைமுகந்தொந். 2. திருநெடுமால்லிவநெந்ந. 3. கருங்கலிமின் திருளொதுங்க.

1. ஆழ்வரை ; ஆழுவரை.

புயலாழியிற் போற்றிசெய்யப் புலிமேருவில் வீற்றிருப்பத்
திருவாணையுஞ் செங்கோலும் திசையெட்டுங் காவல்
கொள்ளப்
பெருவாழ்வுபெற் றுயிரனைத்தும் பிழை...த்த...க்கவரச்
சமையமாறுந் தலையெடுப்பத் தருமமும்அரு மறையு
மோங்க
அமைவில்லா மனுவொழுக்கம் ஆதியாம்படி நிலை
நிற்க 10
ஓர்ப்பினுந்தம் முறுகனவினும் ஒன்றோடொன்று பகை
யின்றிப்
போர்ப்புலியும் புல்வாயும் புக்கொருதுறை நீருண்ணப்
பொன்னிநதியும் பொய்யாது புயலும்புனல் கரவாது
[2]மன்னியநதி வளம்பெருக்க விளைவயலின் வளம்சுரக்கப்
போகபூமி யிதுவென்னப் போகமெல்லாம் வந்தீண்டி 15
ஏகவாணை அரசுரிமை [3]எழுபொழில்களும் பெற்ற
தெனப்
[4]பாற்கடலிற் கார்க்கடல் படிவாழ முடிசூடி
[5]ஆர்த்தவம ராபிஷேகம் செய்திலரசர் திளைத்தாட
எவ்வுலகமும் இருள்நீங்க வந்தகோமான் இவனென்று
கவ்வைதீரக் கலிகாலத்து ஆதிகாலங் காட்டின
னென 20
இவன்காக்கும் புவியனைத்தும் யாவையும்நினைந்
தீன்றருளி
அவன்காக்கும் எனஅகில லோகங்களும் [6]அடியடையக்
குலைபடுவன தெங்குகளே கோட்படுவன இளங்கமுகே
அலைபடுவன நீர்நிலையே அதிர்படுவன இடியேறே
தளம்படுவன [7]ஓர்வரம்பே தடைபடுவன கோபுரமே 25
உளம்படுவன சூன்மகளிரே ஒறுப்புண்பன மதகளிறே
தடுப்புண்பன கொட்டகமே......
[8]கள்ளுண்பன பூங்கொடியே கறைபடுவது நிறைமதியே
பட்டுண்பன அணியல்குலே பரிந்தாற்றுவ பரியாகமே
குறைபடுவ குழற்சுருளே குழைவில்லன மணிக்
கொங்கையே 30

---

2. மன்னியநெதி 3. எழுபொழில்களும். 4. பார்க்கடலில். 5. ஆர்த்தவமராபி ஷேகச்செ...., திலரசர். 6. அடியடைக். 7. போர்வரம்பே. 8. தள்ளுண்பன.

மறைபடுவன சூழ்காஞ்சியே மால்கொள்வன வணங்
கிடையே
[9]என்றுபாடிப் பார்வேந்தர் இளங்களிற்றின் மேல்போகச்
சென்றிறைஞ்சிப் பார்வேந்தர் திருவாசற் புறம்நிற்பச்
சேரலருந் தென்னவரும் சிங்களரும் கொங்கணரும்
பேரரசு பெறவேண்டிப் பிரியாது சேவிப்பத் 35
தம்மரசு தாம்பெற்றுத் [10]தம்முடனே முடிசூடி
அம்மருங்குந் தேவியர்கள் அணிமங்கலம் பெற்றருள
வாளரசர் தலைகாக்க [11]ஆதவகுல மரபில்வந்த
சோழகுல மணிவிளக்குச் சோழகுல மாணிக்கம்
மடநாண்முதற் கணநான்கின் வடிவுகொண்டு வளவ
சேகரன் 40
உடனாணையுந் திருவாணையும் உடன்செல்ல
முடிகவித்தாள்
மண்ணரசர் வந்திறைஞ்ச மகுடம்புனை வளவனுடன்
பெண்ணரசும் பெருந்தாயமும் பெற்றருளும் பெண்
பெருமாள்
உறையூரும் [12]பேருரகையும் உதகையுமது ராபுரியும்
முறைமுறை யாண்டருளி முளரிநகர் துறந்தவன்னம் 45
பொன்னாசனஞ் சிங்கவணை [13]பொலங்கற்பகப்
பூஞ்சோலை
முன்னேவல் நித்தல்முறை முறையேபெறு முலைப்
பெருமாள்
அளகநுதற் கயல்நயனத் தம்பொற்குழைக் கொம்பென்ன
உளமகிழவந் தருளியஉல குடையமுக்கோக்
கிழானடியுடன்
வாழிவாழி மணம்புணர்ந்து ஊழிஊழி பலவோங்கிச் 50
செம்பொன் வீர சிம்மா சனத்து
உலகுடை முக்கோக் கிழானடிக ளோடும்
வீற்றிருந் தருளிய கோவிராச கேசரி
வன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீராசாதிராச
தேவர்க்கு யாண்டு 10 ஆவது மீன ஞாயிற்றுப் பூர்வ
பட்சத்துத்
திரயோதசியும் செவ்வாய்க்கிழமையும் பெற்ற மகத்து நாள்.

9. என்றுபாடி பார்வேந்தர். 10 தம்முடனே ...சூடிய். 11. யாதவகுல.
12. பேருரகையு. 13. போலங் கற்பகப்.

# இரண்டாம் இராசாதிராசன்

## முன்னுரை

இரண்டாம் இராசராசனின் இறுதிக் காலத்து அவன் மக்கள் இருவரும் ஓரிரு ஆண்டு நிரம்பியவர்களாகவே இருந்தனர். ஆதலால் தன் பாட்டனாகிய விக்கிர சோழனின் மகள் வயிற்றுப் பேரனும் நெறியுடைப் பெருமாள் என்பானின் மகனுமாகிய எதிரிலிப் பெருமாள் என்பவனைத் தன் நாட்டின் இளவரசனாக்கி முடி சூட்டினான். அவனே இராசராசனுக்குப் பிறகு இரண்டாம் இராசாதிராசன் என்ற சிறப்புப் பெயரோடு (அபிடேகப் பெயர்) இராசகேசரி என்னும் பட்டம் பெற்று சோழப் பேரரசின் மன்ன னானான்.

இவனுக்குரிய மெய்க்கீர்த்திகளாகக் கிடைப்பன மூன்று. அவை முறையே,

1. 'கடல் சூழ்ந்த பார்மாதரும் பூமாதரும் கலைமாதரும்'

2. 'பூமருவிய திசைமுகத்தோன் படைத்த பெரும் புவி விளங்க'

3. 'கடல் சூழ்ந்த பாரேழும் திசையெட்டும் காத்து நின்று'

என்னும் தொடக்க அடிகளை உடையனவாய் விளங்குவனவாகும்.

## மெய்க்கீர்த்திகள்

1. இராசாதிராசன் செல்வமும் கல்வியும் வீரமும் புகழும் நிரம்பப் பெற்றவனாய் முடி சூடி, சமய நெறியும் இயற்கையின் தொழிலும் துணை புரிய, மன்னர் பலரும் திறை செலுத்த, பரகேசரி என்னும் பட்டப் பெயரோடு சோணாட்டில் ஆணை நடத்தினான்.

2. நிலவுலகைக் காக்கும் நெடுமாலே போலச் சூரிய குலத்துத் தோன்றிய இராசாதிராசன் சோணாட்டின் முடிசூடி, நாட்டில் கலி நீங்க, நாட்டில் மகிழ்ச்சி பொங்க அளி செய்தான்.

3. நாட்டில் கலிநீங்க, மேருவில் புலிக்கொடி பறக்க, எண் திசையும் தனது ஆணையைச் செலுத்தினான். நாட்டில் போரின்றி வளம் நிறைந்தது. பகைமன்னர் மகிழ்ந்தனர். இயற்கை வளம் பல நிறைய உயிர்கள் பகையின்றி வாழ அரசு வீற்றிருந்தான் இராசாதிராசன். ''உலகுடை முக்கோக் கிழானடிகளோடும் வீற்றி ருந்தருளிய'' என்று இரண்டு மெய்க்கீர்த்திகளிலும் ''புவன முழு துடையாளொடும் வீற்றிருந்தருளிய'' என்று ஒரு மெய்க்கீர்த்தியிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. இரண்டாம் இராசராசன் மெய்க்கீர்த்தி

யிலும் முக்கோக் கிழானடிகள் என்ற தொடரே காணப்படுகிறது. எனவே இப்பெயர்கள் பட்டப் பெயர்களே தவிர அரசியரின் இயற் பெயர்களல்ல என்பது புலனாகிறது.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

1-4. "கடல் சூழ்ந்த பார்மாதரும்......புனைந்தருளி"

நிலமகளும், திருமகளும், கலைமகளும், போர்மகளும், புகழ் மகளும் இராசாதிராசனிடம் நிலை பெற்றிருந்தனர். கடலால் சூழப் பட்ட ஏழுலகம் கடல்களில் சிறந்த பாற்கடல் போல இவனது புகழ் பரவியது. மனு நெறி தழைக்கும் ஆதியுகம் போன்று சோழ நாட் டின் மணிமுடியைச் சூடினான்.

5-16. "அறு சமயமும் ........இராசாதிராச தேவர்க்கு"

அறுவகைச் சமயங்களும் இயற்கையின் பிரிவுகளாகிய ஐம்பூதங் களும் தங்கள் தொழிலில் மாறாதிருந்து, முறையாக உதவி, நில வுலகத்தினைச் சிறப்புறக் காத்தன. பாண்டியர் முதல் பல்லவர் ஈறாக உள்ள மன்னர்கள் திறைப் பொருள்களுடன் வந்து வணங்கி நின்றனர். இச்சிறப்புகளோடு தனது வெண்கொற்றக் குடை தனித்து நின்று உலகினுக்குத் தண்மை செய்தருளுமாறு தன் ஆணையினைச் செலுத்திய இராசகேசரி இராசாதிராசன் உலகுடை முக்கோக் கிழானடிகளாகிய தன் பட்டத்தரசியுடன் வீரசிம்மா சனத்து வீற்றிருந்து ஆட்சி புரிந்தான்.

பாண்டி நாட்டையாண்ட வீரபாண்டியன், குலசேகரன் ஆகிய இருவருக்கும் ஏற்பட்ட பகைமையால் வீரபாண்டியன் சிங்கள மன்னனின் படைத்துணை கொண்டு குலசேகரனை வென்றான். அதனால் குலசேகரன் சோழமன்னன் உதவியை நாட, இராசாதி ராசன் துணை செய்து வீரபாண்டியனையும் துணை வந்த சிங்களரையும் துரத்தி, குலசேகரனைப் பாண்டி நாட்டு மன்ன னாக்கினான். ஆனால் சிறிது காலத்தில் நன்றி மறந்த குலசேகரன் சிங்களரோடு நட்பு கொண்டான். இதனால் மீண்டும் இராசாதி ராசன் தன் படையை அனுப்பி குலசேகரனை வென்று, சிங்களரைத் தமிழகத்திலிருந்து துரத்தினான். இதனால் 'மதுரையும் ஈழமும் கொண்டருளின சோழன்' என்ற சிறப்பிலனப் பெற்றான்.

### மெய்க்கீர்த்தி-2

1-3. "பூமருவிய திசைமுகத்தோன்........குலத்து
அவதரித்து"

தேன் நிறைந்த பசுந்துழாய் மாலையணிந்த திருமால் இவனே ஆவான் என்று கூறும்படியாக, இராசாதிராசன் வெண்டாமரையில் வீற்றிருக்கும் பிரமனால் தோற்றுவிக்கப் பெற்ற இப்பரந்த நிலவுலகம் தழைத்து ஓங்குமாறு செய்தற்காக, கடலால் சூழப்பட்ட இந்நிலவுலகத்தில் சூரிய குலத்தில் வந்து தோன்றினான்.

4–11. "கருங்கலியின் இருள் ...... இராசாதிராச தேவர்க்கு"

இவனது ஆட்சியில் கொடிய கலியினால் ஏற்பட்ட துன்பமாகிய இருள் அழியுமாறு ஒளிமிக்க வெண் கொற்றக் குடையானது இன்பமாகிய ஒளியை வீசி நின்றது. சூரியனின் இளங்கதிர் போலும் ஒளியையுடைய மணிமுடியினைச் சூடி சோணாட்டின் மன்னனாகிய இராசாதிராசன் நிலவுலகமும், அவ் உலகத்து உயிர்களின் உள்ளமும், மலர் மடந்தையராகிய திருமகள், கலைமகள் முதலாகிய மங்கையர் கண்களும் மகிழ்ச்சியடையுமாறு தனது தண்ணளியால் நிலங்காவல் செய்யுந் தொழிலில் சிறந்து செம்பொன் வீரசிம்மாசனத்து புவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தான்.

## மெய்க்கீர்த்தி–3

1-7. "கடல் சூழ்ந்த பாரேழும்.....திசை எட்டும் காவல் கொள்ள"

இராசாதிராசனின் முத்துக்களாலாகிய வெண் கொற்றக் குடையானது முழுநிலாவினை ஒத்து விளங்கி நாட்டில் தண்ணளி செய்து, இக்கடலால் சூழப்பட்ட நிலவுலகு ஏழினையும் எட்டுத் திசையிலும் காத்து நின்றது. அவனுடைய அரசுக்குக் கடலும் மலையுமே எல்லைகளாக விளங்கின. கொடிய கலியானது நாட்டை விட்டு அகன்று ஓடி பாதலத்தில் ஒளியுமாறு தன் ஆட்சியில் நன்மை விளைவித்தான். காலம் முழுமையும் அவனது புகழ் ஓங்கி வளர்ந்தது. நாட்டில் அவனது ஆணை ஒளி வீசியது. அதனால் மீனக் கொடியும் விற் கொடியும் அமைதியை விளைவித்தன. பாண்டிய நாட்டின் ஒரு பகுதியாகிய யானைப் படை நிறைந்த எயில் என்னும் நகரமே வணங்கி நின்றது பகைவர் தம் கிளர்ச்சிகள் யாவும் அடங்கி அவனுடைய ஆணைகள் போற்றப் பட்டன. மேரு மலையின் மீது புலிக்கொடியானது விளங்கி நிலை பெற்றது. இவ்வாறு இராசாதிராசனது ஆணையும் செங்கோலும் எண்டிசையையும் முறையாகக் காவல் புரிந்து வந்தன.

8-12. "பெருவாழ்வு பெற்று.....ஒருதுறை நீருண்ண"

நாட்டில் எல்லா உயிர்களும் சிறந்த முறையில் வாழும் வாழ்வினைப் பெற்றன. அறுவகைச் சமயமும் உயர்ந்து விளங்கின.

அரிய மறைகளும் அதன் வழியாகும் தருமமும் நெறி ஒழுக்கமும் நிலை நின்றன. புலியும் மானும் நனவிலும் கனவிலும் தம்முள் பகையின்றி ஒரே துறையில் நீருண்டு வாழ்ந்தன.

## 13-17. "பொன்னி நதியும்.....படிவாழ முடிசூடி"

அவனது நாட்டைச் செழிக்கச் செய்யும் பொன்னியாறு (காவிரி) என்றும் வற்றியதில்லை. மேகமும் மழை பொழியாமல் மறைத்ததில்லை. நதிகள் நாட்டில் நீர்வளத்தைப் பெருக்கின; அதனால் வயல்கள் மிகுதியாக விளைவைத் தந்தன. இன்ப உலகம் இதுவே என்று எண்ணுமாறு எல்லாவகை இன்பங்களும் நாட்டில் நிறைய, ஏழு உலகங்களும் தனது ஒரே ஆணையின் கீழ் அடங்கி உள்ளன என்று கூறுமாறு பாற்கடலில் பள்ளி கொண்ட கார்க்கடல் என்னும் திருமாலாகிய இராசாதிராசன் அவ்வுலகம் வாழ முடி சூடினான்.

## 18–22 "ஆர்த்தவம ராபிஷேகம்......அடியடைய"

தனது நாட்டில் அமைதியைக் காத்த இராசாதிராசன் போர் எதுவும் தொடங்காததால் எதிர்த்துப் போர் தொடங்க வேண்டிய நிலையை அடையாத அரசர் பலரும் மகிழ்ச்சியடைந்தனர். உலகத்து இருளைப் போக்க வந்த இறைவன் இவனே யாவான்; கலிகாலமாகிய இக்காலத்துத் துன்பம் எதுவும் இல்லாமல் வாழும் ஆதியுகத்தையே தோற்றுவித்த இவன் புவியனைத்தையும் காப்பான் என்று உலகம் யாவும் இவனடியடைந்தன.

## 23–32. "குலை படுவன......மேல்போக"

இச்சிறப்புகளினால் இவனது நாட்டில் தென்னை மரங்களே குலைகளை ஈன்றன' வேறு நடுக்கம் என்பதே இல்லை. கொள்ளப்படுவன இளம்பாக்கு மரங்களே; வேறு பழிச் சொல் என்பது எங்கும் இல்லை. நீர் நிலைகளே அலைகளையுடையன வாயின; உயிர்கள் எவையும் எதற்காகவும் அலைதல் இல்லை. இடிமுழக்கங்களே அதிர்தலை உண்டாக்கின. வேறு நடுக்கம் எதுவும் இல்லையாயிற்று. ஒரு வழியே மக்கள் கூட்டத்திற்குத் துணை புரிந்தது; கோபுரங்களே ஆகாயத்தில் தடைபட்டன; ஒரு பொருள் தேவை என்று விரும்பியவர் கருவுற்ற மகளிரேயாவர்; மதம் ஏறிய களிறுகளே அடக்கப்பட்டன; சிறுசிறு கொட்டில்களே தடுக்கப்பட்டன; பூக்களையுடைய கொடிகளே தேனாகிய கள்ளைப் பெற்றிருந்தன; முழு நிலவிலேயே கறை காணப்பட்டது; அங்குலே பட்டை உடுத்தியது;

கூந்தல் சுருளே குறைபட்டன; கொங்கைகளே குழைவு இல்லாதிருந்தன; காஞ்சி நகரில் வேதங்கள் ஒலித்தன-மறைக்கப்

படுவபிறஇல்லை; மெலிந்த இடைகளே மயக்கம் கொண்டன என்றெல்லாம் சிறப்புறப் பாடிய பாடல்களோடு மன்னர் களிற்றின் மீது சென்றனர்.

33-55. "சென்றிறைஞ்சி......இராசாதிராசதேவர்க்கு"

பிற நாட்டு மன்னர்கள் அரண்மனை வாசலில் இறைஞ்சி நின்றனர். சேரர், பாண்டியர், சிங்களர், கொங்கணர் ஆகியோர் தங்கள், தங்கள் பேரரசினைத் திரும்பப் பெற விரும்பி இராசாதி ராசனின் திருவடிகளை வணங்கி நின்று, தங்கள் விருப்பப்படியே அரசினைப் பெற்றுத் தங்கள் தேவியருடன் மகிழ்ந்து முடிசூடி விளங்கினர். அம்மன்னர் பலரும் மகிழ்ந்து தங்களுக்குத் துணை யாக இருக்கும் சூரிய குலத்தில் தோன்றிச் சோழர் குலமணி விளக் காகவும், சோழர்குல மாணிக்கமாகவும் விளங்கும் இராசாதிராசனின் ஆணையை ஏற்றுச் சென்றனர்.

இச்சிறப்புகளையெல்லாம் பெற்ற இராசாதிராசன் உறையூர், உதகை, மதுரை ஆகிய நகரங்களைத் தலைநகராகக் கொண்ட நாடுகளை முறையாக ஆட்சி செய்து வந்தான்.

தாமரைப் பொய்கையை விட்டு நீங்கிய அன்னத்தைப் போன்று விளங்கும் முக்கோக் கிழானடிகள், அவ்அன்னம் பொன் ஆசனம், சிங்காசனம், கற்பகப் பூஞ்சோலை ஆகிய இடங்களில் சென்று ஏவல் கொள்ளுமாறு போல இராசாதிராசனுடைய பணிகளில் உடனிருந்தாள். குழல் சூழ்ந்த நெற்றியையும், கயல் போன்ற கண்களையும் உடையவளாய் பொற் குழையணிந்த கொம்பு போன்று உளம் மகிழ்ந்து விளங்கிய அத்தேவியோடு சிம்மாசனத்து வீற்றிருந்த இராசாதிராசன் இராசகேசரி என்னும் பட்டத்தைப் பெற்று விளங்கினான்.

# 35

# மூன்றாம் குலோத்துங்கன்

(கி. பி. 1178-1218)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல்வாய்த்துத் திருமகளும் செயமகளும் சிறந்துவாழ
[1]வெண்மதிபோற் குடைவிளங்க [2]வேல்வேந்தர்
அடிவணங்க
மண்மடந்தை [3]மனங்களிப்ப மனுநீதி தழைத்தோங்கச்
சக்கரமும் செங்கோலும் திக்கனைத்தும் செலநடப்பக் 5
கற்பகாலம் புவிகாக்கப் பொற்பமைந்த முடிபுனைந்து
வீரபாண்டியன் மகன்பட வெழுகம்பட மறப்படைபடச்
சிங்களப்படை மூக்கறுப்புண்டு அலைகடல்புக வீர
பாண்டியனை
முதுகிடும் படிதாக்கி மதுரையும் அரசும்கொண்டு
[4]ஜயஸ்தம்பம் நட்டுஅம் மதுரையும் அரசும்நாடும் 10
அடைந்த பாண்டியற்கு அளித்தருளி மெய்ம்மலர்ந்த
வீரக் கொடியுடன் தியாகக் கொடியெடுத்துச்
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவன முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளிய கோப்பர கேசரி வன்மரான 15
ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு 9 நாள் 88.....

---

1. வெண்மதிபொற். 2. வெல்வேந்தர். 3. மனக்களிப்ப. 4. ஜயதம்பம்.

## மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்திஶ்ரீ

[1]புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்
செயல்வாய்ப்பத் திருமகளும் ஜயமகளும் சிறந்துவாழ
[2]வெண்மதிபோற் குடைவிளங்க வேல்வேந்தர்
அடிவணங்க
மண்மடந்தை மணங்களிப்ப மனுநீதி தழைத்தோங்கச்
சக்கரமும் செங்கோலும் திக்கனைத்துஞ் செலநடக்கக் 5
கற்பகாலம் புவிகாக்கப் [3]பொற்பமைந்த முடிபுனைந்து
[4]வனவேங்கையும் மடமானும் வந்தொருதுறை நீருண்ணக்
[5]கொன்வேங்கைக் [6]கொடியுயர்த்திக் கொற்றவர்தம்
[7]கொடிபணியச்
[8]சுங்கமில்லாச் சோணாடெங்குஞ் [9]சோற்றுமலை கண்
டருளித்
[10]தென்னவன்வந் தடிபணியச் [11]சிங்களவன் தலை
மலையாற் 10
[12]தென்னீழங் கொள்கவென்னத் திரைகடலை அடைக்க
வென்ன
மன்னுதிரு வாற்படையால் மலைகொண்டு வழிபடுத்தி
(தென்)இலங்கையர்கோன் தலையரிந்த திருநெடுமால்
இவனென்னத்
தென்னவனைத் தலையரிந்து தேசமெல்லாம்
இருளகற்றித்
தகமிகு தனுவதனால் அரணுடைப் படைவிழுத்திச் 15
செங்கோலும் புலிக்கொடியும் தேசமெல்லாம் [13]செறு
நடாத்தி
பொன்னுமுத்தும் புகழ்மதுரையும் புக்கனைத்துங்
கொண்டருளித்

---

1. புயல்பெருக ; புயல்வாய்ப்ப. 2. வெண்மதிபொற்குடை. 3. பொற்பமைத்த. 4. வான் ; வான ; வாள் ; வாழ். 5. பொன். 6. கொடிப்பாய்த்து ; 7. கொடை பணிய. 8. சுங்கம்பலர்ச்செரநாடு. 9. சொற்றுமலைகண்டருள. 10. தென்னவன் தன்னடிபணிய ; தென்னவர்வந்தடிபணிய. 11. சிங்களவர் தலையரிய. 12. தென் னிலங். 13. விளங்க்வென.

திக்கானை யிருநான்குஞ் சயஞ்செய்து கொடிவாங்கிக்
கன்னடருங் காலிங்கருந் தென்னவருஞ் சேரலருஞ்
சிங்களரும் முதலாய (மன்னவர்கள்) திறைகொணர்ந்து
சேவிப்பப் 20
பொன்னிசூழ் நாடெங்கும் போர்மகளிர் காவலரும்
நாற்திசையுங் காவல்பூண்டு செல்லருநெடுங் கொடியாளத்
திருக்கயிலைச் சிவனருளால் மேவலரைச் சதமடக்கி
[14]வெற்றிமிகு வேந்தன்போர் மன்னர்தம் முடிபுனைந்து
செம்பொன் வீர சிம்மா சனத்துப் 25
புவன முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளிய கோப்பர கேசரி வன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் பாண்டியன்
முடித்தலையுங் கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்க
சோழ தேவர்க்கு யாண்டு 18ஆவது.

## 37

### மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

புயல்வாய்த்து மண்வளரப் [1]புலியானையும் சக்கரமும்
செயல்வாய்த்த மனுநூலும் செங்கோலும் திசைநடக்கக்
கொற்றவன்தன் திருமகிழ கொடுங்கலிகெடக்
குளிர்வெண்குடைக்
கற்பகாலம் படிகவிக்கக் கதிரவன்குல முடிகவித்துத்
[2]தனியாணை விட்டாண்மை செய்துவட [3]மன்னவரைத் 5
திறைப்படுத்தி முனிவாறக் [4]கச்சிபுக்குத் [5]திறைகவர்ந்து
தண்டொன்றால் வழுதிமைந்தனை மூக்கரிந்து தமிழ்
மதுரை
கொண்டுவிக்கிரம பாண்டியர்க்குக் கொடுத்துமீண்டபின்
பரிபவத்தால்

---

14. வெற்றிமிகு வேந்தன் பல்லுயிர்த்தாயாய்த் தனிச்சிங்கம் இவனென மாசெனர் களிபறந்தோட.

1. புலியானையும். 2. தனியானை. 3. மன்னரை. 4. கச்சிபுக்கு முழுதரசையும். 5. திரைகவர்ந்து.

எடுத்துவந்து நெட்டூரில் எதிர்ந்தவீர பாண்டியனை
முடித்தலைகொண் டமர்முடித்தவன் மடக்கொடியை
[6]வேழம்ஏற்றித் 10
திருவிழந்த தென்னவனும் சேரலனும் வந்திறைஞ்சி
அரியணையின் கீழிருக்க அவன்முடிமேல் அடிவைத்துப்
படிவழங்கி முடிவழங்கிப் பாண்டியர்க்கு விடை
கொடுத்துக்
கொடிவழங்கி வில்லவர்க்குக் [7]கொற்றவர்பெறாத் திரு
வழங்கி
வீரகேரளன் விரல்தரித்து வெனைகொண்டு
வந்திறைஞ்சப்
பாரறிய வாழ்வருளிப் பரிகலத்தில் அமுதளித்துப்
பருதிகுலப் பதியென்னும் திருநாமம்பரித்த பாண்டியர்க்கு
இருநிதியமும் [8]பரிச்சட்டமும் இலங்குமணிக் கலனும்
நல்கித்
தியாகவீரக் கொடியெடுத்து வாகைவீரக் கழல்கட்டித்
திக்கெட்டு மேவல்கேட்பச் சக்கரவெற்பில்
புகழெறிப்பச் 20
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவன முழுதுடை யாரொடும் வீற்றிருந்
தருளிய கோப்பர கேசரி வன்மரான
திருபுவனச் சக்கரவர்த்திகள் மதுரைகொண்டு பாண்டி
யன் முடித்தலை கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கு யாண்டு 19ஆவது விருச்சிக ஞாயிற்று அமர
பட்சத்துச் செவ்வாய்க்கிழமையும் பெற்ற பூசத்து நாள்....

## 38

மெய்க்கீர்த்தி–4

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருவாய்க் கேழ்வி [1]முன் உடைத்தாக...
அறம்வளரக் கற்பமையப்
புகழ்பெருகமனு நெறிதழைப்ப
.... நியாயம் நடாத்துகின்ற

---

6. வேளமெற்றித். 7. கொற்றவர்பெறாதிரு. 8. பரிசட்டமும்.
1. முன்னாக ; முந்நாக.

செயங்கொண்டசோழ மண்டலத்துப்
பெடைநாட்டு விஷயமான
[2]முடைநாட்டு விஷயத்தோமும்
பெராத்திநாட்டு விஷயத்தோமும்
பகடைநாட்டு விஷயத்தோமும் 5
தவாடநாட்டு விஷயத்தோமும்
[3]கலாறத்தைநாட்டு விஷயத்தோமும்
மங்கடையச் சளுக்கிநாட்டு விஷயத்தோமும்
பூங்கைநாட்டு விஷயத்தோமும்
தொங்கைப்பூங்கை நாட்டு விஷயத்தோமும்
சகலிநாட்டு விஷயத்தோமும்
பொத்தப்பிநாட்டு விஷயத்தோமும்
உட்பட்ட பெரியநாட்டு விஷயத்தோமும்
சகயாண்டு ஆயிரத்து ஒருநூற்று
ஒருபத்து ஒன்பதால் 10
பிங்கலசம் வத்சரத்து
மதுரையும் ஈழமும் கொண்டு
பாண்டியனை முடித்தலைகொண் டருளின
ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு பத்தொன்பதாவது . . . . . . ஞாயிற்றுப் பதினைந்தாந் தேதியான வெள்ளிக்கிழமையும் ரேவதியும் பெற்றநாள் . . . .

# மூன்றாம் குலோத்துங்கன்

## முன்னுரை

இரண்டாம் இராசராசன் மகன் மூன்றாம் குலோத்துங்கன். இவன் இரண்டாம் இராசாதிராசனுக்குப் பின்பு சோழப்பேரரசின் முடியை ஏற்றான். தந்தை இறந்தபோது இவன் இளையவனாக இருந்ததால், இரண்டாம் இராசராசன் தன் பாட்டனாகிய விக்கிரம சோழனின் மகள் வயிற்றுப் பேரனை வரவழைத்து இளவரசுப் பட்டம் கட்டினான். அவனே பிறகு இரண்டாம் இராசாதிராசன் என்ற பட்டப் பெயருடன் சோணாட்டை ஆண்டான். அவனுக்குப் பிறகே மூன்றாம் குலோத்துங்கன் அரசு கட்டில் ஏறும் வாய்ப்பினை பெற்றான்.

2. முண்டைநாட்டு. 3. கல(ா)றத்தை.

மூன்றாம் குலோத்துங்கனுக்குரியனவாக நான்கு மெய்க்கீர்த்திகள் இங்கு தொகுக்கப்பட்டுள்ளன. அவை முறையே.

1. ‘புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்’
2. இதே தொடக்க அடி — பிற வேறுபாடு
3. ‘புயல்வாய்த்து மண்வளரப் புலியானையும் சக்கரமும்’
4. ‘திருவாய்க் கேழ்விமுன் உடைத்தாக’

என்னும் தொடக்க அடிகளை உடையவையாகும்.

## மெய்க்கீர்த்திகள்

1. எல்லாச் செல்வங்களையும் உடையதாக விளங்குமாறு சோழநாட்டின் முடிபுனைந்து செங்கோல் செலுத்தினான் குலோத்துங்கன். வீரபாண்டியன் மகனைக் கொன்று வீரபாண்டியனைப் புறமுதுகிடச் செய்தான். சிங்களப்படையை அழித்து அந்நாட்டைக் கைப்பற்றினான். தான் பெற்ற மதுரையின் ஆட்சிப் பொறுப்பைத் தன்னிடம் வந்து வணங்கிய விக்கிரமபாண்டியனுக்குக் கொடுத்து வீரக்கொடியுடன் தியாகக்கொடியையும் பறக்கவிட்டான்.

2. செல்வம் நிறைய, முடிபுனைந்த குலோத்துங்கன், நாட்டில் சுங்கவரியை நீக்கி, உணவுப் பொருள்களை நிறைத்து, உயிர்களிடை அமைதி நிலவச் செய்தான். வென்ற நாடுகளை இறைஞ்சி வந்த மன்னர்களுக்குத் திருப்பியளித்து மகிழச் செய்தான். இவ்வாறு பல மன்னரும் திறை செலுத்த அரசு வீற்றிருந்தான்.

3. சூரிய குலத்திற்குரிய முடிசூடி விளங்கிய குலோத்துங்கன் ஆட்சியில் மழை வளம் முதலிய எல்லா வளங்களும் நிறைந்தன. தன்னிடம் தோல்வியுற்ற பாண்டியனும் சேரனும் வந்து அடிபணிய அவர்களின் முடிமேல் தன் அடிவைத்து அவர்களுடைய உரிமைப் பொருள்களை அளித்து வாழச்செய்த குலோத்துங்கன் வீரக்கொடியோடு தியாகக்கொடியையும் உயர்த்தி நின்றான்.

4. எல்லா அறமும் ஓங்கி வளரச்செய்த குலோத்துங்கனுடைய ஆட்சியாண்டு பத்தொன்பதில், செயங்கொண்ட சோழமண்டலத்தைச் சார்ந்த பெடை நாடு, முடை நாடு, பெராத்தி நாடு, பகை நாடு.........பொத்தப்பி நாடு ஆகிய நாடுகளைச் சேர்ந்த மக்கள் தலைவர்கள் சேர்ந்து செய்த அறச்செயலினைக் குறிக்கிறது இம் மெய்க்கீர்த்தி.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி–1

1-6. “புயல் வாய்த்து.........பொற்பமைந்த முடிபுனைந்து”

குலோத்துங்கனுடைய ஆட்சியில் சோழநாட்டில் நல்ல மழை பொழிந்து வளம் பெருகியது. நான்மறையின் ஒழுக்கங்கள் நடைமுறையில் இருந்தன. திருமகளும் செயமகளும் என்றும் அவனிடம் குடிகொண்டிருந்தனர். வெண்கொற்றக்குடை தண்ணளி செய்தது. வேந்தர் பலர் வணங்கி நின்றனர். நிலமகள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்தாள். மனுநெறி தழைத்தது. எவ்லாத் திக்குகளிலும் சோழனுடைய சக்கரமும் செங்கோலுமே நடைபெற்றன. இவ்வாறு பலகாலம் நாடு காக்க முடிபுனைந்து விளங்கினான் குலோத்துங்கன்.

### 7-9. "வீரபாண்டியன் மகன்பட.........அரசும் கொண்டு"

குலோத்துங்கன் பாண்டியருடன் நடத்திய முதற்போரில் வீர பாண்டியனின் மகன் கொல்லப்பட்டான். எழுகம்படை, மறப்படை ஆகிய காலாட்படைகள் பல அழிந்தன. வீரபாண்டியனுக்குத் துணையாக வந்து போர் செய்த சிங்கள மன்னன் முதலாம் பராக் கிரம பாகுவின் படைவீரர் தோல்வியுற்று, மூக்கறுபட்டுக் கடலில் ஓடி ஒளிந்தனர். வீரபாண்டியன் புறங்கொடுத்து ஓடினான். பாண் டியர் படைகளை முறியடித்த குலோத்துங்கன் மதுரையையும் அதன் அரசுரிமையையும் தனதாக்கிக் கொண்டான்.

### 10-11. "ஜயஸ்தம்பம் நட்டு.........அளித்தருளி"

குலோத்துங்கன் பாண்டிய நாட்டில் தான் பெற்ற வெற்றிக்கு அறிகுறியாக வெற்றித்தூண் ஒன்றினை நாட்டினான். பிறகு தன்னிடம் அடைக்கலமாக வந்து அடிபணிந்த பாண்டிய மன்னனுக்கு மதுரையையும் அதன் அரசுரிமையையும் கொடுத்தருளினான். அவ்வாறு பெற்றவன் விக்கிரம பாண்டியன் ஆவான்.

### 11-16. "மெய்ம்மலர்ந்த.........தேவர்க்குயாண்டு"

தான் பெற்ற நாட்டைத் திரும்பக் கொடுத்து மகிழ்ந்த சோழன் விரக் கொடியும் தியாகக் கொடியும் ஒருங்கே எடுத்துப் பெருமை பெற்றான். செம்பொன் வீரசிம்மாசனத்துப் புவன முழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய மூன்றாம் குலோத்துங்கன் பரகேசரி என்னும் பட்டப் பெயர் பெற்றான்.

## மெய்க்கீர்த்தி-2

### 1-6. 'புயல்வாய்த்து வளம்பெருக.........முடிபுனைந்து"

மழை வளம் சுரக்க, மறை வளர, திருமகள், செயமகள், நில மகள் ஆகியோர் சிறந்து விளங்க, மன்னர் வணங்க, நீதி தழைக்க, எத்திசையும் தனது ஆணை நடைபெற, நெடிது நாள் நாடுகாக்கும் பொறுப்பை ஏற்றிருந்தான் குலோத்துங்கன்.

7–10. "வனவேங்கையும் மடமானும்.........வந்தடிபணிய"

அவனது ஆட்சியில் புலியும் மானும் ஒரே துறையில் நீருண்டு வாழ்ந்தன. அமைதியான ஆட்சியை நடத்தித் தனது புலிக் கொடியினைப் பறக்கச் செய்து, பிற மன்னரின் கொடிகள் பணியு மாறு செய்தான். நாட்டில் சுங்க வரியை நீக்கி, உணவுப் பொருள் களைப் பெருக்கினான். பாண்டியரை அடிபணியச் செய்தான்.

10–17. "சிங்களவன் தலை.........கொண்டருளி"

சிங்கள மன்னனை வென்று, தென் ஈழ நாட்டைக் கைப்பற்ற நினைத்தான். உடனே தன் செல்வமிகுதியாலும், படை பலத் தாலும் மலை முதலியவற்றைக் கொண்டு அணை போட்டுக் கடலை அடைத்து வழியை ஏற்படுத்தினான். ஈழ நாட்டில் படையெடுத் துச் சென்று சிங்கள மன்னனாகிய முதலாம் பராக்கிரம பாகுவின் தலையை அரிந்து, தன் வில்லினால் அவனுடைய படையை அழித்துத் தனது புலிக் கொடியை ஈழ நாட்டில் பறக்கச் செய்தான். அந்நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்று, நாட்டின் துன்பத்தைப் போக்கினான். இதனால் இலங்கை மன்னன் (இராவணன்) தலை யரிந்த திருமால் இவனேயாவான் என்னும் சிறப்பினையும் பெற்றான். ஈழ நாட்டிலிருந்து திரும்புங்கால் மதுரையுள் புகுந்து பொன்னும் முத்துமாகிய அனைத்துப் பொருள்களையும் கவர்ந்து வந்தான்.

18-28. "திக்கானை இருநான்கும்.........சோழதேவர்க்கு"

இவ்வாறு தான் பெற்ற வெற்றிகளினால் எட்டுத் திக்குகளிலும் தன் கொடி பறக்குமாறு செய்து திக்கு யானைகளையும் நிறுத்தி னான். கன்னடர்............முதலாய மன்னவர் திறையுடன் வந்து பணிந்து நின்றனர். காவிரி சூழ்ந்த நாடு முழுவதும் வீரர் நிறைந்து நாற்றிசையும் காவல் புரிந்து வந்தனர். கயிலையில் வீற்றிருக்கும் சிவன் அருளைப் பெற்ற குலோத்துங்கன் வெற்றி பலவற்றைத் தழுவி புவன முழுதுடையாளொடும் அரசு வீற்றிருந்தான்.

## மெய்க்கீர்த்தி-3

1–10. "புயல்வாய்த்து மண்வளர.........வேழம் ஏற்றி"

மூன்றாம் குலோத்துங்கனது ஆட்சியில் மழை வளம் சிறந்து நாடு செழித்தது. புலிக்கொடி தாங்கிய சோழனுடைய ஆணையும் செங்கோலும் மனுநெறி பிறழாது எல்லாத் திசையிலும் நடை பெற்றன. நாட்டில் கலி நீங்கி அவனது வெண்கொற்றக் குடையின் தண்ணளி பரவியது. பலவகை இன்பங்களோடு சூரிய குலத்திற் குரிய முடியினைச் சூடி விளங்கிய குலோத்துங்கன், தனி ஆட்சி நடாத்தி, போர் மேல் செல்லத் தொடங்கினான். சென்று வடபுல

மன்னர் பலரைத் திறை செலுத்தச் செய்தான். கச்சி மாநகரில் புகுந்து திறைபல கொணர்ந்தான்,

பிறகு பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வீரபாண்டியன் மகனை மூக்கரிந்து சின்னாபின்னஞ் செய்தான். தான் பெற்ற மதுரை மாநகரின் அரசுரிமையை விக்கிரம பாண்டியனுக்குக் கொடுத்துத் திரும்பினான். மீண்டும் வந்து நெட்டூர் என்னுமிடத்தில் எதிர்த்துப் போரிட்ட வீரபாண்டியனை வென்று அவன் முடியினைக் கவர்ந்து, அவன் தேவியையும் யானையின் மீது ஏற்றிவந்தான்.

### 11-18. "திருஇழந்த தென்னவனும்.........கலனும் நல்கி"

நாட்டையும் செல்வத்தையும் இழந்த பாண்டிய மன்னனும் சேர மன்னனும் வந்து சிம்மாசனத்தின் கீழிருந்து வணங்கி வேண்டினர். அவர்கள் முடியின் மீது தன் அடிகளை வைத்து அருள் புரிந்தான் குலோத்துங்கன். அவ் அருளின்படி அவர்கள் இருவருக்கும் உரிய முடியினையும் கொடியினையும் திரும்பக் கொடுத்தான். சேரனுக்கு மிகுந்த செல்வத்தைபும் வழங்கியருளி னான். வந்து இறைஞ்சி நின்ற வீர கேரளனுக்கும் உரிய உரிமை களை வழங்கி அமுதளித்து வாழ்வருளினான். பாண்டியருக்கும் பெருஞ்செல்வம் முதலாகிய அரசுரிமைப் பொருள்களை வழங் கினான்.

### 19-25. "தியாகவீரக் கொடியெடுத்து...சோழதேவர்க்கு"

பலவகை வெற்றிகளைப் பெற்று வீரக்கொடி நாட்டிய குலோத் துங்கன் தன்னை வந்து பணிந்து இறைஞ்சிய மன்னவருக்கு வாரி வழங்கியதனால் தியாகக் கொடியையும் நாட்டி விளங்கினான். வீரக் கழலணிந்த அவன் எட்டுத் திக்கிலும் தனது ஆணை செல்லு மாறு அரசு புரிந்து புகழை நிறுவினான். பரகேசரி என்னும் பட்டப் பெயர் பெற்று புவனமுழுதுடையாளுடன் அரசு வீற்றிருந்தான்

## மெய்க்கீர்த்தி-4

### 1-3. "திருவாய்க் கேழ்வி.........சோழமண்டலத்து"

நாட்டில் கேள்வி ஞானமும் அறமும் கற்பும் நிறைந்து மன்ன வன் புகழ் பெருகியது. மனுநெறி தவறாது நீதி நடைப்பெற்று வந்தது. இத்தகு குலோத்துங்கனது ஆட்சியில் செயங்கொண்ட சோழ மண்டலத்தைச் சேர்ந்த பல நாட்டுத் தலைமை வாய்ந்த பெருமக்கள் கூடி அறச்செயல் ஒன்றினை வெளியிட்டார்கள். கூடிய தலைமக்களின் நாடுகள் முறைப்படுத்தப்பட்டுள்ளன,

### 4-9. "பெடைநாட்டு விஷயமான.........பெரியநாட்டு விஷயத்தோமும்"

பெடைநாடு, முடைநாடு, பெராத்திநாடு, பகடைநாடு, தவாட நாடு, கலாறத்தை நாடு, சளுக்கிநாடு, பூங்கைநாடு, தொங்கைப் பூங்கைநாடு, சகலிநாடு, பொத்தபிநாடு ஆகிய நாடுகள் உட்பட்ட பெரிய நாடுகளின் தலைமக்கள் கூட்டம் குறைவறக் கூடினார்கள்.

## 10-14. "சகயாண்டு.........ரேவதியும் பெற்ற நாள்"

அவர்கள் கூடின நாள் சக ஆண்டு ஆயிரத்து நூற்றுப் பத்தொன்பதிற்குச் சரியான பிங்கல ஆண்டாகும். அவ்வாண்டு மதுரையும் ஈழமும் கொண்டு, பாண்டியன் முடித்தலை கொண்ட மூன்றாம் குலோத்துங்கனின் பத்தொன்பதாவது ஆட்சியாண் டாகும். பிங்கல ஆண்டு......மாதம் பதினைந்தாம் நாள் வெள்ளிக் கிழமையும் ரேவதி நட்சத்திரமும் கூடினநாளாகும்.

## 39

# வீரதேவன்

மெய்க்கீர்த்தி-1

ஸ்வஸ்தி ஸ்ரீ

[1]புயல்வாய்த்து மண்வளர [2]புலியாணையுஞ் சக்கரமும்
[3]செயல்வாய்த்துத் திருமகளும் சிறந்து வாழ
வெண்மதிபோல் குடைவிளங்க வேல்வேந்த
ரடிவணங்க
மண்மடந்தை மனங்களிப்ப மனுநீதி தழைத்தோங்கச்
சக்கரமுஞ் செங்கோலும் திக்கனைத்துஞ்
செலடைத்தக் 5
கற்பகாலத் தவதரித்து தேசமெல்லா மிருள்நீக்கித்
தென்திசையில் போந்தண்டு போரமைத்துத் திரிய
வாங்கிச்
செருவினையால் சிறைபிடித்துத் தென்னவனைத்
திறைகொண்டு
[4]திருவடிக்கீ ழடைவித்து வடதிசையில் போந்தண்டு
மகாமேருவைப் பிறக்கிட்டு அடலெழும் புகழ்பரப்பிப் 10
பரிபவத்தால் வந்தெதிர்த்துத் திருவரங்கம் புகழ்விளங்கத்
தியாகவீரக் கொடியெடுத்து வாகைவீரக் கழல்கட்டித்
திக்கெட்டும் ஏவல்கேட்பச் சக்கரவெற்பில் புகழ்எறிப்பச்
செம்பொன் வீர சிம்மா சனத்துப்
புவன முழுதுடை யாளொடும் வீற்றிருந் 15
தருளிய கோப்பர கேசரி வன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள்
மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியன்
முடித்தலை யுங்கொண்டு வீராபி ஷேகமும்

---

1. புயல்வாழ்த்து மணவாளர். 2. புலியானையுஞ்சக்கரம். 3. செயலனைத்தும்.
4. திருவடிக்கிபழடைவித்து.

விஜயாபி ஷேகமும் பண்ணி யருளின 20
ஸ்ரீ திரிபுவன வீரதேவர்க்கு யாண்டு 34 ஆவது
கன்னி ஞாயிற்று பூர்வபட்சத்துத் தசமியும்
திங்கட்கிழமையும் பெற்ற திருவோணத்து நாள்......

## 40

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருவாய்க் கேழ்வி முன்னாகத்
திரிபுவனச் சக்கர வர்த்திகள்
மதுரையும் ஈழமும் கருவூரும்
பாண்டியன் முடித்தலையுங் கொண்டு
வீராபி ஷேகமும் விசயாபி ஷேகமும் 5
பண்ணியருளிய திரிபுவன வீரதேவர்க்கு
யாண்டு 33 ஆவது.........

# வீரதேவன்

### முன்னுரை

1. 'புயல் வாய்த்து மண் வளர' 2. 'திருவாய்க் கேழ்வி முன்னாக'

என்று தொடங்கும் இரு மெய்க்கீர்த்திகளும் முடிவு அடிகளுள் வீர தேவர்க்கு ஆண்டு, 34, 33 என்று குறிப்பிடுகின்றன. செய்தி களையும் ஆட்சி ஆண்டையும் முழுமையாக நோக்க இதே தொடர் களோடு தொடங்கும் மூன்றாம் குலோத்துங்கனுடைய மெய்க் கீர்த்திகளோடு தொடர்புடையவை என்பது புலனாகும். எனவே இவையும் மூன்றாம் குலோத்துங்கனுக்குரியவையாகக் கொள்ளப் படுகின்றன. வீரதேவன் என்ற பெயர் மூன்றாம் குலோத்துங்க னின் சிறப்புப் பெயராக இருக்கக்கூடும். எனவே இவை இரண்டும் தனியாக விளக்கப்படுகின்றன.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

1-6. "புயல்வாய்த்து மண்வளர.........இருள் நீக்கி"

மழை வளம் சிறந்தது. நாடு செழித்தது. புலிக்கொடியுடைய சோழனின் ஆணையும் செங்கோலும் சிறந்து விளங்கின. செல்வம் ஓங்கியது. வெண்கொற்றக் குடையானது நிலவு போலத் தண்ணளி செய்தது. வேல் ஏந்திய மன்னர் பலரும் வணங்கி நின்றனர். நில மகள் மகிழுமாறு மனுநெறி தழைத்தது. நாட்டில் துன்பம் நீங்கி யது. இவை வீர தேவனின் ஆட்சியில் நடைபெற்ற இயல்புகள்.

7-21. "தென் திசையில் போந்தண்டு.....வீர தேவர்க்கு"

சிறப்பான ஆட்சி செலுத்திய வீரதேவன் தன் பெரும்படை யுடன் தென் திசையில் போர் மேல் சென்றான். தென்னவனைச் சிறை செய்தான். இவனால் சிறை செய்யப்பட்டவன் வீரபாண்டிய னாக இருத்தல் கூடும். பிறகு வீரதேவனின் பெரும்படை வடநாடு நோக்கிப் புறப்பட்டது. மேருமலையைத் தாண்டிச் சென்று தன் பெரும்புகழை நிலைநிறுத்தியது. பின் திருவாங்கத்தையடைந்து, சக்கரவெற்பில் புகழ்க் கொடி பறக்குமாறு செய்தது. இவ்வாறான பல வகை வெற்றிகளோடு நாடு திரும்பிய சோழன் 'மதுரையும் ஈழ மும் கருவூரும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய சோழன்' என்ற சிறப்புப் பெயரோடு வீராபிஷேகமும் செய்து கொண்டான்.

### மெய்க்கீர்த்தி-2

1-6. "திருவாய்க் கேழ்விமுன்னாக.....வீரதேவர்க்கு"

வீரதேவனது ஆட்சியில் கேள்விஞானம் உயர்ந்து விளங்கியது. திரிபுவனச் சக்கரவர்த்தியாகிய வீரதேவன் (மூன்றாம் குலோத் துங்கன்) 'மதுரையும் ஈழமும் கருவூரும், பாண்டியன் முடித்தலையும் கொண்டருளிய சோழன்' என்ற சிறப்புப் பெயரினைப் பெற்று, வீராபிஷேகமும் விசையாபிஷேகமும் செய்து விளங்கினான்.

# மூன்றாம் இராசராசன்

(கி.பி. 1216 - 1256)

மெய்க்கீர்த்தி-1

ஸ்வஸ்திஸ்ரீ

சீர்மன்னி இருநான்கு திசைவிளங்கு திருமடந்தையும்
போர்மன்னு ஜெயமடந்தையும் (புகழ்மடந்தையும்)
மணம்புணர
அருமறைகள் நெறிவாழ அருந்தமிழோர் கிளைவாழ
பொருவில்மனு நெறிவாழப் பொன்மகுடம் கவித்தருளி
வெங்கோபக் கருங்கலிப்பகை [1]விடநாக வடிப்படர 5
செங்கோலும் [2]கொடிப்புலியும் திகிரிவரை வரம்பள்க்க
எண்முகத் தெண்கரிக்கும் |எடுத்ததனிக் கூடமென
அண்டகூட [3]முறநிமிர்ந்து முழுமதிக்குடை நின்[4]றழ
கெரிப்ப
நடுவுநின்று குடிகாத்து நன்றாற்றுந் திறம்பொருது
கடிதிழைத்த உட்பகையும் [5]புறப்பகையும் அறக்
கடிந்து 10
பொலந்திசதி பதினான்கு புவனங்களும் அடிப்படுத்தி
இயங்குகதிர் வடமேருவில் இருந்தவயப்புலி
யேறென்னச்
செம்பொன்வீர சிம்மாசனத்து புவனமுழு
துடையாளொடும்
வீற்றிருந் தருளியகோ விராசகேசரி வன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் இராசராச தேவர்க்கு 15
யாண்டு 16 ஆவது.........

---

1. விடநாகடிப்படர். 2. கொடிப்பிலியும். 3. முறநிமிர்த்து. 4. றழகெறிப்ப.
5. புறப்பகையும் மறக்கடிந்து.

**மெய்க்கீர்த்தி-2**

ஸ்வஸ்தி ஸ்ரீ

உத்தம நீதி உயர்பெருங் கீர்த்தி
முத்தமிழ் மாலை முழுமையும் நிரந்த
சித்திர மேழிப் பெரியநாட் டோமும்
நான்குதிசைப் பதினெண் பூமித் திசைத்திசை
விளங்குதிசை ஆயிரத் தைஞ்ஞூற்றுவ ரோமும் 5
பவமண் டலத்து நாட்டுச் செட்டிகள்
தவனச் செட்டிகள் ஜயபா லர்களும்
நம்மக்கள் அறுபத்து நாலுமுனை யுமுனை
வீரக் கொடியாரும் பேரருஞ் சிற்பரும்
சிறப்புடைக் கலனை யாரும் கோலக் 10
காரார் கற்பகக் காவில்
நிறைவற நிறைந்து குறைவறக் கூடி
இருந்த இராசராசப் பெருநிரவியோம்
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராசராச தேவர்க்கு
யாண்டு பத்தொன்பதாவது கும்ப நாயிற்றுப்
பூர்வபட்சத்து பஞ்சமியும் வியாழக்கிழமையும்.........

# மூன்றாம் இராசராசன்

**முன்னுரை**

மூன்றாம் குலோத்துங்கனின் ஆட்சிக்காலத்திலேயே மூன்றாம் இராசராசன் இளவரசுப் பட்டம் பெற்றிருந்தான். குலோத்துங்கன் இறந்த பிறகு சோழப் பேரரசின் மன்னனானான். அரச முறைப்படி இச்செய்திகளை நோக்க மூன்றாம் குலோத்துங்கன் மகன் மூன்றாம் இராசராசன் என்று கொள்ளப்படுகிறது. மேலும் சோழ மன்னர் மரபுப்படி மூன்றாம் குலோத்துங்கன் பரகேசரிப்பட்டமும் மூன்றாம் இராசராசன் இராசகேசரிப் பட்டமும் பெற்றிருந்தனர் என்பதும் இதனை வலியுறுத்தும்.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

**1-4. "சீர்மன்னி இருநான்கு......கவித்தருளி"**

மூன்றாம் இராசராசனது ஆட்சியில் எட்டுத் திசையிலும் அவனது புகழ் பரவியிருந்தது. செல்வ மகளும் வெற்றிமடந்தையும் புகழின் செல்வியும் அவனை விரும்பி அடைந்தனர். மறைநெறியும் மனுநெறியும் சிறக்க, தமிழர் சுற்றம் உயர சோழப் பேரரசின் முடிசூடி விளங்கினான் இராசராசன்.

**5-10. "வெங்கோபக் கருங்கலி......அறக்கடிந்து"**

கொடிய கலியானது பாதாள உலகில் சென்று ஒளிந்தது. சோழனுடைய செங்கோலும் புலிக்கொடியும் மேருமலை வரை பரவி நாட்டின் எல்லையைக் குறித்தன. வெண்கொற்றக் குடையானது முழுமதி போல ஆகாயம் வரை உயர்ந்து நின்று தண்ணளி செய்தது. குடையின் பரந்த நிலையானது எட்டுத்திக்கு யானைகளுக்காக எழுப்பப்பட்ட கூடம் போல விளங்கியது. வெண்கொற்றக் குடையிடையே விளங்கிய இராசராசன் தன்திறத்தினால் குடிமக்களை நன்கு பாதுகாத்து நாட்டில் தோன்றிய உட்பகை, புறப்பகைகளாகிய இரு வகைப் பகைகளையும் நாட்டில் இல்லாதவாறு நீக்கினான்.

**11-15. "பொலந்திசதி பதினான்கு......இராசராச தேவர்க்கு"**

மேலுலகு கீழுலகு என்னும் ஈரேழு பதினான்கு உலகங்களையும் தன் ஆட்சிக்கு உட்படுத்திய இராசராசன், சூரியன் இயங்கும் மலையாகிய மேருமலையில் வீற்றிருக்கும் ஆண் புலியைப் போன்று வீரசிம்மாசனத்தில் வீற்றிருந்தான். தேவியாகிய புவனமுழுதுடையாளும் உடன் வீற்றிருந்தாள். இராசகேசரி என்னும் சோழமரபின் பட்டமும் பெற்றிருந்தான் மூன்றாம் இராசரான்.

### மெய்க்கீர்த்தி-2

**1-15. "உத்தமநீதி........தேவர்க்கு"**

மனுநெறி தவறாது அரசு புரிந்த மூன்றாம் இராசராசன் மிகுந்த புகழ் பெற்றான். அவனது பத்தொன்பதாவது ஆட்சியாண்டில் 'கற்பகக்கா' என்னுமிடத்தில் (அரச மண்டபமாயிருத்தல் வேண்டும்) பல பகுதி மக்களும் கூடிய கூட்ட நிலையைக் குறிக்கும் மெய்க்கீர்த்தியாக அமைந்துள்ளது இம்மெய்க்கீர்த்தி. கூடியிருந்தவர்களின் விவரம்-

முத்தமிழ் நிறைந்த சித்திரமேழி என்னும் பெரிய நாட்டுப் பெருமக்கள் ;

நான்கு திசையிலுமுள்ள பதினெண் பூமிக்குரியோராகிய ஆயிரத்து ஐந்நூற்றுவராகிய பெருமக்கள் ;

பவமண்டலம் என்னும்நாட்டைச் சேர்ந்த நாட்டுச் செட்டிமார், தவனச் செட்டிமார், ஜயபாலர் ஆகிய பெருமக்கள் ;

அறுபத்து நாலு முனையிலுமிருந்துவரும் வீரக் கொடியுடையார், சிற்பக் கலைஞர், கலன்கள் செய்வோர், கோலக்காரர் ஆகிய கலைஞர் பெருமக்கள் ஆகியோர் குறைவறக் கூடியிருந்தார்கள்.

## 43

# மூன்றாம் இராசேந்திரன்

(கி. பி. 1246-1279)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

பூமியும் திருவும் தாமெய்ப்புண ா
விக்கிர மத்தால் சக்கரம் நடாத்தி
விசயாபி ஷேகம் பண்ணி
வீரசிம்மா சனத்துப்
புவன முழுதுடை யாளொடும்
வீற்றிருந் தருளிய கோவிராச கேசரி
வன்மரான இராசேந்திர சோழ தேவர்க்கு
யாண்டு நாலாவது . . . .

## 44

**மெய்க்கீர்த்தி–2**

ஸ்வஸ்திஸ்ரீ

பூமியும் திருவும் தாமெய்ப் புணர்ந்து
விக்கிர மத்தால் சக்கரம் நடாத்தி
விசயசிம் மாசனத்து வீற்றிருந் தருளின
கோப்பர கேசரி வன்ம ரான
உடையார் ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர்க்கு
யாண்டு இரண்டாவது……

# மூன்றாம் இராசேந்திரன்

## முன்னுரை

மூன்றாம் இராசேந்திரனின் இரண்டாமாண்டு மெய்க்கீர்த்தி ஒன்று பரகேசரிவர்மன் என்று குறிப்பிடுவதை நோக்க இவன் மூன்றாம் இராசராசனின் மகன் எனத் துணிய முடிகிறது. ஆனால் இதே செய்திகளோடு விசயாபிஷேகம் பண்ணி, புவனமுழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய என்னும் தொடர்கள் மிகுதியாக உள்ள இவனது நாலாமாண்டு மெய்க்கீர்த்தி இவனை இராசகேசரிவர்மன் என்று குறிப்பிடுகிறது.

## மெய்க்கீர்த்தி—விளக்கம்

மூன்றாம் இராசேந்திரன் மிகுந்த வீரமுடையவன் ஆதலின் பெரும் வெற்றிகளைப் பெற்று வெற்றி விழா எடுத்தான். வென்ற நாடுகள் எதுவும் மெய்க்கீர்த்தியுள் காணப் பெறவில்லை. செல்வமும் நிலவுலகும் அவனிடம் வளம் பெற்றிருந்தன. புவனமுழுதுடையாள் என்னும் தேவியுடன் அரசு வீற்றிருந்தான் என்னும் செய்திகளே மெய்க்கீர்த்திகளால் அறியக் கூடியவை.

1

# பராந்தக நெடுஞ்சடையன்

(கி.பி. 768-815)

## வேள்விக்குடிச் செப்பேடு

மெய்க்கீர்த்தி-1

கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர்க் குழாந்
தவிர்த்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பாண்டியாதி
ராசனால்
நாகமா மலர்ச்சோலை நளிர்சினைமிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமென்னும் பழனக்கிடக்கை நீர்நாட்டுச்
சொற்கணாளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம்
பிழையாத 5
கொற்கைக்கிழா னற்கொற்றன் கொண்டவேள்வி முற்று
விக்கக்
கேள்வியந்த ணாளர்முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து
வேள்விச்சாலை முன்புநின்று வேள்விக்குடி யென்றப்
பதியைச்
[1]சீரோடு திருவளரச் செய்தார்வேந்த [2]னப்பொழுதே
நீரோடட்டிக் கொடுத்தமையா னீடுபுக்தி துய்த்தபின்...10
அளவரிய ஆதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்
களப்ரனென்னும் [3]கலியரசன் கைக்கொண்டதனை
யிறக்கியபின்
படுகடன்முளைத்த பருதிபோல பாண்டியாதிராசன்
[4]வெளிப்பட்டு
விடுகதி ரவிரொளி விலகவீற் றிருந்து
வேலை சூழ்ந்த வியலிடத்துக் 15

1. சீரொடு. 2. னப்பொழுதேய். 3. கலியரைசன். 4. வெளிற்பட்டு.

கோவும் குறும்பும் பாவுடன் முறுக்கிச்
செங்கோ லோச்சி வெண்குடை நீழற்
றங்கொலி நிறைந்த தரணி மங்கையைப்
பிறர்பா லுரிமை திறவிதின் நீக்கித்
தன்பா லுரிமை நன்கன மமைத்த 20
மானம் பேர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த
கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்
மற்றவற்கு மகனாகி மகீதலம் பொதுநீக்கி
மலர் [5]மங்கையொடு மணனயர்ந்த 25
அற்றமிலடர் வேற்றானை யாதிராச னவனிசூளாமணி
எத்திறத்து மிகலழிக்கும் மத்தயானை மாறவர்மன் ;
மற்றவர்க்கு
மருவினியவொரு மகனாகி மண்மகளை மறுக்கடிந்து
விக்ரமத்தின் [6]வெளிப்பட்டு [7]விலங்கல்வெல்பொறி
வேந்தர்வேந்தன்
சிலைத்தடக்கைக் கொலைக்களிற்றுச் செழியன்வானவன்
செங்கோற்சேந்தன் ; 30
மற்றவற்குப் பழிப்பின்றி வழித்தோன்றி
உதயகிரி மத்யமத் துறுசுடர்போலத்
தெற்றென்று திசைநடுங்க மற்றவன் [6]வெளிப்பட்டுச்
சூழியானை செலவுந்திப் பாழிவா யமர்கடந்து
வில்வேலி கடற்றானையை நெல்வேலிச்
செருவென்றும் 35
விரவிவந் தடையாத பரவரைப் பாழ்படுத்தும்
அறுகாலினம் புடைதிளைக்குங் குறுநாட்டவர் குலங்
கெடுத்தும்
கைந்நலத்த களிறுந்திச் செந்நிலத்துச் செருவென்றும்
பாரளவுந் தனிச்செங்கோற் கேரளனைப் பலமுறையும்
உரிமைச்சுற்றமோ டவர் [8]யானையும் [9]புரிசையுமதிற்
புலியூரும் 40
பகல்நாழிகை யிறவாமை [10]இகலாழியுள் வென்று
கொண்டும்

---

5. மங்கைஒடு. 6. வெளிற்பட்டு. 7. விலங்கல் வேல்பொறி. 8. யானைஉம்.
9. புரிசைம்மதிற்புலிஊர்ப்ப கனாழிகை. 10. இகலாழி உள்வென்று.

[11]வேலாழியும் வியன்பறம்பு மேலாமைசென் றெறிந்
தழித்தும்
இரணியகர்ப்பமுந் துலாபாரமுந் தரணிமிசைப் பல
செய்தும்
அந்தணர்க்கும் அசக்தர்க்கும் [12]வந்தணைகவென்
றீத்தளித்த
மகரிகையணி மணிநெடுமுடி அரிகேசரி யசமசமன்
சிரீமாறவர்மன் 45
மற்றவற்கு மகனாகிக் கொற்றவேல் வலனேந்திப்
பொருதூருங் கடற்றானையை மருதூருண் மாண்பழித்
தாய்வேளை யகப்படஎய் யென்னாமை யெறிந்தழித்துச்
செங்கொடியும் புதான்கோட்டுஞ் செருவென்றவர் சினந்
தவிர்த்துக்
கொங்கலரும் நறும்பொழில்வாய்க் [13]குயிலோடு
மயிலகவும் 50
மங்கலபுரமெனு [14]மாநகருண் மகாரதரை எறிந்தழித்து
அறைகடல் வளாகம் பொதுமொழி யகற்றிச்
[15]சிலையும் புலியுங் கயலுஞ் சென்று
நிலையமை நெடுவரை [16]யிடவயிற் கிடாஅய்
மண்ணினி தாண்ட தண்ணளிச் செங்கோல் 55
தென்ன வானவன் செம்பியன் சோழன்
மன்னர் மன்னன் மதுரகரு நாடகன்
கொன்னவின்ற நெடுஞ்சுடர்வேற் கொங்கர்கோமான்
கோச்சடையன் ;
மற்றவற்குப் புத்திரனாய் மண்மகளது பொருட்டாக
மத்தயானை செலவுந்தி மானவேல் வலனேந்திக் 60
கடுவிசையா லெதிர்ந்தவரை நெடுவயல்வாய் நிகரழித்து
கறுவடைந்த மனத்தவரைக் குறுமடைவாய்க்
கூர்ப்பழித்து
[17]மன்னிக்குறிச்சியுந் திருமங்கையு முன்னின்றவர்
முரணழித்து
மேவலோர் [18]கடற்றானையோ டேற்றெதிரே வந்தவரைப்
பூவலூர்ப் புறங்கண்டும் 65

---

11. வேலாழிஉம். 12. வந்தணைக என்றீத்தளித்த. 13. குஇலொடுமஇலகவு.
14. மகாநகருண். 15. சிலைஉம் புலிஉம். 16. இடவஇற். 17. மன்னிகுறிச்சி
உந்திருமங்கைஉ. 18. கடற்றானை ஒடேற்றெதிரேய் வந்தவரை.

கொடும்புரிசை நெடுங்கிடங்கிற் கொடும்பா ளூர்க்கூடார்
[19]கடும்பரியுங் கடுங்களிறுங் கதிர்வேலிற் கைக்கொண்டும்
[20]செழும்புரவிப் பல்லவனைக் குழும்பூருட் டேசழிய
எண் ணிறந்த மால்களிறும் இவுளிகளும் பலகவர்ந்தும்
தரியலராய்த் தறித்தவரைப் பெரியலூர்ப் பீடழித்தும் 70
[21]பூவிரியும் பொழிற்சோலைக் காவிரியைக் கடந்திட்டு
அழகமைந்த [22]வார்சிலையின் மழகொங்கம் அடிப்
படுத்தும்
ஈண்டொளிய மணியிமைக்கு மெழிலமைந்த நெடும்
புரிசைப்
பாண்டிக் [23]கொடுமுடி சென்றெய்திப் பசுபதியது
[24]பதும பாதம் பணிந்தேத்திக் 75
[25]கனகராசியும் கதிர்மணியும் மனமகிழக் கொடுத்திட்டுங்
கொங்கர்வன் நறுங்கண் ணிக் கங்கராசனொடு
சம்பந்தஞ்செய்தும்
எண் ணிறந்தன கோசககிரமும் இரணியகர்ப்பமுந்
துலாபாரமும்
மண் ணின்மிசைப் பலசெய்து மறைநாவினோர் குறை
தீர்த்தும்
கூடல்வஞ்சி கோழியென்னு மாடமா மதில்புதுக்கியும் 80
அறைகடல் வளாகங் குறையா தாண்ட
மன்னர் மன்னன் றென்னவர் மருகன்
மான வெண்குடை மான்றேர் மாறன் ;
மற்றவற்கு மகனாகி மாலுருவின் [26]வெளிப்பட்டுக்
கொற்றமூன் றுடனியம்பக் குளிர்வெண்குடை மண்
காப்பப் 85
பூமகளும் புலமகளும் நாமகளும் நலனேத்தக்
கலியரைசன் வலிதளரப் பொலிவினொடு வீற்றிருந்து
கருங்கட லுடுத்த பெருங்கண் ஞாலத்து
நாற்பெரும் [27]படையும் பாற்படப் பரப்பிக்
கருதாதுவந் தெதிர்மலைந்த காடவனைக்
காடடையப் 90

19. கடும்பரிஉங். 20. சேவ......கூடாத. 21. பூவிரிஉம். 22. வார்சிலைஇன். 23. கொடுமிடி. 24. பத்மபாதம். 25. கனகராசிஉங் கதிர்மணிஉம் மனமகுழக் குடுத்திட்டுங். 26. வெளிர்ப்பட்டு. 27. படைஉம்.

[28]பூவிரியும் புனற்கழனிக் காவிரியின் றெண்கரைமேல்
தண்ணாக மலர்ச்சோலைப் பெண்ணாகடத் தமர்
வென்றும்
[29]தீவாய் அயிலேந்தித் திளைத்தெதிரே வந்திறுத்த
ஆய்வேளையுங் குறும்பரையு மடலமரு ளழித்தோட்டிக்
காட்டுக்குறும்பு சென்றடைய நாட்டுக்குறும்பிற் செரு
வென்றும் 95
அறைகடல் வளாக மொருமொழிக் கொளீஇய
சிலைமலி தடக்கைத் தென்ன வானவன்
அவனே
சிரீவரன் சிரீமனோகரன் சினச்சோழன் புனப்பூழியன்
வீதகன்மஷன் விநயவிச்ருதன் விக்ரமபாரகன்
வீரபுரோகன்
மருத்பலன் மான்யசாசனன் மனூபமன் மர்த்தித
வீரன் 100
கிரிஸ்திரன் கீதிகிந்நரன் கிருபாலயன் கிருதாபதானன்
கலிப்பகை கண்டகநிஷ்டூரன் காரியதக்ஷிணன் கார்முக
பார்த்தன்
பராந்தகன் பண்டிதவத்ஸலன் பரிபூர்ணன் பாபபீரு
குரையுறு கடற்படைத்தானைக் குணக்கிருகியன்
கூடநிர்ணயன்
நிறையுறு மலர் மணிநீண்முடி நேரியர்கோ னெடுஞ்
சடையன் 105
மற்றவன்றன் ராஜ்யவத்சரம் மூன்றாவது செலாநிற்ப
ஆங்கொரு நாண்மாட மாமதில்......

28. பூவிரிஉம். 29. தீவாய்அஇலேந்தி

# பராந்தக நெடுஞ்சடையன்

## முன்னுரை

களப்பிரர் ஆட்சியை அழித்துப் பாண்டியப் பேரரசினைத் தோற்றுவித்த கடுங்கோனுக்குப் பிறகு முறையே மாறவர்மன், அவனிசூளாமணி, சேந்தன், சீமாறவர்மன், கோச்சடையன் ஆகிய மன்னர் பாண்டி மண்டலத்தை ஆண்டு வந்துள்ளனர். கோச்சடையனை அடுத்துப் பாண்டிய நாட்டை ஆண்டவன் அவன் மகன் தேர்மாறன் என்பவன். தேர்மாறனுடைய மகன் சடிலன் பராந்தகன் என்றும், பராந்தகன் நெடுஞ்சடையன் என்றும் பெயர் பெற்றவன். கங்க நாட்டு இளவரசி பூசுந்தரியின் வயிற்றுதித்தவன். அந்நெடுஞ்சடையன் வேள்விக்குடி என்னும் ஊரை ஒரு அந்தணனுக்குத் தானமாகக் கொடுத்த செய்திகளைக் கூறுவதனால் இது வேள்விக்குடிச் செப்பேடு எனப்பட்டது. முதலில் நெடுஞ்சடையனின் முன்னோர் செயல்கள் குறிப்பிடப்படுகின்றன.

## மெய்க்கீர்த்தி

பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன் வையையாற்றங் கரையில் அமைந்த வேள்விக்குடி என்னும் ஊரை நற்கொற்றன் என்பவனுக்குத் தானமாக அளித்தான். பாண்டிய நாடு களப்பிரரால் கைப்பற்றப்பட்டபோது வேள்விக்குடியும் களப்பிரருக்கு உரியதாயிற்று.

களப்பிரரை அழித்து மீண்டும் பாண்டியப் பேரரசினை நிறுவியவன் கடுங்கோன் என்னும் பாண்டியனாவான். கடுங்கோனுக்குப் பிறகு முறையே அவனிசூளாமணி, செழியன்சேந்தன் சிரீமாறவர்மன், கோச்சடையன், தேர்மாறன் ஆகியோர் பாண்டிநாட்டை ஆண்டு வந்தனர்.

தேர்மாறன் மகனே பராந்தக நெடுஞ்சடையன் என்பவன். இவன் பல்லவமன்னன் தந்தி வர்மனையும் வேணாட்டுத் தலைவன் ஆய்வேளையும் வென்று தனது நாட்டினைப் பெருக்கினான். பல வகைச் சிறப்புப் பெயர்களோடு விளங்கிய இவன் தனது மூன்றாவது ஆட்சியாண்டில் இவ்வேள்விக்குடிச் செப்பேட்டினை நிறுவினான்.

## விளக்கம்

1-10. "கொல்யானை பலவோட்டி.........துய்த்தபின்"

போர் யானைகள் பலவற்றைச் செலுத்திப் பகை மன்னர்கள் அனைவரையும் அழித்தவனாகிய பல்யாக முது குடுமிப் பெருவழுதி என்னும் மன்னன் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தான். இவன் வேள்விச் சாலைகள் பல அமைத்து வேள்விகள் பல இயற்றியவன். இதனை,

> "பல்சாலை முதுகுடுமியின்
> நல்வேள்வித் துறைபோகிய" [1]

என்னும் அடிகளும் உணர்த்தும்,

வானளாவிய மலர்ச் சோலைகளையுடையதும் நீர்வளமிக்க வயல்கள் நிறைந்ததுமாகிய பாகனூர்க்கூற்றம் என்பது அப்பாண்டி நாட்டைச் சார்ந்தது. தற்காலச் சோழவந்தான் பகுதியைச் சார்ந்தது அப்பாகனூர்க்கூற்றம். அப்பானூர்க்கூற்றத்துச் சிறந்து விளங்கிய கொற்கைக் கிழான் நற்கொற்றன் என்பவன் சிறந்த அறிவுடையவனாகவும், நான்மறைகூறும் ஒழுக்க நெறிகளை யுடையவனாகவும் விளங்கினான். அவனைத் தலைவனாக அமைத்து வேள்வி ஒன்றினைத் தானே முன் நின்று தொடங்கிய மன்னன், கல்வி கேள்விகளில் தேர்ந்த அந்தணாளரின் துணையால் அவ்வேள்வியை முடித்தான். அவ்வேள்வியால் நாட்டில் சீரும் சிறப்பும் செல்வமும் வளரச் செய்தான். வையை ஆற்றங் கரையில் அமைந்த இந்த இடத்திற்கு வேள்விக்குடி என்று பெயர் சூட்டி, அவ்வூரை நற்கொற்றனுக்கு நீர் வார்த்துக் கொடுத்து அவனுக்கே உரியதாக்கினான். அவன் வழியினரே அவ்வூரின் செல்வத்தை அனுபவித்து வந்தார்கள்.

### 11–12. "அளவரிய ஆதிராசரை....இறக்கிய பின்"

மிகக் கொடுமையை உடையவனாகிய களப்பிரன் என்பவன் பரம்பரையாக ஆண்டு வந்த பாண்டிய மன்னர்களை நாட்டை விட்டு நீக்கிப் பாண்டிய நாடு முழுமையையும் தனக்குச் சொந்தமாக ஆக்கிக் கொண்டான். இதே நிலையில் வேள்விக் குடியும் நற்கொற்றன் குலத்தவரிடமிருந்து களப்பிரனால் கவரப்பட்டு விட்டது. தொடர்ந்து அவனுடைய வமிசத்தவரால் ஆளப்பட்டு வந்தது.

### 13–23. "படுகடல் முளைத்த... கதிர்வேல் தென்னன்"

களப்பிரர் கவர்ந்த பாண்டிய நாட்டை மீட்க மீண்டும் ஒரு பாண்டியன் தோன்றினான். அவனே கடுங்கோன் என்பவனாவான். அவன் கடலிடை தோன்றும் கதிரவன் போலத் தோன்றினான். உலக இருளை நீக்கும் கதிரவனின் ஒளி போல, கடலால் சூழப்பட்ட இப்பரந்த உலகத்தை ஆண்டு வந்த பேரரசர்களையும் சிற்றரசர்களையும் அவர்களுடைய சேனையோடு அழித்தான். தனது வெண் கொற்றக் குடை நிழல் இருந்து செங்கோல் நடத்தி

1. மதுரைக் காஞ்சி-வரி 759.

வந்தான். அடங்காத, பணியாத மன்னர்களையெல்லாம் அடக்கிப் பணியச் செய்து அவர்களின் நகரங்களையும் அழித்து அவர்களுடைய மானத்தைக் குலைத்தான். இவ்வாறான செயல்களால் ஒளி மிக்கவளான நிலமடந்தை மற்ற மன்னர்களுக்கும் உரியவளாய் விளங்கும் பொது மடந்தை என்பதை அகற்றி அவள் தனக்கே உரியவள் என்ற நிலையை ஏற்படுத்திக் கொண்டான். இச்சிறப்புச் செயல்களால் மீண்டும் பாண்டியர் ஆட்சிக்கு அடிகோலியவன் சிறந்த படைகளையும் ஒளிமிக்க வேலையும் பெற்ற பாண்டியன் கடுங்கோன் ஆவான்.

24-27. "மற்றவற்கு மகனாகி.........மாறவர்மன்"

கடுங்கோனுக்கு மகனாகத் தோன்றியவன் அவனி சூளாமணி என்பவன். அவன் மேலும் பாண்டிய நாடாகிய நிலமடந்தையின் பொதுத் தன்மையைப் போக்கித் தனக்கே உரியவளாக ஆக்கிக் கொண்டான்; அதே போலத் திருமகளையும் தனக்கே உரியவளாக ஆக்கிக் கொண்டான். அவன் தடையில்லாமல் செயல்படும் கடல் போன்ற பெருஞ்சேனையைப் பெற்றிருந்தான். எப்படிப்பட்ட பகைவர்களையும் அழிக்கும் திறன் வாய்ந்த மத யானையை உடையவனாய் விளங்கினான். மாறவர்மன் என்ற பெயரையும் பெற்றிருந்தான்.

27-30. "மற்றவர் மருவினிய.........செங்கோல்
சேந்தன்"

மாறவர்மன் அவனி சூளாமணிக்கு இனிய மகனாகத் தோன்றியவன் செழியன் சேந்தன் என்பவன். எவ்விதக் குற்றமும் இன்றி நிலவுலகை ஆண்டவன்; வீரம் மிக்கவனாய்த் தோன்றி பகை மன்னரை அழித்தவன்; தனது வெற்றியை மலையில் பொறித்தவன்; வில்லை ஏந்திய பெரிய கையையுடையவன்; மத யானையையுடையவன்; வேந்தர் வேந்தன், செழியன் வானவன், செங்கோல் சேந்தன் என்றெல்லாம் சிறப்பிக்கப்படுபவன். இச்சிறப்புகளால் இவன் பல மன்னர்களை வென்றவன்; சேரர்களை வென்றவன்; சிறந்த செங்கோல் நடத்தியவன் என்பன தெளிவாகின்றன.

31-45. "மற்றவர்க்குப் பழிப்பின்றி.........சிரீமாற
வர்மன்"

செழியன் சேந்தனுக்குச் சிறந்த மகனாகத் தோன்றியவன் சிரீமாறவர்மன் அரிகேசரி ஆவான். அவன் மலையிடைப் பிறக்கும் கதிரவனைப் போலத் தோன்றியவன்; எல்லாத் திசை மன்னர்களும் நடுங்குமாறு பல போர்களை நிகழ்த்தியவன். அவற்றுள் முகபடாம் அணிந்த தன் யானையைச் செலுத்தி பாழி என்னுமிடத்தில் போர்

புரிந்து பெற்ற வெற்றி முதல் வெற்றியாகும். அடுத்து வில்வேலி என்னும் சேர மன்னனது கடல் போன்ற பெரும் படையோடு நெல்வேலியில் நடத்திய போரில் வாகை சூடினான். இவ்விரு போர்களும் சேரருடன் நடத்திய போர்களாகும்.

பாண்டி நாட்டின் தென் பகுதியில் இருந்து தொல்லை கொடுத்து வந்தவர்கள் பரதவர் என்னும் இனத்தவர். அவர்களே இங்கு பரவர் என்று குறிக்கப் படுபவர். அவர்களையும் அழித்தான். பரதவரை வென்ற செய்தியை,

"தென்பரதவர் மிடல் சாய"[1]
"ஒன்று மொழி ஒலி இருப்பில்
தென்பரதவர் போர் ஏறே"[2]
என்னும் அடிகளாலும் அறிய முடிகிறது.

வண்டுகள் நிறைந்த சோலை சூழ் நாடாகிய குறுநாட்டுத் தலைவர்களது குலத்தையே அழித்தான். நீண்ட துதிக்கையை யுடைய தன்னுடைய களிற்றைச் செலுத்தி செங்நிலம் என்ற இடத்தில் நடைபெற்ற போரில் வெற்றி பெற்றான். உலகம் புகழத் தனியாட்சி நடத்தி வந்த சேரர், பாண்டியர் மீது என்றுமே பகைமை பாராட்டி வந்தனர். அதனால் பலமுறை போர் தொடுத்தனர். மாறவர்மன் பல முறையும் அவர்களைத் தோற்கடித்து அவனுடைய சுற்றத்தையும் யானைகளையும் கைப்பற்றினான். உறையூருக்கு மேற்கே உள்ள மதில்களை உடைய புலியூரில் கடற்போர் புரிந்து ஒரே பகற் பொழுதில் அச்சேரர்களை வென்று வேலாழி, பறம்பு முதலிய நாடுகளையும் அழித்தான்.

மன்னர் பலரும் வணங்க மன்னர் மன்னனாய் விளங்கிய மாறவர்மன் இரணிய கருப்ப தானமும் துலாபார தானமுமாகப் பல தானங்களைச் செய்தான். அந்தணர்களையும் சக்தியற்றவர்களையும் வரவழைத்து அவர்களுக்கு வேண்டியவாறு வேண்டிய பொருளைக் கொடுத்துப் புகழ் பெற்றான். மகர வடிவமாகச் செய்யப்பட்ட மணிமுடியை அணிந்த சிரீமாறவர்மன் அரிகேசரி எனவும் அசமசமன் எனவும் பட்டங்களைப் பெற்றான்.

### 46-58. "மற்றவற்கு மகனாகி......கோச்சடையன்"

மாறவர்மனின் மகன் கோச்சடையன். இவன் வெற்றி வேலைத் தாங்கியவன். திருநெல்வேலி மாவட்டம் அம்பா சமுத்திரத்திற்கு அண்மையிலுள்ள திருப்புடைமருதூர் என்னும் மருதூரில் எதிர்த்து வந்த ஆய்வேளின் கடல் போன்ற பெருஞ்சேனையை அழித்து, தன் கைவேலை எறிந்து ஆய் வேளையும் அழித்தான். செங்கொடி,

---

1. புறம் : 378 - வரி-1. 2. மதுரைக் காஞ்சி-வரி. 143-144.

புதான்கோடு என்னும் இடங்களில் மிகவும் வெகுண்டு வந்து போர் செய்த பகைவர்களை வென்று அவர்கள் கோபத்தை அடக்கினான். திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் அமைந்துள்ள மங்கலம் என்று வழங்கும் ஊர் மங்கலாபுரம் எனப் பட்டது. குயிலும் மயிலும் நிறைந்த மலர்ச் சோலைகள் சூழ்ந்தது அந்நகரம். அவ்விடத்து எதிர்த்த மகாரதர் என்னும் சாளுக்கியரை அழித்து அப்போரில் வெற்றிமாலை சூடினான். தென் கன்னட மாவட்டத்தைச் சார்ந்து மேற்குத் தொடர்ச்சி மலையின் மேற்கே அமைந்துள்ள மங்களூரில் மாரதர் எனப்படும் மராட்டியரோடு போர் செய்து வெற்றி பெற்றான் என்ற கருத்தும் இத்தொடருக்குப் பொருத்தமாகிறது. இதுவும் சில வரலாற்று அறிஞர் கருத்தாகும். இவ்வாறான பல வெற்றிகளால் கடலால் சூழப்பட்ட இந் நிலவுலகம் எல்லாருக்கும் பொதுவானது என்ற சொல்லை அழித்து, இப்பரந்த உலகம் தனக்கே உரியது என்ற பெருமையை நிலை நாட்டினான்.

வில், புலி, கயல் ஆகிய முச்சின்னத்தையும் அடக்கிய தனது சின்னத்தை நெடிய மலைகளில் பொறிக்கச் செய்தான். சேரர், சோழர், கருநாடகர், கொங்கர் போன்ற பல மன்னர்களை வென்று வகை சூடிய கோச்சடையன் செங்கோல் தென்னன், வானவன், செம்பியன், சோழன், மன்னர்மன்னன், மதுரகருநாடகன், கொங் கர் கோமான் என்னும் சிறப்புப் பெயர்கள் பலவற்றைப் பெற்றுத் தண்ணளி செய்து நாட்டை இனிது ஆண்டான்.

### 59-83. “மற்றவற்குப் புத்தினராய்.....மான்தேர் மாறன்”

கோச்சடையனை அடுத்துப் பாண்டிய நாட்டை ஆண்டவன் அவன் மகன் தேர்மாறன் என்பவன் ஆவான். அவன் நில மகளைப் பெற விரும்பி, பெருமை பொருந்திய வேலை ஏந்திய வனாய் வலிமை மிக்க தன் யானையைச் செலுத்தி, நெடுவயல் என்னுமிடத்தில் மிகவும் கடுமையாக வந்து எதிர்த்த மன்னவர் களை வென்றான். மிகவும் வெகுண்டு போர் தொடுத்த மன்னர் களோடு குறுமடை, மன்னிக்குறிச்சி, திருமங்கை, பூவலூர் ஆகிய இடங்களில் போர் செய்து அவர்களுடைய பெருமையையும் வீரத் தையும் அழித்து, கடல் போன்ற பெருஞ்சேனை தோற்று ஓடுமாறு செய்தான். உயர்ந்த மதிலையும் ஆழ்ந்த அகழியையும் உடைய கொடும்பாளூர்ப் போரில் பகைவரின் குதிரைகளையும் யானைகளை யும் தன் வேலால் அடக்கிக் கைப்பற்றினான். விரைந்த குதிரை களையுடைய பல்லவ மன்னனைக் குழும்பூர்ப் போரில் ஒளி குன்றச் செய்து எண்ணற்ற குதிரைகளையும் யானைகளையும் கவர்ந்தான். பெரியலூரில் எதிர்த்த பகைவர் பெருமையை அழித்தான். சோலை சூழ்காவிரியாற்றைக் கடந்து சென்று, தனது அழகிய வில்லினால் மழகொங்கம் என்னும் நாட்டை அடிமைப்படுத்திக் கொண்டான்.

தஞ்சை, திருச்சி மாவட்டங்களின் எல்லைப் பகுதியாக அமைந்தது மழகொங்கம் என்னும் நாடு. பிறவாகிய நெடுவயல், திருமங்கை, கொடும்பாளூர் போல்வன திருச்சி, புதுக் கோட்டை மாவட்டங்களில் அமைந்தவை. பாண்டி மண்டலம் முழுவதை யும் கைப்பற்ற எண்ணி அவ்விடங்களில் வந்து போர் செய்த பல்லவர்கள் போரே பெரும்பான்மையாக நடைபெற்றவையாகும்.

கொங்கு நாட்டின் மீது படையெடுத்துச் செல்லுங்கால் வழியில் பாண்டிக் கொடுமுடி என்னும் பகுதியை அடைந்தான். மணிகள் பதித்துக் கட்டப்பட்டதனால் ஒளி மிக்கதும், அழகு வாய்ந்தது மாகிய பெரிய மதில்களையுடையது அப்பாண்டிக் கொடுமுடி என்னும் சிவத்தலம். அங்கு எழுந்தருளியுள்ள பசுபதி என்னும் இறைவனுடைய மலரடிகளை வணங்கித் துதித்து அவ்இறைவனின் திருப்பணிகளுக்காகப் பொற்குவியல்களையும் இரத்தின மணிகளை யும் மனம் மகிழ்ந்து வழங்கியருளினான்.

மணமிக்க மாலையணிந்த கொங்குநாட்டு மன்னன் கங்கராசன் சீபுருஷன் என்பவனோடு திருமண உறவு பூண்டு அக்கங்கராசன் மகளாகிய பூசுந்தரியை மணந்தான்.

ஆயிரம் பசுக்களைத் தானமாகக் கொடுப்பது கோசகஸ்ரம் என்னும் தானமாகும். அத்தானம் பலவற்றைச் செய்தான். அதா வது பல ஆயிரம் பசுக்களை வழங்கினான். இதே போல இரணிய கர்ப்பம், துலாபாரம் என்னும் பல தானங்களைச் செய்து வேத மோதும் அந்தணர்களின் வறுமையை நீக்கினான். கூடல், வஞ்சி, கோழி என்னும் மூன்று பெரும் நகரங்களில் அமைந்த மாளிகைகளை யும் உயர்ந்த மதில்களையும் புதுப்பித்து, இந்நிலவுலகத்தில் எவ் விதக் குறைபாடும் இல்லாமல் செங்கோல் செலுத்திய தேர்மாறன்; மன்னர்மன்னன், தென்னவர்மருகன், மானவெண்குடைமான் என்றெல்லாம் சிறப்பிக்கப்பட்டான். முதலாம் இராசசிம்மன் எனப் படுபவன் இவனே யாவான்.

### 84–97. “மற்றவற்கு மகனாகி...தென்ன வானவன்”

தேர்மாறன் மகன் நெடுஞ்சடையன் என்பவன் ஆவான். இவன் திருமால் போல இவ் உலகினைக் காக்க வந்து தோன்றியவன். இவனது அரண்மனையில் வீரமுரசு, வெற்றி முரசு, மணமுரசு ஆகிய மும்முரசும் என்றும் ஒலித்துக் கொண்டிருந்தன. இவனது வெண்கொற்றக்குடை இந்நிலவுலகத்தில் நல்ல பாதுகாப்பை அளித்து வந்தது. திருமகளும் நிலமகளும் கலைமகளும் இவனைப் புகழ்ந்து வாழ்ந்தனர். இவனது ஆட்சியில் கலி என்னும் கொடிய வன் தன் கொடுமையாகிய வலியினை அடியோடு இழந்தான்.

கடலால் சூழப்பட்ட இப்பரந்த நிலவுலகத்தில் எல்லா வகைச் சிறப்புகளோடும் வீற்றிருந்தான் நெடுஞ்சடையன்.

தேர், யானை, குதிரை, காலாள் என்னும் நால்வகைப் படைகளையும் நிரல்பட நிறுத்தி அரசாண்டவன் நெடுஞ்சடையன். தன் வலியும் மாற்றார் வலியும் தேராது வந்த பல்லவ மன்னன் தந்திவர்மனைக் காட்டிற்குத் துரத்தியடித்து வென்ற வெற்றியைத் தனது முதல் வெற்றியாகக் கொண்டான். இவ்வெற்றி காவிரியின் தென்கரையில் தஞ்சாவூர்க் கூற்றத்தில் உள்ள சோலை சூழ்ந்த பெண்ணாகடம் என்ற இடத்தில் நடந்த போரில் பெற்ற பெரு வெற்றியாகும். இப்போரை அடுத்துக் கூரிய வேலேந்தி வந்த வேணாட்டுத் தலைவனாகிய ஆய்வேளையும், குறும்ப நாட்டுக் குறும்பரையும் வலி குன்றச் செய்து காட்டிடை சென்று ஒளியச் செய்தான். நெடுஞ்சடையன் தன் மூன்றாம் ஆட்சியாண்டுக்குள் இவ்வெற்றிகளைப் பெற்று கடல் சூழ்ந்த இந்நிலப் பரப்பினைத் தனக்கு உரியதாக ஆக்கிக் கொண்டு தன் ஆணை நடக்குமாறு செய்தான். இதனால் தென்னவானவன் என்று சிறப்பிக்கப் பட்டான்.

### 98-103. "அவனே சிரீவரன்.........மூன்றாவது"

இப்பெருமைகளைப் பெற்ற நெடுஞ்சடையன் சிரீவரன், சிரீமனோகரன், சினச்சோழன், புனப்பூழியன் விதகன்மஷன், விநயவிச்ருதன், விக்ரம பாரகன், வீரபுரோகன், மருத்பலன், மான்ய சாசனன், மனூபமன், மர்த்தித வீரன், கிரிஸ்திரன், கீதிகிந்நரன், கிருபாலயன், கிருதாபதானன், கலிப்பகைகண்டகநிஷ்டூரன், காரிய தக்ஷிணன், கார்முகபார்த்தன், பராந்தகன், பண்டித வத்சலன், பரிபூரணன், பாபபீரு, குணக்கிருகியன், கூடநிர்ணயன், நேரியர் கோன் நெடுஞ்சடையன் என்ற சிறப்புப் பெயர்களை எல்லாம் பெற்றவனாய் மலர்மனி நீள்முடி சூடி அரசாண்டான். அவனது ஆட்சி ஆண்டு மூன்றாம் ஆண்டில் இவ்வேள்விக்குடிச் சாசனத்தை நிறுவினான்.

## 2

# சீவரமங்கலச்செப்பேடு

**மெய்க்கீர்த்தி–2**

அன்ன னாகிய அலர்கதிர் நெடுவேற்
றென்னன் வானவன் செம்பியன் வடவரை
யிருங்கய லாணை ஒருங்குட [1]னடாஅய்
ஒலிகெழு முந்நீ ருலகமுழு தளிக்கும்
வலிகெழு திணிதோண் மன்னவர் பெருமான் 5
றென்னல ராடி தேம்புனற் குறட்டிப்
பொன்மலர்ப் புறவில் வெள்ளூர் விண்ணஞ்
செழியக் குடியென் றிவற்றுட் டெவ்வ
ரழியக் கொடுஞ்சிலை அன்றுகால் வளைத்தும்
[2]மாயிரும் பெரும்புனற் காவிரி வடகரை 10
[3]ஆயிர வேலி அயிரூர் தன்னிலும்
[4]புகழி யூரிலுந் திகழ்வே லதியனை
ஓடுபுறங் கண்டவ னொலியுடை மணித்தே
ராடல் வெம்மா அவைஉடன் கவர்ந்தும்
பல்லவனுங் கேரளனு மாங்கவற்குப் பாங்காகிப் 15
[5]பல்படையொடு பார்ஞெளியப் பவ்வம்மெனப் பரந் தெழுந்து
குடபாலும் குணபாலும் மணுகவந்து விட்டிருப்ப
வெல்படையொடு மேற்சென்றங்
[6]கிருவரையும் இருபாலும் இடரெய்தப் படைவிடுத்துக்
குடகொங்கத் தடன்மன்னனைக் கொல்களிற்றொடுங் கொண்டு போந்து 20
கொடியணிமணி நெடுமாடக் கூடன்மதி லகத்துவைத்துக்
கங்கபூமி யதனளவுங் கடிமுரைசுதன் [7]பெயரறையக்
கொங்கபூமி யடிப்படுத்துக் கொடுஞ்சிலைபூட் டிழிவித்துப்
பூஞ்சோலை அணிபுறவிற் காஞ்சிவாய்ப்பே ரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையக் குன்றமன்னதோர் [8]கோயி லாக்கியும் 25

---

1. னடா. 2. மா இரும். 3. ஆ இரவேலி. 4. புகழியூரும். 5. பல்படைஒடு
6. கிருவரை உமிருபாலும்மிடரெய்த. 7. பியரறையக். 8. கோஇலாக்கிஉம்.

ஆழிமுந்நீ ரகழாக அகல்வானத் தகடுரிஞ்சும்
பாழிநீண்மதில் பரந்தோங்கிப் பகலவனு மகலவோடும்
அணியிலங்கையி லரணிதாகி
மணியிலங்கும் நெடுமாட மதில்விழிஞ மதுஅழியக்
கொற்ற வேலை உறைநீக்கி வெற்றித்தானை வேண்
மன்னனை 30
வென்றழித்தவன் [9]விழுநிதியொடு குன்றமன்ன
கொலைக்களிறுங்
கூந்தன்மாவுங் குலதனமும் நன்னாடும் அவைகொண்டும்
அரவிந்த முகத்திளையவ ரரிநெடுங்கண் ணம்புகளாற்
பொரமைந்தர் புறம்பெய்தும் பொன்மாட நெடுவீதிக்
கரவந்தபுரம் பொலிவெய்தக் கண்ணகன்றதோர் கல்லக
ழொடு 35
விசும்புதோய்ந்து முகிறுஞ்சலில் அசும்பறாத [10]வகன்
சென்னி
நெடுமதிலை வடிவமைத்தும்
ஏவமாதி விக்ரமங்க ளெத்துணையோ பலசெய்து
மணிமாடக் கூடல்புக்கு மலர்மகளொடு வீற்றிருந்து
மநுதர்சித மார்க்கத்தினால் குருசரிதம் கொண்டாடிக் 40
கண்டக சோதனை தான்செய்து கடன்ஞாலம் முழு
தளிக்கும்
பாண்டிய நாதன் பண்டித வத்சலன்
வீர புரோகன் விக்ரம பாரகன்
பராந்தகன் பரம வைஷ்ணவன் [11]ரானாகி
நின்றிலங்கும் மணிநீண்முடி நிலமன்னவனெடுஞ்
சடையற்கு 45
ராஜ்யவர்ஷம் பதினேழாவது பாற்பட்டுச் செல்லாநிற்க....

9. விழுநிதிஒடு. 10. வகன்சென்னிந் நெடுமேதிலை. 11. ரானாகிந் நின்றிலங்கு.

# பராந்தக நெடுஞ்சடையன்

## முன்னுரை

பாண்டியன் கடுங்கோன் வழி வந்த தேர்மாறன் மகனான பராந்தகன் நெடுஞ்சடையன் தனது பதினேழாவது ஆட்சியாண்டில் தென்கள வழி நாட்டைச் சேர்ந்த வேலங்குடி என்னும் ஊரின் பெயரைச் சீவரமங்கலம் என்று மாற்றி அதனைத் தானமாகக் கொடுத்த செய்தியைக் கூறுவது இச்செப்பேடு. எனவே, சீவர மங்கலம் செப்பேடு என்னும் பெயர் பெற்றது. வடமொழிப் பகுதியும் தமிழ்ப் பகுதியுமாகச் செப்பேட்டுச் செய்திகள் இரு நிலையில் வரையப்படுவது வழக்கம். அவற்றுள் ஒரு மொழிப் பகுதியில் விளங்காத செய்திகள் அல்லது அழிந்துபட்ட, விடுபட்ட செய்திகள் மற்றொரு மொழிப் பகுதித் தொடரால் விளக்கம் பெறுவது அல்லது முழுமை பெறுவது உண்டு. ஆனால் இச்செப்பேட்டுச் செய்திகள் வடமொழி, தமிழ் ஆகிய இருமொழிகளில் அமைந்தாலும் செய்திகள் கள் ஒரே தொடர்புடையனவாக உள்ளன. எனவே தமிழ்ப் பகுதி தனியே மங்கலச் சொல்லோடு தொடங்குவது போன்ற முழு அமைப்பு முறையைப் பின்பற்றியதாக அமையவில்லை. வட மொழிச் செய்திகளின் தொடர்ச்சியாக,

'அன்னனாகிய அலர்கதிர் நெடுவேல்' என்றே தொடங்குகிறது தமிழ்ப் பகுதி.

## மெய்க்கீர்த்தி

தேர்மாறன் மகனாகப் பிறந்த பராந்தக நெடுஞ்செழியன் பாண்டிய நாட்டின் மணிமுடிசூடி, பெண்ணாகடம், வெள்ளூர், விண்ணம், செழியக்குடி, அயிரூர், புகளூர் ஆகிய இடங்களில் போர் செய்து வெற்றிமாலை சூடினான். அதியமானைக் கூடல் மாநகரில் சிறைவைத்தான்.

நொய்யல் ஆற்றங்கரையிலுள்ள பேரூரில் திருமாலுக்கு ஒரு கோயில் எடுத்தான். விழிஞத்துப் போரில் ஆய்வேளை வென்று பொருள் பல கவர்ந்தான். களக்குடி நாட்டில் உள்ள கரவந்த புரத்தில் பெரிய கோட்டை ஒன்றினைக் கட்டி நாட்டைப் பாதுகாத்தான். நாட்டின் செல்வத்தைப் பெருக்கிய பாண்டியன் மனுநெறி வழுவாது அரசாண்டு பல சிறப்புப் பெயர்களைப் பெற்றான். இவனது பதினேழாம் ஆட்சியாண்டில் நிறுவப்பட்டது இச் செப்பேடு.

**விளக்கம்**

1-5. "அன்னனாகிய.....மன்னவர் பெருமான்"

அப்படிப்பட்டவனாகிய தென்னன்.........என்பதன் விளக்கம் வடமொழிப் பகுதியால் பெறப்படுவதாகும். அதாவது, விண்மீன் களுக்குத் தலைவனாகிய சந்திரனுக்கு அறிவுள்ள புதன் தோன்றி யது போல; கண்ணனிடத்தில் பிரத்யும்நன் தோன்றியது போல; முப்புரமெறித்த சிவனுக்கு வேலேந்திய குமரன் தோன்றியது போல மாறவர்மனாகிய தேர்மாறனுக்கு இந்திரன் போன்ற சடிலவர்மன் என்னும் நெடுஞ்சடையன் தோன்றினான். இவன் பகை மன்னர் களின் செருக்கை அடக்கும் பெருமை பெற்றவனாக விளங்கினான்.

அப்படிப்பட்ட பெருமைகளை உடையவனாகிய நெடுஞ்சடை யன் ஒளிமிக்க வேலாயுதத்தைத் தாங்கியவனாய் விளங்கினான். சேர சோழரை வென்று வானவன், செம்பியன் என்ற சிறப்புப் பெயர்களையும் பூண்டான். அனைத்துலகமும் தன் கீழ்க் கொண்ட தனால் இமயமலை வரையிலும் தனது மீனக் கொடியின் ஆணையே நடைபெறுமாறு செய்து, ஒலிமிக்க கடல் சூழ்ந்த இந்நிலவுலகம் முழுவதையும் காத்தருளும் வலிமை மிக்க தோள்களையுடைய மன்னவனாக விளங்கினான்.

6-9. "தென்னலராடி.....அன்றுகால் வளைத்தும்"

காவிரியின் தென் கரையில் உள்ள பெண்ணாகடம் என்ற இடத்துப் போர் முதலியவற்றில் வெற்றி மாலை சூடிய நெடுஞ்சடை யன் நீர்வளமிக்கதும், மலர்ச் சோலைகளும் மருத நிலங்களும் நிறைந் ததுமாகிய வெள்ளூரிலும் அதனை அடுத்த விண்ணம், செழியக்குடி என்ற இடங்களிலும் வந்து எதிர்த்த பகைவர்களைத் தனது கொடிய வில்லினால் அழியச் செய்தான்.

10-23. 'மாயிரும் பெரும்புனல்......பூட்டு இழிவித்து"

காவிரியின் வடகரையில் கருவூரிலிருந்து 12 கல் தொலைவில் உள்ளது அயிரூர். இதுவே ஆயிரவேலி அயிரூர் எனப்படுகிறது. கருவூருக்கு வடமேற்கே 12 கல் தூரத்திலுள்ள புகளூர் என்பது புகழியூர் என்று குறிப்படப்படுகிறது. இவை இரண்டும் திருச்சி மாவட்டத்தைச் சேர்ந்தவை. இவ் இரண்டிடங்களிலும் நடைபெற்ற போர்களில் கொங்குநாட்டு மன்னன் அதியமானைப் புறமுதுகிட்டு ஓடுமாறு செய்து அவனுடைய ஒலிக்கும் மணிகளையுடைய தேர்கள் பலவற்றையும் அவற்றில் பூட்டப்பட்ட கொடிய குதிரைகளோடு கவர்ந்து கொண்டான்.

அதியமானுக்குத் துணையாக வந்த பல்லவனும் சேரனும், கிழக்கும் மேற்குமாகிய இருபுறங்களிலும் கடல் போன்ற பெரும்படை

யுடன் வந்து நெடுஞ்சடையன் படையைத் தாக்கினர். அதிய மானை வெற்றி கண்ட அப்பெரும்படையுடன் சென்ற நெடுஞ் சடையன் தனது படையை இரண்டு திக்கிலும் அனுப்பி அவ் இரு வரின் நால்வகைப் படைகளும் துன்புறுமாறு செய்தான். மேலும் அயிரூர், புகழியூர் ஆகிய இடங்களில் தன்னிடம் தோல்வியடைந்த மேலைக் கொங்குநாட்டு மன்னனாகிய வீரம் மிக்க அதியமானை அவன் ஏறி வந்த யானையோடு பிடித்து வந்து அழகிய கொடிகள் பறக்கும் நெடிய மாளிகைகள் நிறைந்த கூடல் மாநகரத்தில் மதில் அரணுக்குள் சிறை வைத்தான்.

இவ்வாறு கொங்கு நாட்டைத் தன்னடிப் படுத்திய நெடுஞ் சடையன் கங்கநாடுவரை படையெடுத்து வென்று தன் புகழை நிலைநிறுத்தி வெற்றி முரசு அறையச் செய்தபின் தனது கொடிய வில்லின் நாணினை இறக்கினான்.

## 24–25. "பூஞ்சோலை அணிபுறவில்...கோயிலாக்கியும்"

கொங்கு நாட்டை வென்று புகழ் நிறுவிய பாண்டியன் பெரிய புராணம் கூறும் பேரூரை அடைந்து அவ்வூரில் திருமால் எழுந்தருளு வதற்குரிய குன்றை நிகர்த்ததோர் கோயிலைக் கட்டினான். சோலைகள் நிறைந்த மருதநிலமாகிய இப்பேரூர் என்பது காஞ்சி யாறு எனப்படும் நொய்யல் ஆற்றங்கரையில் உள்ளது. மேலைச் சிதம்பரம் என்றும் வழங்கப்படுகிறது.

## 26–30. "ஆழிமுந்நீர் அகழாக......வேலை உறைநீக்கி"

பேரூரில் கோயில் அமைத்தபின் வேணாட்டுச் சேரனை அடக்க எண்ணி விழிஞம் என்னும் வேணாட்டுக் கடல் துறைப்பட் டினத்தைத் தனது வேலால் அழித்தான். அவ் விழிஞம் ஆழ்கட லையே அகழியாக உடையது; வானளாவிய உயர்ந்த மதில்களை அரணாக உடையது; கதிரவன் விலகி ஓடும்படியானதும் அழகிய இலங்கையின் அரண்களை ஒத்ததுமாகிய மணிகளால் ஆன நெடிய மாடங்களையும் மதில்களையும் உடையதாக விளங்கியது.

## 30-32. "வெற்றித்தானை வேள்மன்னனை . . . . அவை கொண்டும்"

வெற்றிப்படைகளை உடையவனாகிய ஆய்வேள் என்னும் மன்னனைவென்று அவனை அழித்து, அவனது பெருஞ்செல்வம், குன்றை நிகர்த்த கொலைக்களிறுகள், பிடரி முடியையுடைய குதிரை கள், பிறவாகிய செல்வங்கள் ஆகிய அளவற்ற பொருள்களோடு அவனது நாட்டைத் தன்னடிப் படுத்திக் கொண்டான்.

## 33-37. "அரவிந்த முகத்து இளையவர்......வடி வமைத்தும்"

தென் திசையில் தான் வென்ற நாடுகளைப் பாதுகாத்தற்காக வும், பாண்டியப் பேரரசை எதிர்த்துப் பிற மன்னர்கள் நாட்டுள் நுழையாதவாறு தடுத்தற்காகவும் களக்குடி நாட்டில் கரவந்தபுரம் என்னும் நகரில் பெரிய கோட்டை ஒன்றினை அமைத்தான். செந்தாமரை மலரைப் போன்ற முகத்தினையுடைய இளமங்கையர் தங்கள் செவ்வரி படர்ந்த நெடுங்கண்களாகிய அம்புகளால் போர் புரிய, அப்போரினால் வருந்தும் வீரர்களையுடையது அக்கரவந்த புரம். அம்மகளிர் நின்று அம்புகளை எய்யும் அழகிய மாடமாளிகை களையுடைய நெடிய வீதிகளையுடையது அந்நகரம். அக்கரவந்த புரமாகிய நகரம் போலும் அழகு பெற்று விளங்குமாறு அக்கோட்டை யினை அமைத்தான் பாண்டிய மன்னன். அந்த நெடிய கோட்டை யானது மிகப் பரந்த இடப் பரப்பினை உடையது; அழகிய கல்லி னால் ஆக்கப்பட்ட அகழியையுடையது; வானளாவிய அகன்ற பெரிய மதிலினையுடையது; அம்மதில் வானளாவி முகில்கள் தங் கும் நிலையைப் பெற்றிருந்தது; அதனால் நீர்க் கசிவு நீங்காத தன்மையையுடையதாய் இருந்தது. இத்தகு சிறந்த கோட்டை நாட்டின் பாதுகாப்பாக அமைந்ததோடு அக்கரவந்தபுரத்திற்கு மேலும் அழகைத் தந்து விளங்கியது. இக்கோட்டை இன்று திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள உக்கிரன் கோட்டை என்னும் இடமாகும்.

## 38-45. "ஏவமாதி விக்கிரமங்கள்....நெடுஞ்சடையற்கு"

பகைவரை அடக்கி ஒடுக்குதல் முதலாகிய வீரச் செயல்கள் பலவற்றையும் செய்து இறுதியாக அழகிய மாடங்கள் நிறைந்த கூடல் மாநகரமாகிய தன் தலைநகரத்தை அடைந்த பாண்டியன் நெடுஞ்சடையன் திருமகளாகிய செல்வ மடந்தையைத் தனக்கே உரியவளாகக் கொண்டு அரசு வீற்றிருந்தான். மனுநெறி வழி ஒழுகி பாண்டிய குல குருவாக விளங்கிய அகத்தியரின் வரலாற்றையும் சிறப்பிக்கச் செய்தான். நாட்டை வருத்தும் செயல் ஒவ்வொன்றிற் கும் உரிய அடிப்படைக் காரணத்தையும் அறிந்து அவற்றை அறவே அகற்றி கடல் சூழ்ந்த உலகின் பாதுகாப்பை முழுமையாக மேற் கொண்டான். அதனால் பாண்டியநாதன் என்ற சிறப்பையும் பெற்றான். மேலும், பண்டித வத்சலன், வீரபுரோகன், விக்கிரம பாரகன், பராந்தகன், பரமவைஷ்ணவன் என்னும் சிறப்புப் பெயர் களைப் பெற்று, வைணவ மதத்தைத் தழுவிய மன்னனாக விளங்கி னான். இவ்வாறு பாண்டிய நாட்டின் மணிமுடி சூடி விளங்கிய நெடுஞ்சடையனது பதினேழாம் ஆட்சியாண்டில் இச்செப்பேட்டுச் செய்திகள் பொறிக்கப் பட்டன.

# 3

# சின்னமனூர்ச் சிறிய செப்பேடு

மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

அமிர்தகிரணன் அன்வயத்தில் ஆகண்டலனது அழிவகல
சமர்முகத் தசுரகணந் தலைஅழியச் சிலைகுனித்து
வடவரையது வலாரசூளிகை மணிக்கெண்டைப் பொறி
சூட்டியுந்
தென்வரைமிசைக் கும்போத்பவனது தீந்தமிழிற் செவி
கழூவியும்
ஹரிஹயன தாரம்பூண்டும் அர்த்தாசன [1]மவனோ
டேறியும் 5
சுரிவளையவன் திருமுடிமிசைத் தூணிபலபடத்
தோளோச்சியும்
ஓதமீள வேலெறிந்து [2]மோராயிரங் கிரதுச்செய்தும்
பூதகணம் பணியாண்டும் புவனதலம் பொதுநீக்கியும்
யானையாயிர [3]மையமிட்டும் அபரிமிதமதி சயங்கள்
செய்து
ஊனமில்புகழ்ப் [4]பாண்டியவம்சத் துலோகநாதர் பலர்
கழிந்தபின் 10
ஜகத்கீத யசோராசீர் [5]ஜயந்தவர்மன் மகனாகிப்
பகைப்பூபர் தலைபணிப்பப் பரமேச்வரன் வெளிப்பட்டு
அரிகேசரி அசமசமன் அலங்கிய விக்கிரமன் அகால
காலனெனத்
தனக்குரியன பலகுண நாம முலகுமுழு துகந்தேத்தப்
பராவனிப [6]குலமிறைஞ்சப் பாரகலம் பொதுநீக்கி 15
தராசுரரது இடரகலத் தனவருஷம் பொழிதற்கு
வலாஹகத்தின் [7]விரதம்பூண்டு துலாபார மினிதேறிச்
சரணிபனா யுலகளித் திரணியகர்ப்ப மிருகால்புக்கு

---

1. மவனோடேறிஉம். (யும், யிம் என்பன - உம், இம் எனவே காட்டப்படுகின்றன)
2. மோராஇரங்கிரது. 3. மைய்யமிட்டும். 4. பாண்ட்யவம்சத்தொலோகநாதர்.
5. ஜயந்தவர்ம்மன். 6. குலமிறஞ்ச. 7. விரதம்கொண்டு.

கோசகசிரத் தொடக்கத்துக் குருதானம் பலசெய்து
வாசவன்போல் வீற்றிருந்தனன் வசுதாபதி
மாறவர்மன் 20
மற்றவர்க்கு மகனாகி மதிபுரையுங் குடைநீழல்
அற்றமின்றி அவனிமண்டல முடனோம்பி அருள்பயந்து
கற்பகத்தின் விரதம்கொண்டு கலிகலுஷ மறநீக்கி
அற்பமல்லாத் திரவியம்கொடுத் தவனிசுர ரிடர்நீக்கி
கருதாது வந்தெதிர்ந்த கழல்வேந்தருடனவிய 25
மருதூரொடு குவளைமலையு மத்தவேழஞ் செலவுந்திச்*

# பராந்தக நெடுஞ்சடையன்

## முன்னுரை

மதுரை மாவட்டம், பெரியகுளம் வட்டத்திலுள்ள சின்னமனூர் என்னும் கிராமத்தில் கிடைத்த இரண்டு செப்பேடுகளுள் இது சிறிய அளவினது ஆதலின் சின்னமனூர்ச் சிறிய செப்பேடு என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இதில் நிலம் தானமாகக் கொடுக்கப்பட்டுள்ள செய்தி மட்டும் தெரிகிறது. ஆனால் தானம் வழங்கிய நிலம் எந்த இடத்தைச் சார்ந்தது; யாருக்கு அத்தானம் கொடுக்கப்பட்டது என்ற செய்திகள் கிடைக்கவில்லை. எனவே சரியான பெயர் கொடுக்க இயலாமல் கிடைத்த இடப்பெயராலேயே குறிக்கப்படுகிறது.

பாண்டியன் நெடுஞ்சடையனின் வரமங்கலம் செப்பேட்டினை எழுதிய பெரும்பணக்காரன் அரிகேசரி என்பவனே இச்செப்பேட்டினையும் எழுதியுள்ளான். எனவே இச்செப்பேட்டுச் செய்திகளும் நெடுஞ்சடையனால் வழங்கப்பட்டவையாகக் கொள்ளப்படுகின்றன.

கோச்சடையனின் பெயரனும் மாறவர்மன் எனப்படும் தேர் மாறனின் மகனுமாய்த் தோன்றியவன் பராந்தக நெடுஞ்சடையன். வேள்விக்குடிச் செப்பேடு, வரமங்கலம் செப்பேடு போன்றவற்றை அருளியவனும் இவனேயாகும்.

## மெய்க்கீர்த்தி

சந்திர குலத்தில் தோன்றிய பாண்டிய மன்னர் பலர் இமயத்தில் கயற்கொடி பொறித்தது முதலாக வியத்தகு செயல்களைச் செய்து

* இந்த இடத்தில் சில ஏடுகள் கிடைக்காதபடியால் சாசனவாசகம் தொடர்ச்சியாக இல்லை.

புகழ் பெற்றனர். அம்மன்னருள் ஜயந்தவர்மனின் மகன் பரமேசுவரன் பல சிறப்புப் பெயர்களோடு சிறந்து விளங்கினான். இவன் பொன் மழை பொழிந்து அந்தணர் துயர் நீக்கினான். வசுதாபதி மாறவர்மன் என்ற பெயர் பெற்றான்.

இம்மாறவர்மனின் மகனும் தந்தையைப் போலவே நாட்டில் குற்றம் ஏதும் நிகழாதவாறு அருளாட்சி செய்து அந்தணரை நில உலகத் தேவர்களாகப் போற்றி அறம்பல செய்து புகழ்மிகப் பெற்று மருதூர், குவளைமலை ஆகிய இடங்களில் நடைபெற்ற பெரும் போரில் வாகை சூடி விளங்கினான். (முடியவில்லை)

## விளக்கம்

### 1-10. "அமிர்த கிரணன்........பலர் கழிந்தபின்"

பாண்டியர் சந்திர குலத்தில் தோன்றியவர்கள். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடைபெற்ற போரில் இந்திரனுக்கு அழிவு நிகழாதவாறு அவனுக்குத் துணையாய் நின்று தங்கள் வில்லை வளைத்து அசுரர்க் கூட்டத்தை அழித்தவர்கள் பாண்டியர்கள். இப்பாண்டிய மரபில் வந்த மன்னர் பலர் இமய மலையின் உச்சியில் தங்கள் கயல் சின்னத்தைப் பொறித்தார்கள். தென்திசையிலுள்ள பொதிய மலையின்மீது உறையும் குடமுனியாகிய அகத்தியனது தமிழை உணர்ந்து தூய்மை அடைந்தவர்கள் அவர்கள். இந்திரனது ஆரத்தை அணிந்து அவனுக்கு நிகராக சிம்மாசனத்து அமர்ந்தவர் அப்பாண்டியர். இந்திரனது மணிமுடியில் உள்ள கிம்புரி என்னும் வளையைப் பல துண்டங்களாக ஆகுமாறு நொறுக்கினார்கள். வேலை எறிந்து பொங்கி வந்த கடல் பின்வாங்கி அடங்குமாறு செய்தார்கள். ஓராயிரம் வேள்வி செய்து, பூதகணங்களை ஏவி தங்கள் பணிகளைச் செய்யச் செய்தார்கள். இந்நிலவுலகம் யாவருக்கும் பொதுவானது என்ற நிலையை மாற்றி அதனைத் தங்களுக்கே உரியதாக ஆக்கிக் கொண்ட பெருமை உடையவர்கள் அப்பாண்டியர்கள். பாவலர்களுக்கு ஆயிரம் யானைகளை வழங்கிச் சிறப்பித்தார்கள். இவ்வாறான எண்ணற்ற வியத்தகு செயல்களைச் செய்து குறைவில்லாத புகழைப் பெற்றவர்கள் பாண்டிய குல மன்னர்கள். இத்தகு சிறப்பு வாய்ந்த மன்னர் பலர் ஆண்டு மறைந்தனர்.

### 11-15. "ஜகத்கீதய சோராசீர்........பொதுநீக்கி"

உலகம் பாடிப் போற்றும் பெரும்புகழ் படைத்த ஜயந்தவர்மனின் மகனாகிப் பகை மன்னர்கள் தலை நடுங்கும்படியாகப் பரமேசுவரன் தோன்றினான். அப்பரமேசுவரன் அரிகேசரி, அசமசமன், அலங்கிய

விக்கிரமன், அகாலகாலன் என்னும் சிறப்புப் பெயர்களைத் தன்னுடைய குணங்களுக்குப் பொருந்துமாறு பெற்றான். அதனால் அவனை உலகம் முழுவதும் புகழ்ந்து ஏத்தியது; மன்னர் பலரும் அவனை வணங்கி நின்றனர்; இந்நிலவுலகம் யாவருக்கும் பொதுவாகும் என்பதை நீக்கித் தனக்கே உரிமையுடையதாக ஆக்கிக் கொண்டான்.

16–20. "தராசுரரது இடரகல.........வசுதாபதி மாறவர்மன்"

இம்மன்னவன் அந்தணர்களின் துன்பத்தைப் போக்க வேண்டும் என்று உறுதி பூண்டான். அதற்காக மேகத்தைப் போல பொன்மழை பொழிந்து அவர்களுக்கு உதவி செய்வதையே நோன்பாகக் கொண்டு செயல்பட்டான். அதன் பயனாய்த் துலாபாரம் ஏறியும், இருமுறை இரணிய கர்ப்பம் புகுந்தும், கோச அஸ்ரம் முதலான குருதானங்கள் பலவற்றைச் செய்தும், உலக ரட்சகனாக விளங்கி உலகைக் காத்து வசுதாபதி மாறவர்மன் என்ற பெயரோடு இந்திரனைப் போல பெருமை பெற்று அரசு வீற்றிருந்தான்.

21-26. "மற்றவர்க்கு மகனாகி......வேழஞ்செல உந்தி"

இம்மாற வர்மனின் மகன் திங்களை ஒத்த தனது வெண்கொற்றக் குடையின் நிழலில் இந்நிலவுலகம் முழுவதையும் அமைத்துக் கொண்டு குற்றம் ஏதும் நிகழாவண்ணம் ஆட்சி புரிந்தான். அருள் உள்ளம் கொண்டவனாய்க் கற்பக தருவினைப் போல வரையாது வழங்க வேண்டும் என்ற பெருவிருப்பு உடையவனாய், கலியுகத்தின் மாசுகளை அறவே ஒழித்தான். நில உலகத் தேவர்களாகக் கருதப்படும் அந்தணர்களின் துன்பத்தைப் போக்க அளவற்ற செல்வத்தை வாரி வழங்கினான். தன் வலியும் மாற்றான் வலியும் ஆராயாமல் போர் தொடுத்து வந்து எதிர்த்த வீரக்கழலணிந்த மன்னர் பலரும் அழியுமாறு மருதூரிலும் குவளை மலையிலும் தனது யானைகளைச் செலுத்தி வாகை சூடினான்.

# 4

# பராந்தக வீரநாராயணன்

(கி. பி. 859-907)

## தளவாய்புரச் செப்பேடு

ஸ்வஸ்தி ஸ்ரீ

ஓங்குதிரை வியன்பரப்பில் உததிஆ லயமாகத்
தேங்கமழ் மலர்நெடுங்கட் டிசைமகளிர் மெய்க்காப்ப
விண்ணென் பெயரெய்திய மேகஜ்ஜோலி விதானத்தின்
தண்ணிழற்கீழ் சகஸ்ரபண மணிகிரணம் விளக்கிமைப்ப
புஜங்கம புரஸ்ஸர போகிஎன்னும் பொங்கணை 5
[1]மீமிசைப் பயந்தரு தும்புரு நாரதர்
பனுவ னரப்பிசை செவியுறப் பூதல
மகளொடு பூமகள் பாதஸ்பரி சனைசெய்யக்
கண்படுத்த கார்வண்ணன் திண்படைமால் ஸ்ரீபூபதி
ஆதிபுருஷன் அமரநாயகன் அழகமைநாபி
மண்டலத்துச் 10
சோதிமரகத துளைத்தாட் சுடர்பொற் றாமரைமலர்மிசை
விளைவுறு களம கணிசமென மிளிர்ந்திலங்கு
[2]சடைமுடியோ டளவியன்ற கமண்டலுவோ டக்ஷ[3]மா
லையோடு தோன்றின
சதுர்ப்புஜன் சதுர்வக்த்ரன் சதுர்வேதி சதுர்த்வயாக்ஷன்
மதுகமழ்மலர்க் கமலயோனி மனந்தந்த மாமுனிஅத்ரி 15
அநமரபிற் பலகாலந் தவஞ்செய்வுழி அவன்கண்ணில்
இருள்பருகும் பெருஞ்சோதி இந்துகிரணன் வெளிப்
பட்டனன்
மற்றவர்க்கு மகனாகிய மணிநீள்முடிப் புதனுக்குக்
கற்றைச்செங் கதிர்க்கடவுள் வழிவந்த கழல்வேந்தன்
ஏந்தெழிற்றோள் இளனொருநா ளீசனது சாபமெய்திப் 20

---

1. மீய்மிசை. 2. சடைமுடிஒடளவியன்ற. 3. மாலைஒடுதோன்றின.

பூந்தளவ மணிமுறுவற் பொன்னாகிய பொன்வயிற்றுள்
போர்வேந்தர் தலைபனிப்ப வந்துதோன்றிய புரூரவற்பின்
பார்வேந்த ரேனைப்பலரும் பார்காவல் பூண்டுய்த்தபின்
திசையானையின் கும்பகூடத் துலவியசெழு மகரக்குலம்
விசையொடு விண்மீனொடு போர்மிக்கெழுந்த கடற்
றிரைகள் 25
சென்றுதன் சேவடிபணிய அன்றுநின்ற ஒருவன்பின்
விஞ்சத்தின் [4]விஜம்பணையும் பெறல்நகுஷன் மதவிலா
சமும்
வஞ்சத்தொழில் வாதாவி சீராவியும் மகோததிகளின்
சுருங்காத பெருந்தன்மையும் சுகேதுசுதை சுந்தரதையும்
ஒருங்குமுன்னாள் [5]மடிவித்த சிறுமேனி
உயர்தவத்தோன் 30
மடலவிழ்பூ [6]மலயத்து மாமுனி [7]புரோசிதனாகக்
கடல்கடைந்து அமிர்துகொண்டுங் கயலிணைவட
வரைபொறித்தும்
ஹரிஅயன தாரம்பூண்டு [8]மவன்முடியொடு வளை
உடைத்தும்
விரிகடலை வேலின்மீட்டும் தேவாசுரஞ் செருவென்றும்
அகத்தியனொடு தமிழாய்ந்தும் மிகத்திறனுடை வேந்
தழித்தும் 35
தசவதனன் சார்பாகச் சந்துசெய்தும் தார்த்தராஷ்டிரர்
படைமுழுதும் களத்தவியப் பாரதத்துப் பகடோட்டியும்
மடைமிகுவேல் வானரத்வஜன் வசுசாப மகல்வித்தும்
அரிச்சந்திர னகரழித்தவன் பரிச்சந்தம் பலகவர்ந்தும்
நாற்கடலொரு பகலாடி நாற்கோடிபொன் னியதிநல்கி 40
நூற்கடலைக் கரைகண்டு நோன்பகடா யிரம் வழங்கியும்
உரம்போந்த [9]திண்டோளரைசுக சுரம்போகித் துறக்க
மெய்தியும்
பொன்னிமையப் பொருப்பதனில் கன்னிமையிற்
கயலெழுதியும்
பாயல்மீ மிசைநிமிர்ந்து பல்லுண்டி விருப்புற்றும்
காயல்பாய் கடல்போலக் குளம்பலவின் கரையுயரியும் 45

4. விஜ்ரும்பணையும். 5. மடிவத்த. 6. மலையத்து. 7. புரோசிதன்னாக-
8. மவன்முடி ஒடுவளை, 9. திண்டோளரைசுகள்.

மன்னெதிரா வகைவென்று தென்மதுரா புரஞ்செய்தும்
அங்கதனி லருந்தமிழ்நற் சங்கம்இரீஇத் தமிழ்வளர்த்தும்
ஆலங்கானத் தமர்வென்று ஞாலங்காவல் நன்கெய்தியும்
கடிஞாறு கவினலங்கற் களப்பாழர் குலங்களைந்தும்
முடிசூடிய முரண்மன்னர் ஏனைப்பலரு முன்னிகந்த
பின் 50
இடையாறையும் எழில்வெண்பைக் குடியிலும்வெல்
கொடிஎடுத்த
குடைவேந்தன் றிருக்குலத்துக் கோமன்னர் பலர் கழிந்த
பின்
காடவனைக் கருவூரில் கால்கலங்கக் களிறுகைத்த
கூடலர்கோன் ஸ்ரீபராந்தகன் குரைகழற்கோச் சடையற்குச்
சேயாகி வெளிப்பட்ட செங்கண்மால் ஸ்ரீவல்லபன் 55
வேய்போலும் தோளியர்கேள் வித்யாதர ஹிரண்யகர்ப்பன்
குண்ணூரி லமர்வென்றுங் குரைகடலீ ழங்கொண்டும்
விண்ணாள வில்லவற்கு விழிஞுத்து [10]விடைகொடுத்தும்
காடவனைக் கடலாணூர்ப் பீடழியப் பின்னின்றும்
குடமூட்டுவர் குணசோழர் தென்கூபகர் வடபுலவர் 60
அடலழிந்து களஞ்சேர அமர்வல்லான் மகன்படத்தன்
களிறொன்று வண்குடந்தைக் கதிகாட்டி யம்புரசீலன்
ஒளிறிலைவேல் உபாயபஹுலன் உம்பர்வான் உலக
ணைந்தபின்
மற்றவர்க்கு மகனாகிய கொற்றவனெங் கோவரகுணன்
பிள்ளைப்பிறைச் சடைக்கணிந்த பினாக பாணிஎம்
பெருமானை 65
உள்ளத்தி லினிதிருவி உலகங்காக் கின்ற நாளில்
அரவரைசன் பல்லூழி ஆயிரமா யிருந்தலையால்
பெரிதரிதின் பொறுக்கின்ற பெரும்பொறைமண் மகளைத்
தன்
[11]தொடித்தோளி லெளிது தாங்கிய தொண்டியர்கோன்
துளக்கில்லி
வடிப்படைமா னாபரணன் திருமருகன் மயிலையர்
கோன் 70
பொத்தப்பிக் குலச்சோழன் புகழ்தரு சிரீகண்டராசன்
மத்தமா மலைவலவன் மணிமகள்அக் களநிம்மடி

10. விடை குடுத்தும். 11. தொடித்தோளில்லெளிது.

திருவயிறு கருவுயிர்த்த ஸ்ரீபராந்தக மகாராசன்
விரைபரித்தேர் வீரநாரணன் முன்பிறந்த வேல்
வேந்தனைச்
செந்தாமரை மலர்ப்பழனச் செந்நிலந்தைச்
செருவென்றும் 75
கொந்தார்பூம் பொழிற்குன்றையும் குடகொங்கிலும்
பொக்கரணியும்
தென்மாயலுஞ் செழுவெண்கையும் [12]பராந்தகத்துஞ்
சிலைச்செதிர்ந்த
[13]மன்மாய் மாமிகுத்தவர் வஸ்துவா கனங்கொண்டும்
ஆறுபல தலைகண்டும் அமராலயம் பலசெய்தும்
[14]சேறுபடு வியன்கழனித் தென்விழிஞ நகர்கொண்டும் 80
கொங்கினின்று தேனூரளவுங் குடகொங்க ருடல்மடிய
வெங்கதிர்வேல் வலங்கொண்டும் வீரதுங்கனைக் குசை
கொண்டும்
எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவதானமும்
எண்ணிறந்த தடாகங்களும் [15]இருநிலத்தி லியற்றுவித்தும்
நின்றபெரும் புகழாலும் நிதிவழங்கு கொடையாலும் 85
வென்றிப்போர்த் திருவாலும் வேல்வேந்தரில் மேம்பட்ட
கதிரார்கடுஞ் சுடரிலைவேல் கலிப்பகை [16]கண்டருள்
கண்டன்
மதுராபுர பரமேச்வரன் மாநிமகர கேதனன்தன்
செங்கோல்யாண்டு நாற்பதின்மேல் மூன்றோ
டீர்யாண்டில்

12. பராந்தகனதுஞ். 13. மன்மாயாமிகுத்தவர். 14. செறுபடு. 15. இருநிலத்தியற்றுவித்தும். 16. கண்டரொள்கண்டன்.

# பராந்தக வீர நாராயணன்

## முன்னுரை

திருமங்கலம், சோமாசிக் குறிச்சி ஆகிய ஊர்களைப் பராந்தக வீர நாராயணன் அந்தணருக்குப் பிரமதேயமாகக் கொடுக்கப் பெற்ற செய்தியைக் கூறுவது இச்செப்பேடு. இவை திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த கோவில்பட்டி வட்டத்தில் உள்ள தளவாய் புரம் என்னும் ஊரின் புறத்தே கண்டெடுக்கப்பட்டன. எனவே இவற்றிற்குத் தளவாய்புரச் செப்பேடு என்று பெயர் கொடுக்கப் பட்டுவிட்டது. இதன் முதற் பகுதி வீர நாராயணனின் மெய்க் கீர்த்தியாகவே அமைந்துள்ளது. சீமாறன் சீவல்லபனின் மகனும் சிவபக்தனாக விளங்கிய வரகுணனின் இளவலுமாகிய வீர நாராயணன் பாட்டன் பெயரையும் இணைத்துப் பராந்தக வீர நாராயணன் என்ற பெயரினைப் பெற்றான். பொத்தப்பிக்குலச் சோழன் ஸ்ரீ கண்டன் மகளாகிய அக்கள நிம்மடி என்பாள் இவன் தாயாவாள்.

## மெய்க்கீர்த்தி

இவனது மெய்க்கீர்த்தி 'ஓங்குதிரை வியன் பரப்பில் உததி ஆலயமாக' என்னும் மதுரைக் காஞ்சியின் தொடக்க அடியை யுடையதாய்த் தொடங்குகிறது. முதலில் பாண்டியரது குலம் புராண மரபுப்படி விளக்கப் படுகிறது. அதாவது திருமால், பிரமன், அத்திரிமுனி, சந்திரன், புதன், புரூரவன் போன்றவர்களின் பிறப்பு முறையானது விளக்கப்படுகிறது. அடுத்து, பாண்டியர்குலத்திற் குரிய குருவாக விளங்கிய அகத்திய முனிவரின் சிறப்புச் செயல்கள் எடுத்துக் காட்டப்படுகின்றன. முற்காலப் பாண்டிய மன்னர்களின் வீரச் செயல்களாக இருபதிற்கும் மேற்பட்ட செய்திகள் தொகுத்துக் கூறப்படுகின்ற பகுதி புராணக் கருத்துக்களை உள்ளடக்கியதாகக் காணப்படுகிறது.

களப்பிரரை அழித்து மீண்டும் பாண்டியப் பேரரசை நிறுவியவன் கடுங்கோன். அவனுக்குப்பின் அவனி சூளாமணி, செழியன்சேந் தன், அரிகேசரி போன்ற பல மன்னர் ஆண்டனர். அவர்கள் வழித் தோன்றலாக விளங்கினான் சிரீபராந்தகன். அவன் மகன் சீமாறன் சீவல்லபன் என்பவன். இவன் கழுதூரில் இறந்துபட்டான். அவன் மக்கள் இருவர். ஒருவன் வரகுணன்; இளையோன் வீரநாரணன். அக்கள நிம்மடி என்பவள் வீரநாரணனின் தாய். அண்ணன் வரகுணனை வென்று அரசுரிமை பெற்ற வீரநாரணன் குன்றை முதல் விழிஞம் ஈறாகப் பலவிடத்தும் நடைபெற்ற போர்களில் வாகை

சூடினான். தன் தந்தையைத் தோற்கடித்த நந்திவர்மனின் மகன் நிருபதுங்கனை வென்றான். பல அறச்செயல்களைப் புரிந்த இவன் பல சிறப்புப் பெயர்களைப் பெற்றுத் தனது நாற்பத்தைந் தாவது ஆட்சியாண்டில் இச்செப்பேட்டுச் செய்தியை நிறுவி னான்.

### விளக்கம்

#### 1–10. "ஓங்குதிரை வியன்பரப்பில்......அமரநாயகன்"

இவ்வடிகளுள் திருமாலின் தோற்றம் விளக்கப்படுகிறது. உயர்ந்த அலைகளையுடைய கடலால் சூழப்பட்ட இப்பரந்த உலகத் தில் கடலையே தனது இருப்பிடமாகக் கொண்டு அக்கடலில் துயில் கொண்டுள்ளவன் நீலமேகவண்ணன். அவன் வலிமை மிக்க ஆயுதங்களைத் தரித்தவன் ; திருமால் என்னும் பெயர் பெற்றவன் ; திருமகள், நிலமகள் ஆகியோரின் தலைவனாக விளங்குபவன் ; உலகின் முதல்வன் ; தேவர்களுக்குத் தலைவன். அத்திருமால் துயில் கொண்டுள்ள முறைமையாவது - மணமிக்க மலர் போன்ற நீண்ட கண்களையுடைய திசைமகளிர் மெய்க்காப்பாளர்களாக விளங்க, மேகமாகிய தோரணங்களையுடையதும் விண் என்ற பெய ரையுடையதுமாகிய மேற்கட்டின் குளிர்ந்த நிழலில் துயில் கொண் டுள்ளான். ஆதிசேடனின் ஆயிரம் படங்களில் உள்ள இரத்தினங் கள் விளக்காகி ஒளி வீசுகின்றன ; அந்த ஆதிசேடனாகிய பாம்பு களின் தலைவன் படுக்கையாக அமைந்தான். தும்புருநாரதனின் இனிய பாடலையும், வீணையின் இனிய ஓசையையும் செவி மடுத்து நிலமகளும் திருமகளும் தனது திருவடிகளை வருடி நிற்கத் துயில் கொண்டான்.

#### 10-15. "அழகமை நாபி மண்டலத்து.....கமல யோனி"

அக்கார் வண்ணனுடைய அழகிய உந்திச்சுழியில் ஒளிமிக்க மரகதம் போன்ற பசுமை நிறத்தையும் துளைகளையும் உடைய தாமரைத் தண்டில் பொற்றாமரை மலர் மலர்ந்து விளங்கியது. தேன் நிறைந்த அக்கமல மலரையே தன் பிறப்பிடமாகக் கொண்டு தோன் றினான் பிரமன். அவன் வளம் மிக்கு விளையும் நற்கதிர் போலும் விளங்கும் சடைமுடியுடன் அளவோடு கூடிய கமண்டலத்தையும் தாமரை மணிமாலையையும் உடையவனாய்த் தோன்றினான் ; நான்கு முகங்களையும், நான்கு புயங்களையும், எட்டுக் கண்களை யும் உடையவனாய் நான்கு வேதங்களோடு தோன்றினான். இவற் றால் அவன் சதுர்ப்புஜன், சதுர்வக்த்ரன், சதுர்த்வயாக்ஷன், சதுர் வேதி, கமலயோனி என்ற பெயர்களைப் பெற்றான்.

#### 15–17. "மனந்தந்த மாமுனி......வெளிப்பட்டனன்"

இந்த பிரமனுடைய மனத்திலிருந்து தோன்றியவன் அத்திரி முனிவன். இம்முனிவன் பலகாலம் தவஞ்செய்ய அவன் கண்களிலிருந்து இவ் உலக இருளை நீக்கும் பெருஞ்சுடராகிய சந்திரன் தோன்றினான். இவன் அத்திரி மரபினன் ஆனான்.

18-23. "மற்றவர்க்கு.........பூண்டு உய்த்த பின்"

சந்திரனின் மகனாகத் (தாரை என்பாளிடம்) தோன்றியவன் சிறந்த மணிமுடியணிந்த புதன் என்பவன்.

சூரிய குலத்தில் தோன்றியவனும், வீரக்கழலை அணிந்தவனும், அழகிய தோள்களையுடையவனுமான (பாகுலிக தேசத்தை ஆண்ட) இளன் என்னும் அரசன் சிவபெருமானின் சாபத்தால் பெண் உருவமாகி இளை என்னும் பெயர் பெற்றான். (சிவன் உமையோடு இருந்த போது அவர்கள் இருந்த நந்தவனத்துள் உத்தரவு இன்றி நுழைந்து விட்டான். அதனால் இறைவன் வெகுண்டு சாபமளித்தான்.) அழகிய முத்துப் போன்ற புன்முறுவலை உடையவளும், பொன் போன்றவளுமாகிய அவ் இளை என்பாளைப் புதன் காதலித்து மணந்தான். அவள் வயிற்றில் தோன்றியவன் புரூரவன் என்பவன். அவன் எதிர்த்துப் போர் புரியும் மன்னர்களையெல்லாம் தோற்றுத் தலைகுனியுமாறு செய்யும் திறமையோடு தோன்றினான். அவனே பாண்டிய குல முதல்மன்னன் ஆவான். அவனுக்குப்பிறகு அவனைத் தொடர்ந்து பல மன்னர்கள் இப்பூமியை ஆண்டு மறைந்தார்கள்.

24-26. "திசையானையின்.........ஒருவன்பின்"

பாதலத்திலிருந்து உலகத்தைத் தாங்கி நிற்பன திசையானைகள். அவற்றின் கும்பம் என்னும் முதுகுகளாகிய இருப்பிடத்தில் (யானைகளால் சுமக்கப்பட்ட கடலில்) உலாவிய செழுமை வாய்ந்த மகர மீன்கள் கூட்டம் கூட்டமாய் விண்மீன்களோடு போர் புரியுமாறு துள்ளியெழுந்தன. அந்த அளவிற்கு மிக உயரமாகப் பொங்கி எழுந்தன கடல் அலைகள். அந்த அலைகள் அன்று அரசாண்ட பாண்டிய மன்னனின் அடிகளில் பணிந்தன. அவ்வாறான சிறப்புடன் ஒப்பற்றவனாக நாடு முழுமையையும் தான் ஒருவனாகவே ஆண்டவன் பாண்டிய மன்னன்.

27-31. "விஞ்சத்தின்.........புரோசிதன்னாக"

அகத்தியரைக் குருவாகக் கொண்டவர்கள் பாண்டியர்கள். அவ் அகத்தியர் விந்த மலையின் வளர்ச்சியைக் குறைத்த பெருமை வாய்ந்தவர். இதனை,

"மேக நெடு மாலைதவழ் விந்தமெனும் விண்தோய்
நாகமது நாகமுற நாகமென நின்றான்"[1]

என்னும் கம்பர் வாக்காலும் அறியலாம்.

---

1. ஆரணியகாண்டம். பா. 156.

மேலும் அகத்தியர், நகுஷன் என்ற சந்திரகுல மன்னவன் இந்திர பதவி பெற்றதனால் செருக்குற்று முனிவர்களை வருத்த அவனது செருக்கை அடக்கினார்.

வஞ்சனையாகப் பல முனிவர்களை அழித்து வந்தவன் வாதாபி என்பவன். அவன் தங் தம்பி வில்லவலவன் என்பவனோடு சேர்ந்து அகத்தியரையும் அதே முறையில் அழிக்க நினைத்தபோது 'வாதாபே ஜீர்ணோபவ' என்று உச்சரித்து அவன் உயிரழியுமாறு செய்தார். இவ் அழிவினை

"மாயவினை வாளவுணன் வாதவிதன் வன்மைக்
காயமினி துண்டுலகின் ஆரிடர் களைந்தான்"[1]

என்று உணர்த்துவார் கம்பர்.

என்றும் வற்றாத தன்மை வாய்ந்த பெருங்கடல்கள் வற்றுமாறு செய்து அரக்கரை அழிக்கத் தேவருக்கு உதவி செய்தார். இச் சிறந்த செயலையும்,

"கண்டொருகை வாரினன் முகந்து கடல் எல்லாம்
உண்டவர்கள் பின்உமிழ்க என்றலும் உமிழ்ந்தான்"[2]

என்று எடுத்துக் காட்டுவர் கம்பர்.

"முனிக்கரசு கையால் முகந்து முழங்கும்
பனிக் கடலும் உண்ணப்படும்"[3]

என்பது நன்னெறி.

தாங்கள் வாழ்ந்த பகுதியில் அட்டூழியம் செய்து வந்த சுந்தன் என்னும் அரக்கனை அழித்தார் அகத்தியர். அதனால் துயரமுற்ற அவனது மனைவியாகிய சுகேதுசுதை என்பவள் அகத்தியரிடம் தகாத முறையில் நடந்து கொண்டாள். அகத்தியர் வெகுண்டு அவளது சிறந்த அழகு அழியுமாறு சபித்தார். இவளே தாடகை என்னும் பெயர் பெற்றவள். இதனை,

"அழிவன செய்தலால் அரக்க ராகியே
இழிகென உரைத்தனன் அசனி எஞ்சவே"[4]

என்று கூறுவர் கம்பர்.

இவ் அரிய செயல்களை எல்லாம் செய்த பெருமை வாய்ந்த அகத்தியர் உருவத்தால் சிறியவராகவும், தவத்தால் உயர்ந்தவராக வும் விளங்கியவர். பொதிய மலையில் எழுந்தருளியவர். இவரே பாண்டிய மரபின் குருவாக விளங்கினார்.

---

1. ஆரணியகாண்டம். பா. 155.
2. ஆரணியகாண்டம். 154. 3. நன்னெறி. பா. 4. பாலகாண்டம். 378.

32-45. "கடல் கடைந்து.........கரை உயரியும்"

வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாள் கடல்வயிறு கலக்கினயே"[1]

இச்செயல் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் நடைபெற்றது. வட ஆரியரை வென்று இமய மலையில் கயற்கொடியினை நாட்டி நாடாண்டவன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்.

"வடவாரியார் படை கடந்து
தென் தமிழ் நாடு ஒருங்கு காணப்
புரைதீர் கற்பின் தேவி தன்னுடன்
அரசு கட்டிலில் துஞ்சிய பாண்டியன்
நெடுஞ்செழியன்"[2]

என்பது இதனைப் புலப்படுத்துகிறது.

சுமக்க இயலாது என்று கருதி இந்திரனால் அளிக்கப்பட்ட பெரிய மாலையைத் தாங்கி, மீண்டும் தன்னுடன் போர் செய்த இந்திரனின் முடியில் அமைந்த கிம்புரியை உடைத்து வெற்றி பெற்ற வன் உக்கிர குமார பாண்டியன்.

"செங்கண்ஆ யிரத்தோன் திறல்விளங்கு ஆரம்
பொங்கொளி மார்பில் பூண்டோன் வாழி!
முடிவளை உடைத்தோன் முதல்வன் சென்னி என்று
இடியுடைப் பெருமழை எய்தாது ஏக.......
மழைபிணித் தாண்ட மன்னவன் வாழ்கென"[3]

என்னும் அடிகள் மேற்கண்ட செய்தியையும் அடுத்து வரும் செய்தி யையும் கூறுவனவாகும்.

இந்திரனால் அனுப்பப்பட்ட மேகங்களைச் சிறை செய்து வைத்தவனும், கடல்மீது வேலை ஏவிக் கடல் நீரை வற்றச் செய்த வனும் உக்கிர குமார பாண்டியனேயாவான். உக்கிர குமாரனின் இவ் அரிய செயல்களை,

"வெற்புறழ் திணிதோள் ஆற்றல் மெலிவதோர் ஆரந் தன்னை
அற்புற அளித்தான் வாங்கி யலர்மதுத் தார்போல் ஈசன்
கற்புடை உமையாள் மைந்தன் கதுமெனக் கழுத்தில்
இட்டான்"[4]

"காய்சின மடங்கல் அன்னான் கைவளை சுழற்றி வல்லே
வீசினன் குலிசந் தன்னை வீழ்த்தது விடுத்தான் சென்னித்

---

1. சிலம்பு. ஆய். குரவை. 2. சிலம்பு. 23-214-18. 3. சிலம்பு-11-24-29
4. திருவிளை. இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம் - 37.

தேசினன் மகுடம் தள்ளிச் சிதைத்தது"[1]
"மின்றத்து மேகம் நான்கும் வீழ்ந்தன மேயக்கண்டு
குன்றத்து நெடிய திண்தோள் கொற்றவன் அவற்றைப் பற்றிக்
கன்றத்தின் களிறு போலக் கடுந்தளை சிக்க யாத்தான்"[2]

என்னும் பாடல்களும் விளக்குகின்றன.

தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஏற்பட்ட போரில் தேவர் களுக்கு உதவி வெற்றி பெற்ற செய்தியாகப் பாண்டியர்களுக்கு ஏற்றிச் சொல்லுவது கடல் கடைந்து அமிர்து கொண்ட செய்தி போன்றதாகலாம்.

வடிம்பலம்ப நின்ற பாண்டியன், நெடியோன், மாகீர்த்தி என்ற பெயர்களை உடைய நிலந்தரு திருவிற் பாண்டியன் முதலாகப் பல பாண்டிய மன்னர்கள் சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த பெருமை பெற்றவர்கள். அதே போல பலர் பலநாட்டு மன்னர்களையும் வென்று அவர்கள் நாட்டைத் தம் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்து ஆண்டனர்.

இராமாயண, மகாபாரதப் போர்கள் நடைபெற்ற காலத்தில் பாண்டிய மன்னர்கள் சிறப்புற்றிருந்தனர் என்பது வான்மீகி இராமாயணம், வியாசபாரதம் போன்றவற்றால் அறியப்படுகின்ற செய்திகளாகும். பாண்டிய மன்னன் ஒருவன் இராவணனுக்காகத் தூது சென்று சந்து செய்தான்; திருதராஷ்டிரனுக்குச் சொந்த மான படைகள் அழியுமாறு பாண்டவர்களுக்குத் துணையாக யானைப்படை செலுத்தி உதவினர் பாண்டியர்; அனுமக் கொடி யுடையோனாகிய அருச்சுனனுக்கு அஷ்டவசுக்களால் ஏற்பட்ட சாபத்தை நீக்கித் தங்கள் குலமகளைத் திருமணம் செய்து வைத்தான் பாண்டியன்; அரிச்சந்திரன் என்பவன் ஆண்ட நகரத்தை அழித்து அந்நாட்டுச் செல்வங்களைக் கவர்ந்தனர் பாண்டியர் என்பன போன்ற கருத்துகள் அப்புராணங்களால் அறியக் கூடியவை.

இவற்றைப் போன்றே பாண்டிய மன்னன் ஒரே நாளில் நாற் கடலின் நீரினால் நீராடினான்; நாற்கோடி பொன் கொடுத்து நூலாகிய கடலினைக் கரை கண்டான்; வலிமை மிக்க ஆயிரம் யானைகளை வழங்கினான் என்பன போன்ற செய்திகளும் பாண்டிய மரபின் சிறப்புச் செய்திகளாகக் கூறப்படுகின்றன. வலி பொருந்திய பல அரசர்களை வென்ற செய்தியும், கடல் போல் தோற்றமளிக்கும் குளங்கள் பலவற்றின் கரையை உயர்த்திய சிறப்பும் யதுல கீர்த்தி முதலாகக் கீர்த்திபூடணன் ஈறாக நடைபெற்ற தொகுப்புச் செய்திகளாகலாம்.

---

1. திருவிளை. இந்திரன் முடிமேல் வளை எறிந்த படலம் - 53.
2. ஷை. 41.

46-50. "மன்எதிரா வகைவென்று.........முன்இகந்த பின்"

"பொழிதர உதித்த கீர்த்தி பூடணன் புரக்கும் நாளில்"[1]

"கருங்கடலேழும் காவல் கரைகடந் தார்த்துப் பொங்கி"[2]

"அப்பெருஞ் சலதி வெள்ளத்து அழிந்தன"[3]

கீர்த்தி பூடணன் ஆண்ட காலத்துப் பாண்டிநாடு பிரளய வெள்ளத்தால் அழிந்துபட மீண்டும் பாண்டிய குலத்துத் தோன்றிய வங்கியசேகர பாண்டியன் இறைவனை வேண்டி மதுரை மாநகரினைத் தோற்றுவித்து, அங்கு சங்கம் நிறுவி இறைவனிடம் சங்கப் பலகையும் பெற்றான்.

தலையாலங் கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ் செழியன் தமக்கு நிகரான சேர, சோழரை வென்று சிறந்த முறையில் நாடாண்டான் என்ற செய்தியை,

"தலையாலங் கானத்தில் தன்ஒக்கும் இருவேந்தரைக்
கொலைவாளின் தலைதுமித்துக் குறைத்தலையின்
கூத்தொழித்தும்"[4]

"உரவுச்சினந் திருகிய உருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாங்கு
உடலருந் துப்பின் ஒன்றுமொழி வேந்தரை
அணங்கரும் பறந்தலை உணங்கப் பண்ணி"[5]

"ஆலங் கானத்து அஞ்சுவர விறுத்து
அரசுபட அமருழக்கி
முரசுகொண்டு களம்வேட்ட
அடுதிறலுயர் புகழ்வேந்தே"[6]

ஆகிய கூற்றுகளாலும் அறிய முடிகிறது.

மணமிக்க மாலையணிந்த களப்பிரர் என்னும் மன்னர் குலத்தை அழித்து மீண்டும் பாண்டியர் ஆட்சியை நிறுவிய மன்னன் கடுங்கோன் என்னும் பாண்டிய மன்னன் ஆவான். இவனை அடுத்துப் பல பாண்டிய மன்னர் ஆண்டனர்.

51-58. "இடையாறையும்.....விடைகொடுத்தும்"

இடையாறு, வெண்பைக்குடி ஆகிய இடங்களில் நடைபெற்ற போர்களில் வெற்றி பெற்ற பாண்டியனது மரபிலே அவனிசூளாமணி, செழியன்சேந்தன், அரிகேசரி போன்ற பல மன்னர்கள் தோன்றி ஆண்டபின் அவர்கள் வழியில் வந்தவன் சிரீபராந்தகன். விரகழலையணிந்த கோச்சடையன் என்ற பெயர் பெற்ற பராந்தகன் கருவூர் என்னுமிடத்தில் நடைபெற்ற போரில் பல்லவனை வென்றான்; அவனது யானையை அழித்தான். அப்பராந்தகனின் மகன்

1. திருவாலவாயானபடலம். பா. 8. 2. ௸. 9. 3. ௸-10.
4. சின்னமனூர்ச் செப்பேடு-வரி 27-28; 5. புறப்-25. 6. மதுரைக்-127:130.

திருமால் போன்று விளங்கிய சீவல்லபன். சீமாற சீவல்லபன் என்ற பெயர் பெற்றவன்; மூங்கிலை யொத்த தோள்களை உடைய மகளிர் விரும்பும் சிறப்பு வாய்ந்தவன்.

முதலாம் சேனன் என்பவன் சிங்கள நாட்டை ஆண்டபொழுது அவனுடன் மகதளிதா என்னுமிடத்தில் சீவல்லபன் போர் தொடுத்தான். தோல்வி அடைந்த முதலாம் சேனன் மலேயாவிற்கு ஓடி விட்டான். இதுவே சீவல்லபனின் சிங்களப் போராகக் குறிக்கப்படுகிறது.

திருவனந்தபுரத்தின் தெற்கே மேலைக் கடற்கரையில் உள்ள விழிஞம் என்னும் இடத்திலும், சேர நாட்டையே சார்ந்த குண்ணூர் என்னும் இடத்திலும் சேரரோடு போரிட்டான். விழிஞத்துப் போரில் சேரனைக் கொன்று விண்ணுலகடையச் செய்தான் என்ற செய்தியை வில்லவற்கு விண் ஆள விடை கொடுத்தான் என்று கூறுகிறது மெய்க்கீர்த்தி அடி.

59-63. "காடவனைக் கடலாணூர்.........வான்
உலகணைந்தபின்"

சீமாறன் சீவல்லபன் தெள்ளாறு என்னுமிடத்தில் பல்லவர்களுடன் நடத்திய போரில் பல்லவ மன்னன் நந்திவர்மன் வெற்றி மாலை சூடினான். மேலும் பாண்டியரை ஒடுக்கக் கருதிய நந்திவர்மன் கொங்குநாட்டில் நுழைந்தான். இருவருக்கும் கடலாணூர் என்னுமிடத்தில் போர் நடைபெற்றது. பாண்டியர் வெற்றி பெற்றனர்.

கோவை மாவட்டம், ஈரோடு, கங்கேயம் பெருவழியில் நொய்யல் ஆற்றங்கரையில் உள்ள, பழைய கோட்டைக்கு அருகில் உள்ள ஆணூர் இங்குக் கடலாணூர் என்று குறிக்கப்படுகிறது. அடல் ஆணூர் என்றிருக்கக் கூடும்.

மேற்கிலுள்ள சேர நாட்டு மன்னர், கிழக்கிலுள்ள சோழ மன்னர், தெற்கிலுள்ள கூபகர், வடபுல மன்னர் ஆகியோருடன் போர் செய்து, அவர்களைப் போர்க்களத்து அழித்தான். அமர் வல்லான் மகனைத் தன் களிற்றினால் அழித்தான். இப்போர் குடந்தை என்னுமிடத்தில் நடைபெற்றது.

இத்தகு வெற்றிகளால் அம்புரசிலன், உபாய பகுலன் என்னும் சிறப்புப் பெயர்களைப் பெற்றான். இறுதியில் இவன் வானுலகு அடைந்தான். இவன் கழுதூரில் இறந்து பட்டான் என்பதைக் 'கழுதூரில் சித்தி செய்த கடிக் கூடல் நகர் காவலன்' என்ற இச் செப்பேட்டின் அடியால் அறியலாம்.

64-74. "மற்றவர்க்கு மகனாகிய......வீரநாராயணன்"

சீமாறன் சீவல்லபன் இயற்கை எய்தியபின் அவன் மகன் வரகுணன் பாண்டிய நாட்டின் மன்னன் ஆனான். இளம்பிறை சூடியவனும் பாம்பினை ஆபரணமாகக் கொண்டவனுமாகிய எம் பெருமானை உள்ளத்தில் நிறுத்தி அவன் அருள் நினைந்து நாடு காவலை மேற்கொண்டான்.

பாம்புகளுக்கெல்லாம் அரசனும் ஆயிரம் தலைகளையுடையவனு மாகிய ஆதிசேடன் பல ஊழிக் காலங்களாக மிகவும் அருமையாகத் தாங்கி வருகின்ற மிகப் பொறுமையுடையவளாகிய இந்த நில மகளைத் தனது தொடியணிந்த தோளில் மிகவும் எளிமையாகத் தாங்கி நின்றவன் பொத்தப்பிக் குலச் சோழன் சிரீகண்டராசன் என் பவன். அவன் யாவராலும் அசைக்க முடியாத பலம் வாய்ந்தவன்; சிறந்த போர்ப் படைகளை உடையவன். மானாபரணன் திரு மருகன், மயிலையர்கோன், மாமலை வலவன், தொண்டியர்கோன் என்றெல்லாம் சிறப்பிக்கப்படுபவன். அவன் மகள் அக்கள நிம்மடி என்பவள். அவளைச் சீமாறன் சீவல்லபன் மனைவியாகப் பெற் றான். அவன் வயிற்று உதித்தவன் ஸ்ரீ பராந்தகமகாராசன் என் னும் சிறப்புப் பெயரையுடைய வீரநாரணன் என்பவன், வர குணனுக்கு இளையவன். இருவரின் தாயரும் வேறு போலும். எனவே வீர நாரணனின் தாய் தனியே சுட்டப்படுகிறாள். (வீர நாரணன், வீர நாராயணன் என்ற இரு பெயர்களாலும் இவன் சுட்டப்படுகிறான்)

74-84. "முன் பிறந்த வேல் வேந்தனை .....இயற்று வித்தும்"

சிவ பக்தனாகிய அண்ணன் வரகுணனைச் செந்தாமரை மலர் நிறைந்த செந்நிலம் (செந்நிலந்தை) என்னும் இடத்தில் எதிர்த்துப் போரிட்டு வென்றான் வீரநாரணன். இதுவே அவனது முதற்போர்.

அடுத்து பூம் பொழில்கள் நிறைந்த குன்றை, குடதிசையிலுள்ள கொங்குநாடு, பொக்கரணி, தென்மாயல், வெண்கை, பராந்தகம் போன்ற இடங்களில் எதிர்த்துப் போரிட்ட மன்னர்களை அடக்கி அவர்களது பொருள்களையும், யானை, குதிரை போன்ற படை களையும் கவர்ந்து வந்தான். சிறந்த வயல்களையுடைய சேர நாட்டு விழிஞம் என்னும் நகரைக் கைப்பற்றினான்.

கொங்கு நாட்டிலிருந்து தேனூர்வரை கொங்கரைத் துரத்திப் பலர் இறக்குமாறு வேலெறிந்து வெற்றி கொண்டான். தன் தந்தையை வென்ற நந்தி வர்மனின் மகன் நிருபதுங்கனை வென் றான். இவனே வீரதுங்கன் என்று குறிப்பிடப்பட்டவனாகலாம்

வீரதுங்கன் கொடும்பாளூர் வேளிர்குல மன்னனாகவும் இருக்கக் கூடும். பல ஆறுகளை (சால்வாய்கள்) அமைத்தான். மதுரை மாவட்டம் நிலையூர் கல் வெட்டால் வீரநாரணன் மதகு ஒன்று இருந்ததாகத் தெரிகிறது. இது இவனது நீர்ப்பாசன வசதிகளைச் செய்த செயலைக் காட்டுவதாகும். பல போர்க்களங்களையும் தோற்றுவித்திருக்கிறான். எண்ணற்ற குளங்களை வெட்டினான். அந்தணர்களுக்கும் கோயில்களுக்கும் பல நிவந்தங்களை ஏற்படுத்திக் கோயில் திருப்பணிகள் சிறப்புற நடக்கச் செய்தான்.

85-89. "நின்ற பெரும் புகழாலும்......ஈர்யாண்டில்"

போர் பல நிகழ்த்தி வெற்றி பெற்றுப் பெரும் பொருளை ஈட்டினான்; அப்பொருள்களை வாரி வழங்கி மகிழ்ந்தான். இவற்றால் இவ்வுலகில் பெரும் புகழை நிலை நிறுத்தி மன்னருக்கெல்லாம் மன்னனாகத் திகழ்ந்தான்.

இச்சிறப்புகளால் ஒளிமிக்கக் கூரிய வேலினைத் தாங்கிய இவன் கலிப்பகைவன், கண்டருள் கண்டன், மதுராபுரிப் பரமேசுவரன், மாநிநி, மகரகேதனன் போன்ற பல சிறப்புப் பெயர்களைப் பெற்றான். இவனது நாற்பத்தைந்தாவது ஆட்சியாண்டில் களக்குடியில் தங்கியிருந்தபோது இச்செப்பேட்டுச் சாசனத்தை வழங்கினான்.

## 5

# இராச சிம்மன்

(கி. பி. 907-931)

## சின்னமனூர்ப் பெரிய செப்பேடு

ஸ்வஸ்திஸ்ரீ

திருவொடுந்தெள் ளமிர்தத்தொடுஞ் செங்கதிரொளிக்
கௌஸ்துபத்தொடும்
அருவிமதக் களிறொன்றொடுந் தோன்றிஅர னவிர்
சடைமுடி
வீற்றிருந்த வெண் திங்கள் முதலாக வெளிப்பட்டது
நாற்றிசையோர் புகழ்நீரது நானிலத்தி நிலைபெற்றது
பாரத்வா சாதிகளால் நேரஸ்துதிக் கப்பட்டது 5
விரவலர்க் கரியது மீனத்வய சாசனத்தது
பொருவருஞ்சீர் அகத்தியனைப் புரோகிதனா கப்பெற்றது
ஊழியூழி தோறுமுள்ளது நின்றஒரு வனைஉடையது
வாழியர்பாண் டியர்திருக் குலமிதனில் [1]வந்துதோன்றி
வானவெல்லை வரைத்தாண்டும் அலைகடல்கடைந்
தமிர்துகொண்டும் 10
நானிலத்தோர் விஸ்மயப்பட நாற்கடலொரு பகலாடியும்
மறுவிலொளிர் மணிமுடியொடு சங்கவெள் [3]வளைதரித்தும்
நிலவுலகம் வலஞ்செய்தும் நிகரில்வென்றி அமரர்க்குப்
[4]பலமுறையும் தூதுய்த்தும் பாகசாசன னாரம்[5]வவ்வியுஞ்
செம்மணிப்பூ ணொடுதோன்றித் தென்றமிழின் கரை
கண்டும் 15
வெம்முனைவே லொன்றுவிட்டும் விரைவரவிற் கடல்
மீட்டும்

---

1. வந்துந்தோன்றி. 2. மலைக்கடல். 3. வளைத்தாத்தும். 4. பலமுறைஉந்தூ துய்த்தும். 5. வவ்விஉஞ்.

பூழியனெனப் [6]பெயரெய்தியும் போர்க்குன் றாயிரம் [7]வீசியும்
பாழியம்பா யலினிமர்ந்தும் பஞ்சவனெனும் பெயர்[8]நிறீயும்
வளமதுரை நகர்கண்டும் மற்றதற்கு [9]மதில்வகுத்தும்
உளமிக்க மதியதனா லொண்டமிழும் [10]வடமொழியும் 20
பழுதறத்தா னாராய்ந்து பண்டிதரில் மேந்[11]தோன்றியும்
மாரதர்மலை களத்தவியப் பாரதத்திற் [12]பகடோட்டியும்
விசயனைவசு சாபம்[13]நீக்கியும் வேந்தழியச் சுரம்[14]போக்கியும்
[15]வசையில்மாக் கயல்புலிசிலை வடவரை[16]நெற் றியில் வரைந்தும்
தடம்பூதம் பணிகொண்டு தடாகங்கள் பலதிருத்தியும் 25
அடும்பசிநோய் நாடகற்றி அம்பொற்சித்ர முயரியுந்
தலையாலங் கானத்திற் றன்னொக்கு மிருவேந்தரைக்
கொலைவாளிற் றலைதுமித்துக் [17]குறைத்தலையின் கூத் தொழித்தும்
மகாபாரதந் தமிழ்ப்படுத்தும் மதுராபுரிச் சங்கம்வைத்தும்
மகாராசரும் சார்வபௌமரும் மகிமண்டலங் காத்திகந்த பின் 30
வில்லவனை நெல்வேலியும் விரிபொழிற்சங் கரமங்கைப்
பல்லவனையும் புறங்கண்ட பராங்குசன்பஞ் சவர் தோன்றலும்
மற்றவர்க்குப் பௌத்ரனாயின மன்னபிரா னிராசசிங்கனுங்
கொற்றவர்க டொழுகழற்காற் கோவரகுண மகாராசனும்
ஆங்கவற்காத் மசனாகி அவனிதலம் பொறைதாங்கித் 35
தேங்கமழ்பொழிற் குண்ணூரிலும் சிங்களத்தும் விழிஞத்தும்
வாடாத வாகைசூடிக் கோடாதசெங் கோனடாவிக்
கொங்கலர்பொழிற் குடமூக்கிற் போர்குறித்து வந்தெதிர் ந்த
கங்கபல் லவ[18]சோழ காலிங்க மாகதாதிகள்
குருதிப்பெரும் புனற்குளிப்பக் கூர்வெங்கனை தொடை ஞெகிழ்த்துப் 40

6. பெயரெய்திஉம். 7. மீசியும். 8. நிறீஉம். 9. மதிள். 10. வடமொழிஉம். 11. தோன்றிஉம். 12. பகடோட்டிஉம். 13. நீக்கிஉம். 14. போக்கிஉம். 15. வசைஇல் 16. நெற்றிஇல். (இவை போலவே யில், யும் அனைத்தும் உள்ளன). 17. குறத்தலை. 18. சோழன.

பருதியாற்ற லொடுவிளங்கின பரசக்கிர கோலாலனுங்
குரைகழற்கா லரைசிறைஞ்சக் குவலயதலந் தனதாக்கின
வரைபுரையு மணிநெடுந்தோள் மன்னர்கோன் வரகுண
வர்மனும்
மற்றவனுக் கிளையனான மனுசரிதன் வாட்சடையன்
பொற்றடம்பூண் சிரிபராந்தகன் புனைமணிப்பொன்
முடிசூடிக் 45
கைந்நிலந்தோய் கரிக்குலமும் வாஜிப்ருந்தமுங் காலாளுஞ்
செந்நிலத்தி னிலஞ்சேரத் திண்சிலைவாய்க் கணை
சிதறியும்
கரகிரியிற் கருதாதவர் வரகரிக்குல நிரைவாரியும்
நிலம்பேர நகர்கடந்துந் நெடும்பெண்ணா கடமழித்தும்
ஆலும்போர்ப் பரியொன்றா லகன்கொங்கி லமர்
கடந்தும் 50
[19]தேவதானம் பலசெய்தும் பிரமதேயம் பலதிருத்தியும்
நாவலந்தீ வடிப்படுத்த நரபதியும் வானடைந்தபின்
வானவன்மகா தேவியென்னு மலர்மடந்தை முன்பயந்த
மீனவர்கோ னிராசசிங்கன் விகடவா டவனவனேய்
அகிபதியா யிரந்தலையால் அரிதாகப் பொறுக்கின்ற 55
மகிமண்டலப் பெரும்பொறைதன் மகாபுஜபலத் தாற்
றாங்கி
புசகநாயக தரணிதாரண ஹரணராசித புசபலனாய்
[20]உலப்பிலிமங் கலத்தெதிர்ந்த தெவ்வருடல் உகுத்தசெந்நீர்
நிலப்பெண்ணிற் கங்கராக மெனநீவப் பாணிதந்தும்
மடைப்பகர்நீர்த் தஞ்சையர்கோன் தானைவரை
நைப்பூரிற் 60
படைப்பரிசா ரந்தந்து போகத்தன் பணைமுழக்கியுங்
கொடும்பைமா நகர்நிறைந்த [21]குரைகடற் பெருந்தானை
இடும்பையுற் றிரியத்தன் [22]இரணோதய மேல்கொண்டும்
புனற்பொன்னி வடகரையிற் பொழில்புடைசூழ் [23]மதில்
வஞ்சிக்
கனற்படவிழித் தெதிர்ந்தவீரர் கவந்தமாடக் கண்
சிவந்துஞ் 65

19. தேவதாநம். 20. உலப்பிதி. 21. குரைகடல்ப்பெருந்தானை. 22. இரெணோ
தய. 23. மதிள்.

சேவலுயர் கொடிக்குமர னெனச்சீறித் தென்றஞ்சைக்
காவலனது கரிதுரக பதாதிசங்கங் களத்தவியப்
பூம்புனனா வற்பதியில் வாம்புரவி பலங்காட்டியும்
விசயத்வஜம் விசும்பணவச் செங்கோறிசை விளிம்பணவக்
குசைமாவுங் கொலைக்குன்றமுங் குருதியார முங்[24]கொ
ணர்ந்தும் 70
குலவர்த்தன ரடிவணங்க மகேந்திரபோக மனுபவித்த
விகடவாடவன் [25]சிரிகாந்தன் மீநாங்கித சைலேந்திரன்
இராசசிகா மணிதென்னன் ராசித குணகணங்கோன்
எண்ணிறந்த பிரமதேயமும் எண்ணிறந்த தேவ[26]தான
மும்
எண்ணிறந்த பள்ளிச்சந்தமும் எத்திசையு மினிதியற்றி 75
உராம்பிலொதி ஒலிகடல்போ லொருங்குமுன்னந் தான
மைத்தவல்
இராசசிங்கப் பெருங்குளக்கீழ் [27]சூழல்நக ரிருந்தருளி
இராஜ்யவர்ஷம் இரண்டாவதன் எதிர்பதினான்
காம்யாண்டில்...

# இராச சிம்மன்

## முன்னுரை

விகட வாடவன், மந்தர கௌரவன் என்னும் சிறப்புப் பெயர்களைப் பெற்ற இராச சிம்மன் என்னும் பாண்டிய மன்னன் அழல் நாட்டு நற்செய்கைப் புத்தூர்க் கிராமத்தை மந்தர கௌரவ மங்கலம் என்று பெயர் இட்டுப் பராந்தகன் என்னும் அந்தணனுக்குத் தானமாகக் கொடுத்த செய்தியைக் கூறுவது இச்செப்பேடு.

இராசசிம்மனின் மெய்க்கீர்த்தியாக அமைந்துள்ளது இச்செப்பேட்டின் முதற்பகுதி. இராசசிம்மன் பராந்தக வீரநாரணனின் மகன். சேரநாட்டு இளவரசி வானவன்மாதேவி என்பவள் இவன் தாயாவாள்.

---

24. குணர்ந்தும். 25. சிரிகாந்தந். 26. தாநமும். 27. சூழுநகசிருந்தருளி.

மதுரை மாவட்டம், பெரிய குளம் வட்டத்தில் உள்ள சின்னம னூர் என்னும் கிராமத்தில் கிடைத்த இரண்டு செப்பேடுகளுள் இது பெரியது. ஆதலின் சின்னமனூர்ப் பெரிய செப்பேடு என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வூரில் பெருமாள் கோயிலில் மடைப் பள்ளி கட்டுவதற்காகக் கடைக்கால் தோண்டியபோது கிடைத் தவை இவ்விரு செப்பேடுகளாகும்.

## மெய்க்கீர்த்தி

சந்திரனின் வழித் தோன்றிய பாண்டியர் குலத்துக்கு ஆசிரிய ராக விளங்கியவர் அகத்திய முனிவர். தமிழை உணர்ந்த பாண்டிய மன்னர் வில், புலி, கயல் ஆகிய மூன்று சின்னங்களையும் இமயத் துப் பொறித்தனர். தமிழ்ச் சங்கம் நிறுவி அரிய செயல்கள் பல செய்த பாண்டிய மன்னரின் வழித் தோன்றலாக விளங்கினான் இராச சிம்மன். இவன் பராந்தக வீர நாரணனின் மகன். இராச சிம்மனின் தாய் வானவன் மகாதேவி என்பவள்.

உப்பிலிமங்கலம், நைப்பூர், வஞ்சி, திருவானைக்கா ஆகிய இடங்களில் போர் செய்து வெற்றி பெற்றான். பிரம்மதேயம், தேவ தானம், பள்ளிச்சந்தம் ஆகிய பல நிவந்தங்களை ஏற்படுத்திய இவன் தனது பதினாறாம் ஆட்சியாண்டில், இராசசிங்கப் பெருங் குளம் என்னும் நாட்டிலுள்ள சூழல் என்னும் இடத்தில் இருந்து இச்செப்பேட்டு வாசகத்தைச் செய்தருளினான்.

## விளக்கம்

### 1-9. "திருவொடும்......வாழியர்"

வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிப் பாற்கடல் கடைந்த பொழுது அக்கடலிலிருந்து திருமகளும், தேவாமிர்தம், செந் நிற ஒளிவீசும் துளசி மணிமாலை, ஐராவதம் என்னும் வெள்ளை யானை, இறைவனின் சடை முடியில் வீற்றிருக்கும் வெண்திங்கள் போன்ற பொருள்களும் தோன்றின. அவ்வாறு தோன்றிய சந்திர னைத் தங்கள் குல முதலாகக் கொண்டு தோன்றியது பாண்டிய குலம். இதன் விளக்கத்தைத் தளவாய் புரச் செப்பேட்டுப் பகுதியில் தெளிவாகக் காணலாம். இக்குலம் நான்கு திசைகளிலும் உள்ள மக்களால் புகழப்பட்டு இந்நிலவுலகில் நிலை பெற்றது ; பாரத்துவாச முனிவர் முதலான முனிவர்களால் புகழப்பட்டது ; பகைவர்கள் நெருங்குதற்கு அரியது. இக்குலம் எதிர் எதிராக உள்ள இரண்டு மீன்களைத் தம் கல் வெட்டுகளில் பெற்றது ; ஒப்பற்ற பெருமை யுடைய அகத்திய முனிவரைத் தனது ஆசிரியராகப் பெற்றது ; பல ஊழிக் காலமும் அழியாது நிற்கும் இறைவனைத் துணையாகப் பெற்றது. இத்தகு குலமாகிய பாண்டியர் திருக்குலம் வாழ்வதாக.

### 9–23. "பாண்டியர் திருக்குலம்.........சுரம் போக்கியும்"

இத்தகு சிறப்புகளையெல்லாம் பெற்ற பாண்டியர் திருக்குலத்தில் தோன்றிய பேரரசர்கள் பலர் பல சிறப்புடைச் செயல்களைச் செய்து நாடாண்டனர். அச்சிறப்புச் செயல்களாவன—விண் மீன்களோடு போரிடும் அளவிற்கு உயர்ந்து பொங்கும் அலைகளை உடைய கடலைக் கடந்து அமிர்து கொண்டனர். பரந்த இவ் உலகத்துள்ள மக்கள் வியப்படையுமாறு ஒரே நாளில் நாற்றிசையிலுமுள்ள கடல் நீரை ஒருங்கு கொணர்ந்து மங்கல நீராடினர். குற்றமற்ற ஒளி பொருந்திய மணிகள் பதித்த முடியினைச் சூடினர். சங்குகளால் ஆன வெண்மையான வீர வளைகளை அணிந்தனர். இப்பரந்த நில உலகினைத் திக்கு விசயமாக வலம் வந்து வெற்றி கண்டனர். ஒப்பற்ற வெற்றியால் தேவர்களைப் போர் புரிய வருமாறு அழைத்துத் தூது அனுப்பினர். தாங்க இயலாச் சுமையுடைய இந்திரனது ஆரத்தை எளிதாகத் தாங்கினர். சிவந்த மணிகள் பதித்த அணிகள் பலவற்றைத் தாங்கினர். தென் மொழியாகிய தமிழை நன்கு கற்று உணர்ந்தனர். மதுரை அழியுமாறு பொங்கி வந்த கடல் மீது கூரிய தம் வேலை ஏவி வற்றச் செய்தனர். பூழியன் என்ற பெயர் பூண்டு, ஆயிரம் யானைகளைத் தானமாக வழங்கினர். பாழி என்ற ஊரை வென்று அங்கு தங்கினர். பாண்டி நாட்டை ஐந்து பகுதிகளாக ஆண்டு பஞ்சவன் என்று பெயரை நிலை நிறுத்தினர். கால வெள்ளத்தால் அழிந்த மதுரை மாநகரைப் புதிதாகத் தோற்றுவித்து, அதற்கு எல்லை வகுத்து மதில் அமைத்தனர். தமிழையும் வட மொழியையும் உள்ள விருப்பத்தோடு குற்றமற ஆராய்ந்து தங்கள் அறிவின் கூர்மையால் புலவர்களைக் காட்டிலும் உயர்ந்து விளங்கினர். பாரதப் போரில் கலந்து கொண்டு யானைப் படையை நடத்தி, பெரிய தேர்ப்படையையுடைய திருதராட்டிரனின் சேனைத் தலைவர்களும் யானைகளும் போர்க்களத்தில் அழியுமாறு செய்தனர். அருச்சுனனுக்கு அஷ்ட வசுக்களால் ஏற்பட்ட சாபத்தைப் போக்கிப் பகை மன்னரைக் காட்டிற்குத் துரத்தி வெற்றி கண்டனர்.

### 24-30. "வசையில் மாக்கயல்......காத்து இகந்தபின்"

பல வெற்றிகளைப் பெற்றுப் புகழ்மிக்கு விளங்கிய தங்களது கயல் சின்னத் தத் தாங்கள் வென்ற சேரர், சோழர்களின் சின்னங்களாகிய வில், புலி ஆகியவற்றோடு இணைத்து மூன்று சின்னங்களையும் இமயமலைச் சிகரத்தில் பொறித்தனர். பெரிய பூதம் ஒன்றினை மந்திர வலிமையால் வசியம் செய்து வைத்துக் கொண்டு அதனை ஏவிப் பல குளங்களைப் புதுக்கி, கொடிய பசித்துன்பம் நாட்டை விட்டு அகலுமாறு செய்து, தலையாலங் கானத்தில் தன்னையொத்த பேரரசர் இருவரைத் தன் வாளினால் வெட்டி வீழ்த்தி, அக்குறை உடல் போர்க்களத்தில் ஆடுவதாகிய கூத்தினை ஒழித்து இவ்வாறான அரிய செயல்கள் பலவற்றைச் செய்தனர்.

பொன் போன்ற உயர்ந்த மண்டபங்கள் பல எடுத்தனர் எனவும் பொன்மதில் உயர்த்தினர் எனவும் கொள்ளுமாறு பொற்சித்ர முயரி யும் என்ற தொடர் காணப்படுகிறது.

வடமொழிப் பாரத நூலைத் தமிழிலே இயற்றச் செய்து, மதுரை மாநகரில் தமிழ்ச் சங்கம் தோற்றுவித்து மன்னர் மன்னர்களும் குறு நில மன்னர்களுமாக இப்பரந்த நிலவுலகை ஆண்டு மறைந்தனர்.

## 31-41. "வில்லவனை நெல்வேலியும்.......பரசக்கிர கோலாலனும்"

சேர மன்னன் ஒருவனை நெல்வேலிப் போரிலும், பல்லவ மன்னன் ஒருவனைச் சங்கரமங்கைப் போரிலும் வெற்றி பெற்றவன் பராங்குசன் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற மாறவர்மன் அரிகேசரி யாவான். இவனே முதலாம் இராசசிம்மன் எனப் படுகிறான்.

மாறவர்மன் அரிகேசரியின் மகன் முதலாம் வரகுணன். இவன் மன்னவர்கள் பணியும் வீரக் கழலை அணிந்தவன். முதலாம் வரகுணன் மகன் சீமாறன்சீவல்லபன். வரகுணனின் மகனாகிய சீவல்லபன் இந்நில உலகத்தைத் தாங்கும் பொறுப்பினை ஏற்று, குண்ணூர், சிங்களம், விழிஞம் ஆகிய இடங்களில் வெற்றி பெற்று என்றும் அழியாத வாகை சூடினான். வெற்றிச் சிறப்புடன் நாட்டில் சிறந்த செங்கோல் நடத்தி வந்தான்.

அடுத்து குட மூக்கு என்னும் கும்பகோணத்தில் படையெடுத்து வந்து போர் தொடங்கிய கங்கர், பல்லவர், சோழர், கலிங்கர், மாகதர் முதலிய பல மன்னர்களின் கூட்டுப் படை முழுவதும் இரத்த வெள்ளத்தில் மிதக்குமாறு கூர்மையும் கொடுமையும் நிறைந்த தன்னுடைய அம்புகளைப் பொழிந்தான். சூரியனுக்குச் சமமான ஆற்றல் பெற்ற இச் செயல்களால் பரசக்கிரகோலாகலன் என்ற சிறப்புப் பெயரினையும் பெற்றான்,

## 42-50. "குரை கழற்கால் அரசு.........அமர் கடந்தும்"

சீவல்லபனாகிய பரசக்கிரகோலாகலனின் மக்கள் இருவர் ஒருவன் இரண்டாம் வரகுணன். மற்றவன் பராந்தக வீரநாரணன். அவர்களுள் தனது வீரக் கழலணிந்த கால்களை மன்னர்கள் பணியுமாறு இந்நில உலகத்தைத் தனக்கே உரியதாக அமைத்துக் கொண்டவன், மலையை நிகர்த்த அழகிய பெரிய தோள்களை யுடைய மன்னர் மன்னனாக விளங்கிய வரகுணன் ஆவான். அவ னுடைய இளவலாகத் தோன்றியவன் பொன்னாலான அணிகள் பலவற்றை அணிந்த சிரீபராந்தகன் ஆவான், இவன் மனுசரிதன், வாட்சடையன் என்னும் சிறப்புப் பெயர்களையுடையவன்,

இளையவனாகிய சிரீபராந்தகநாரணன் என்பவன் மணிகள் பதித்த பொன்முடி சூடி விளங்கினான். முடி சூடிய அவன் தனது முதற் போராகச் செந்நிலம் என்ற இடத்தில் போரை நடத்தினான். அப்போர் அவனுடைய அண்ணன் 'வரகுணனை எதிர்த்து நடத்தப் பட்டதாகும். அப்போரில் நிலம் தோயும் அளவு நீண்ட துதிக்கையை யுடைய யானைப் படையும் குதிரைப்படையும் போர்வீரர்களும் நிலத்தில் விழுந்து அழியுமாறு தன் வில்லிலிருந்து அம்புகளைப் பொழிந்தான்.

திருநெல்வேலி வட்டத்தில் உக்கிரன் கோட்டை என்னும் கர வந்த புரத்தில் (கரகிரி) உக்கிரன் என்பவனோடு போரிட்டு யானைப் படைகளைச் சிறை செய்து அந்நாட்டிலிருந்து தன் நாட்டிற்குக் கொண்டு வந்தான். மீண்டும் பெண்ணாகடத்தின் மீது படை யெடுத்து அந்நகரினை அழித்தான். ஆரவாரமுடைய தனது போர்ப்பரி ஒன்றினைச் செலுத்திக் கொங்கரை அடக்கினான்.

## 51-52. "தேவதானம் பல செய்தும்......வானடைந்த பின்"

மேலும் பராந்தகன் ஆலயங்களுக்காகப் பல நிவந்தங்களைத் தேவதானமாக அளித்தான். அந்தணர்களுக்குப் பிரம்மதேயமாக அளிக்கப்பட்ட நிலங்களையும் குடியிருப்புகளையும் திருத்தியமைத் தான். நாவலந்தீவு என்று கொள்ளப்படும் இப்பரந்த நில உலகினைத் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு ஆண்ட பராந்தக நாரணன் பெரும் புகழோடு விண்ணுலகடைந்தான்.

## 53-65. "வானவன் மகாதேவி......கண் சிவந்தும்"

பராந்தகநாரணனின் மகன் இரண்டாம் இராசசிம்மன். திரு மகள் போல விளங்கிய வானவன்மகாதேவியின் வயிற்றுதித்தவன். பாண்டிய மன்னனாக விளங்கிய இவ் இராச சிம்மன் விகட வாடவன் என்ற சிறப்புப் பெயர் பெற்றவன். பாம்புகளின் அரச னாகிய ஆதிசேடன் தன் ஆயிரந்தலைகளால் மிகவும் கடினமாகச் சுமக்கின்ற இப் பூவுலகின் பெரும் பாரத்தைத் தன் பலம் பொருந்திய பெரிய தோள்களால் எளிதாகத் தாங்கியவன். உலப்பிலிமங்கலம் என்னுமிடத்தில் பெரும்போர் நிகழ்த்தினான். அங்கு தன்னை எதிர்த்த பகைவரை வெட்டி வீழ்த்தினான். அவர்கள் உடலிலிருந்து பெருகிய இரத்த வெள்ளத்தால் நிலமகளின் உடலை மறைக்கும் படியாகச் செய்தான். காவிரிநீரால் வளம்பெற்று விளங்கும் தஞ்சையை ஆண்ட அரசனை நைப்பூரில் நடைபெற்ற போரில் தோற்கடித்து அவனது படை பரிசாரம் தந்து, புறமுதுகிட்டு ஓடச் செய்து வெற்றி முரசு முழங்கினான்,

கொடும்பாளூர் **வேளிர்** சோழருக்குப் படை உதவி புரிந்தனர். அதே போர்க் களத்தில் கொடும்பாளூர் நாட்டைச் சார்ந்ததும் பெரிய கடல் போன்ற படையை உடையதுமாகிய அவ்வேளிர் படை பெருந் துன்பமடைந்து அழியுமாறு இரணோதயம் என்னும் தன் யானை மீது ஏறி அப்போரை நடத்தி வெற்றி பெற்றான், காவிரி யாற்றின் வடகரையில் அமைந்ததும் சோலை சூழ்ந்த மதிலை உடையதுமாகிய வஞ்சி என்னும் பெயர் பெற்ற கருவூரில் கண் களில் தீப்பொறி பறக்குமாறு தோன்றி போரிட்ட பகை வீரர்களின் தலையற்ற குறையுடல்கள் கவந்தக்கூத்தாடும்படியாகச் சினந்து போர் செய்தான்.

66-70. "சேவலுயர் கொடிக் குமரன்....கொணர்ந்தும்"

சேவற் கொடியை உடையவனாகிய முருகவேள் தேவாசுரப் போரில் சினந்து, சீறி எழுந்த தன்மை போலச் சீறியெழுந்து தஞ்சை யின் தென்பகுதியை ஆண்ட மன்னனை எதிர்த்து நாவற்பதி என்னும் நீர்சூழ்ந்த திருவானைக்காவில் போரிட்டான். அப் போரில் யானை, குதிரை, கலாட்படைகள் அனைத்தும் போர்க் களத்தில் அழியுமாறு தாவி ஓடும் தன் சிறந்த குதிரையின் பலத்தை உலகத்திற்குக் காட்டினான். அவ்வெற்றிக்கு அறிகுறியாக வெற்றிக் கொடியினை வானளாவப் பறக்க விட்டான். தனது செங்கோல் எட்டுத் திசைக்குரிய எல்லைகள் வரை பரவச் செய்தான். கொலைத் தொழிலையுடைய குதிரைகளையும் யானைகளையும், செந்நிற மணி கள்பதித்த பகைவருடைய பொன் ஆரங்களையும்கவர்ந்து வந்தான்.

71-77. "குலவர்த்தனர் அடி வணங்க......இருந்தருளி"

தன் வெற்றிகளாலும் செங்கோல் சிறப்பாலும் முடிசூடிய மன்னர் பலரும் தன்னடி வ்ணங்கி நிற்குமாறு செய்து இந்திர போகம் போன்ற எல்லா வகை போகத்தையும் பெற்றுச் சிறந்து விளங்கி னான். விகட வாடவன், சிரீகாந்தன், மீனாங்கி தசை லேந்திரன், இராசசிகாமணி, தென்னன், ராசிதகுணகணங்கோன் என்னும் விருதுப் பெயர்கள் பலவற்றைப் பெற்றான்,

அந்தணர்க்கு அளிக்கும் கொடையாகிய பிரம்மதேயம், ஆலயங் களுக்கு அளிக்கும் நிவந்தமாகிய தேவதானம், பௌத்த, சமணப் பள்ளிகளுக்கு அளிக்கும் நிவந்தமாகிய பள்ளிச் சந்தம் போன்ற கொடைச் செயல்களை எல்லாத் திசைகளிலும் உள்ள ஆலயங்கள், பௌத்த, சமணப் பள்ளிகள், அந்தணர்கள் ஆகியவற்றிற்குச் செய்து மகிழ்ந்தான். இவ்வகைப் பெருமைகளோடு கூடிய இராச சிம்மன் தனது ஆட்சியாண்டு பதினாறாம் ஆண்டில் தனது முர சொலியானது கடல் ஒலி போல் ஒலிக்கத் தன் பெயரால் அமைக்கப் பட்ட இராசசிங்கப் பெருங்குளம் என்னும் நாட்டில் உள்ள சூழல் என்னும் நகரில் வீற்றிருந்து அருளினான்.

# 6

# வீர பாண்டியன்

(கி.பி. 946-966)

## சிவகாசிச் செப்பேடு

ஸ்வஸ்தி ஸ்ரீ

சந்திரனது வழித்தோன்றிஇத் தராமண்டல முழுதாண்டு
பண்டு
இந்திரன்முடி [1]வளையுடைத்தும் இமயத்துக் கயலெழு
தியும்
ஆனையாயிர [2]மையமிட்டும் அகத்தியனொடு [3]தமிழ்
தெரிந்தும்
வானவர்க்குத் தூதுசென்றும் மால்கடலின் வரவுமாற்றியும்
ஈண்டியவக் கடல்கடைந்தும் இன்னனபல திறல்செய்த 5
[4]பாண்டியபர மேச்வரராள் [5]பரம்பரையில் வந்து
தோன்றினன்
மன்னவர்க்கோன் இராசமல்லன் மணிமுடிமா
ணாபரணன்
தென்னவர்க்கோன் மற்றவற்குச் சேரலன்றன் மடப்பாவை
சீர்திகழு மணிபயிலிச் செழுநிலந்தொழ வெளிப்பட்ட
வீரகேரளன் [6]வீரபாண்டியன் விநயகஞ்சுகன் விசால
சீலன் 10
தன்னுடைய குலம்விளங்கத் [7]தன்தேயத் தமிழ்க்கூடலில்
மன்னிய மணி முடிகவித்து மகாபிஷேக மகிழ்ந்தநாளில்
மேதகுசா சனசுலோகம் விதிகிடந்தவா செய்யவல்ல
பூசுரமத் திவன்னதுதன் பூம்பொருநம் [8]புடைவர்க்கும்
[9]சீர்திகழ்தரு முள்ளிநாட்டுத் தென்வீரதர மங்கலத்து 15
ஏர்திகழும் [10]பெருந்தன்மை ராதிதர கோத்திரத்தில்
அளப்பரிய பேரொழுக்கத் [11]தாச்வலாயன சூத்திரத்து

---

1. வளையுடைய்த்து. 2. மைய்யமிட்டும். 3. தமிழ்தெரிஞ்சும். 4. பாண்ட்ய பரமேச்வரராள். 5. பரம்பரையிந். 6. வீரபாண்ட்யன். 7. தன்னுடைய்; தண்டேய. 8. புடெவர்க்கும். 9. சீர்திகள்தரு. 10. தன்மை. 11. தாச்வாலயக

விளக்கமுற வந்துதோன்றி விப்ரர்க்கோர் விளக்காயின
ஒருதன்மை இருபிறப்பில் முச்செந்தீ நால்வேதத்து
[12]அருமரபில் ஐவேள்வி ஆறங்கத் தந்தணாளன் 20
கோவிந்தஸ்வாமி [13]பட்டர்க்குச் சோமாசிதன் குலவரவில்
வாசுதேவ [14]பீதாம்பர பட்டனென்ற மறைவாழ்நனை
மதித்தருளி [15]நீசெய்கென மற்றவனு மனமகிழ்ந்து
விதித்தமைத்த அநுஷ்டுப்பின் விழுப்பநோக்கி மிக மகிழ்ந்து
தனக்கிரண்டாமாண்டின் எதிராமாண்டில் 25
அண்டநாட்டு மின்னுக்கொடி நெடுமாடவீதி......

# வீர பாண்டியன்

## முன்னுரை

இராசசிம்ம பாண்டியனின் மகன் வீரபாண்டியன். அவன் தனது மூன்றாவது ஆட்சியாண்டில் மேல் வேம்பி நாட்டில் உள்ள நலபுரத்துக் கொப்பம் என்னும் இடத்து நிலத்தைச் சாசன மங்கலம் என்னும் பெயரிட்டு அந்தணருக்குத் தானமாகக் கொடுத்த செய்திகளைக் கூறுவது இச் செப்பேடு.

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சிவகாசியில் ஒரகண்டே கனகைய நாயுடு என்பவர் குடும்பத்திலிருந்து பெறப்பட்ட செப்பேடு ஆதலின் சிவகாசிச் செப்பேடு என்று பெயரிடப்பட்டுள்ளது.

## மெய்க்கீர்த்தி

சந்திர குலத்தில் தோன்றிய பாண்டிய மன்னர் ஆற்றல் மிக்க அரிய செயல்கள் பலவற்றைச் செய்து நாடாண்டனர். அவர்களுள் சிறந்து விளங்கிய இராசசிம்மன் மகனாகத் தோன்றியவன் வீர பாண்டியன். தன்மீது சிறந்த மெய்க்கீர்த்தி ஒன்றினை (சாசன சுலோகம்)ச் செய்யுமாறு வாசுதேவ பீதாம்பரபட்டன் என்னும் அந்தணனுக்குக் கட்டளை இட்டான், அதன்படி அனுஷ்டுப் என்னும் வகையைச் சார்ந்த சாசன சுலோகத்தைச் செய்து அளித்தான். அதன் பொருட்சுவை உணர்ந்த பாண்டியன் மகிழ்ச்சி அடைந்து சாசன மங்கலத்தைத் தானமாக அளித்தான்.

---

12. அருமரபிலைய்வேள்வி. 13. பட்டர்ச்சோமாசி. 14. பீராம்பர.
15. நீய்செய்கென.

## விளக்கம்

### 1-5. "சந்திரனது வழித் தோன்றி....திறல் செய்த"

சந்திர குலத்தில் தோன்றி இந்நில உலகை ஆண்டவர்கள் பாண்டிய மன்னர்கள். முன்னாளில் ஆண்ட பாண்டிய மன்னருள் பலர் இந்திரன் மணி முடியில் அமைந்த கிம்புரி எனும் வளையை உடைத்தல், தங்கள் கயல் பொறியை இமயத்தில் பொறித்தல், ஆயிரம் யானைகளைப் பரிசிலாகத் தருதல் போன்ற அரிய செயல்கள் பலவற்றைச் செய்தனர்.

மேலும் அகத்தியனோடு தமிழ் ஆய்ந்தனர்; வானவர்க்காகத் தூது சென்றனர்; பெரிய கடல் பொங்கிவரும் செயலைக் குறைத்தனர்; விரைந்து வந்த கடலைக் கலக்கினர். இவை போன்ற பல ஆற்றல்மிகு செயல்களையும் செய்தவர்கள் அச்சந்திரகுலப் பாண்டிய மன்னர்கள்.

### 6-8. "பாண்டிய பரமேஸ்வரராள்......தென்னவர் கோன்"

இத்தகு சிறப்பு வாய்ந்த பாண்டியர் பரம்பரையில் மன்னர் மன்னனாக வந்து தோன்றினான் இராசமல்லன் என்னும் பாண்டியன். இவனே இராசசிம்மன் எனப்படுபவன். மன்னர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கிய அவன் மணிமுடிமானாபரணன் என்றும், தென்னவர் கோன் என்றும் சிறப்பிக்கப் பெற்றவன் ஆவான்.

### 8-12. "மற்றவர்க்குச் சேரலன் தன்.....மகிழ்ந்த நாளில்"

இராச சிம்மனின் தாய் வானவன் மாதேவி என்னும் சேர நாட்டு மன்னன் மகளாவாள். அச்சேர மன்னனாகிய தாய் மாமன் வழியே இராசசிம்மனின் பட்டத்தரசியும் அமைந்தாள். அவள் மகனாகத் தோன்றியவனே வீரபாண்டியன். இவன் வீரகேரளன், விநயகஞ்சுகன், வீசாலசிலன் என்ற சிறப்புப் பெயர்களைப் பெற்று பாண்டிய குலத்தின் பெருமை விளங்கத் தனது நாட்டுத் தலைநகராகிய தமிழ்க் கூடல் மாநகரில் மணிமுடி சூடி மகிழ்ந்தான்.

### 13-23. "மேதகு சாசனச் சுலோகம்......நீ செய்க என"

வீர பாண்டியன் தன்மேல் சிறந்த மெய்க்கீர்த்தி ஒன்றை அமைக்க விரும்பினான். அந்த சாசன சுலோகத்தினை மிகச் சிறந்த முறையில் நெறி முறைப்படிச் செய்ய வல்லான் ஒருவனைத் தேர்ந்தெடுத்தான். அவனே வாசுதேவ பீதாம்பர பட்டன் என்னும் மறைவாணன் ஆவான். அவன் சிறப்பு மிக்க முள்ளி நாட்டுத் தென் வீரதரமங்கலம் என்றும் ஊரைச் சார்ந்த சிறந்த அந்தணனாவான். சிறந்த அழகும் பெருந்தன்மையும் உடைய ராதீதர

கோத்திரத்தில் பிறந்தவன் ; ஒப்பிட்டுக் கூறுதற்கரிய பேரொழுக் கத்தையுடைய ஆச்வலாயன சூத்திரத்தைச் சேர்ந்தவன் ; சோமாசி குலத்தைச் சேர்ந்தவன். மேலும் அவன் தனது கோத்திரம் விளங்கு மாறு தோன்றி அந்தணர்களுக்கெல்லாம் உயர்ந்த ஒளி விளக்காக விளங்கினான்,

என்றும் மாறாத ஒரே தன்மையும் இருபிறப்பும் முத்தீயும் நால் வேதமும் உடைய அரிய மரபில் தோன்றி, ஐவகை வேள்விகளில் தேர்ந்தவரும் அறுவகை வேத உறுப்புகளைக் கற்று உணர்ந்தவரு மான கோவிந்தசாமிபட்டர் என்பவரின் மகனாகத் தோன்றிய அவ் வாசுதேவ பீதாம்பர பட்டரைச் சிறப்பித்துச் சாசன சுலோக மாகிய கவிதையினைச் செய்க என்று கட்டளையிட்டான்.

23-25. “மற்றவனும் மனமகிழ்ந்து...எதிராமாண்டில்”

அரசன் கட்டளையிட வாசுதேவ பீதாம்பர பட்டன் மகிழ்ச்சி யோடு அனுஷ்டுப் என்னும் வகையைச் சேர்ந்த சிறந்த கவிதை ஒன்றினைச் செய்து அளித்தான். அக் கவிதையின் அழகும் பொருட்செறிவுமாகிய சிறப்பினை நன்கு ஆய்ந்து அறிந்த வீர பாண்டியன் மிகவும் மகிழ்ச்சியடைந்து தனது மூன்றாவது ஆட்சி யாண்டில் அவ் அந்தணாளனுக்கு இச் செப்பேட்டுச் செய்திகளின் மூலம் சாசன மங்கலத்தைத் தானமாகக் கொடுத்தான்.

—o—

## 7

# சீவல்லபன்

(கி.பி. 1120 – 1146)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமடந்தையும் சயமடந்தையும்
திருப்புயங்களில் இனிதிருப்ப
இருநிலமும் பெருமை எய்த
எண்டிசையும் குடைநிழற்ற
மன்னவரெல்லாம் வந்திறைஞ்ச
[1]மரபிலேவரு முடிசூடித்
[2]தென்குமரி முதலாகிய
திரைகடல் எல்லையாகப்
பார்முழுதுங் கயலாணை
பரந்துசெங்கோ லுடன்வளர 5
மன்னிய வீர சிம்மா சனத்து
உலகமுழு துடையா ளுடன்வீற் றிருந்தருளி
மாமுதல் மதிக்குலம் விளக்கிய கோமுதல்
கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள்
சீ வல்லப தேவர்க்கு யாண்டு 4 ஆவது 10

---

1. மரபிலேவந்த. 2. தென்குமரியே முதலாக திரைகடலே; தென்குமரியும் முதலாக வடகங்கையும் எல்லையாக;

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமகள் செயமகள் திருப்புயத் திருப்ப
இருநிலத் தொருகுடை நிற்பப் போர்வலி
செம்பியர் சினப்புலி ஒதுங்க அம்புயர்
மேருவில் கயல்விளை யாடப் பார்மிசை
மந்த ... ... ... ... ... மாற்றி 5
நாற்றிசை மன்னவர் திறைமுறை அளப்ப
மன்னவ . . . . . . . . . ந் தருளும்
மாமுதல் மதிக்குலம் விளக்கிய கோமுதல்
கோச்சடைய பன்மரான உடையார் சீவல்லப
தேவர்க்கு யாண்டு ஆறாவது . . . .

## சீவல்லபன்

### முன்னுரை

"தன்பெஞ் சேனையை ஏவிப் பஞ்சவர்
ஐவரும் பொருத போர்க்களத்து"[1]

என்னும் முதற் குலோத்துங்க சோழன் மெய்க்கீர்த்தியுள் கூறப்படும் பாண்டியர் ஐவருள் ஒருவன் சடைய வர்மன் சீவல்லபன். சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவன்.

### மெய்க்கீர்த்தி

சோழர் மெய்க்கீர்த்தியைப் பின்பற்றியவை எனலாம். பட்டத் தரசி உலக முழுதுடையாள் என்ற சிறப்புப் பெயருடனேயே குறிப் பிடப் படுகிறாள். மன்னவர் பணிய, மீனக் கொடியின் ஆணை செலுத்தி, பாண்டியர் குலம் விளங்கச் செங்கோல் செலுத்தினான் என்ற செய்திகளை மட்டுமே கொண்டவை இம் மெய்க்கீர்த்திகள்.

1. 'திருமடந்தையும் சயமடந்தையும்
திருப்புயங்களில் இனிதிருப்ப'

---

1. குலோத். I. மெய் 3. 50-51.

2. 'திருமகள் செயமகள்
திருப்புயத்திருப்ப'

என்ற தொடக்க அடிகளை உடைய இரண்டு சிறிய மெய்க்கீர்த்தி களே சீவல்லபனுடைய மெய்கீர்த்திகளாகக் கிடைக்கின்றன.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

#### 1-10. "திருமடந்தையும்......தேவர்க்கு யாண்டு"

சீவல்லபனின் அழகிய புயங்களில் செல்வமடந்தையும் வெற்றி மடந்தையும் மகிழ்ச்சியோடு குடி கொண்டிருந்தனர். அவன் நில வுலகும் வானுலகும் போற்றுமாறு தனது செங்கோலின் ஆணையை எண்டிசையும் பரவச் செய்தான். பாண்டிய மரபின் முறைப்படித் தனக்குக் கிடைத்த பாண்டியநாட்டு அரசுப் பொறுப்பினை மன்னர் பலர் வந்து வணங்கி நிற்ப முடி சூடி ஏற்றுக் கொண்டான். தென்குமரியும் பிற கடல்களும் எல்லையாக விளங்க இந் நில உலகம் முழுவதும் தனது கயல் ஆணையே சென்று நடைபெறுமாறு செங்கோல் நடத்தினான். பாண்டியருக்குரிய வீர சிம்மாசனத்து 'உலகமுழுதுடையாள்' என்ற பட்டப் பெயருடன் விளங்கிய பட்டத்து அரசியோடு அரசு வீற்றிருந்து சந்திர குலமாகிய தொன்மை வாய்ந்த பாண்டியர் குலத்தை மேம்படச் செய்தான். சடையவர்மன் என்னும் பட்டத்தை முறையாகப் பெற்று அரசு செலுத்திவந்தான்.

### மெய்க்கீர்த்தி-2

#### 1-10. "திருமகள் செயமகள்......சீவல்லபதேவர்க்கு"

செல்வமடந்தையும் வெற்றிமடந்தையும் சீவல்லபனிடம் என்றும் குடிகொண்டிருந்தனர். ஒப்பற்ற அவனது வெண் கொற்றக் குடை நிலைபெற்று விளங்கியது. போரில் மிகவும் வல்லமைபெற்ற சோழரது புலிக் கொடியை அகற்றி மேருவில் தனது கயற் கொடியைப் பறக்க விட்டான். நாற்றிசையிலும் இருந்த மன்னர்கள் தங்களது முறைப் படி வந்து திறை செலுத்திச் சென்றனர். சந்திரகுலத்தில் தோன்றிய பாண்டியர் குலத்திற்குப் பெருமை தேடித்தந்தவனாகிய சீவல்லபன் சடையவர்மன் என்ற பட்டத்தோடு நாடாண்டான்.

—x—

9

# மாறவர்மன் பராக்கிரம பாண்டியன்

(கி.பி. 1130 - —)

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமகள் புணரப் பூமகள் விளங்க
விக்கிரம சயமகள் பொற்புயத் திருப்பக்
கனக மேருவிற் கயல்விளை யாட
இருநிலத் தொருதனி வெண்குடை நிழற்ற
உயரும் மணிமுடிதன் உரிமையிற் சூடி 5
உலகுபொது நீங்க ஒருகோ லோச்சி
வஞ்சி மன்னரும் வடபுல வேந்தரும்
அஞ்சிவந் திறைஞ்சி அடிமலர் சூட
மன்னிய வீர சிம்மா சனத்து
உலக முழுதுடை யாரொடும் வீற்றிருந் 10
தருளிய மாமுதல் மதிக்குலம் விளக்கிய
கோமுதல் கோமாற பன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீபராக்கிரம
பாண்டிய தேவர்க்கு யாண்டு...............

# பராக்கிரம பாண்டியன்

## முன்னுரை

முதற் குலோத்துங்கசோழன் காலத்தைச் சேர்ந்தவனும் சீவல்லபனுக்கு இணையாகப் பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை ஆண்டு வந்தவனுமாகிய இப் பராக்கிரம பாண்டியன் மாறவர்மன் என்னும் பட்டப் பெயர் பெற்று விளங்கினான். இதனால் சீவல்ல பனை அடுத்து அரசாண்டவன் எனவும் கருதுகின்றனர்.

## மெய்க்கீர்த்தி

மேருமலையில் தனது கயல் சின்னத்தைப் பொறித்து அம்மலை வரையில் பரந்துபட்ட நாட்டைத் தன் குடைக்கீழ் ஆண்டுவந் தான். உலக முழுதுடையாள் என்ற பட்டப் பெயர் பெற்றவள் இவனுடைய பட்டத்தரசி.

## விளக்கம்

1-13. "திருமகள் புணர..... பராக்கிரம பாண்டிய தேவர்க்கு"

திருமகளும் நிலமகளும் பராக்கிரம பாண்டியனை நீங்காது விளங்கினர். வெற்றிமகள் அவனுடைய பொன் போன்ற புயங் களில் வீற்றிருந்தாள். பொன்மயமான மேரு மலையில் கயல் சின்னம் பொறிக்கப்பட்டது. அம்மலைவரையுள்ள பரந்த நில வுலகத்தை இவனது சிறப்பு பொருந்திய வெண்கொற்றக்குடை நிழல் செய்தது. பாண்டியர் குல மரபுப்படி மணிமுடி சூடிய பராக் கிரமன் உலகம் பொது என்ற சொல்லை நீக்கித் தனக்கே உரியதாக ஆக்கிக் கொண்டு தனது செங்கோலை நடத்திவந்தான்.

வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட சேர மன்னரும் வடநாட்டு மன்னர் பலரும் வந்து அடி தொழுது நின்றனர். இப் பெருமைகளோடு பாண்டியர்களுக்குரிய வீர சிம்மாசனத்து உலக முழுதுடையாள் என்னும் பட்டப் பெயர் பெற்ற தன் தேவியோடு அரசு வீற்றிருந்து சந்திர குலத்தை விளக்கமுறச் செய்தான் பராக் கிரமன். மாறவர்மன் என்னும் பட்டப் பெயரைப் பெற்று விளங்கி னான்.

—:O:—

10

# சடையவர்மன் பராந்தக பாண்டியன்

(கி.பி. 1130 – —)

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருவளரச் செயம்வளரத்
தென்னவர்தம் குலம்வளர
அருமறைநான் கவைவளர
அனைத்துலகும் துயர்நீங்கத்
தென்மதுரா புரித்தோன்றித்
தேவேந்திரனோ டினிதிருந்த
மன்னர்பிரான் வழுதியர்கோன்
வடிம்பலம்ப நின்றருளி
மாக்கடலை யெறிந்தருளி
மலையத்துக் கயல்பொறித்துச் 5
சேரலனைச் செருவில்வென்று
திறைகொண்டு வாகைசூடிக்
கூபகர்கோன் மகட்கொடுப்பக்
குலவிழிஞம் கைக்கொண்டு
கன்னிப்போர் செய்தருளிக்
காந்தளூர்ச்சாலை கலமறுத்து
மன்னுபுகழ் மறையவர்தம்
[1]அணிஅம்பலத் தினிதிருந்து
ஆயிரத் தெண்ம
ரவிரோதப் பணிப்பணியால் 10
[2]பறைபேர்த்துக் கல்நாட்டிப்
பண்டுள்ள பேர்தவிர்த்து
அளப்பனவும் நிறுப்பனவுங் கயலெழுதி
அனந்தபுரத் தெம்மாற்கு

---

1. மணியம்பலத்துளினிதிருந்து. 2. மறை

நிலவியபொன் மணிவிளக்கு
நின்றெரியப் பத்தமைத்து
ஆங்கமைத்த தாயநல்லூர்
அடத்தென்னாட் டரையனென
அறிவகையால் பரிந்துரைத்துத்
தென்னவர்தம் குலதெய்வம் -
தென்குமரிக் . . .திருநாள் விழாவதனில்
தைப்பூசப் பிற்றைஞான்று
வந்திருந்தா ரெல்லார்க்கும்
ஆற்றாதே தியாகமிட 15
அறத்தால் விளங்கிய வாய்ந்த கேள்வி
புறத்தாய நாடு பூமகட் களித்து
தெலிங்கவீமன் குளங்கொண்டு
தென்கலிங்கம் அடிப்படுத்துத்
திசையனைத்தும் உடனாண்ட
சிரீபராந்தக தேவர்க்குயாண்டு......

# பராந்தக பாண்டியன்

## முன்னுரை

முதற் குலோத்துங்க சோழனது ஆட்சி காலத்துப் பிற்பகுதியைச் சார்ந்தவன் இப் பராந்தக பாண்டியன். மாறவர்மன் பராக்கிர பாண்டியனை அடுத்து இவன் சடையவர்மன் என்று பட்டம் பெற்று அரசாண்டிருக்கிறான். ஆனால் பராக்கிரமனுக்கு எவ்வகை உறவு உள்ளவன் என்பது தெரியவில்லை.

## மெய்க்கீர்த்தி

பாண்டி நாட்டு முடி புனைந்து சேரரைவென்று கூபக நாட்டு மன்னன் மகளை மணந்தான். அளவைப் பொருள்களை முறைப் படுத்திக் கயல் முத்திரை இட்டான். திருவனந்தபுரத்தில் உள்ள திருமால் ஆலயத்திற்கு விளக்கு அமைத்தான். கன்னி பகவதியம்மைக்குத் திருவிழா ஏற்பாடு செய்து புறத்தாய நாட்டை நிவந்தமாக அளித்தான். தெலிங்க வீமனை வென்று அவன் நாட்டைக் கைப்பற்றிப் புகழ்மிக ஆண்டான்.

## விளக்கம்

### 1-5. "திருவளரச் செயம் வளர...கயல் பொறித்து"

தலை நகராகிய மதுரையின் மீது பொங்கி எழுந்த கடலை வேலால் எரிந்து சுவறச் செய்து அக் கடலைத் தமது அடி பணியச் செய்தவர் பாண்டிய மன்னர். தமது கயல் சின்னத்தை மலைய மலையில் பொறித்தவர் பாண்டிய மன்னர். இந்திரனைக் கண்டு அவனுக்கு நிகராய் ஆசனத்து வீற்றிருந்தவர் பாடிண்ய மன்னர். இத்தகு சிறப்பு வாய்ந்த பாண்டிய குலத்தில் மதுரை மாநகரில் வந்து தோன்றியவன் இப் பராந்தக பாண்டியன்.

பாண்டி நாட்டில் செல்வமும் வெற்றியும் ஓங்கி வளரவும், அரிய நால் வேதங்களும் தழைத்து ஓங்கவும், இவற்றால் உலகம் முழுவதும் துன்பம் என்பதே இல்லாது நீங்கவும், பாண்டியர் குலமாகிய சந்திரகுலத்தின் பெருமை வளரவும் வந்து தோன்றினான் இப் பராந்தக பாண்டியன்.

### 6-8. "சேரலனைச் செருவில் வென்று......கலமறுத்து"

சேர மன்னனைப் போரில் வென்று வாகைசூடித் திறை செலுத்துமாறு செய்தான். தென் திருவாங்கூர் நாட்டைச் சேர்ந்த கூபகம் என்னும் பகுதியினை ஆண்ட மன்னன் தன் மகளைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கேட்க அவளை மணந்து கொண்டு விழிஞம் என்னும் நகரைத் தனக்கு உரியதாக ஆக்கிக் கொண்டான்.

காந்தளூர்ச்சாலை என்னுமிடத்தில் போரில் சேரரது மரக்கலங்களை அழித்துச் சேரரை வென்றான். இப்போரே இவனது முதற் போராகக் குறிக்கப்படுகிறது. இச் செய்திகள் அனைத்தும் இவனது சேர நாட்டுப் போரைக் குறிப்பன.

### 9-12. மன்னுபுகழ் மறையவர்தம்........... கயலெழுதி"

புகழ் பெற்ற ஆயிரத்தெண்மராகிய அந்தணர் நிறைந்த மன்றத்தில் இருந்து சிறந்த அறச் செயல்கள் பலவற்றில் ஈடுபட்டான். முகத்தல் அளவை, நிறுத்தல் அளவை போன்றவற்றில் இருந்த பழைய பெயர்களை மாற்றி ஒழுங்குபடுத்திக் கயல் முத்திரை இட்டு வாணிகம் முறையாக நடக்குமாறு செய்தான்.

### 12-16. "அனந்தபுரத்து எம்மாற்கு...பூமகட்களித்து"

திருவனந்தபுரத்தில் எழுந்தருளியுள்ள திருமாலுக்கு பொன்னாலாகிய பத்து மணி விளக்குகளை அமைத்துக் கொடுத்து என்றும் எரிவதற்குரிய ஏற்பாடுகளையும் செய்தான்.

பாண்டியரின் குலதெய்வமாகச் கொண்டாடப்பட்டவள் **கன்னி பகவதி யம்மை** யாவாள். அவளுக்குத் தைப் பூசத் திருவிழாச் சிறப்பாக நடைபெற ஏற்பாடுகளைச் செய்தான். அவ்விழாவிற்கு வரும் அன்பர்கள் அனைவருக்கும் உணவிடவும், அவர்களுக்கு வேண்டிய பொருளதவி செய்யவும் வேண்டிய பொருளுக்காகப் பெரும் நிவந்தம் ஒன்றினை அமைத்தான். அந்த நிவந்தமாகக் கொடுக்கப்பட்ட பகுதி **புறத்தாய நாடு** எனப்பட்டது. அறநெறி மிக்கு விளங்கிய அந்நாடு சிறந்த கேள்வி ஞானமுடையோர் வீற்றிருந்த நாடாகும்.

## 17-18. "தெலிங்கவீமன் குளங்கொண்டு.........பராந்தக தேவர்க்கு"

தென்கலிங்க நாட்டை ஆண்ட **தெலிங்க வீமனோடு** போர் செய்து அவனை வென்று தென்கலிங்க நாட்டைத் தனக்கு உரிய தாக ஆக்கிக் கொண்டான். முதற்குலோத்துங்க சோழன் மகன் விக்கிரம சோழனுக்குத் துணையாகச் சென்று பெற்ற வெற்றியே இத் தென்கலிங்க வெற்றியாகும் என வரலாற்றுப் பேராசிரியர்கள் கருதுகின்றனர்.[1]

இத்தகு வெற்றிகளாலும், மக்களுக்குச் செய்த நன்மைகளாலும், இறை வழிபாட்டுச் செயல்களாலும் சிறந்து விளங்கிய பராந்தகன் எல்லாத் திசைகளையும் தனக்கு உரிய தாக்கிச் செங்கோல் செலுத் தினான்.

---

1. பாண்டியர் வரலாறு - பக். 411-412

## 11

# சடையவர்மன் வீரபாண்டியன்

(கி.பி. 1175-1180)

பூமடந்தையும் செயமடந்தையும்
பொலிந்துதிருப் புயத்திருப்பப
பார்முழுதுங் குடைநிழற்றப்
பராக்கிரமத்தான் முடிசூடித்
தென்மதுரா புரித்திரு
விளையாட்டத் திற்கண்டு
மன்னரெல்லாம் வந்திறைஞ்ச
மலைநாடு கொண்டருளி
மாபார தம்பொருது
மன்னவர்க்குத் தூதுசென்று 5
தேவாசுர மதுகைதரித்துத்
தேனாரு மறையுங்கொண்டருளி
வடவரையிற் கயல்பொறித்து
வானவர்கோ னாரம்பூண்டு
திடவாசகக் குறுமுனியாற்
செந்தமிழ்நூல் தெரிந்தருளி
செங்கோ லெங்கும் திசையுற நடாத்தி
மன்னிய வீர சிம்மா சனத்தில் 10
திரைலோக்கிய முழுதுடை யாளொடும்வீற் றிருந்தருளி
மாமுதன் மதிக்குலம் விளக்கிய கோமுதற்
கொற்ற வன்மரான திரிபுவன சக்கிரவர்த்திகள்
சிரீ வீரபாண்டிய தேவர்

# சடையவர்மன் வீர பாண்டியன்

## முன்னுரை

சடையவர்மன் பராக்கிரம பாண்டியனின் மகன் சடையவர்மன் வீரபாண்டியன் என்று வரலாற்று ஆசிரியர்கள் குறிக்கின்றனர்.[1] இவ் வீரபாண்டியன் பாண்டியநாட்டு அரசபதவிக்காகக் குலசேகர பாண்டியனுடன் போட்டியிட்டான். சோழர் உதவியால் இவர்கள் இருவரும் மாறி மாறி அரசுரிமை பெற்றவர்களாவர்.

வீரபாண்டியனின் இம் மெய்க்கீர்த்தி இவன் முன்னோர் சிறப் பினை மட்டுமே கூறுவதாக அமைந்துள்ளது.

## மெய்க்கீர்த்தி

மதுரை மாநகரை அமைத்து, பாரதப் போரில் படைத் துணை புரிந்து, இமயத்தில் கயல் பொறித்து விளங்கிய பாண்டியர் குலத்தின் மணிமுடி சூடினான் வீரபாண்டியன். கொற்றவர்மன் என்ற சிறப்புப் பெயரோடு திரைலோக்கியமுடையாள் என்னும் தேவியுடன் அரசு வீற்றிருந்தான்.

## விளக்கம்

### 1–9. "பூமடந்தையும்.........திசையுற நடாத்தி"

நிலமகளும் செயமகளும் தங்களை விட்டு அகலாது இருப்பத் தங்கள் போர்த் தொழிலால் இந்நில உலகை ஆளும் உரிமை பூண்டு பாண்டிய மரபின் முடிசூடி விளங்கிய மன்னர்களின் அருஞ் செயல் கள் பல.

திருவாலவாயான திருவிளையாடலின் மூலம் தென் மதுரை மாநகரை அமைத்த பெருமையுடையவர்கள் பாண்டியர்கள், மேலும் அவர்கள் பல மன்னர்கள் வணங்கி நிற்க, மலை நாடாகிய சேர நாட்டைக் கைப் பற்றினார்கள், மாபாரதப் போரில் படைத்துணை புரிந்தும், மன்னர்களுக்காகத் தூது சென்றும் செயலாற்றினார்கள். தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நிகழ்ந்த போரில் தேவர்களுக்குத் துணை புரிந்து வெற்றி பெற்றார்கள். இனிய மறையை உணர்ந் தார்கள். இமயமலையில் தங்கள் கயல் சின்னத்தைப் பொறித் தார்கள். இந்திரனது ஆரத்தை அணிந்து விளங்கினார்கள். குறு முனியாகிய அகத்திய முனிவரைக் குலகுருவாக ஏற்று, அவரிட

---

1. பாண்டியர் வரலாறு பக். 423.

மிருந்து தமிழ் நூல்கள் பலவற்றைக் கற்றறிந்தார்கள். எல்லாத் திசை யிலும் தங்கள் ஆணையே நடைபெறுமாறு செங்கோல் நடத்தி னார்கள்.

10-13. "மன்னிய வீர சிம்மாசனத்தில்.........சிரீவீர பாண்டிய தேவர்"

இவ்வாறான பலவகைச் சிறப்புகளோடு கூடிய பாண்டிய மரபிற்குரித்தான வீர சிம்மாசனத்தில் திரை லோக்கிய முழுதுடை யாள் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற தன் பட்டத்தரசியோடு வீற்றிருந்தருளினான் சிரீ வீரபாண்டியன். சிறந்த சந்திர குலத்தை விளக்கமுறச் செய்தற்காகத் தோன்றிய மன்னர் மன்னாகிய வீர பாண்டியன் கொற்றவர்மன் என்ற பட்டப் பெயரைப் பெற்றான். இப்பெயர் பிற மன்னரின் சிறப்புப் பெயர்களிலிருந்து மாற்ற முடையதாக அமைந்துள்ளது.

—:O:—

## 12

# சடையவர்மன் குலசேகர பாண்டியன்

(கி.பி. 1190 - 1218)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூதல வனிதை மேதக விளங்க
மந்தர மார்பினில் [1]இந்திரை யிருப்பப்
[2]புயவரை தழுவி வயமகள் களிப்ப
[3]மயலறு சிறப்பின் மாமுனி தெரிந்த
இயலிசை நாடகம் எழில்பெற வளர
வஞ்சினங் [4]கூற [5]மதக்களிறு நடாத்தி 5
வெஞ்சின வேங்கை வில்லுடன் ஒளிப்பத்
திக்கடிப் படுத்துச் சக்கரம் செல்லப்
பௌவ [6]மானிலம் பார்த்திபர் பொதுவறத்
தெய்வ மேருவில் [7]சேல்விளை யாட
[8]ஒன்றுபுரி நெஞ்சத்து இருவகைப் பிறப்பின் 10
முந்நூல் மார்பின் நான்மறை யாளர்
[9]மாக விசும்பின் வானவர்க் கமைத்த
[10]யாக வேள்வி இடந்தொறும் இயல
ஐம்புலன் கட்கும் அருமைசால் [11]அறுவகைச்
செம்பொருட் சமயம் சீருடன் [12]பரவ 15
எழுபொழில் கவித்த முழுமதிக் கவிதைத்
திருநிலவு சொரிந்த விருநில வரைப்பின்

---

1. இந்திரனிருப்ப. 2. புயல்வரை. 3. மயலுறு. 4. கூறு. 5. மதக்களிறிவர்ந்த. 6. மானிலப்பார்த்திபர். 7. செயல்விளையாட; செல்விளையாட. 8. வென்றுபுரி. 9. மாதக. 10. மாவேள்வி. 11. றுஅசுவைச். 12. குலவ.

வெங்கலி கடிந்து செங்கோல் நடப்ப
[13]விண்பொருஞ் சிகர மாதிர வெண்கோட்டு
எண்பெருங் [14]களிறினும் இசைமகள் ஏற 20
ஒன்பது கண்டத்து உயர்புல [15]வேந்தரும்
அன்புடன் வணங்கி அருந்திறை காட்டி
[16]மணித்தட முடிமேல் அடிமலர் சூட
மணிமுடி சூடி வளங்கெழு கவரி
[17]சேரர் செம்பியர் திரண்டரு கசைப்ப 25
[18]வீரசிங் காதனம் ஏறும் நாப்பண்
கடவுள் [19]மீனன் கற்புத் திகழ
[20]உடன்முடி சூடி உலகம் போற்றச்
செருமலி தானைப் [21]பார்புர வேந்தர்
[22]கடகத் தோளும் [23]ஆகமும் பிரியா 30
வோடரி நெடுங்கண் ஒண்தொடி மகளிர்
[24]திலதந் தலமேற் சேவடி வைக்கும்
உலக முழுதுடை யாரொடும் வீற்றிருந்
தருளிய மாமதி மதிக்குலம் விளக்கிய
கோமுதற் கோச்சடைய பன்ம ரான 35
திரிபுவனச் சக்கர வர்த்திகள்
ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்டு இரண்டாவது
நாள் முப்பத் தைந்தினால். . . . . .

## 13

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ
பூதல மடந்தை புகழொடும் பொலிய
வேதமும் தமிழும் [1]மேண்மையில் விளங்கக்
[2]கற்புடைத் திருமகள் பொற்புயத் திருப்பத்
திக்கிரு நான்கு சக்கர வாளமும்
சூழும் புவனமும் ஏழுங் [3]கவிப்ப 5

13. வெண்பொரு. 14. களிறு மிசைமகள் ; களிறு மசைகளேற. 15. வேந்தர். 16. யணி தட. 17. செரர். 18. வீரசிங்காதனமெரு நாப்பட். 19. மேனி ; மின்ன் ; மின்வற். 20. அவனிமுடி. 21. பரிபுர. 22. ஆடகத் ; வெந்த ராடகத் தொருமாக. 23. ஆரமும். 24. திலத முதல மெல் செவடி.
1. மேன்மேல். 2. கற்புடன். 3. கவிந்த ; கவித்த.

வெண்குடை நீழல் செங்கோல் நடப்ப
நாடொறும் மதியமும் ஞாயிறும் வலங்கொள்
ஆடகப் பொருப்பின் அரசுமீ னிருப்பச்
சுந்தர மார்பினில் இந்திரன் பூட்டிய
ஆரமும் அலங்கலும் அழகுடன் திகழ 10
[4]வீணையும் புலியும் வில்லுஞ் சுரம்புக
ஆனை மன்னவர் அடிமலர் [5]சூட
மரபில் வந்த மணிமுடி சூடி
[6]விளங்கிய கதிரொளி வீரசிம்மா சனத்து
உலகமுழு துடையாரொடும் வீற்றிருந்து அருளிய 15
மாமுதல் மதிக்குலம் விளக்கிய
கோமுதல் கோச்சடைய பன்ம ரான . . . .
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்
மாடக்குளக் கீழ் மதுரைக்கோயிலுள் ளாலை
ஸ்ரீ வல்லவன் பீடத்துப் பள்ளிப் பீடம் 20
முனையதரையனில் எழுந்தருளி யிருந்து
யாண்டு ஒன்பதாவது நாள் நாற்பத்து நாலினால்

## 14

### மெய்க்கீர்த்தி-3

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூவின் கிழத்தி [7]மேவிவீற் றிருப்ப
மேதினி மாது [8]நீதியிற் புணர
[9]வயப்போர் மடந்தை சயப்புயத் திருப்ப
[10]மாக்கலை மடந்தை வாக்கினில் விளங்கத்
திசையிரு நான்கும் இசைநிலா வெறிப்ப 5
[11]மறைநெறி வளர மனுநெறி திகழ
அறநெறிச் சமயங்கள் ஆறும் தழைப்பக்

---

4. விளையும் வினையும். 5. சூடி. 6. விலகிய மணியணி. 7. மெய்வீற்·
8 நனியும். 9. வியப்போர். 10. நாவின்· 11. அறநெறி.

[6]கானில் வேங்கை வில்லுடன் [7]தொடர்ந்துற
மீனம் கனகா சலத்துவீற் றிருப்ப
எண்கிரி சூழ்ந்த [8]எழுகடல் எழுபொழில் 10
வெண்குடை [9]நிழற்ற செங்கோல் நடப்பத்
கொடுங்கலி நடுங்கி [10]நெடும்பிலத் தொளிப்ப
வில்லவர் செம்பியர் விராடர் [11]மராடர்
பல்லவர் திறையுடன் முறைமுறை [12]பணிய
இருநேமி [13]யளவும் ஒருநேமி யோங்க 15
இன்னமு தாகிய இயலிசை நாடகம்
மன்னி வளர மணிமுடி சூடி
[14]விளங்கு கதிரொளி வீரசிம்மா சனத்து
கற்பக நிழற்கீழ் கலைவல் லோர்புகழ்
மன்னவர் தேவியர் வணங்கிநின் [15]றேத்தும் 20
அன்ன மென்னடை அவனி முழுதுடை
யாளொடும் வீற்றிருந் தருளிய
மாமுதல் மதிக்குலம் விளக்கிய கோமுதல்
கோச்சடைய பன்மரான திரிபுவனச்
சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர தேவர்க்கு
யாண்டு பதின்மூன்றாவதின் எதிராமாண்டு

# குலசேகரன்

## முன்னுரை

மூன்றாம் குலோத்துங்க சோழனது துணைகொண்டு பாண்டிய நாட்டை ஆண்டு வந்த விக்கிரம பாண்டியனின் மக்கள் குலசேகர பாண்டியனும் சுந்தர பாண்டியனும் ஆவார்கள். இவர்களுள் மூத்தவனான குலசேகர பாண்டியன் தன் தந்தைக்குப்பின் முடி சூடினான். இவனுடைய மெய்க்கீர்த்திகளாகக் கிடைத்துள்ளவை மூன்று. அவை முறையே,

'பூதல வனிதை மேதக விளங்க'
'பூதல மடந்தை புகழொடும் பொலிய'

---

6. கானவேங்கையை. 7. துரந்து. 8. ஏழ்கடல். 9. நிழற்கீழ். 10. வெம் பிலத்து. 11. வராடர். 12. இழிய. 13. ஆளவும். 14. வெற்பென ஓங்கிய வீரசிம்மாசனத்து. 15. றேத்த.

'பூவின் கிழத்தி மேவிவீற் றிருப்ப'
என்ற தொடக்க அடிகளை யுடையனவாய் அமைந்துள்ளன.

## மெய்க்கீர்த்தி

1. மேருவில் கயற்கொடி பறக்க அறுசமயமும் தழைக்க அரசாண்டவன் குலசேகர பாண்டியன். எட்டுத்திக்குகளிலும் அவன் புகழ் பரவியிருந்தது, ஒன்பது கண்டத்து மன்னர்களும் திறை செலுத்தி வருமாறு உலக முடையாளொடும் அரசுவீற்றிருந்து நாட்டின் துன்பத்தை நீக்கினான் என்ற பொதுக் கருத்துகளை யுடையது இம் மெய்க்கீர்த்தி.

2. ஏழு உலகமும் எட்டுத்திக்கும் தனது ஆணைக்குள் அடங்குமாறு செய்த குலசேகரன் சேரரையும் சோழரையும் காட்டில் ஓடி ஒளியுமாறு செய்து, பல மன்னர் திறைசெலுத்த, உலக முழு துடையாளொடும் அரசு வீற்றிருந்தான் என்பதே இம்மெய்க்கீர்த்தி கூறும் செய்தி.

3. எல்லாச் செல்வமும் விளங்கப் பாண்டி நாட்டின் மணிமுடி சூடிய குலசேகரன் எண்கிரி சூழ்ந்த ஏழுகடலும் ஏழு பொழிலும் தன் குடைக்கீழ் அடங்குமாறு பரந்த நிலவுலகைப் பெற்று ஆட்சி புரிந்தான். நாட்டில் கலியைத்துரத்தி முத்தமிழும் பலவகைச் செல்வமும் ஓங்கச் செய்தான். தேவமாதரால் போற்றப்படும்பெருமை வாய்ந்தவளாகிய அவனிமுழுதுடையாளொடு அரசு வீற்றிருந்த குலசேகரன் சடையவர்மன் என்ற பட்டப் பெயர் பெற்றிருந்தான்.

### விளக்கம்

## மெய்க்கீர்த்தி–1

### 1-4. "பூதல வனிதை.........எழில்பெற வளர"

குலசேகரனிடம் நிலமடந்தை சிறந்து விளங்கினாள். மலை போன்ற மார்பினில் இந்திரையும் புயமாகிய மலையில் வெற்றி மகளும் மகிழ்ந்திருந்தனர். அவனது ஆட்சியில் குற்றமற்ற அகத் திய முனிவனால் ஆய்ந்து அளிக்கப் பெற்ற இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழும் சிறப்புற வளர்ந்தன.

### 5-9. "வஞ்சினங்கூற......சேல்விளை யாட"

வஞ்சினம் கூறி, மதம் பொருந்திய தனது யானையைச் செலுத் திச் சென்று பெரும் போர் பல செய்ததன் பயனாகக் கொடிய சின முடைய புலிக் கொடியையுடைய சோழரும் விற்கொடி தாங்கிய சேரரும் மறைந்து ஒளியச் செய்தான். இவ்வாறு நான்கு திசை

நாடுகளையும் தனக்கு உரியதாக ஆக்கி, அங்கெல்லாம் தனது ஆணையே நடைபெறுமாறு செய்தான். இதனால் கடலால் சூழப்பட்ட இந்நிலஉலக மானது மன்னருக்கெல்லாம் பொதுவானது என்ற நிலையை நீக்கினான். தெய்வத் தன்மை வாய்ந்த மேருமலையில் தனது மீனக் கொடியைப் பறக்கச் செய்தான்.

### 10-25. "ஒன்றுபுரி நெஞ்சத்து... திரண்டு அருகு அசைப்ப"

குலசேகரன் சொல் ஒன்று செயல் ஒன்றாக இல்லாதவனாய் என்றும் நிலைத்த ஒரே உள்ளத்தையுடையவனாக விளங்கினான். இம்மை, மறுமை என்னும் இருவகைப் பிறப்பினையுடையவனாய், முந்நூல் என்னும் பூணூலணிந்த மார்போடு விளங்குபவர்களும், இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்னும் நான்கு மறைகளில் வல்லவர்களுமாகிய அந்தணர்களைக் கொண்டு விண்ணுலகத்திலுள்ள தேவர்களுக்குரிய அவி உணவினை அளிக்கும் பொருட்டு வேள்விகள் பலவற்றைப் பலவிடத்தும் நடைபெறச் செய்தான். சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புல நுகர்ச்சிக்கும் சிறந்து விளங்குவனவும், சிறந்த நிலையான பொருள்களை உணர்த்துவனவும் ஆகிய சைவம், வைணவம், சாக்தம், சௌரம் கணாபத்தியம், கௌமாரம் என்னும் அறுவகைச் சமயமும் நாட்டில் பரவி வளரச் செய்தான். அதலம், விதலம், சுதலம், தலாதலம், மகாதலம், இரசாதலம், பாதாளம் என்னும் ஏழுலகினுக்கும் மேலாக இருந்து அவ்வுலகங்களைத் தனக்குக் கீழாக்கி நிற்கும் முழுமதியானது தன்னுடைய நில வொளியைப் பரப்பும் பரந்த இந்நிலவுலகத்தில் துன்பமாகிய இருளைப் போக்கிச் செங்கோல் நடத்தினான்.

திக்குயானைகள் எனப்படுவன எட்டு. அவை, ஐராவதம், புண்டரீகம், குமுதம், வாமனம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் எனப்படும். அவை, வான் அளாவிய சிகரத்தையுடைய மலை போன்றவை. வெண்மையான தந்தங்களை உடையவை. எட்டுத் திக்கையும் காத்து நிற்பவை. அத்திக்கு யானைகளின் மிசை குலசேகரனின் புகழாகிய இசைமகள் ஏறி விளங்கினாள்.

கீழ் விதேகம், மேல் விதேகம், வடவிதேகம், தென் விதேகம், வடவிரேபதம், தென் னிரேபதம், வடபரதம், தென் பரதம், மத்திம கண்டம் என்னும் ஒன்பது கண்டத்தைச் சேர்ந்த மன்னர்களும், திறைப் பொருளொடு வந்து அன்புடன் வணங்கி நின்றனர். அம் மன்னர்கள் குலசேகரனின் திருவடிகளாகிய மலரைத் தங்கள் முடி மேல் சூடி நின்றனர். இவ்வகைச் சிறப்புகளோடு குலசேகரன் பாண்டிய நாட்டின் முடிசூடி விளங்க, சேர மன்னரும் சோழ மன்னரும் கூடி இருபுறமும் கவரி வீசி நின்றனர்.

### 26-37. "வீரசிங்காதனம்.....குலசேகர தேவர்க்கு"

இவ்வாறு பெரும் படையுடை மன்னர் பலரும் போற்ற பாண்டிய நாட்டிற்குரிய வீர சிம்மாசனத்து வீற்றிருந்தான். அந் நிலை தெய்வத் தன்மை பெற்று நாடாண்ட பாண்டிய மன்னரது நெறிமுறை மேலும் விளங்குமாறு முடி சூடியதாகக் காட்சியளித்தது. வீரக்கடகம் அணிந்த அவனது தோளையும் மார்பையும் என்றும் பிரியாது விளங்கியவளும், அரிபடர்ந்த நெடிய கண்களையுடைய ஒளி பொருந்திய வளையணிந்த மகளிருக்கெல்லாம் திலதமாக விளங்கியவளும், அம்மகளிர் வணங்கும் தகுதியுடையவளுமாகிய உலக முழுதுடையாள் என்னும் பட்டத்தரசியார் சிம்மாசனத்து உடன் வீற்றிருந்தார். பாண்டியர் குலமாகிய சந்திர குலம் விளங்க வீற்றிருந்த குலசேகரன் சடையவர்மன் என்னும் பட்டப் பெயரை யும் பெற்றான்.

## மெய்க்கீர்த்தி-2

### 1–10. "பூதல மடந்தை...........அழகுடன் திகழ"

குலசேகரனது ஆட்சியில் நிலமடந்தை சிறப்புற்று விளங்கி னாள். வேதமும் தமிழும் உயர்ந்து விளங்கின. செல்வ மடந்தை மன்னனது புயத்தில் வீற்றிருந்தாள். உதய மலையாகிய சக்கிர வாளம் முதலாக இடைநின்ற ஏழுலகமும் எட்டுத்திக்குகளும் தனது வெண் கொற்றக் குடைக்கு உள்ளடங்குமாறு செய்து செங்கோல் நடத்தினான்.

சூரியனும் சந்திரனும் நாள்தோறும் முறையாக வலம்வரும் மலையாகிய பொன் போன்ற மேருமலையில் தனது மீனக் கொடி யைப் பறக்கச் செய்தான். அவனது அழகிய மார்பில் தங்கள் முன்னோரால் பெறப்பட்ட இந்திரன் ஆரமாகிய மாலையானது அழகுடன் விளங்கியது.

### 11–17. "புலியும்...........குலசேகர தேவர்"

புலிக் கொடியுடைய சோழரும், விற்கொடி தாங்கிய சேரரும் போரில் தோற்று காட்டகத்து ஓடி ஒளிந்தனர். யானைப் படை யுடைய மன்னர் பலரும் அவனுடைய மலரடிகளை வணங்கி நின்ற னர். இத்தகு பெருமைகளோடு பாண்டிய மரபிற்குரிய மணிமுடி யினைச் சூடி, ஒளி வீசிய வீரசிம்மாசனத்து உலகமுழுதுடையா ரொடும் வீற்றிருந்தான். பாண்டியர் குலமாகிய சந்திர குலம் விளங்கு மாறு தோன்றி அரசாண்ட குலசேகரன் சடையவர்மன் என்ற பட்டப் பெயரை ஏற்று விளங்கினான்.

## மெய்க்கீர்த்தி-3

### 1–5. "பூவின் கிழத்தி........இசை நிலா எறிப்ப"

குலசேகரனிடம் திருமகளும் நிலமகளும் விரும்பி, நெறி பிறழாது விளங்கினர். அவனது திருப்புயத்தில் வெற்றி மகளும், நாவில் கலை மகளும் நிலை பெற்றிருந்தனர். எட்டுத் திக்கிலும் அவனது புகழொளி பரவியது.

## 6–14. "மறை நெறி வளர.........முறை முறை பணிய"

அவனது ஆட்சியில் மறைகூறும் நீதிநெறியும் மனு நெறியும் வளர்ந்தோங்கின. அறநெறி வளர்க்கும் அறுவகைச் சமயங் களும் வேறுபாடின்றி தழைத்தன. புலிக்கொடியும் விற்கொடியும் (சோழரும் சேரரும்) கானகத்தை அடைந்தன. மீனக் கொடியே பொன் மலையாகிய மேருமலையில் பறந்தது.

கயிலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்னும் எட்டு மலைகளைச் சூழ்ந்த ஏழு கடலையுடைய இந் நிலவுலகத்தினைத் தன்னுடைய வெண் கொற்றக்குடை நிழலில் செங்கோல் நடத்தினான். கொடிய துன்பங் களுக் கெல்லாம் தலைவனாகிய கலி என்பவன் குலசேகரனது செங் கோலினால் துரத்தப்பட்டு அஞ்சி ஓடி பாதலத்தில் ஒளிந்தான், சேரர், சோழர், விராடர், மராடர், பல்லவர் ஆகிய மன்னர்கள் தங்கள் திறைப் பொருள்களைக் கொண்டுவந்து அளித்துப் பணிந்து நின்றனர்.

## 15–25. "இருநேமியளவும்......குலசேகர தேவர்க்கு"

சூரிய சந்திரர்களாகிய இருவரும் உள்ளவரை தனது ஒப்பற்ற ஆணையாகிய சக்கரம் நடைபெறச் செய்து, இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழாகிய அமிழ்தம் நாட்டில் வளர்ந்து நிலைபெறு மாறு பாண்டிய நாட்டின் மணிமுடி சூடி விளங்கினான்.

கற்பக தருவின் நிழலில் உள்ளவர்களும் சிறந்த கலைஞர்களால் புகழ்ந்து போற்றப் படுபவர்களுமாகிய தேவர்களின் தேவியராகிய தேவமாதர்கள் வணங்கும் பெருமை வாய்ந்தவளாகிய அவனிமுழு துடையாளோடு வீர சிம்மாசனத்து வீற்றிருந்தருளிய குலசேகர பாண்டியன் தங்கள் சந்திரகுலம் உயர்ந்து விளங்குமாறு தோன்றி, சடையவர்மன் என்னும் பட்டப் பெயரைப் பெற்றுத் திகழ்ந்தான்.

—×—

15

# மாறவர்மன் சுந்தர பாண்டியன்

(கி.பி. 1215 - 1239)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமலர்த் திருவும் பொருசய மடந்தையும்
தாமரைக் குவிமுலை [1]சேர்ப்புயத் திருப்ப
வேத நாவின் [2]வெள்ளிதழ்த் தாமரைக்
காதல் மாது கவின்பெறத் [3]திளைப்ப
வெண்டிரை யுடுத்த மண்டிணி [4]கிடக்கை 5
இருநில மடந்தை உரிமையிற் களிப்பச்
சமயமும் நீதியும் தருமமும் தழைப்ப
இமையவர் விழாக்கொடி இடந்தொறு மெடுப்பக்
கருங்கலி கனல்கெடக் கடவுள் வேதியர்
அருந்தொழில் வேள்விச் [5]செங்கனல் வளர்ப்பச் 10
சுருதியும் தமிழும் [6]சொல்வளங் குலவப்
பொருதிற லாழி பூதலஞ் [7]சூழ்வர
ஒருகை இருசெவி மும்மத நாற்கோட்டு
[8]அயிரா வதமுதற் [9]செயிர்தீர் கொற்றத்து
எண்டிசை யானை எருத்த மேறிக் 15
கண்டநாடு எமதெனக் கயல்களி கூர
[10]கோசலந் துளுவங் [11]குதிரங் குச்சரம்
போசல மகதம் பொப்பளம் புண்டரம்
கலிங்கம் ஈழங் கடாரங் கவுடம்
தெலிங்கஞ் சோனகஞ் சீனக முதலா 20

---

1. செயப்புயத்திருப்ப ; தடப்புயத்திருப்ப. 2. வெள்ளிதட்டாமரை. 3 தளைப்ப. 4. தடக்கை. 5. செங்கோல். 6. சொல்வளங். 7. சூழ. 8. அயிராமத 9. செய்தர ; செயிர்தரு ; செயதிரு. 10. போசலம். 11. கொகிரம்.

விதிமுறை திகழ [12]வெவ்வேறு வகுத்த
முதுநிலக் கிழமையின் [13]முடிபுனை வேந்தர்க்
[14]கொருதனி நாயகன் என்றுல கேத்தத்
திருமுடி சூடிச் செங்கோ லோச்சிக்
கொற்றத் தாளக் [15]குளிர்வெண் குடைநிழல் 25
கற்றைக் கவரி காவலர் வீச
[16]மிடைகதிர் நவமணி வீரசிங்கா தனத்து
உடன்முடி சூடி யுயர்குலத் [17]திருவெனப்
[18]பங்கய மலர்க்கரங் குவித்துப்பார்த் திபர்வர
மங்கையர் திரண்டு வணங்கும் சென்னியிற் 30
[19]சுடரொளி மவுலிச் [20]சுடர்மணி மேலிடச்
சிவந்த இணைமலர்ச் சீறடி [21]மதுகரம்
கமலமென் றணுகும் உலக முழுதுடை
யாளொடு வீற்றிருந் தருளிய
[22]மாமுதல் மதிக்குலம் விளக்கிய கோமுதற் 35
கோமாறவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீசுந்தர
பாண்டிய தேவர்க்கு யாண்டு பதினைந்தாவது நாள்
நூற்று எழுபத்தாறினால்.

## 16

### மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ

பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப
நாமருவிய கலைமடந்தையும் செயமடந்தையும் நலம் சிறப்ப
கோளார்ந்த சினப்புலியும் கொடுஞ்சிலையும் குலைந் தொளிப்ப
வாளார்ந்த பொறக்கிரிமேல் வரிக்கயல்கள் விளையாட
இருங்கடல் வலயத் தினிதறம் பெருகக் 5

---

12. வேறுவேறு. 13. முடியுடன் 14. எழுந்தருளிய 15. குளிர்குடைநிழற்கீழ். 16. விடைகதிர் ; விரிகதிர். 17. திருப்ப ; திருவுளம். 18. மங்கையர். 19. சுடர் இன. 20. சூடாமணிமுடி ; சூடாமணிமிசை. 21. கமலம் ; கமலம் சூட. 22. மாமதி மணிக்குலம்.

கருங்கலி [1]கடிந்து செங்கோல் நடப்ப
ஒருகுடை நீழல் இருநிலங் குளிர
மூவகைத் தமிழு முறைமையின் விளங்க
நால்வகை வேதமும் நவின்றுடன் வளர
ஐவகை வேள்வியும் செய்வினை இயற்ற 10
அறுவகைச் சமயமும் அழகுடன் திகழ
எழுவகைப் பாடலும் இயலுடன் பரவ
எண்டிசை யளவும் சக்கரம் செல்லக்
கொங்கணர் கலிங்கர் கோசலர் மாளுவர்
சிங்களர் தெலிங்கர் [3]சீனர் குச்சரர் 15
வில்லவர் [3]மாகதர் விக்கலர் செம்பியர்
பல்லவர் [4]முதலிய பார்த்திவ ரெல்லாம்
உறைவிட மருளென ஒருவர்முன் னொருவர்
முறைமுறை கடவதம் திறைகொணர்ந் திறைஞ்ச
இலங்கொளி மணிமுடி இந்திரன் பூட்டிய 20
பொலங்கதிர் ஆரம் மார்பினிற் பொலியப்
பனிமலர்த் தாமரை திசைமுகன் படைத்த
மனுநெறி தழைப்ப மணிமுடி சூடிப்
பொன்னிசூழ் நாட்டிற் [5]புலியாணைபோ யகலக்
கன்னிசூழ் [6]நாட்டுக் [7]கயலாணைகை வளர 25
வெஞ்சின இவுளியும் வேழமும் பரப்பித்
தஞ்சையு முறந்தையும் செந்தழல் கொளுத்திக்
[8]காவியும் நீலமும் நின்றுகவின் நிழற்ற
வாவியும் [9]ஆறு மணிநீர்நலன் அழித்துக்
[10]கூடமா மதிலுங் கோபுரமா டரங்கும் 30
மாடமா ளிகையும் மண்டபம்பல விடித்துத்
தொழுதுவந் தடையார் நிருபர்தந் தோகையர்
அழுத கண்ணீர் [11]ஆறு பரப்பி
கழுதைகொண் டுழுது [12]கவடிச்செம் பியனைச்
[13]சினமிரியப் பொருது [14]சுரம்புக வோட்டியும் 35

---

1. துறந்து. 2. மீனர்; கின்னரர். 3. மகதர். 4. முதலியர். 5. புலியானைபோயகல. 6. நாட்டில். 7. கயல்விளையாட. 8. காவிநீலமும். 9. சிறுமணிநீர். 10. கூடமுமாமதிலுங் கோபுரமுமாடாங்கும். 11. நீராறு பரப்பி. 42. கவடிவிச்சிச்செம்பியனை. 13. சினம் விரிய; செனம்பிரிய. 14. கரம்புக வொட்டியும்.

[15]பொன்முடி பறித்துப் பாணனுக்குக் [16]கொடுத்துப்
பாடருஞ் சிறப்பிற் பருதிவான் தோயும்
ஆடகப் புரிசை ஆயிரத் தளியிற்
[17]சேரர் வளவன்அபி ஷேகமண் டபத்து
வீராபி ஷேகம் [18]செய்துபுகழ் விரித்து 40
[19]பரராசர் நாமந் தலைவிடுத் துமிழுந்
[20]தறுகண் மதசர யானைமேல் கொண்டு
நீராழி வையம் முழுதும்பொது [21]வழித்த
கூராழியுஞ் செய்ய [22]தோளுமெய் கொண்டுபோய்
[23]அடையப் படாத வருமறை[24]தேரந் தணர்வாழ் 45
தெய்வப் புலியூர் திருவெல்லை யிற்புக்குப்
பொன்னம்ப லம்பொலிய [25]ஆடுவார் பூவையுடன்
மன்னுந் திருமேனி கண்டுமனங் களித்துக்
கோலமலர் மேலயனுங் குளிர்துழாய் மாலும்
அறியா மலர்ச்சே வடிவணங்கி வாங்கு 50
மேற்சிறை யன்னம் துயிலொழிய [26]வண்டெழும்
பூங்கமல வாவிசூழ் பொன்னமரா பதியில்
ஒத்துலகந் தாங்கும் உயர்மா மேருவைக்
கொணர்ந்துவைத் தனையசோதி மணிமண்ட
[27]பத்திருந்து
சோலைமலி பழனச் சோணாடு தான்இழந்து 55
[28]மாலை முடியுந் தரவருக வென்றழைப்ப
வான்நிலை குலைய வல்லாநிலத்து எல்லை
தான்கடந்து சக்கர வாளகிரிக் கப்புறத்துப்
போன வளவன் உரிமையோடும் புகுந்து
பெற்ற புதல்வனைநின் பேரென்று முன்காட்டி 60
[29]வெற்றி அடியிணைக்கீழ் வீழ்ந்து தொழுது [30]இரப்பத்
தானோடி முன்[31]னிழந்த தன்மையெல்லாம் கையகலத்
தானே தகம்பண்ணி தண்டார் முடியுடனே
விட்ட அகலிடந்தன் மார்வேளைக் குத்திரிய
[32]இட்ட படிக்கென்றும் இதுபிடிபா டாகவென 65

---

15. பைம்பொன் மணிமுடி. 16. கொடுத்தருளி. 17. சோரவளவ. 18. பண்ணி புகழ்விரித்து நாளும். 19. பாராசர் நாமத்தலை பிடுங்கிமீளும். 20. தருகண்மத சானை ; தருகண்மதவாளை. 21. விழித்த. 22. தோளுமேல். 23. அய்யப் படாத. 24. தொந்தணர் ; தேந்துணர். 25. வறவோர். 26. வண்டெழுப்பும். 27. திருத்தி. 28. தாமாலைமுடி. 29. வெற்றியரியணைக்கீழ். 30. இரந்து. 31. சென்ற. 32. இட்டபடிக்கேளின்று.

[33]பொங்குதிரை ஞாலத்துப் [34]பூபாலர் தொழவிளங்கும்
செங்கயல் கொண்டு ஊன்றுந் திருமுகமும்
பண்டிழந்த சோழ பதியெனும் நாமமும்
தொல்நகரும் மீள வழங்கி விடைகொடுத்து
விட்டருளி ஒருக்கடற் பாரில் வேந்தர்களைக் 70
[35]குற்றங்கள் தீர்க்குங் கடவுளிவன் என்றெண்ணித்
தளையுற் றடையாதார் தண்ட லிடையிற்
கிளையுற் றெனமுழுதுங் கேட்டருள நன்றேத்தி
வணங்கும் வடகோங்க னைச்சிறையு மிட்டு
களங்கொ ளருநீ ருந்தேரன் மாலை 75
கழித்தெல் வழங்கி யருளியபின் னொருநாள்
மற்றார முழங்கு முரசக் கடற்றானை
முன்புகுந்து தென்கொங்கர் வந்திட்ட தெண்டனுக்கு
மின்பொங்கச் சாத்தியஆ பரணந்தக்க தெனவழங்கி
ஆறாத பெருநண்பி னவன்சிறையு மிட்டுத் 80
திருமால்இரு மருங்கும்சந்திர சூரியர்சே விக்கச்
செங்கண்
கருமால் களிக்கிற்றில் வருமுக்கட் கடவுளென
மாட மதுரையிற் தான்போந்து புவனியிலே
கூட்டுக் கொங்கரையுங் கும்பீடு கொண்டவர்க்குத்
தொல்லைப் புவிக்கு மிணங்காமல் தாஞ்சொன்ன 85
எல்லைக்குள் நிற்ப இசைந்திட்டு ஏற்(ப)க்கொண்டு
இவ்வாறு செய்யா தொழியில்இய மனுக்குவெவ்
[36]வேல்விருந் தாக்குதும் உம்மையென விட்டருளி
முன்னம் நமக்கு முடிவழங்கு சேவடிக்கீழ்
இன்னம் வழிபடுவோ மென்னாது பின்னொருநாள் 90
[37]காலனது புனநா டெனுங்[38]களியா லெதிர்செல்லா
திறைமறுத்த சென்னிவிடு தூசியும் பேரணியும்
ஒக்கச் சுருண்டொதுங்கி வாசியும் வாரணமும்
தெருமடற் கருவக் [39]காலனும் வெட்டுண்ணக்
கண்ணி ரண்டு மயங்கக் கைக்கொண்டு 95
வேலா வலையத்து வீழ்ந்தவன்போய் மெய்நடுங்க
அம்பருந்து மார்த்த கடல்மண்ட லீகருடல்
வெம்பருந் துண்ண அக்களத்தில் ஆனையின்

---

33. பொங்குமிரை. 34. பூபாலர்தோள்விளங்கும். 35. குற்றதெங்கள். 36. வெல் விருந். 37. காவ(ல)னது . 38. களியாலெவலெதிர்செல்லா. 39. காலானும்.

வெண்மருப்புங் கையுங் [40]குறைத்தெங்கள் [41]மீனவற்கும்
பால்குடமா மென்றுதான் வீரர்கோன் மாகமுகடு 100
தடவி மழைமடுக்கும் காகநெடும் பந்தற்கே
அவற்றது ஆடலும் கூகையின் பாடலுங்
கண்டும் கேட்டுங் [42]களித்தஉடல் கருங்கூந்தல்
வெள்ளெயி றில்செவ் வாய்பெரிய சூலக்க
வல்லிபலி கொள்களன வாழ்த்தி வென்று 105
பகையின் மிகையொழிய வேந்தலறக் கொன்று
சினந்தணியாக் கொற்றவ நெடுவாள் உயற்கு
செங்குருதி நிறத்தொளி செய்து தெகுபுலத்து
வெண்கவடி வித்த வீர முழுதெடுத்துப்
பாடும் [43]பரணிதனைப் பார்வேந்தர் கேட்பிக்க 110
ஆடுந் [44]திருமஞ் சனநீர்கள் மண்குளிர
ஆங்கவந் திணைக்கட்டணத்துக் கற்பு தனக்[45]கரணுய்
ஓங்குரி மைக்குழாம் ஒருகை திசைக்கொண்டு
மூரி மணிப்பட்டங் கட்டி முடிசூட்டி
மார்பில் [46]அணைத்துவளவ னவன்முதல் தேவி
யென்று 115
[47]பேர்பெற்ற வஞ்சி முதலாய பெய்வளையார்
பொங்கு புனற்கும்[48]சப முதலாய்போ லவர்புகழ
மங்கலங்கள் எட்டும் மணிக்கத வத்தேந்தி
கொடிகொண்ட நெற்றி நிறைந்தக்கோ புரஞ்சூழ
முடிகொண்ட [49]சோழபுர மண்டபத்துப் புகுத 120
திசைதொறும் செம்பொற் செயத்தம்பம் நாட்டி
வாகைக் கதிர்வேல் வடவேந்தர் தம்பாதம்
மேகத் தழையணிய வீரக் கழலணிந்து
விளங்கிய மணியணி வீரசிம் மாசனத்து
விளங்கெழு கவரி யிருமருங் கசைப்பக் 125
கடலென்ன முழங்கும் [50]களிநல் யானை
வடபுல வேந்தர்தம் மணிப்புயம் பிரியா
இலங்கிழை [51]அரிவையர் தொழுதுநின் றேத்தும்
உலக முழுதுடை [52]யாளொடும் வீற்றிருந்து
அருளிய ஸ்ரீகோ மாறபன்ம ரான 130

---

40. குன்றைத்தெங்கள். 41. மீனவர்க்கு. 42. களித்தஒடல். 43. பரணிதன். 44. திருமஞ்சணநீர்கள். 45. கரனாய். 46. அணைத்துவ்ளவன் வன்முதல். 47. பெகபெற்ற. 48. சபமுதலாக போலவர் புகழ்: 49. சொளபுர. 50. களிநல்வி யானை. 51. யருவுயர். 52. யாரொடும்.

திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ சோணாடு
கொண்டு முடிகொண்ட சோழபுரத்து [53]வீராபிஷேகம்
பண்ணி அருளிய
ஸ்ரீ சுந்தர பாண்டிய [54]தேவர்க்கு யாண்டு 20 ஆவது
நாள் 37இனால்.........................

# மாறவர்மன் சுந்தர பாண்டியன்

## முன்னுரை

விக்கிரம பாண்டியனின் மகனும், குலசேகர பாண்டியனின் தம்பியுமான மாறவர்மன் சுந்தர பாண்டியன் புரட்டாசித் திங்கள் அவிட்டத் திருநாளில் பிறந்தவன் ஆவான். சோழப் பேரரசுக்கு உட்பட்ட நிலையில் பாண்டிய நாட்டை ஆண்டு வந்த பாண்டிய மன்னர்களின் நிலையை மாற்றித் தன்னுரிமை பெற்ற பாண்டியப் பேரரசை ஏற்படுத்திய பெருமை பெற்றவன் சுந்தர பாண்டியன்.

இவனுடை மெய்க்கீர்த்திகளாகக் கிடைத்துள்ளவை,

1. 'பூமலர்த் திருவும் பொருசய மடந்தையும்'
2. பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும்'

என்னும் தொடக்க அடிகளையுடைய இரண்டு மெய்க்கீர்த்தி களாகும்.

## மெய்க்கீர்த்தி

1. திருவுங் கலையும் விளங்க, அறுவகைச் சமயமும் தருமமும் ஒங்க ஆணை செலுத்திய சுந்தரபாண்டியன் திறை செலுத்திய மன்னருக்கெல்லாம் மன்னனாகப் பாண்டி நாட்டு முடிசூடி விளங்கி னான். பலவகைச் சிறப்புகளோடு உலக முழுதுடையாள் என்னும் தேவி உடனிருக்க நவமணிகள் பதித்த சிம்மாசனத்திருந்து அரசு செலுத்தி, மாறவர்மன் என்ற பட்டப் பெயரோடு விளங்கினான்.

2. மேருவில் புலிவிளையாட, தமிழும் வேதமும், வேள்வியும் சமயமும், இசையும் வளர்ந்து ஓங்குமாறு நாடாண்டான் சுந்தர பாண்டியன். இதுவரை நடைபெற்றுவந்த சோழ மன்னரது ஆணையை அறவே நீக்கிய பெருமை இவனுக்கே உரியது. மூன் றாம் குலோத்துங்க சோழனது ஆட்சியில் சோழநாட்டை அழித்து அவனது முடியைக் கைப்பற்றித் தனது பாணனுக்குப் பரிசிலாகக் கொடுத்து மகிழ்ந்தான். ஆயிரத்தளி என்னும் சோழனது அரச

53. வீரர்அபிஷேகம். 54. தேவற்கு.

மண்டபத்திலேயே வீராபிஷேகம் செய்து கொண்டான். தில்லை ஆடவல்லானை வணங்கி, பொன்னமராவதியில் தங்கி மூன்றாம் இராசராசனை வரவழைத்து அவனது நாட்டை வழங்கி [விடை கொடுத்து அனுப்பினான். வடகொங்கர், தென்கொங்கரிடை ஏற் பட்ட பூசலைப் போக்கினான். மீண்டும் வந்து எதிர்த்த மூன்றாம் இராசராசனை முறியடித்து முடிகொண்ட சோழபுரதிலுள்ள சோழரது முடிசூடு விழா மண்டபத்தில் வீராபிஷேகம் செய்து கொண்டு வெற்றித் தூண்களை நாட்டினான். சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகம் பண்ணியருளிய சுந்தர பாண்டியன் என்ற சிறப்புப் பெயர் விளங்க உலக முழுதுடையா ளொடும் அரசு வீற்றிருந்தான்.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

#### 1-6. "பூமலர்த்திருவும்......உரிமையிற் களிப்ப"

சுந்தர பாண்டியனின் திருப்புயங்களில் வெற்றி மகள் வீற்றிருந் தாள். திருமகளும் அவனைவிட்டு நீங்காது வீற்றிருந்தாள். வெண் டாமரைச் செல்வியாகிய கலைமகள் வேதம் உணர்ந்த இவனது நாவில் அழகோடு விளங்கினாள். வெண்மையான கடல் அலை களைத் தனது ஆடையாக உடுத்தவளாகிய நிலமகள் உரிமை யோடும், மகிழ்ச்சியோடும் இவனிடம் அடைந்தாள்.

#### 7-12. "சமயமும் நீதியும்.........பூதலஞ் சூழ்வர"

சுந்தர பாண்டியனது ஆட்சியில் அறுவகைச் சமயமும் மனு நெறிப் படியான நீதியும் தருமமும் தழைத் தோங்கின. தேவர்களுக் குரிய விழாக்கள் நாட்டின் பல பகுதிகளிலும் நடைபெற்றன. கலி புருடனின் கொடுமை நாட்டில் அடியோடு அழிந்தது. கடவுள் கொள்கையுடைய அந்தணர்கள் தங்கள் அரிய தொழிலாகிய வேள்விச் செங்கனலை வளர்த்தனர். மறைகளும் தமிழ் மொழியும் தொன்மையாகிய வளத்தோடு விளங்கின. போரும் திறமையு முடைய அவனது ஆணைச் சக்கரமானது இந்நில உலகம் முழு வதையும் சுற்றி உலாவந்து கொண்டிருந்தது.

#### 13-25. "ஒருகை இருசெவி.........கொற்றத்து ஆள"

நீண்ட துதிக்கையினையும், பரந்த இரண்டு செவிகளையும், பொழியும் மும்மதத்தையும், நான்கு தந்தங்களையும் உடைய ஐரா வதம் முதல் குற்றமற்ற வெற்றியுடைய எட்டுத்திக்கு யானைகளின் மேலும் கயற்கொடியானது பறந்து தான் கண்ட நாடுகளை எல்லாம் இது எமது என்று கூறி மகிழ்ந்தது. கோசலம்..... சீனம் போன்ற நாடுகள் முதலாகப் பலவேறு நாடுகளின் மன்னர்களும் அவரவர்

களுக்கு விதிக்கப்பட்ட திறை அளவு முதலிய விதிமுறைகளோடு தங்கள் தங்கள் நாட்டிற்குரிய முடிகளைச் சூடி அரசு செலுத்தினார் கள். அம் மன்னர்களுக்கெல்லாம் தலைவன் சுந்தர பாண்டியன் என்று உலகம் புகழுமாறு பாண்டிய நாட்டு முடி சூடிச் செங்கோல் ஓச்சினான்.

### 25-36. "குளிர் வெண்குடை நிழல்.........சுந்தர பாண்டிய தேவர்க்கு"

வெற்றி பொருந்திய ஆட்சியினைச் செலுத்தும் சுந்தர பாண்டிய னது வெண் கொற்றக்குடை நிழலிலிருந்து மன்னர் பலரும் கவரி விசாநிற்க ஒளியுடைய நவமணிகள் பதித்த சிங்காதனத்தில் வீற்றிருந்தருளினான். முடிசூடிய மன்னர் பலரும் தங்கள் தாமரை மலர் போன்ற கரங்களைக் குவித்து வணங்கி வந்தனர். மங்கையர் பலரும் துதித்து நின்றனர். பாண்டியன் தலையில் அணிந்த மணி முடியில் நவரத்தினங்கள் ஒளி வீசின. சிவந்த மலர் போன்ற அழகிய திருவடிகளைத் தாமரை மலர்கள் என்று கருதி வண்டுகள் மொய்க்கும் அழகு வாய்ந்த உலக முழுதுடையாள் உடன் இருக்கத் தன் சிங்காதனத்தில் வீற்றிருந்தான் பாண்டியன். தங்களது சந்திர குலத்தை மேன்மையுறச் செய்த சுந்தர பாண்டி யன் மாறவர்மன் என்னும் பட்டப் பெயர் பெற்று விளங்கினான்.

## மெய்க்கீர்த்தி-2

### 1-6. "பூமருவிய திருமடந்தையும்.........செங்கோல் நடப்ப"

சுந்தர பாண்டியனின் புயத்தில் திருமகளும் நிலமகளும் வீற்றிருந்தனர். நாவில் கலைமகள் விளங்கினாள். வெற்றிமகள் நலத்தோடு விளங்கினாள். அவனது ஆட்சியில் புலிக் கொடியும் விற்கொடியும் மறைய கயற்கொடிகள் பொன்மலைமேல் பறந்தன. கடல் சூழ்ந்த உலகத்து அறம் பெருகியது; கொடிய துன்பம் என்பது ஒழியுமாறு செங்கோல் நடைபெற்றது.

### 7-19. "ஒருகுடை நீழல்......திறை கொணர்ந்து இறைஞ்ச"

சுந்தர பாண்டியனது ஒப்பற்ற குடையின் அளியால் இப்பரந்த உலகம் மகிழ்ச்சி அடைந்தது. நாட்டில் மூவகைத் தமிழும் நால் வகை மறைகளும் முறையாக வளர்ந்தன. பிரம, தேவ, மானிட, தென்புலத்தார், பூத வேள்விகள் என்னும் ஐந்துவகை வேள்வி களும் முறையாக இயற்றப்பட்டுப் பயன் தந்தன. சைவம், வைணவம், சாக்தம், சௌரம், கணாபத்தியம், கௌமாரம் என்னும் ஆறுவகைச் சமயமும் வளர்ந்தன. குரல், துத்தம், கைக்கிளை,

உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழுவகை இசையும் இயல் பாகப் பரவின. எட்டுத் திசையிலும் பாண்டியனது ஆணைச் சக்கரம் சென்று ஆணை செலுத்தியது. கொங்கணர்......பல்லவர் முதலிய மன்னர்கள் ஒருவர்முன் ஒருவராகப் போட்டியிட்டுக் கொண்டு தங்கள் தங்கள் முறைப்படியான திறைப் பொருளுடன் வந்து தங்களுக்குரிய நாட்டு வாழ்க்கையைத் தந்து அருளுமாறு அடைக்கலமாகி வணங்கினர்.

20-25 "இலங்கொளி மணிமுடி...... கயலாணைகை வளர"

இவ்வாறு சிறப்பிக்கப் பெற்ற சுந்தர பாண்டியன் ஒளி பொருந் திய ஆரம் மார்பில் விளங்க, ஒளி பொருந்திய முடியினைச் சூடி நான்முகனால் தோற்று விக்கப்பட்ட மனுநெறி தழைக்குமாறு அரசு புரிந்தான். மேலும், பாண்டிய நாட்டில் இதுகாறும் நடைபெற்று வந்த சோழ மன்னர்களின் ஆணையும் அடக்கு முறைகளும் நாட்டை விட்டு அகலுமாறு செய்து, பாண்டியர் தம் தனியாட்சியும் ஆணையுமே பாண்டிய நாட்டில் நடைபெறுமாறு செய்த பெருமைக் குரியவன் ஆனான்.

26-36. "வெஞ்சின இவுளியும்.........பாணனுக்குக் கொடுத்து"

சுந்தர பாண்டியனது இளமைக் காலத்தில் மூன்றாம் குலோத் துங்கன் பாண்டிய நாட்டின்மீது படை யெடுத்தான். இப்படை யெடுப்பு பெரும் படையுடன் கூடியதாக அமைந்தது. பாண்டியப் படை கடுஞ்சினமுடைய குதிரைகளையும் யானைகளையும் கொண்டதாக இருந்தது. அப்படையினைச் சோழ நாடு முழுமை யும் பரவச் செய்து தஞ்சை, உறையூர் ஆகிய நகரங்களைத் தீக்கு இரையாக்கினான். மேலும் அப்பாண்டியப் படைவீரர் காவி மலர்களும் நீல மலர்களும் நிறைந்து அழகுடன் விளங்கிய குளங் களையும் ஆறுகளையும் நீரில்லாதவாறு அழித்தனர். நகரின் மதில் கள், கோபுரங்கள், ஆடரங்குகள், மாட மாளிகைகள், மண்டபங்கள் போன்ற பலவற்றையும் இடித்துப் பாழ் செய்தனர். பாண்டிய மன்னனாகிய தன்னைத் தொழுது அடைக்கலம் வேண்டி வராமல் பகைத்து எதிர்த்த மன்னர்களின் தேவிமார் அழுத கண்ணீர் ஆறாக ஓட, அதனை நாட்டு நிலங்களில் பாயச் செய்து அந் நிலங்களைக் கழுதைகளைக் கொண்டு உழச்செய்தான், இச் செயல்களால் மிகவும் வருந்திய சோழனுடைய கோபம் எலலாம் அழியுமாறு போர் செய்து அவன் காட்டில் சென்று ஒளியுமாறு விரட்டியடித்தான். அச் சோழனுடைய பொன்னாலாகிய மணி முடியினைக் கைப்பற்றி அதனைப் பாணனுக்குப் பரிசிலாகக் கொடுத்தான்.

37-43. "பாடருஞ் சிறப்பில்......பொது வழித்த"

இவ்வாறு வெற்றி பெற்ற சுந்தரபாண்டியன் பழைய பாறை என்னும் நகரத்தில் அமைந்ததும், வானளாவிய பொன் போன்ற மதில்களை உடையதுமான ஆயிரத்தளி என்னும் அரச மாளிகையின் சோழனது முடிசூட்டு விழா மண்டபத்தில் வீராபிடேகம் செய்து கொண்டு, தனது புகழ் பரவுமாறு செய்தான். பகை மன்னர் தலைகளைத் துணிக்கும் வீரமுடைய மதயானை மீது அமர்ந்து இந்நில உலகு யாவருக்கும் பொதுவானது என்ற தன்மையை ஒழித்துத் தனக்கே உரியதாக ஆக்கிக் கொண்டான்.

44-50. "சூராழியும் செய்ய...மலர்ச் சேவடி வணங்க"

இத்தகு வெற்றிகளை எல்லாம் தழுவிய தன்னுடைய திருத்தோளும் படையும் கொண்டு, அரிய மறையுணர்ந்தோர் வாழும் தெய்வத் தன்மை பொருந்திய திருப்புலியூர் என்னும் தில்லையம் பதியை அடைந்தான். திருப்பொன்னம்பலத்தில் விளங்கும் ஆடவல்லானையும் தேவியையும் கண்டு மனங்களித்தான். தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும் திருத்துழாய் மாலையணிந்த திருமாலும் கண்டு அறிய இயலாத அவ் ஆடவல்லானின் திருவடிகளைக் கண்டு வணங்கினான்.

50-56. "வாங்கு மேற் சிறையன்னம்......வருக வென்றழைப்ப"

இறைவனை வணங்கி மகிழ்ந்த பாண்டியன் அழகிய சிறகுகளையுடைய அன்னப் பறவைகள் துயில் நீங்கவும், வண்டுகள் ஒலித்து எழவும் காரணமான தாமரை மலர்கள் நிறைந்த குளங்களையுடைய பொன்னமராவதி என்னும் நகரை அடைந்தான். அங்கு உலகைத் தாங்கி நிற்கும் மேருமலையைக் கொண்டு வந்து நிறுத்தி வைத்தது போன்ற, ஒளிமிக்க மணிகள் பதித்து அமைத்த மண்டபத்தில் தங்கினான். அப்போது மருதவளம் மிக்க சோழ நாட்டை இழந்து வருந்தியிருந்த மூன்றாம் இராசராச சோழனை அழைத்து வருமாறு செய்தான்.

57-61. "வான்நிலை குலைய......தொழுது இரப்ப"

சுந்தர பாண்டியனிடம் தோற்று அவமானமுற்று, தன்னுடைய நாட்டு எல்லையைக் கடந்து, சக்கர வாள மலைக்கப்பால் சென்றிருந்த மூன்றாம் இராசராசன் பாண்டியனின் அழைப்பை ஏற்று உரிமையோடு பொன்னமராவதிக்கு வந்தடைந்தான். தன் மகனுடன் சென்று பாண்டியனைக் கண்டு வெற்றி பொருந்திய அவனுடைய அடிகளில் விழுந்து வணங்கித் தன் மகனாகிய மூன்றாம் இராசேந்திரனை அவனிடம் அறிமுகப்படுத்தித் தன் நாட்டை வேண்டி இரந்து நின்றான்.

61-70. "தான் ஓடிமுன் இழந்த......விடை கொடுத்து விட்டருளி"

சோழ மன்னன் பாண்டியனிடம் தோற்று ஓடி ஒளித்திருந்த கொடுஞ் செயலிலிருந்து விடுபடுமாறு பாண்டியன் தண்ணளி செய்து சோழர்களுக்குரிய தாரையையும் முடியையும் அவர்கள் இழந்த நாட்டோடு சேர்த்து அளித்தான். அதுவே அவர்களுக்குத் துணையாக இருக்கட்டும் என்று கருதி, கடல் சூழ்ந்த உலகத்து மன்னர் பலரும் தொழும்படியாக விளங்கும் மீனக் கொடியின் ஆணையை ஏற்று அதன்படி அரசு நடத்துக என்று கூறிச் சோழ நாட்டைத் திருப்பியளித்து உதவி புரிந்தான். அவ்வாறு அளித்த போது சோழநாட்டின் பெயர் முதலியன மாற்றப்படாமல் நகரம் முதலிய எல்லாவற்றையும் வழங்கி விடை கொடுத்து அனுப்பினான்.

70-76. "ஒருக்கடற் பாரில்............வழங்கியருளியபின்"

பாண்டியன் பெருமையுடன் நாடாண்டபொழுது வடகொங்கருக்கும் தென்கொங்கருக்குமிடையே பெரும்பூசல் நிகழ்ந்தது. கொடுமையைத் தாங்க முடியாத வடகொங்கு மன்னன், இந்நிலவுலகத்தில் போர்த்தொழிலால் பகைவரை ஒறுத்துத் தவறுகளை நீக்கி அண்டினோர் குறை தீர்த்து வைக்கும் கடவுள் சுந்தர பாண்டியனே யாவான் என்று எண்ணிப் பாண்டியனை அடைந்தான். தன் சுற்றத்தினராகிய தென்கொங்கர் தனக்கிழைத்த, துன்பங்களை எல்லாம் பாண்டியன் கேட்டருளுமாறு கூறி வணங்கி நின்றான். அவ்வட கொங்கனைத் தன் அரண்மனையிலேயே அடைக்கலமாக வைத்து எல்லாவகையான உதவிகளையும் வழங்கியருளினான்.

76-80. "ஒரு நாள் மற்றாரம்..........அவன் சிறையு மிட்டு"

பிறகு ஒருநாள் தென்கொங்கன் முரசம் முழங்கும் பெரும் பரிவாரங்களோடு வந்து அடிபணிந்து நின்றான். அவனுக்கும் அடைக்கலங்கொடுத்து வேண்டிய அணிகலன்களையும் வழங்கித் தன் அரண்மனையில் வைத்துக் கொண்டான்.

81-88. "திருமால் இருமருங்கும்......விட்டருளி"

இருபுறத்திலும் சந்திர சூரியர் வணங்கி வர இடையே வரும் திருமால் போலவும், அத்திருமால் களிக்க வரும் சிவபெருமானாகிய மூன்று கண்களையுடைய இறைவன் போலவும் தனது தலைநகராகிய மதுரை மாநகர் வந்து சேர்ந்தான்.

மதுரையில் தங்கிய கொங்குமன்னர் இருவரையும் தன் சொற்படி நடக்குமாறு அறிவுறுத்தினான். என் சொற்படி நடக்காமல் ஒழிவீர்களாயின் என்னுடைய கொடிய வேலுக்கு விருந்தாக்கி இயமனுல

குக்கு அனுப்பிவிடுவேன் என்றெல்லாம் அச்சுறுத்தி கொங்கர் இருவ ரையும் அவர்கள் நாட்டிற்கு அனுப்பிவைத்தான்.

### 89-105. "முன்னம் நமக்கு . . . வாழ்த்திவென்று"

முன்பு பாண்டியனால் தோற்கடிக்கப்பட்ட மூன்றாம் இராச ராசன், மீண்டும் தனக்கு முடிவழங்கி உதவிய அப்பாண்டியனை வணங்கி அவனிடம் கூறியபடியே திறை செலுத்தி வருவோம் என்று எண்ணாமல், காவிரிசூழ்நாடு தனக்கே உரியது என்று எண்ணி திறை செலுத்தாமல் வாளாவிருந்தான். திறை செலுத்த மறுத்த தோடு அன்றிப் போர் செய்யவும் துணிந்தான். பெரும்படையைப் பாண்டிய நாட்டின் மீது ஏவினான். அப்பெரும்படையாகிய தூசிப் படை, பேரணிப்படை ஆகியவற்றை ஒருசேர முறியடித்தான். குதிரைப்படை, யானைப்படை ஆகியவற்றையும் வெட்டி வீழ்த்தி யாவற்றையும் கண்டோர் மயங்குமாறு கவர்ந்தான். அவனது அம்பு களுக்கு இரையான போர் வீரர் முதலான தலைவர்களின் உடல் களைக் கொடிய பருந்து முதலானவை உண்டு மகிழ்ந்தன. யானை களின் தந்தங்களும் துதிக்கைகளும் துண்டிக்கப்பட்டன. வீரர்களின் உடலங்களைச் சூழ்ந்த காகங்கள் மழையைத் தடுக்கும் பந்தல் களாயின. அவற்றின் ஆடலும் கூகைகளின் பாடலும் மிகுந்தன. இவற்றை எல்லாம் கண்டு களித்த உடலையும், கரிய கூந்தலையும் வெள்ளிய பற்களையும், சிவந்த வாயினையும், பெரிய சூலத்தையும் உடைய கொற்றவையே பலிகொள்க என வாழ்த்தி வெற்றி மாலை சூடினான் பாண்டியன்.

### 106-111. "பகையின் மிகை ஒழிய......மண்குளிர"

இவ்வாறு மீண்டும் எதிர்த்து வந்த பகைவனாகிய சோழனை வென்று பகையை அழித்தும் சினந்தணியாத சுந்தர பாண்டியன் தனது பெரிய வாளினை முழுவதுமாகக் குருதியின் நிறமாகிய செந்நிற ஒளி விசும்படி செய்தான்.

இவ்வாறு இவன் பெற்ற பெரு வெற்றியினைப் புகழ்ந்து பாடப் பட்ட பரணியினை உலகத்தோர் கேட்குமாறு செய்தான். திரு மஞ்சனம் ஆடி, அந்த நீரின் வெள்ளத்தால் மண் குளிர்ச்சியடையு மாறு செய்தான்.

### 112-132. "ஆங்கவந்திணை.....பாண்டிய தேவர்க்கு"

தோல்வியுற்ற சோழ மன்னனின் தேவி முதலாகிய மங்கையர் பலரும் சூழ முடிகொண்ட சோழபுரம் என்னும் நகரத்திலுள்ள, சோழர் முடிசூட்டு விழா நடத்தும் மணிமண்டபத்தை அடைந்தான். எல்லாத் திசைகளிலும் பொன்னாலான வெற்றித் தூண்களை நாட்டி னான். வெற்றியுடைய வேல் தாங்கிய வடதிசை மன்னர் பலரும்

வந்து தன்னடி வணங்கிச் சூழ்ந்திருக்கவும், தான் வீரக்கழல் அணிந்து வீராபிஷேகம் செய்து கொண்டு அழகிய மணிகள் பதித்த சிம்மாசனத்து வீற்றிருந்தான். அக்காலை அவனுக்கு இருபுறமும் கவரி வீசப்பட்டது. கடல் போல ஒலிக்கும் சிறந்த யானைகளை யுடையவரும், தன் அடிவணங்கி நிற்பவருமாகிய வடநாட்டு மன்னர் களின் தேவியர்கள் தொழுது நின்று வாழ்த்திக் கொண்டிருக்க வீற் றிருந்த உலகமுழுதுடையாள் என்னும் பாண்டிமாதேவி மன்ன னுடன் வீற்றிருந்தாள். மாறவர்மன் என்ற பட்டப்பெயரோடு விளங் கிய சுந்தரபாண்டியன் பெற்ற இவ்வெற்றியினாலும், வீராபிஷேகம் செய்து கொண்டதனாலும் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழ புரத்து வீராபிஷேகம் பண்ணியருளிய சுந்தரபாண்டியன் எனவும் சிறப்பிக்கப்பட்டு விளங்கினான்.

# 17

# சடையவர்மன் சுந்தர பாண்டியன்

(கி.பி. 1252 – 1271)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்திஸ்ரீ

பூமலர்வளர் திகழ்திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப
நாமலர்வளர் கலைவஞ்சி நலமிகுமா மனத்துறையச்
சிமையவரைத் திறன்மடந்தை திருத்தோளின் மிசை
வாழ
இமையவர்கோன் அன்றிட்ட எழிலாரம் கழுத்திலங்கப்
பகிரதிபோற் றுய்யபுகழ்ப் படர்வல்லி கொழுந்
தோட்டத் 5
திகிரிவரைக் கப்புறத்துஞ் செழுந்திகிரி சென்றுலவத்
தண்டரள [1]மணிக்கவிகை தெண்டிரைசூழ் பார்நிழற்ற
வெங்கோபக் கலிகடிந்து செங்கோலெண் டிசைநடப்பச்
[2]செம்முரசின் முகில்முழங்கச் சிலையகன்று விசும்
படையத்
திறற்புலிபோய் வனமடையக் . . . . 10
கயலிரண்டும் நெடுஞ்சிகரக் கனவரையின் விளையாட
ஒருமைமனத் திருபிறப்பின் முத்தீயின் நால்வேதத்
தருமறையோர் ஐவேள்வி யாறங்க முடன்சிறப்ப
அருந்தமிழும் ஆரியமு மறுசமயத் தறநெறியும்
திருந்துகின்ற மனுநெறியுந் திறம்பாது தழைத்
தோங்கக் 15
குச்சரரும் ஆரியரும் கோசலரும் கொங்கணரும்
வச்சிரரும் காசியரும் மாகதரும் . . . .

---

1. தனிக்கவிகை. 2. தெம்முரசின்.

அருமணரும் சோனகரும் அவந்தியரு முதலாய
இருநிலமா முடிவேந்தர் இறைஞ்சிநின்று திறைகாட்ட
வடிநெடு வாளும் வயப்பெரும் புரவியும் 20
தொடிநெடுந் தோளுமே துணையெனச் சென்று
சேரனும் தானையும் செருக்களத் தொழிய
வாரசும் புலரா மலைநாடு நூறப்
பருதிமா மரபிற் பொருதிறல் மிக்க
சென்னியைத் திறைகொண்டு திண்டோள் வலியிற் 25
பொன்னி நாட்டுப் போசலத் தரைசர்களைப்
புரிசையி லடைத்துப் பொங்குவீரப் புரவியும்
செருவிற லாண்மைச் சிங்கணன் முதலாய
தண்டத் தலைவரும் தானையும் அழிபடத்
துண்டித் தளவில் சோரிவெங் கலுழிப் 30
பெரும்பிணக் குன்றம் இருங்கள னிறைத்துப்
பருந்தும் காகமும் பாறும் [3]தசையும்
அருந்தி மகிழ்ந்தாங்கு அமர்க்கள மெடுப்பக்
செம்பொற் குவையும் திகழ்க்கதிர் மணியும்
மடந்தையர் ஆரமார்பும் உடன்கவர்ந் தருளி 35
முதுகிடு [4]போசலன் தன்னொடு முனையும்
அதுதவ றென்றவன் தன்னைவெற் பேற்றி
நட்பது போலுட் பகையாய் நின்ற
சேமனைக் கொன்று சினந்தணிந் தருளி
நண்ணுதல் பிறரால் எண்ணுதற் கரிய 40
கண்ணனூர்க் கொப்பத்தைக் கைக்கொண் டருளி
பொன்னிசூழ் செல்வப் [5]புதுப்புனல் நாட்டைக்
[6]கன்னி நாடெனக் காத்தருள் செய்யப்
பெருவரை யரணிற் பின்னரு காக்கிய
கருநட ரரசனைக் களிறுதிறை கொண்டு 45
துலங்கொளி மணியும் சூழி வேழமும்
இலங்கை காவலனை இறைகொண் டருளி
வருதிறை மறுத்து[7]அங் கவனைப் பிடித்துக்
கருமுகில் நிகளங் காலிற் கோத்து
வேந்தர்கண் டறியா விறற்றிண் புரிசைச் 50
சேந்த மங்கலச் செழும்பதி முற்றிப்
பல்லவன் நடுங்கப் பலபோ ராடி

3. கசையும். 4. கோ்சலன். 5. புனனாட்டை. 6. பொன்னி. 7. வங்கனைப்.

நெல்விளை நாடும் நெடும்பெரும் பொன்னும்
பரும யானையும் பரியு முதலிய
அரசுரிமை கைக்கொண்டு அரசவற் களித்துத் 55
தில்லையம் பலத்துத் திருநடம் பயிலுந்
தொல்லை இறைவர் துணைகழல் வணங்கிக்
குளிர்பொழில் புடைசூழ் கோழி மானகர்
அளிசெறி வேம்பின் அணிமலர் கலந்த
தொங்கல் வாகைத் தொடைகள் சூட்டித் 60
திங்களுயர் மரபு திகழவந் திருந்த
தன்னசை யால்நன் னிலைவிசை யம்பின்
எண்ணெண் கலைதேர் இன்மொழிப் பாவலர்
மண்ணின்மே லூழி வாழ்கென வாழ்த்தக்
கண்டவர் மனமும் [8]கண்ணும் களிப்ப 65
வெண்டிரை மகர வேலையி னெடுவரை
ஆயிரம் பணைப்பணத் தனந்தன் மீமிசைப்
பாயல் கொள்ளும் பரம யோகத்து
ஒருபெருங் கடவுளும் வந்தினி துறையும்
இருபெருங் [9]காவிரி இடைநிலத் திலங்கு 70
திருவரங் கம்பெருஞ் செல்வம் சிறப்பப்
பன்முறை [10]யணிதுலா பார மேறிப்
பொன்மலை யென்னப் பொலிந்து தோன்றவும்
[11]பொன்வேய்ந் தருளிய செம்பொற் கோயிலுள்
வளந்திகழ் மாஅல் உதைய [12]வெற்பெனத் 75
திருவளர் குலமணிச் சிங்கா சனமிசை
மரகத மலையென மகிழ்ந்தினி தேறித்
தினகரோ தயமெனச் செழுங்கதிர்ச் சொரியும்
கனக மாமுடி கவின்பெறச் சூடிப்
பாராள் வேந்தர் உரிமை அரிவையர் 80
இருமருங்கு நின்று விரிபெருங் கவரியின்
மந்த வாடையும் மலையத் தென்றலும்
அந்தளிர்க் கரங்கொண் டசைய வீச
ஒருபொழு தும்விடாது உடனிருந்து மகிழும்
திருமக ளென்னத் திருத்தோள் மேவி 85
யொத்தமுடி சூடி யுயர்பே ராணை

8. கண்களும். 9. கடல்விரி. 10. பணிதுலா. 11. பொன் மேய்ந்தருளிய. 12. வெற்பெனைத்.

திக்கெட்டும் நடப்பச் செழுந்தவஞ் செய்த
இவன்போ லுலகிலே வீரன் [13]பலத்திற
மதிமுகத் தவனி மாமக ளிலகு
கோடிக் காதல் முகிழ்த்துநின் றேத்தும் 90
உலகுமுழுதுடை யாளொடும் வீற்றிருந் தருளிய
சிரீகோச் சடைய வன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் சிரீ சுந்தரபாண்டிய
தேவர்க்கு யாண்டு ஏழாவது கன்னி [14]ஞாயிற்று
அபரபட்சத்துத் திரயோதசியும் [15]ஞாயிற்றுக் கிழமையும்
பெற்ற அத்தத்து நாள்.

# சடையவர்மன் சுந்தர பாண்டியன்

## முன்னுரை

மாறவர்மன் சுந்தரபாண்டியனை அடுத்து சில மன்னர்கள் பாண்டி நாட்டை ஆண்டுள்ளனர். ஆனால் பெருஞ்சிறப்பு உடையவர்களாகக் காணப்பெறவில்லை. அவர்களுள் இரண்டாம் சடையவர்மன் குலசேகர பாண்டியன் என்பவனைப் பற்றிய மெய்க்கீர்த்தி ஒன்று மட்டுமே கிடைத்துள்ளது. அதனை அடுத்து சடையவர்மன் சுந்தரபாண்டியனின் மெய்க்கீர்த்தியே கிடைக்கிறது. இவன் யார் மகன் என்றோ, பிற மன்னர்களின் உறவின் முறைகளோ குறிப்பிட இயலவில்லை. சித்திரைத் திங்கள் மூலநாளில் பிறந்தவன் என்பது தெரிகிறது. பாண்டியப் பேரரசு உச்ச நிலையை அடையச் செய்த பெருவீரன் இவன் என்பது குறிப்பிடத்தக்கது.

இவனுடைய மெய்க்கீர்த்தி **'பூமலர்வளர் திகழ்திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப'** என்ற தொடக்கத்தினை உடையது.

## மெய்க்கீர்த்தி

திருமகள் முதலியோர் சிறப்புற்று விளங்க, முரசு முழங்க, நீதி செலுத்திய சுந்தரபாண்டியனது ஆட்சியில், ஐவேள்வியும் அறுசமயமும் தழைத்தன. தனது தோளும் வாளுமே துணையாகச் சென்று சேரமன்னன் வீரரவியையும் சோழமன்னன் மூன்றாம் இராசேந்திரனையும், போசலத் தலைவன் சிங்கணனையும், கருநாடகமன்னன் சோமனையும் வென்று பொருள் பல கவர்ந்தான். பல்லவமன்னன்

---

13 பலத்திர. 14. 15. நாயிற்று.

கோப்பெருஞ்சிங்கனைத் திறை செலுத்துமாறு செய்தான். தில்லைக் கூத்தனை வணங்கி, பாவாணர் புகழ்ந்து வாழ்த்த, திருவரங்கத்து ஆலயத்தைப் பொன் வேய்ந்து மகிழ்ந்தான். திருமகளைப் போல விளங்கிய உலகமுழுதுடையாளொடு அரசு வீற்றிருந்தான்.

### விளக்கம்

1-11. "பூமலர் வளர் திகழ்......கனவரையின் விளையாட"

தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் சுந்தரபாண்டியனது மார்பிலும், நாமகளாகிய கலைமகள் அவனது உள்ளத்திலும், மலை மகளாகிய வெற்றிமடந்தை அவனது திருத்தோளிலும் விளங்கினார் கள். அவன் கழுத்தில் இந்திரனது ஆரம் விளங்கியது. பகீரதி போன்ற அவனது புகழ் வல்லிக்கொடி போலும் பரவியது. அவனு டைய ஆணைச் சக்கரம் உதயகிரியாகிய மலைக்கப்பாலும் சென்று நடைபெற்றது. முத்துக்களாலான வெண்கொற்றக்குடை இந்நில உலகைக் காத்து அளித்தது. கொடிய கலியானது நாட்டை விட்டு நீங்கியது. எட்டுத் திசைகளிலும் அவனது செங்கோல் நடை பெற்றது.

இத்தகு சிறப்புகளோடு பாண்டியனின் முரசாகிய முகில் நாட் டில் முழங்கிக் கொண்டே இருந்தது. சேரர் வானுலகடையவும், சோழர் காட்டகத்து ஒளிக்கவும், இரண்டாகிய மீன் சின்னம் பொதிய மலையில் பொறிக்கப்பட்டு விளங்கியது.

12-19. "ஒருமை மனத்து இரு பிறப்பின்......திறை காட்ட"

ஒரு நெறி நிற்கும் உள்ளத்தையும், இம்மை மறுமை ஆகிய இருவகைப் பிறப்பையும் உடையவர்களாக, உதரத்தீ, உயிர்த்தீ, சினத்தீ என்னும் மூவகைத் தீயினை உடையவர்களாக, நான்கு வேதங்களையும் உணர்ந்தவர்களாக விளங்கிய சிறந்த அந்தணர் களால் கடவுள் வேள்வி, பிரம வேள்வி, பூத வேள்வி, மானுட வேள்வி, தென்புலத்தார் வேள்வி என்னும் ஐந்து வகை வேள்வி களும் சிறந்து விளங்கின. அவற்றோடு படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் - என்னும் ஆறுவகை அங்கங்களும் நாட்டில் சிறந்து வளர்ந்தன. தமிழ் மொழியும் வடமொழியும் தழைத்தன. ஆறு சமயங்களின் அறநெறி வளர்ந்து நின்றன. சிறந்த மனுநெறி தழைத்து ஓங்கியது. குச்சரர் முதலாகிய இந்நில உலகத்து முடிமன்னர் பலரும் தங்கள் தங்கள் திறைப் பொருள்களுடன் வந்து சுந்தர பாண்டியனை வணங்கி நின்றனர்.

20-45. "வடி நெடு வாளும்...களிறு திறை கொண்டு"

வடித்துக் கூர்மையாக்கப் பெற்ற நீண்ட வாளும், விரைந்து செல்லும் தனது குதிரையும், வீரத்தொடியணிந்த தனது பெரிய தோளும் ஆகிய இவற்றை மட்டுமே தனக்குத் துணையாகக் கொண்டு படையெடுத்துச் சென்றான்.

முதலாவதாகச் சேரநாட்டை ஆண்டு வந்த வீரரவி உதயமார்த் தாண்டன் என்பவனையும் அவனது சேனையையும் முறியடித்து நீர்வளம் அறாதமலை நாட்டினை அழித்தான்.

இரண்டாவதாக, சூரிய குலத்தில் தோன்றி, பாண்டியரையும் வென்று விளங்கிய வலிமை மிக்க சோழர்களோடு போரிட்டான். அப்போது சோழநாட்டை ஆண்ட மூன்றாம் இராசேந்திரனை வென்று, தனக்குத் திறை செலுத்துமாறு செய்தான்.

அடுத்து, சோழநாட்டின் மற்றொரு பகுதியை ஆண்டு வந்த போசளரை அடக்க எண்ணிப் பெரும் படையுடன் சென்றான். போசளரது தலைநகராக விளங்கியது கண்ணனூர்க் கொப்பம் என்னும் நகரமாகும். இது திருச்சிக்கு வடக்கே ஏழுகல் தொலைவில் உள்ளது. இக்காலத்தில் சமயபுரம் என்று வழங்கப்படுகிறது. அக் கண்ணனூர்க் கொப்பத்தை முற்றுகையிட்டான். அங்கு நடத்திய போரில் போசளர் தலைவனான சிங்கணனையும் அவனுடன் வந்த பிற படைத்தலைவர்களையும் குதிரைப் படைகளையும் அழித்து, அப்போர்க்களத்தில் இரத்த வெள்ளத்தையும் குன்று போன்ற பிணக்குவியல்களையும் நிறைத்தான். அப்பிணக்குவியலின் தசை களைப் பருந்தும் காகமும் அருந்தி மகிழ்ந்தன. அங்கிருந்து பொற் குவியல்களையும், ஒளி பொருந்திய மணிகளையும் மகளிரையும் கவர்ந்து வந்தான்.

மேலும், சோமன் என்னும் கருநாடகமன்னன் அக்கண்ணனூர்க் கொப்பத்துப் போரில் முதுகிட்டு ஓடிய போசள மன்னன் பாண்டிய னோடு போருக்கு வந்தது தவறு என்று குறிப்பிட்டு பாண்டியனுக்குத் துணை புரிபவன் போல நடித்துப் போசள மன்னனை மலையில் ஒளியுமாறு செய்தான். இதனால் வெகுண்ட சுந்தரபாண்டியன் நண்பன் போல நடித்துப் பகைவனாய் மாறிய சோமன் என்னும் அக்கருநாடக மன்னனைக் கொன்று தன் சினம் தணிந்தான் (மெய்க்கீர்த்தியில் சேமன் என்று காணப்படுகிறது.) பிறரால் நினைத்துப் பார்க்கவும், நெருங்கவும் இயலாத அரிய நகரமாகிய கொப்பத்தைக் கைப்பற்றினான். பொன்னியாறு பாய்ந்து செல்வம் கொழிக்கச் செய்யும் நாடாகிய சோழநாட்டின் இரு பகுதிகளையும் வென்று கன்னிநாடு என முழுமையாகத் தன் ஆட்சியின் கீழ்க் கொண்டு காத்து அருளினான்.

கன்னிநாட்டின் அருகில் உள்ளதும் பெரியமலையை அரணாக உடையதுமாகிய கருநாடகத்தின் மீது படையெடுத்து அந்நாட்டு

மன்னனை வெற்றி கண்டான். அவனையும் திறை செலுத்துமாறு செய்தான். இக்கருநாடக வேந்தன் போசள மன்னனான வீரசோமேசுவரனின் மகன் வீரராமநாதனாக இருக்கலாம் என்று கருதுகின்றனர்.[1]

### 46-55 "துலங்கொளி மணியும்....அவற்கு அளித்து"

கப்பற்படையுடன் சிங்களத்தை நோக்கிப் புறப்பட்டான். சிங்கள மன்னனை வென்றான். அவனுக்குச் சொந்தமான ஒளிமிக்க மணிக்குவியலையும் எண்ணற்ற யானைகளையும் கவர்ந்து கொண்டு அச்சிங்கள மன்னனைத் திறை செலுத்துமாறு செய்தான்.

இவ்வெற்றிகளைக் கண்டு அஞ்சினான் பல்லவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன். எனவே கப்பமாகப் பெரும்பொருளை அனுப்பி வைத்தான். அவ்வாறு அனுப்பப்பட்ட திறைப் பொருளை மறுத்த சுந்தரபாண்டியன் படையுடன் சென்று சிறந்த மதில்களை உடைய சேந்தமங்கலம் என்னும் நகரை முற்றுகை செய்தான். போரில் பல்லவ மன்னனை நடுங்குமாறு செய்து அவனது வளம் மிக்க நாட்டையும் பெருஞ்செல்வக் குவியலையும் கைப்பற்றினான். யானை, குதிரைகளையும் கவர்ந்தான். தான் கைப்பற்றிய நாட்டைத் திரும்பக் கோப்பெருஞ்சிங்கனிடமே ஒப்படைத்து அந்நாட்டின் மேல் ஆணை செலுத்தும் உரிமையினை மட்டும் தான் வைத்துக் கொண்டான். இதனால் பல்லவமன்னன் பாண்டியனுக்குத் திறை செலுத்தும் குறுநிலமன்னனாக ஆக்கப்பட்டான்.

### 56-65. "தில்லையம் பலத்து......கண்ணும் களிப்ப"

திருத்தில்லை மாநகரத்தில் எழுந்தருளியுள்ள நடராசப் பெருமானின் இணையடிகளை வணங்கித் தன் நாடு திரும்பிய சுந்தரபாண்டியன் பரந்த பெருநாட்டிற்கு மன்னர் மன்னனாக விளங்கினான்.

குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த வண்டுகள் நிறைந்த வேப்ப மலர்களால் ஆன மாலையினை வெற்றி மாலையாகச் சூட்டி மகிழ்ந்தான். சந்திரகுலத்தைச் சார்ந்த பாண்டியர் மரபின் புகழ் ஓங்கி நிற்குமாறு தனது விருப்பத்தினாலும் ஒப்பற்ற வீரத்தினாலுமே உயர்ந்து விளங்கிய சுந்தரபாண்டியனை, அறுபத்து நான்கு கலைகளிலும் தேர்ச்சி பெற்றவர்களும் இனிய மொழியை உடையவருமாகிய பாவணர் பலரும் இந்நில உலகத்தில் பல்லூழிகாலம் நிலைபெற்று வாழ்வாயாக என வாழ்த்தினார்கள். இவனுடைய அரிய செயலையெல்லாம் கண்டவர்கள் தங்கள் கண்கள் குளிர உள்ளங்களிப்படைந்தார்கள்.

### 66-75. "வெண்திரை மகர......உதய வெற்பென"

---

1. பாண்டியர்வரலாறு, பக்.476.

வெண்மையான அலைகளையும் மகர மீன்களையும் உடைய பெரிய கடலின் நடுவிலே, பெரிய மலையை நிகர்த்தவனும் ஆயிரம் படம் எடுத்த தலைகளோடு கூடியவனுமாகிய அனந்தன் என்னும் பாம்புத் தலைவனாகிய படுக்கையின் மீது அரிதுயில் கொண்டு விளங்குபவன் ஒப்பற்ற இறைவனாகிய திருமால் ஆவான். அத்திரு மால் எழுந்தருளியுள்ள திருக்கோயிலை உடையது திருவரங்கம் என்னும் தலம். இரண்டாகப் பிரிந்து ஓடும் காவிரிநதியின் இடை நிலத்தில் அமைந்தது அத்தலம். அத்தலத்து உறையும் திருமாலின் திருக்கோயில் செல்வச்செழிப்புடன் விளங்க வேண்டும் என்று விரும் பினான். அதனால் பலமுறை துலாபாரம் ஏறி அப்பொன்னை அக் கோயிலுக்கு அளித்தான். அத்திருக்கோயில் பொன்மலை போல விளங்க வேண்டும் என்று கருதி அக்கோயிலின் கோபுரங்களைப் பொன்னால்வேய்ந்தான். அப்பொற்கோயிலினுள் விளங்கும் செல்வச் சிறப்புடைய திருமால் உதயமலை போல விளங்குமாறு செய்தான்.

## 76-83. "திருவளர் குலமணி.........அசைய வீச"

இவ்வாறு திருவரங்கத் திருக்கோயிலைச் செல்வச் செழிப் புடையதாக அமைத்துத் தனது முடி சூட்டு விழாவினையும் செய்து கொண்டான். செல்வ மகள் விளங்கும் தங்கள் பாண்டிய குலத்திற் குரிய மணிகள் பதித்த சிங்காசனத்தில் மரகதத்தால் ஆன மலை போல மகிழ்ந்து வீற்றிருந்தான். சூரிய உதய காலத்தைப் போன்று செம்மையான ஒளி வீசி விளங்கிய சிறந்த முடியினை அழகாகச் சூடி விளங்கினான். இந்நில உலகில் விளங்கிய முடி மன்னர் பலருடைய பட்டத் தரசியர் பலரும் இருபுறத்திலும் நின்று, தங்கள் அழகிய கைகளில் விரித்த பெரிய கவரிகளை ஏந்தி வீசிக்கொண் டிருந்தனர். அக்கவரியிலிருந்து மந்தமான வாடைக் காற்றும் பொதிய மலையிலிருந்து வீசும் இனிய தென்றல் காற்றுமாக வீசின.

## 84–93. "ஒரு பொழுதும் விடாது........தேவர்க்கு"

திருமாலிடம் எப்பொழுதும் நீங்காது உடன் இருந்து மகிழும் திருமகளைப் போல உலக முழுதுடையாள் உடன் விளங்க சிங்கா சனத்தில் வீற்றிருந்தான். சுந்தர பாண்டியனது முடியினை ஒத்த முடியினை அவளும் சூடி விளங்கினாள். இவர்களது உயர்ந்த ஆணையானது எட்டுத் திக்கிலும் நடைபெற்றது இந்த சுந்தர பாண்டியனைப் போல எல்லாப் பேற்றினையும் பெற்று விளங்குமாறு சிறந்த தவம் செய்தவர்கள் வேறு யாரும் இல்லை என்று கூறி, மதிபோன்ற முகத்தினை உடைய உலகத்து மகளிர் கோடிக்கணக் கான பேர் அன்புததும்ப நின்று வாழ்த்தினார்கள். இச் சிறப்பு களோடு அரசு வீற்றிருந்த சுந்தர பாண்டியன் சடையவர்மன் என்ற பட்டப் பெயரைப் பெற்றிருந்தான்.

—:O:—

18

# சடையவர்மன் வீரபாண்டியன்

(கி.பி. 1253 - 1268)

**மெய்க்கீர்த்தி-1**

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமகள் வளர்முலை திருமார்பு தளைபடப்
பொருமகள் வளர்முலை புயம்புணர்ந்து களிப்ப
நன்மொழி நாமிசைச் சொன்மகள் இருப்பத்
திசைகள் எட்டினும் இசைமகள் வளர
இருமூன்று சமயமும் ஒருமூன்று தமிழும் 5
வேதம் நான்கும் நீதியில் விளங்க
கங்கங் கவுடம் கடாரம் காசிபம்
கொங்கங் குதிரம் கோசலம் மாளுவம்
அருமனம் சோனகம் சீனம் வந்தி
திருநடம் ஈழம் கலிங்கம் தெலிங்கம் 10
பெபனந் தண்டகம் பண்டர முதலிய
எப்புவி வேந்தரும் இகல்மண்ட லீகரும்
மும்முரைசு முழங்கும் செம்மணி மாளிகை
கோயில் கொற்ற வாயில் புகுந்து
காலம் பார்த்துக் கழலிணை பணிந்து 15
நல்ல வேழமும் [1]நிதியமும் காட்டிப்
பூவிரி சோலைக் காவிக் களத்துச்
சோழன் பொருத வேழப் போரில்
மதப்பிற் றாறாக் கதக்களி யானை
துளைக்கச் செம்பொற் றொடிக்கையிற் பிடித்து 20
வளைத்துமேல் கொண்டு வாகை சூடித்
தலைப்பே ராண்மை தனித்தனி யெடுத்து

1. நெதியமும்.

[2]கலைத்தவி ரரசர் கவின்பெறத் துதிப்பத்
தெற்ற மன்னர் திறாத்தி யாமல்
ஒற்றை யாழி யுலகு வலமா 25
ஏனை மன்னவர் [3]இதற்கோ டிறைந்து
மீனவர் கோடித் தெருவில் [4]என்க
வடுவரைக் கொடுங்கோல் வழங்கா வண்ணம்
நடுவுநிலை செங்கோல் நாடொறும் நடப்ப
எத்திசை மன்னரும் இருங்கலி கடிந்து 30
முத்த வெண்குடை முழுநிலவு சொரிய
ஒருமொழி தரிப்பப் [5]புவிமுழு தாண்ட
மதமார்பு விளங்க மணிமுடி சூடி
உரைகெழு......பல அரைசியல் வழக்கம்
நெறிப்பட நாட்டுங் குறிப்பி னூரட்டு 35
இசைந்திருப் பாதஞ்செ... திருந்த மந்திரி சரணமை
திகழ்ந்தினிது நோக்கி முரண்மிகு சிறப்பில்
[6]ஈழ மன்னர் இலகுவரி லொருவனை
[7]வீழப் பொருது விண்மிசை யேற்றி
உரிமைச் சுற்றமும் உய்குலம் புக்குத் 40
தருமை [8]யானையும் பலப்பைப் புரவியும்
கண்மணித் தேரும் சீன வடமரும்
நாகத் தோடும் நவமணிக் குவையும்
ஆடகத் திரியும் அரியா சனமும்
முடியுங் கடகமும் முழுமணி யாரமும் 45
கொடியுங் குடையுங் குளிர்வெண் கவரியும்
முரசுஞ் சங்கமும் தனமும் முதலிய
அரைசுகெழு தாய மடைய வாரி
காணா மன்னவர் கண்டுகண் டேங்க
[9]கோணா மலையினுந் திரிகூட கிரியினும் 50
உருகெழ கொடிமிசை இருகயல் எழுதி
ஏனை வேந்தனை ஆனைதிறை கொண்டுபண்
டேவல் செய்யா திகல்செய் திருந்த
சாவன் மைந்தன் [10]நலமிகுந் திறைஞ்ச
[11]வீரக் கழலை வி:ரலரைச் சூட்டித் 55

2. தலைத்தவிராசர். 3. இதற்கொடிறைந்து. 4. எந்க. 5. புவிமுழுதண்ட. 6. இழ்ழமன்னர். 7. விழ்ழப்பொருது. 8. யாண்மையும். 9. கொணா மலையனுந். 10. நலமிருந்திறைஞ்ச. 11. வீரக்கழல்.

[12]திருக்கோ லப்அலை வாய்ப்படன் கழித்து
வழங்கி அருளி முழங்கு [13]களிறேறி
பார்முழு தறிய ஊர்வலஞ் செய்வித்து
தந்தை மரபு எனநினைப் பிட்டு
அரைசிட மகிந்து ஆனூர் புரிச்சு 60
விரையச் செல்கென விடைகொடுத் தருளி
யாக மடந்தை அன்புடன் சாத்தி
வாகை சூட [14]மதுமணங் கமழ
வசந்தவெண் [15]கவரியின் வாடலுந் தென்றலும்
வேந்தர் வீச வீரசிங்கா தனத்துக் 65
கபகந் தழுவிய [16]காமர் உள்ளதள்
பொற்றொடி [17]புணர்ந்து மலர்ந்த மலர்க்கொழும்
பாபுரைச் சிற்றடி உலகமுடை யாரொடும்
வீற்றிருந்தருளிய ஸ்வஸ்தி ஸ்ரீ கோச்சடைய பன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் சிரீவீரபாண்டிய தேவர்க்கு
யாண்டு 11 ஆவது நாள் 173 இனால்......

## 19

மெய்க்கீர்த்தி-2

ஸ்வஸ்தி ஸ்ரீ

1

[2]கொங்குஈழம் கொண்டு கொடுவடுகு கோடழித்து
கங்கை [3]இருகரையும் காவிரியும் [4]கைக்கொண்டு
[5]வல்லானைவென்று தில்லைமா [6]நகரில்வீற்றிருந்து
[7]வீராபி ஷேகமும் [8]விசயாபி ஷேகமும்
பண்ணியருளிய கோச்சடைய வன்மரான திரிபுவனச் 5
சக்கரவர்த்திகள் சிரீவீரபாண்டிய தேவர்க்கு யாண்டு
16 ஆவது சிம்ம ஞாயிற்று, பூர்வபட்சத்து, வியாழக்
கிழமையும் தசமியும் பெற்ற மூலத்துநாள்....

---

12. திருக்கொளம் அலை. 13. களிறெறி. 14. மதுமணங்கம்ம. 15. சுவரின. 16. காமாஉல்லத(ள்) ; காமா உன்னத. 17. புணந்து.

1. கோச்சடைய...... ... 2. ஈழமும் கொங்கும் சோழமண்டலமும் கொண்டு. 3. நாட........ லை. 4. கைய்க்கொண்டு. 5. திங்களிர்வஞ்செழுமலற் தாற்கெ......... 6. புலியூர் வீற்றிருந்து. 7. விரர் அபிஷேகமும். 8. விஜயர் அபிஷேகமும்.

# சடையவர்மன் வீரபாண்டியன்

## முன்னுரை

பேரரசனும் பெரும் வீரனுமாக விளங்கிய சடையவர்மன் சுந்தர பாண்டியனது ஆட்சிக் காலத்தே பாண்டியப் பேரரசின் பல பகுதிகளிலும் அமர்த்தப் பெற்ற சிற்றரசர்களுள் சடையவர்மன் வீரபாண்டியனும் ஒருவன் ஆவான். அந்த சிற்றரசர்களுள் மாறவர்மன் என்ற பட்டம் பெற்ற ஒருவனை அடுத்து இவனுக்கு நாட்டுப் பொறுப்பளிக்கப் பட்டுள்ளது. எனவே இவன் சடையவர்மன் என்னும் பட்டத்தைப் பெறுகிறான்.

இவனுடைய மெய்க்கீர்த்திகள்

1. "திருமகள் வளர்முலை திருமார்பு தளைபட"
2. "கொங்குஈழம் கொண்டு கொடுவடுகு கோடழித்து"

என்னும் தொடக்க அடிகளையுடையவை.

## மெய்க்கீர்த்திகள்

1. மும்முரசு முழங்கும் வீரபாண்டியனது மாளிகையில் மன்னர் பலரும் வந்து திறை செலுத்தி நின்றனர். காவிக்களம் என்னுமிடத்தில் சோழ மன்னனை வென்ற வீரபாண்டியன் ஈழ நாட்டை வென்று பொருள்பல கவர்ந்து வந்து தன் சுற்றத்தினருக்குப் பகிர்ந்தளித்தான். ஈழநாட்டில் கயற்கொடியைப் பறக்க விட்டான். மன்னர் பலரும் கவரிவீசிநிற்க உலகமுழுதுடையாளொடும் வீற்றிருந்து செங்கோல் நடத்தினான்.

2. கொங்கு, ஈழம், வடுகு இவற்றைவென்று கங்கை முதல் காவிரி வரை கைக்கொண்டு தில்லையில் வீராபிஷேகம் செய்து கொண்ட வீரபாண்டியன் சடையவர்மன் என்றபட்டப் பெயர் பெற்றிருந்தான்.

## விளக்கம்

### மெய்க்கீர்த்தி-1

#### 1-6. "திருமகள் வளர்முலை......நீதியில் விளங்க"

வீரபாண்டியனின் மார்பிலே திருமகளும், புயத்திலே வெற்றி மகளும் நாவிலே சொல்மகளும் விளங்கினர். எட்டுத் திசைகளிலும் புகழ்மகள் சிறந்து விளங்கினாள். நாட்டில் அறுவகை சமயங்களும் வளர்ந்தன. முத்தமிழும் நால்வேதமும் நெறியோடு விளங்கின.

### 7–16. "கங்கம் கவுடம்... நிதியமும் காட்டி"

கங்கநாடு, கவுடநாடு முதலான பல நாட்டு வேந்தர்களும் வீர முரசு, கொடைமுரசு, மணமுரசு என்னும் மும்முரசுகளும் எக்கால மும் முழங்கிக் கொண்டிருக்கும் வீரபாண்டியனது மாளிகையில் உள்ள அரச மண்டபத்தின் வாயிலில் புகுந்து, தங்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட நேரம் அறிந்து சென்று, பாண்டியன் திருவடிகளில் விழுந்து வணங்கினர். தாங்கள் கொண்டு வந்த திறைப் பொருள் களாகிய பெருஞ் செல்வத்தையும் யானையையும் வழங்கி நின்றனர்.

### 17-29. "பூவிரிசோலை.........நாள் தொறும் நடப்ப"

மலர்கள் நிறைந்த சோலைகளையுடை காவிக்களம் என்னு மிடத்தில் சோழனோடு போர் செய்து யானைப் படைகளைத் தன் வீரத் தொடியணிந்த கைகளாலேயே முறியடித்துச் சோழனை வென்று வாகை சூடினான். வீரபாண்டியன் காலத்தில் மூன்றாம் இராசேந்திரனே சோழ மன்னனாக விளங்கினான். இத் தோல்வி யைத் தழுவிய சோழன் யார் என்பதும் இக் காவிக்களம் எது என்பதும் அறிய இயலவில்லை.

இவ்வாறு ஒவ்வொரு போரிலும் தானே தலைமை தாங்கி, மன்னர்கள் எல்லாம் வணங்குமாறு பகைவர்களை வென்று வந்த வீரபாண்டியன் சுந்தரபாண்டியனது ஏவலின் பேரில் இப்போர் களை நிகழ்த்திய சிற்றரசனாவான் என்பது புலப்படுகிறது. நாட்டில் எங்கும் கொடுங்கோல் நடைபெறா வண்ணம் நடுவுநிலை கொண்டு, எங்கும் தனது சிறந்த செங்கோல் ஆட்சியே நடைபெறுமாறு செய்தான்.

### 30–48. "எத்திசை மன்னரும்...... அடையவாரி"

எல்லா நாட்டிலும் துன்பம் என்பது இல்லாதவாறு ஒழித்துத் தன்னுடைய வெண் கொற்றக் குடையின் முழு ஒளி எல்லாவிடத் தும் பரவுமாறு செய்து, தன் ஆணையைச் செலுத்தி மணிமுடி சூடி விளங்கினான்.

மேலும் பல நாட்டின் அரசியலைத் தனது உரிமைக்குரியதாக ஆக்கிக் கொள்ள விரும்பினான். ஈழ நாட்டின் இரண்டு மன்னர் கள் தங்களுக்குள் முரண்பட்டு இருந்ததை அறிந்தான். உடனே ஈழநாட்டின் மீது படையெடுத்தான். முரண்பட்ட இருவருள் ஒருவனைக் கொன்று விண்ணுலகு அடையச் செய்தான். மற்ற வனுக்கு அந்நாட்டை உரிமையாக்கினான். தோல்வியுற்ற மன்ன னுக்குரிய யானைகளையும் குதிரைகளையும் மணி பொருந்திய தேர்களையும் தனக்கு உரியனவாக ஆக்கிக் கொண்டான். அந் நாட்டில் இருந்த சீனரும் வடமரும் அளித்த பச்சைமணிகளோடு

கூடிய நவமணிக்குவியல், பொற்குவியல், ஆசனம், மணிமுடி, கடகம், முத்துக்களால் ஆனமாலை போன்றவற்றையும் அரசச் சின்னங்களாகிய கொடி, குடை, வெண்கவரி, முரசு, சங்கம் போன்ற பலவகைச் செல்வங்களையும் கவர்ந்து வந்தான். அவற்றை யெல்லாம் தமது சுற்றத்தினருக்குப் பகிர்ந்தளித்தான்.

### 49-61. "காணா மன்னவர்.........விடைகொடுத் தருளி"

இவனுடைய வெற்றிச் செயல்களையும், கவர்ந்து வந்த செல்வக் குவியல்களையும் கண்ட மன்னர்கள் பலரும் கண்டு கண்டு உள்ளம் ஏங்கினார்கள். ஈழ நாட்டிலுள்ள திருகோணமலை, கண்டியை அடுத்துள்ள முச்சிகரம் கொண்ட திரிகூடமலை ஆகியவற்றில் பறந்த அந்நாட்டுக் கொடிகளில் தனது சின்னமாகிய இரண்டு கயல் சின்னத்தை எழுதிப் பறக்கவிட்டான். வீர பாண்டியன் உதவியால் நாடு பெற்ற மற்றொரு ஈழ மன்னன் யானைகளைத் திறையாகச் செலுத்தினான்.

மேலும் முதலிலேயே பாண்டிய மன்னனை வணங்கி அவன் சொற்படி நடவாமல் பகைமை கொண்டு இருந்த சாவன் என் பானின் மகன் இப்போது வந்து அடைக்கலம் புகுந்து வணங்கி நின்றான். அவனுக்கு வீரக்கழல் அணிவித்து யானை மீது ஏற்றி ஊர்வலமாக வரச் செய்து அவனுடைய தந்தை நாட்டினை அவன் மரபுப்படி பெறுவதுபோல நினைக்கச் செய்து அரசை அளித்து மகிழச் செய்து அனுப்பி வைத்தான். இதன் விளக்கமான வரலாறு பெற இயலவில்லை.

### 62-70. "யாகமடந்தை......வீர பாண்டிய தேவர்க்கு"

யாகங்கள் செய்து வாகை சூடி, தேன் மணம் வீசும் அழகிய கவரியினால் வாடைக் காற்றும் தென்றலுமாகத் தோன்றுமாறு மன்னர்கள் வீசி நின்றனர். அன்பு உள்ளத்தை உடையவளும், பொன்னாலாகிய வளையலை அணிந்தவளும், மலர்ந்த கொழுவிய மலர்க் கொத்தினை நிகர்த்த சிறிய அடிகளை உடயவளுமாகிய உலக முழுதுடையாளொடும் வீர சிங்காதனத்து வீற்றிருந்த வீர பாண்டியன் சடையவர்மன் என்னும் பட்டப் பெயரைப் பெற்று விளங்கினான்.

## மெய்க்கீர்த்தி-2

### 1-6. "கொங்கு ஈழம்......வீர பாண்டிய தேவர்க்கு"

கொங்கு நாட்டையாண்ட சோழ மன்னனை வென்ற வீர பாண்டியன் ஈழ நாட்டின் மீதும் படையெடுத்தான். முரண்பட் டிருந்த ஈழ மன்னர் இருவருள் ஒருவனைக் கொன்று மற்றவனுக்கு

நாட்டின் அரசுரிமையை வழங்கினான். வடுகு நாட்டின் எல்லையை அழித்துப் பாண்டிய நாட்டுடன் இணைத்து கொண்டான். வடக்கே கங்கைவரை படையெடுத்து வென்றான். இதனால் வீர பாண்டியனது நாடு காவிரிமுதல் கங்கைவரை பரவியது. பெரும் வெற்றிகளைப் பெற்ற வீரபாண்டியன் சோழ நாட்டைச் சேர்ந்த தில்லைமாநகரை அடைந்து வீராபிஷேகமும் விசயாபிஷேகமும் செய்துகொண்டான்.



20

# மாறவர்மன் குலசேகர பாண்டியன்

(கி.பி. 1268 - 1285)

ஸ்வஸ்தி ஸ்ரீ

தேர்போ லல்குல் திருமகள் புணரவும்
கார்சேர் கூந்தல் கலைமகள் கலப்பவும்
பார்மகள் மனத்துப் பாங்குட னிருப்பவும்
செங்கோல் நடப்பவும் வெண்குடை நிழற்றவும்
கருங்கலி முருங்கவும் பெரும்புகழ் விளங்கவும் 5
கானிலை செம்பியன் கடும்புலி யாளவும்
மீனம் பொன்வரை மேருவில் ஓங்கவும்
முத்தமிழும் மனுநூலும் நான்மறை முழுவதும்
எத்தவச் சமயமும் இனிதுடன் விளங்கவும்
[1]சிங்களம் கலிங்கம் தெலிங்கம் சேதிபம் 10
கொங்கணம் குதிரம் [2]கோசலம் குச்சரம்
முறைமையின் ஆளும் [3]முதுநில வேந்தர்
திறைமுறை காட்டிச் சேவடி வணங்க
மன்னர் மாதர் பொன்னணி கவற்ற
இருபுடை மருங்கும் ஒருபடி யிரட்டப் 15
பழுதறு சிறப்பிற் செழுவைக் காவலன்
வீரசிங் காதனத்து ஓராங் [4]கிருந்தே
ஆரும் வேம்பும் அணியிதழ் புடையாத்
தாரும் சூழ்ந்த தடமணி மகுடம்
பன்னூ றூழி தொன்னிலம் புரந்து 20
[5]மாழ்கெனக் குட்டம் மகிழ்ந்துடன் சூடி
அலைமகள் முதலாம் அரிவையர் பரவ

1. சிங்கணம். 2. போசலம். 3. முதுநல. 4. இருத்தி. 5. வாழ்கென...

உலக முழுதுடை யாளொடும் வீற்றிருந்
தருளின கோமாற வன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலசேகர 25
தேவர்க்கு யாண்டு பத்தாவது . . . .

# மாறவர்மன் குலசேகரன்

## முன்னுரை

சடையவர்மன் சுந்தர பாண்டியன், வீர பாண்டியன் ஆகியோர் ஆட்சிக் காலத்தில் பாண்டிய நாட்டின் ஒரு பகுதியை ஆண்ட மூன்றாமவனாக விளங்கிய பாண்டியன் மாறவர்மன் குலசேகரன் ஆவான். சுந்தர பாண்டியனுக்கு அடங்கியவனாகச் செங்கோல் செலுத்தியவன். இவர்கள் மூவரும் உடன் பிறந்தவர்களாகக் கொள்ளும் மரபும் இருந்து வருகிறது. சடையவர்மன் சுந்தர பாண்டியன் காலத்தில் பாண்டிய அரசு மிகுதியாக விரிவடைந்து இருந்ததால் இவ்வாறு பல மன்னர்கள் பாண்டிய நாட்டுப் பொறுப்பினை ஏற்று நன்முறையில் நீதி செலுத்தினர்.

## மெய்க்கீர்த்தி

கருங்கலியை அறிவே ஒழித்த குலசேகர பாண்டியன் சோழரது புலிக் கொடி கானகத்தையாள, பாண்டியரது கயற் கொடி மேருவில் பறக்குமாறு செய்தான். சிங்களம் முதலாய பல நாடுகளைத் திறை கொண்டு அந் நாட்டு மன்னர் பலரும் வந்து அடிபணியுமாறு செய்தான். அம் மன்னரின் தேவிமார் இருபுறமும் நின்று பணிவிடை செய்யுமாறு ஏவல் கொண்டு தன் வேம்புமாலையுடன் ஆத்தி மாலையையும் சேர்த்து அணிந்து உலக முழுதுடையாளொடும் வீற்றிருந்து ஆட்சி புரிந்தான்.

## விளக்கம்

1–5. "தேர்போல் அல்குல்.........பெரும்புகழ் விளங்கவும்"

திருமகளும் கலைமகளும் நிலமகளும் குலசேகரனது ஆட்சியில் சிறந்து விளங்கினர். கருங்கலி நீங்கி செங்கோல் நடைபெற்றது. வெண்குடை அளி செய்தது. இவற்றால் அவனது புகழ் சிறந்து ஓங்கியது.

6-9. "கானிலை செம்பியன்.........இனிதுடன்
விளங்கவும்"

சோழரது புலிச் சின்னம் கானகத்திலே ஆட்சி செய்தது; கயல் சின்னம் பொன் போன்ற மேரு மலையில் சிறந்து விளங்கியது. நாட்டில் முத்தமிழும் மனு நெறியும் வளர்ந்தன. நான் மறையும் எல்லாச் சமயங்களும் சிறந்து விளங்கின.

### 10-25. "சிங்களம் கலிங்கம்......குலசேகர தேவர்க்கு"

சிங்களம்..... குச்சரம் ஆகிய பெரிய நாடுகளை முறையாக ஆண்டு வந்த மன்னர்கள் பாண்டியனுக்கு அடங்கியவர்களாய்த் திறைப் பொருள்களை முறையாகச் செலுத்தி அவன் திருவடிகளை வணங்கினர். அம் மன்னர்களின் தேவியர் இரண்டு பக்கங்களிலும் நின்று பணிவிடை செய்து ஒழுகினர்.

இவ்வாறான சிறப்புகளோடு பாண்டிய நாட்டு மன்னனாகிய குலசேகரன் சோழருக்குரியதாகிய ஆத்திமாலையைத் தனது பாண்டிய குலத்திற்குரிய வேம்புமாலையுடன் சேர்த்து அணிந்து மணி மகுடம் சூடி, பல ஆண்டு காலம் நாட்டில் கொடுமைகளை ஒழித்து நாடு காத்து மகிழ்ந்தான். கடல் மகளும் தன்னடி பரவுமாறு விளங்கிய குலசேகரன் உலக முழுதுடையாள் என்னும் தன் தேவி யுடன் வீர சிங்காதனத்து வீற்றிருந்து மாறவர்மன் என்னும் பட்டத் தையும் பெற்று நாடாண்டான்.

—×—

## 21

# மாறவர்மன் விக்கிரம பாண்டியன்

(கி. பி. 1283-1296)

ஸ்வஸ்தி ஸ்ரீ

திருமகள் செயமகள் திருப்புயத் திருப்ப
பொருகடல் ஆடை நிலமகள் புணர
கடவுள் மேருவில் கயல்விளை யாட
வடபுல மன்னவர் வந்தடி பணிய
[1]நேமி வரைசூழ் நெடுநில முழுவதும் 5
[2]தரும வெண்குடை [3]நிழலில் தழைப்ப
செங்கோல் நடப்பக் கருங்கலி துறந்து
[4]வேத விதியில் நீதி நிலவ
சேரனும் வளவனும் [5]திறைகொணர்ந் திறைஞ்ச
வீரமும் புகழும் மிகநனி விளங்க 10
நதிப்பெருஞ் சடைமுடி நாதன் சூடிய
மதிக்குலம் [6]திகழ மணிமுடி [7]சூடி
விளங்கிய மணியணி வீரசிங்கா சனத்து
வீற்றிருந் தருளிய ஸ்ரீகோமாற பன்மரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ விக்கிரம பாண்டிய 15
தேவர்க்கியாண்டு ஏழாவதின் எதிர் நாலாமாண்டு....

---

1. நேமிவரைசூள். 2. தர்ம வெண்குடை ; தன்ம வெண்குடை. 3. நிழல் தழைப்ப. 4. வெதவிதியில்னிதிநிலவ. 5. திறைகுணந்திறைஞ்ச, 6. திகள். 7. சூழ.

# மாறவர்வன் விக்கிரம பாண்டியன்

## முன்னுரை

விக்கிரம பாண்டியன் குலசேகரனின் தம்பியாகக் கருதப்படுகிறான். இவன் குலசேகரன் காலத்திலேயே ஆட்சிப் பொறுப்பினை ஏற்றவன். தைத் திங்கள் அத்த நட்சத்திரத்தில் பிறந்தவன்.

## மெய்க்கீர்த்தி

வடதிசை மன்னர் வணங்க, கயற்கொடியை மேருவில் பறக்க விட்ட விக்கிரம பாண்டியன், சேரனும் சோழனும் திறை செலுத்தி வர சந்திர குலத்தின் பெருமை விளங்குமாறு ஆட்சி செய்தான்.

## விளக்கம்

### 1-8. "திருமகள் செயமகள்......நீதி நிலவ"

திருமகளும் வெற்றி மகளும் விக்கிரமனின் புயத்தில் விளங்கினர். கடலை ஆடையாக உடுத்த நிலமகள் இவனிடம் மகிழ்ந்திருந்தாள். இவன் மேரு மலையில் தனது மீனக் கொடியைப் பறக்கச் செய்தான். வடநாட்டு மன்னர்களும் வந்து அடிபணிந்து நிற்குமாறு, தன் ஆணை செலுத்தப்பட்ட பரந்த நிலம் முழுவதும் எவ்வகைத் துன்பமும் இல்லாதவாறு ஒழித்து, தனது வெண்குடை நிழற்ற, செங்கோல் நடத்தினான். வீதிகளில் வேதங்கள் ஒலித்தன. நீதி தழைத்து ஓங்கியது.

### 9-15. "சேரனும் வளவனும் . . . . . தேவர்க்கு"

பாண்டியனுக்கு சேர மன்னனும் சோழ மன்னனும் முறையாகத் திறை செலுத்தி வந்தனர். இதனால் இவனது வீரமும் புகழும் மேலும் மேலும் ஓங்கி வளர்ந்தன. கங்கையையணிந்த சடைமுடியினையுடையவனாகிய இறைவன் சூடிய சந்திரனின் குலத்தில் தோன்றிய பாண்டியன் தனது குலம் மேலும் திகழ்ந்து விளங்கும் படியாகப் பாண்டிய நாட்டின் மணிமுடியினைச் சூடி, மணிகள் பொருந்திய அழகிய வீர சிங்காதனத்து மாறவர்மன் என்னும் பட்டப் பெயரோடு வீற்றிருந்தான்.

—:O:—

22

# சடையவர்மன் சுந்தர பாண்டியன்

(கி.பி. 1296 - 1310)

ஸ்வஸ்தி ஸ்ரீ

[1]புயல்வாய்த்து சமஸ்த சாகர பரமண்டலத்து
க்ஷமைவினொடும் கருணையெய்தி சமயத் தன்மை
இனிது நடாத்தி நிகழா நின்ற சாரிகைக்
கோட்டையில் விக்கிரம பாண்டியன் மடிகையில்
நான்குதிசைப் பதினெண் விஷயத்தோம் சுத்தவல்லி 5
வளநாட்டுத் தனியூர் ராசாதி ராசச்
சதுர்வேதி மங்கலத் துடையார்
சயங்கொண்ட சோழீஸ்வர முடையார் திருமுன்
விக்கிரம பாண்டியன் திருமண் டபத்து
நிறைவற நிறைந்து குறைவறக் கூடி 10
ஸ்ரீ கோச் சடைய பன்ம ரான
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ சுந்தர பாண்டிய
தேவர்க்கு யாண்டு பன்னிரண்டாவது கன்னி ஞாயிற்றுப்
பூர்வபட்சத்துத் திரயோதசியும் வெள்ளிக்கிழமையும்
பெற்ற சோதிநாள். . . .

---

1. புயல் வாழ்த்து.

# சடையவர்மன் சுந்தரபாண்டியன்

## முன்னுரை

'பூமலர்வளர் திகழ்திருமகள் புகழாகம் புணர்ந்திருப்ப' என்னும் தொடக்க அடியினை உடைய மெய்க்கீர்த்திக்கு உரியவனாகிய சடையவர்மன் சுந்தர பாண்டியனின் வேறானவனாகக் கருதப்படும் இச்சுந்தர பாண்டியன் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் காலத்துப் பட்டமெய்தி ஆண்டவனாவான். பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இவனது ஆட்சி நடைபெற்றுள்ளது. திரிபுவனச் சக்கரவர்த்திகள் என்ற சிறப்பினையும் பெற்றுள்ளான் ஆதலின் இவன் சிறந்த பேரரசனாக விளங்கியவன் என்பது பெறப்படுகிறது.

## மெய்க்கீர்த்தி

சடையவர்மன் சுந்தர பாண்டியனது பன்னிரண்டாம் ஆட்சி யாண்டில் சாரிகைக் கோட்டை என்னுமிடத்தில் விக்கிரம பாண்டி யன் இறந்து பட்டான். மழைவளம் நிறைந்ததும், கடலால் சூழப் பட்டதுமாகிய இந்நிலவுலகத்தில் சிறந்த அருள் உள்ளத்தை உடையவனாய், சமய ஒழுக்கங்கள் தவறாதவாறு அரசு செலுத்தி வந்தவன் அவ்விக்கிரம பாண்டியன். அவன் இறந்து பட்டபோது விக்கிரம பாண்டியனது திருமண்டபத்தில் நாட்டுப் பெருமக்கள் சிலர் கூடிச் செய்த அறச்செயல் தொடர்ந்து கூறப்படுகிறது.

அக்கூட்டத்தில் சுத்தவல்லி வளநாட்டு, தனியூர் நாட்டு, இராசாதிராசச் சதுர்வேதி மங்கலம் என்னும் ஊர்ப் பெருமக்கள், சயங்கொண்ட சோழீஸ்வரம் என்னும் ஊர்ப் பெருமக்களின் முன் கூடினார்கள்.

இம்மெய்க்கீர்த்தியுள் சுந்தரபாண்டியனின் ஆட்சி ஆண்டு குறிக்கப்பட்ட போதிலும் முதல் வரிகள் சில விக்கிரம பாண்டிய னைச் சார்ந்ததாகக் காணப்படுகிறது.

—:O:—

## 23

# அரிகேசரி பராக்கிரம பாண்டியன்

(கி.பி. 1422-1463)

சுபமஸ்து

பூமிசை வனிதை மார்பினிற் பொலிய
நாமிசை கலைமகள் நலனுற விளங்கப்
புயவரை மீது சயமகள் புணரக்
கயலிணை யுலகின் கண்ணெனத் திகழச்
சந்திர குலத்து வந்தவ தரித்து 5
முந்தையோர் தவத்து முளையென வளர்ந்து
தென்கலை வடகலை தெளிவுறத் தெரிந்து
மன்பதை புரக்க மணிமுடி புனைந்து
சங்கர சரண பங்கயஞ் சூடிச்
செங்கோ லோச்சி வெண்குடை நிழற்றி 10
வான வாரியும் மன்னருள் வாரியும்
தான வாரியும் தப்பாது அளித்து
மறக்களை பறித்துநல் அறப்பயிர் விளைத்துச்
சிங்கையில் அனுரையில் இராசையிற் செண்பையில்
விந்தயி லறந்தையில் முதலையில் வீரையில் 15
வைப்பாற் றெல்லையில் மன்னரை வென்கண்டு
எப்பாற் றிசையும் இசைவிளக் கேற்றிப்
பதினெண் பாடைப் பார்த்திவ ரனைவரும்
திறையும் சின்னமும் முறைமுறை கொணர்ந்து
குறைபல இரந்து குரைகழல் இறைஞ்ச 20
அவரவர் வேண்டியது அவரவர்க் கருளி
அந்தணர் அனேகர் செந்தழல் ஓம்ப
விந்தைமுத லகரம் ஐந்திடத்து இயற்றிச்
சிவநெறி யோங்கச் சிவார்ச்சனை புரிந்து

மருதூ ரவர்க்கு மண்டப மமைத்து 25
முன்னொரு [1]தூறு மூங்கில்புக் கிருந்த
சிற்பரர் தம்மைத் திருவத்த சாமத்துப்
பொற்கலத் தமுது பொலிவித் தருளிச்
சண்பக வனத்துச் சங்கரர் தமக்கு
மண்டபம் அமைத்து மணிமுடி சூட்டி 30
விழாவணி நடாத்தி விரைப்புன லாடல்
வழாவகை [2]நடாத்தநின் மன்னருள் அதனால்
வற்றா வருவியும் வற்றி வற்கடம்
உற்றவிக் காலத்து உறுபுனல் நல்கென
[3]வேண்டிய பொழுதே வேறிடத் தின்றிச் 35
சேண்டகு புனலிற் செழும்புன லாட்டி
மின்கால் வேணி விசுவநா தர்க்குத்
தென்கா சிப்பெருங் கோயில் செய்து
நல்லா கமவழி நைமித் திகமுடன்
எல்லாப் பூசையும் எக்கோ யிலினும் 40
பொருண்முத லனைத்தும் புரையற நடாத்தித்
திருமலி செம்பொன் சிங்கா சனமிசை
உலக முழுது முடையா ளுடனே
இலகு கருணை யிரண்டுரு வென்ன
அம்மையும் அப்பனு மாயனைத் துயிர்க்கும் 45
இம்மைப் பயனும் மறுமைக் குறுதியும்
மேம்பட நல்கி வீற்றிருந் தருளிய
ஸ்ரீ அரிகேசரி பராக்கிரம
பாண்டிய தேவர்க்கு யாண்டு இருபத்தெட்டாவதின்
எதிராவது ......... நாள்

# அரிகேசரி பராக்கிரம பாண்டியன்

**முன்னுரை**

பதினைந்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் அரசாண்டவனாகக் கருதப்படும் அரிகேசரி பாராக்கிரம பாண்டியன் சிறந்த சிவபக்தனாகக் காணப்படுகிறான். திருநெல்வேலி மாவட்டத்தில் தென்காசி என்னும் நகரை அமைத்தான். அங்கு விசுவநாதர்

1. தூர். 2. நடாத்தி. 3. வேண்டியப் பொழுதே.

ஆலயம் ஒன்றினை எழுப்பினான். இவன் மாறவர்மன் என்னும் பட்டப் பெயரைப் பெற்றுள்ளான் ஆதலின் அரிகேசரி என்பது சிறப்புப் பெயராக அமைந்ததேயாகும். இவனுக்குப்பின் இவன் தம்பி குலசேகர பாண்டியன் அரசுரிமை ஏற்றிருக்கிறான்.

## மெய்க்கீர்த்தி

சந்திர குலத்தில் தோன்றிய பராக்கிரம பாண்டியன் எல்லாச் செல்வமும் பெற்றிருந்தான். தென்மொழி வடமொழிகளை நன்கு அறிந்திருந்த அவன் சிறந்த சிவபக்தனாக விளங்கினான். **சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு** என்னும் இடங்களில் எதிர்த்த மன்னரை வென்றான். மன்னர் பலர் பணிய, வேண்டியவர்க்கு வேண்டியதை அளித்தான். விந்தை முதலாகிய ஐந்து இடங்களில் சிறந்த அகரங்களை அமைத்தான். திருப்புடை மருதூரில் மண்டபம் அமைத்தான். திருநெல்வேலி இறைவனுக்கு அமுதளிக்கச் செய்தான். சண்பகவனத்து இறைவனுக்கு மண்டபம் அமைத்தான். மழையின்றி வற்கடம் ஏற்பட்டபோது சேய்மையிடத்திலிருந்து நீர் கொணர்ந்து இறைவனுக்குப் புனலாட்ட ஏற்பாடு செய்தான். தென்காசியில் ஆலயம் அமைத்தான். அம்மையும் அப்பனும் போல உலக முழுதுடையாளுடன் அரசு வீற்றிருந்தான்.

## விளக்கம்

### 1–8. “பூமிசை வனிதை......மணிமுடி புனைந்து”

பராக்கிரம பாண்டியனின் மார்பில் திருமகளும் நாவில் கலைமகளும், புயமாகிய வரையில் சயமகளும் நிலைபெற்று விளங்கினர். இரண்டாகிய கயல் சின்னமானது உலகிற்குக் கண் போல விளங்கியது. சந்திரகுலத்தில் பிறந்த பராக்கிரம பாண்டியன் தன் முன்னோர் செய்த தவத்தின் பயனாய்த் தோன்றியவன் என்னுமாறு சிறப்புற வளர்ந்தான். தென்கலை, வடகலை ஆகிய இருவகைக் கலைகளிலும் வல்லவனாக விளங்கினான். இவ்வுலக உயிர்களைக் காப்பதே தன் கடமை என்ற நோக்கத்தோடு பாண்டிய நாட்டின் முடிசூடி விளங்கினான்.

### 9–13. “சங்கர சரண......அறப்பயிர் விளைத்து”

இறைவனுடைய திருவடிகளாகிய தாமரை மலர்களைத் தன் முடியில் சூடியவனாய்ச் செங்கோலோச்சினான். தனது வெண்கொற்றக் குடையின் தண்ணளியால் மழைவளமும், மன்னரது அருள் வளமும், கொடை வளமும் நாட்டில் பெருகுமாறு செய்தான். மறச் செயல்களாகிய களைகளை அழித்து அறச் செயல்களாகிய நல்ல பயிர்கள் வளர்ந்து விளைவு தருமாறு செய்தான்.

14-17. "சிங்கையில் அனுரையில்......இசைவிளக்
கேற்றி"

சிங்கை, அனுரை, இராசை, செண்பை, விந்தை, அறந்தை, முதலை, வீரை, வைப்பாறு ஆகிய இடங்களில் தன்னை எதிர்த்துப் போர் செய்த மன்னரையெல்லாம் வென்று எல்லாத் திசையிலும் தன் புகழாகிய ஒளி பரவுமாறு செய்தான்.

18-21. "பதினெண்பாடை......அவரவர்க் கருளி"

தமிழ் நாட்டையடுத்து விளங்கும் பன்னிரு நிலத்தினும் விளங்கும் திசை மொழிகளாகிய பதினெட்டு மொழிகளைப் பேசும் மன்னவர் அனைவரும் தங்களுக்குப் பாண்டியன் வகுத்த கட்டளையின் படியான திறைப் பொருள்களையும், பிறவாகிய தங்களது சின்னம் முதலியவற்றையும் கொண்டு வந்து வைத்துத் தங்கள் குறைகள் பலவற்றையும் எடுத்துக் கூறி, வீரக் கழலணிந்த பாண்டியனுடைய திருவடிகளை வணங்கி வேண்டி நின்றனர். பாண்டியனும் அவர்களின் குறைகளை அறிந்து யார் யார் என்ன என்ன விரும்பி வேண்டினார்களோ அவற்றை அவரவர்களுக்கு அளித்து உதவினான்.

22-25. "அந்தணர் அனேகர்.....மண்டபம் அமைத்து"

விந்தியமலை முதலாக அவனது ஆட்சிக்குட்பட்ட நாட்டில் ஐந்து இடங்களில் அகரங்களை நிறுவி சிறந்த அந்தணர்களைக் கொண்டு பெரிய யாகங்களை இயற்றுவித்துச் சைவ சமயநெறிகள் நாட்டில் சிறந்து வளருமாறு சிவனுக்குரிய அருச்சனையைச் செய்து மகிழ்ந்தான். மருதூர் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனுக்குத் திருமண்டபம் ஒன்றினை அமைத்தான்.

26-30. "முன்ஒருதூறு........மணிமுடி சூட்டி"

பகை மன்னரின் படையெழுச்சிக் காரணமாகத் திருநெல்வேலியில் எழுந்தருளியிருந்த சிவபெருமானின் படிமத்தினை ஒரு மூங்கிற் புதரினுள் மறைத்து வைத்திருந்தனர். பல காலத்திற்குப் பின் யாதவர் குலமங்கை ஒருத்தி பால் கொண்டு செல்லுகையில் அவ்விடத்தில் கால் தடுக்கியது. இச்செயல் பலநாள் நடைபெற்றது. ஐயமுற்ற மங்கை தன் கணவனிடம் கூறினாள். அங்கே தோண்டிப் பார்க்கச் சிவபெருமானின் திருமேனியாகிய படிமத்தினைக் கண்டனர். அதனைக் கோயிலில் எழுந்தருளச் செய்தனர். அவ்இறைவனுக்கு இரவின் நடுயாமத்தில் பொற்கலத்தில் அமுதளித்து வழிபாடு இயற்ற ஏற்பாடு செய்தான். சண்பக வனம் எனப்படும் திருக்குற்றாலத் திருத்தலத்து எழுந்தருளியுள்ள இறைவனுக்கு மண்டபம் கட்டுவித்து மணிமுடி சூட்டி விழா நடத்தினான்.

31-36. "விழாவணி நடாத்தி.........செழும்புனலாட்டி"

நாட்டில் என்றும் வற்றாத அருவிகள் எல்லாம் வற்றியதனால் பஞ்சம் ஏற்பட்டுள்ளது. ஐயனே! எம்பெருமானாகிய தங்கள் திருத்தலத்தில் புனலாடல் முதலிய திருவிழாக்களைத் தவறாது நடத்தித் தங்கள் அருளைப் பெற, வேண்டிய தண்ணீரினைத் தந்து உதவுவீராக என்று சண்பகவனத்துச் சங்கரனாகிய இறைவன் திரு முன்னிலையில் வணங்கி வேண்டி நின்றான் பாண்டியன். அவ்வாறு இறைவனைத் தொழுமுன் சேய்மையிடத்தினின்றும் நீர் கொண்டு வந்து இறைவனைத் திருமுழுக்காட்ட ஏற்பாடு செய்தான்.

37-41. "மின் கால் வேணி............புரையற நடாத்தி"

மின்னலை ஒத்த ஒளிமிக்க சடைமுடியினையுடைய விசுவ நாதப் பெருமானுக்குத் தென்காசி எனப்படும் திருத்தலத்தில் பெரிய ஆலயம் ஒன்றினை அமைத்தான். எல்லா ஆலயங்களிலும் எல்லா வகையான பூசைகளும் ஆகம நெறிமுறைகளின்றும் வழுவாதவாறு நடைபெறுவதற்கான அனைத்துப் பொருள்களையும் அளித்து உதவினான்.

42-48. "திருமலி செம்பொன்......பாண்டிய தேவர்க்கு"

சிறந்த பொன்னாலான சிம்மாசனத்தின் மீது உலக முழுதுடையாள் என்னும் தேவியுடன் வீற்றிருந்து செங்கோல் நடத்தினான் பராக்கிரம பாண்டியன். எல்லா உயிர்களுக்கும் இப்பிறவியின் பயனையும், மறுபிறவிக்கு உறுதியையும் அளித்துப் பராக்கிரம பாண்டியன் தன் தேவியுடன் வீற்றிருந்த காட்சி, அம்மையும் அப்பனுமாய் இரண்டு உருவில் வந்த கருணையின் திருவுருவமே ஆகும் என்னுமாறு அமைந்திருந்தது.

—×—

# 1

# இரண்டாம் தேவராய மகாராயர்

(கி.பி. 1426-1452)

சுபமஸ்து

ஸ்வஸ்திஸ்ரீ

ஸ்ரீமன் மகாமண் டலேசுவர
[1]அரி ராய விபாடன்
பாஷைக்குத் தப்புவராயர கண்டன்
[2]மூவராயர கண்டன்
கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்
இந்து ராய[3]சுரத்ராண இராசாதி ராசன்
இராச பரமேசுவரன்
பூர்வ தட்சிண பச்சிம உத்தர
சமுத்திராதிபதி ஸ்ரீவீர
கசவேட்டை கண்டருளிய பிரதாப
இம்மடி தேவராய மகாராயர்
பிருதிவி ராச்சியம் பண்ணியருளா நின்ற
சகாப்தம் 1373 இன் மேல் செல்லா நின்ற
பிரசாபதி வருஷத்து மீனஞாயிற்று
அமரபட்சத்து நவமியும் வியாழக் கிழமையும்
பெற்ற திருவோணத்து நாள்..............

---

1. அரியராய. 2. முவராயிர. 3. சுரத்தான.

# 2

# மல்லிகார்ச்சுன தேவ மகாராயர்

(கி.பி. 1447-1465)

ஸ்வஸ்தி ஸ்ரீ
மண்டல மகாமண்டலீசுரன்
[1]அரி ராய விபாடன்
பாஷைக்குத் தப்புவராயர கண்டன்
மூவராயர கண்டன்
இராசாதிராச இராய பரமேசுரன்
ஸ்ரீவீரப் பிரதாப [2]கசவேட்டை கண்டருளிய
தேவராய மகாராயர் குமாரர்
மல்லிகார்ச்சுன தேவ மகாராயர்
பிருதிவி ராச்சியம் பண்ணியருளா நின்ற
சகாத்தம் 1378 இன் மேல் செல்லா நின்ற
தாதுவருஷத்து மகர ஞாயிற்று அமரபட்சத்து
துதிகையும் புதவாரமும் பெற்ற மகத்துநாள்.........

1. அரியராய. 2. கெசவெட்டை.

# 3

# கிருஷ்ண தேவமகாராயர்

(கி.பி. 1509-1530)

ஸ்வஸ்தி ஸ்ரீ

நமஸ்துங்க சிரச்சும்பி
சந்திரசாமர சாரவே
திரைலோக்கிய நகராரம்ப
மூலஸ்தம்பாய சம்பவே

ஸ்வஸ்தி ஸ்ரீ
விசயாப்யுதய சாலிவான சகாப்தம்
1439 இதின்மேல் செல்லாநின்ற ஈசுவர
சம்வத்சரம்.........
ஸ்ரீமன் மகாமண்டலேசுவர [1]அரிராயர விபாடன்
பாஷைக்குத் தப்புவராயர கண்டன்
கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்
பூர்வதட்சிண பச்சிம உத்தர[2]சதுர்ச் சமுத்திராதிபதி
ஸ்ரீவீரப்பிரதாப ஸ்ரீவீர கிருஷ்ணதேவ மகாராயர் . . . . .
. . . . திருவுளம் பற்றின தர்ம சாசனராயசம்

---

1. அரியராய. 2. சதுச்சமுத்திராதிபதி.

# 4

# வீரஅச்சுத தேவமகாராயர்

(கி.பி. 1529-1542)

ஸ்வஸ்திஸ்ரீ

ஸ்ரீமன்மகா ராசாதிராச ராச பரமேசுர
ஸ்ரீவீரப் பிரதாப [1]மூவரா்யர கண்ட
[2]அரிராய விபாட அஷ்டதிக்கு ராய
மனோபயங்கர பூர்வ [3]தட்சிண பச்சிம
சமுத்திராதிசுர ஸ்ரீவீரஅச்சுதைய தேவ
மகாராயர் பிருதிவிராச்சியம் பண்ணியருளா நின்ற
சகாத்தம் 1451 இன் மேல் செல்லா நின்ற விரோதி
[4]சம்வத்சரத்து விருச்சிக ஞாயிற்று அமரபட்சத்து
பஞ்சமியிலே............

1. முவராயர்கண்ட. 2. யரியராய. 3. தெட்சிணபட்சம. 4. சங்கற்சரத்து.

## 5

# சதாசிவ தேவமகாராயர்

(கி.பி. 1542-1570)

### மெய்க்கீர்த்தி-1

சேதுவந்யே சகஸ்யாப்தே
ஸ்ரீமான் வேங்கடதேசிக:
சிந்தாமணி மகாக்கிராமம் ஸ்ரீ ரங்கேசாயிய
தத்தவான்

சுபமஸ்து; ஸ்வஸ்தி ஸ்ரீ

ஸ்ரீமன் மகா இரா......இராச இராச பரமேசுவர
ஸ்ரீ வீரப் பிரதாப ஸ்ரீமன் சதாசிவ இராச
மகாஇராயர் பிருதிவி இராச்சியம் பண்ணி
அருளாநின்ற சகாப்தம் 1467 இதன் மேல்
செல்லாநின்ற விசுவாவசு சம்வத்சரத்து பால்குண
மாசத்து, சுக்லபட்சத்து, சப்தமியும் சோம
வாரமும்பெற்ற ரோகிணி நட்சத்திரத்து........

## 6

### மெய்க்கீர்த்தி-2

சுபமஸ்து

ஸ்வஸ்தி ஸ்ரீ

ஸ்ரீமன் மகாமண்டலேசுவர மேதினி [1]மீசர
[2]கண்டகடாரி சாளுவ [3]அரிராய விபாடன்
பாஷைக்குத் [4]தப்புவ ராயர கண்டன்
[5]மூவராயர கண்டன்

---

1. மீசுர. 2. கண்டகட்டாரி. 3. அரியராய. 4. தப்புவராயர்கண்டன்'
5. முவராயர் கண்டன்.

கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்
துலுக்கர் [6]தளவிபாடன் துலுக்கர் [7]மோகந்தவிர்த்தான்
[8]பூர்வ தட்சிண பச்சிம [9]உத்தர
சத்த சமுத்திராதி பதி
எம்மண்டலமுங் கொண்டருளிய
இராசாதி ராச ராச பரமேசுவர
ஸ்ரீ வீரப் பிரதாப ஸ்ரீசதாசிவ தேவமகாராயர்
பிருதிவிஇராச்சியம் பண்ணியருளாநின்ற சகாத்தம்
1471 இன் மேல் செல்லாநின்ற சவுமிய வருடம்
ஆனிமாதம் 13ஆம் தேதி சோமவாரமும் பிரதமையும்
பெற்ற மூல நட்சத்திரத்து நாள்........

## 7

### மெய்க்கீர்த்தி-3

சுபமஸ்து - ஸ்வஸ்திஸ்ரீ

ஸ்ரீமகா மண்டலேசுவர
மேதினி [1]மீசரகண்ட [2]கடாரி
சாளுவ [3]அரிராயவிபாடன்
பாஷைக்குத் தப்புவராயர கண்டன்
[4]மூவராயர கண்டன்
கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்
[5]நவகோடி நாராயணன் சதாசிவ மகாராயர்
பிருதிவி ராச்சியம் பண்ணி யருளாநின்ற
சகாத்தம் 1483 இதன்மேல் செல்லாநின்ற
துன்மதி வருஷம் மகர ஞாயிற்றுப் பூர்வபட்சத்து
தசமியும் ரோகணியும் பெற்ற புதவாரத்து நாள்......

---

6. தழுவிபாடன். 7. மொகரந்தவிழ்த்தான். 8. பூறுவதெற்ஷண. 9. உத்திர.
1. மீசுர. 2. கட்டாரி. 3. அரியராய. 4. முவ்வராயர. 5. நவகொடி.

# 8
# ஸ்ரீரங்க தேவமகாராயர்

ஸ்வஸ்திஸ்ரீ

[1]ஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் [2]அரிராய் தளவிபாடன்
பாஷைக்குத் [3]தப்புவ ராயர கண்டன்
[4]மூவராயர கண்டன் [5]கண்டர கண்டன்
[6]கண்டயப் பிரதாபன் [7]கடாரிச் சாளுவன்
கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான்
ஒருபரி கொண்டு திரள்பரி [8]வேட்டும்
உபய குலோத்துங்கன்
எம்மண்டலங் கொண்டு ஈழமுந் திறைகொண்ட
இராசாதி ராசன் இராச கெம்பீரன்
இராச நாரணகுல திலகன் இராசாக்கள் தம்பிரான்
[9]கோட்டத்து மன்னியர் கண்டன்
[10]சோரிமன்னியர் சூரியன் [11]சேடிமன்னியர் காலாந்தகன்
தொண்டை மண்டல [12]ஸ்தாபனா சாரியன்
சோழ மண்டல [13]ப்ரதிஷ் னாசாரியரன்
பாண்டி மண்டலத்துப் பதுமனா சாரியன்
மறுமன்னியர் [14]கோடாரி குறுமன்னியர் [15]கோளரி
துலுக்கர் தளவிபாடன் துலுக்கர்மோகந் [16]தவிர்த்தான்
[17]அரிதள விபாடன் அரியர்மோகந் [16]தவிர்த்தான்
ஒட்டியர் தளவிபாடன் ஒட்டியர்மோகந் [16]தவிர்த்தான்
தொட்டியர் தளவிபாடன் தொட்டியர்மோகந்
[16]தவிர்த்தான்
[18]தக்கார்க்குத் தக்கன் தர்க்க விநோதன்

---

1. ஸ்ரீமந். 2. அரியராய. 3. தப்புவராயர் கண்டன். 4. முவராயிர; முவ்வராயிர. 5. கண்டர்கண்டன். 6. கண்டைய. 7.கட்டாரிச். 8. வெட்டும். காட்டத்து. 10. சொரிமன்னியர். 11. செடிமன்னியர். 12. ஸ்ததாபனா சாரியன். 13. ப்ரதிஷாவனாசாரியன். 14 கொடாரி. 15. கொளரி. 16. தவிள்தான். 17. அரியதள. 18. தற்காற்குத் தற்கன் தற்கவிநோதன்.

தண்டுவார் மிண்டன் [19]சகலகுணாபி ராமன்
துங்காபி ராமன் துங்க [20]ரேவந்தன்
சொல்லுக்கு அரிச்சந்திரன் வில்லுக்கு விசயன்
பரிக்கு நகுலன் [21]கொடைக்குக் கர்ணன்
பொறுமைக்குத் தருமர் [22]பூருவ தட்சிண
[23]பச்சிம உத்தர சத்தசமுத் திராதிபதி
[24]அசுவபதி கசபதி தனபதி நரபதி
[25]நரவேட்டை கண்டருளிய [26]மல்லிகார்ச்சுன தேவ
மகாராயர்
[27]பிரபுடதேவ மகாராயர் இராமதேவ மகாராயர்
[28]கிருஷ்ணதேவ மகாராயர் [29]விருபாட்சதேவ மகாராயர்
ஆனைகுந்திதேவ மகாராயர் திருமலைதேவ மகாராயர்
ஸ்ரீரங்க [30]ரங்கதேவ மகாராயர்-பிருதிவி இராச்சியம்
பண்ணியருளா நின்ற சாலிவாகன [31]சகாத்தம் [32]1489
கலியுக [31]சகாத்தம் 4899 இதன்மேல் செல்லாநின்ற
[33]காளயுக்தி வருஷம் கார்த்திகை மாதம் 8ஆம் தேதி
மங்கள வாரமும்......கூடின சுபதினத்தில்......

---

19. சகலகுண பிராமன். 20. ரெபந்த்ன். 21. குடைக்குக் கற்ணன். 22. பூறுவ
23. பட்சிம. 24. அசுபதி. 25. நரவெட்டை. 26. மல்லிகாற்ச்சுன. 27. பிறவுட.
28. கிஷ்ண. 29. விருப்பாஷ்சி. 30. ரெங்கதேவ. 31. சகாற்த்தம். 32. 1721.
33. காலயுத்தி.

# 9

# வீர வசந்தராயர்

(கி.பி. 1565- — )

ஸ்வஸ்தி ஸ்ரீ

ஸ்ரீமன் மகாமண்ட லேசுவரன்
[1]அரியராய விபாடன்
பாஷைக்குத் [2]தப்புவராயர கண்டன்
[3]மூவராயர கண்டன்
கண்டநாடு கொண்டு கொண்டநாடு விடாதான்
இலங்காபுரியின் திறைகொண்டு வென்றருளிய
ஸ்ரீ வீரவசந்த ராயர் பிருதிவி ராச்சியம்
பண்ணி அருளாநின்ற காலத்தில் கலியுக
சகாப்தம் 4900க்கு மேல் (1490 சகம்)
வீர வசந்தராயர் நயனாருக்கு ஆண்டு
மூன்றாவதில் விபவவருஷம் கார்த்திகை மாதம்......

---

1. அரியராய. 2. தப்புவராயர் கண்டன். 3. மூவராயர் கண்டன்.

# விசயநகர மன்னர்

## 1. இரண்டாம் தேவராயர்

'கசவேட்டை கண்டருளிய தேவராய மகாராயர்' என்று வழங்கப்படுபவர் இரண்டாம் தேவராயர். விசயநகரப் பேரரசினை நிறுவிய, சங்கமவமிசத்து மன்னனாகிய முதலாம் ஹரிஹரனின் வழி வந்தவர் தேவராயர். கி.பி. 1426 வரை விசயநகரப்பேரரசின் மன்னனாக விளங்கிய முதலாம் விசயராயரின் மகனாகத் தோன்றியவர். இவரது பேரரசு வடக்கே குல்பர்க் என்னுமிடத்திலிருந்து தெற்கே இலங்கைத்தீவு வரை பரவி இருந்தது.

## 2. மல்லிகார்ச்சுன தேவர்

இரண்டாம் தேவராயரின் மக்கள் இருவர். அவர்களுள் மூத்த மகனாகிய இரண்டாம் விசயராயர் சிறிது காலமே ஆட்சி புரிந்திருக்கிறார். பிறகு இரண்டாம் மகனாகிய மல்லிகார்ச்சுனதேவர் பட்டத்திற்கு வந்தார். உள்நாட்டுப் பூசல்களும், அந்நியரின் படையெழுச்சிகளும் மல்லிகார்ச்சுனதேவரின் ஆட்சிக்கு ஊறுவிளைவித்தன. அவற்றையெல்லாம் எதிர்த்துப் போரிட வேண்டிய பெரும் பொறுப்பு அவருக்கு ஏற்பட்டுவிட்டது. ஆயினும் தன் முன்னோரைப் போல வேதானும் சிறந்த வீரனாய் விளங்கி நாட்டிற்கும் மொழிக்கும் பெருந்தொண்டாற்றினார்.

## 3. கிருஷ்ணதேவமகாராயர்

மல்லிகார்ச்சுனதேவரின் மகன் இளையவனாய் இருந்ததால் அவருடைய ஒன்று விட்ட தம்பி விருபாட்சன் மன்னனானான். அதே போல விருபாட்சனின் மக்களும் தகுதியற்றவர்களாக இருந்தமையின் விருபாட்சனை அடுத்துச் சாளுவநரசிம்மன் அரசபதவியைக் கைப்பற்றினான். சங்கமவமிசத்து மன்னர் ஆட்சி விருபாட்சனின் மகனோடு முடிவு பெறுகிறது.

சங்கம வமிசத்துக் குமாரகம்பணரது ஆட்சியில் சிறந்த படைத்தலைவனாக விளங்கிய சாளுவமங்கு என்பானின் வழிவந்தவனும் சங்கம மன்னர் ஆட்சியில் மகாமண்டலீசுவரர் பதவியில் இருந்து வந்தவனுமாகிய, சாளுவநரசிம்மர் விசயநகரப் பேரரசின் பொறுப்பைக் கைப்பற்றினார். சாளுவநரசிம்மர் தம் இறுதிக் காலத்தில் அவர் மக்கள் இளமை வாய்ந்தவர்களாக இருந்ததால் ஆட்சிப் பொறுப்பைத் துளுவநரசநாயகரிடம் ஒப்படைத்தார். சாளுவ வமிச ஆட்சியும் முடிவுற்றது.

துளுவநரசநாயகருக்குப் பின் அவருடைய மக்கள் வீரநரசிம்மனும் கிருஷ்ணதேவராயரும் அடுத்தடுத்து விசயநகரப் பேரரசின் மன்னராயினர். கிருஷ்ணதேவராயர் சைவ, வைணவ ஆலயங்களுக்குப் பல கோபுரங்களையும் மண்டபங்களையும் கட்டுவித்து அறச்செயல் பலவற்றையும் செய்துள்ளார். அவரது இலக்கியப்பணியும் குறிப்பிடக்கூடியதாகும்.

## 4. வீரஅச்சுததேவமகாராயர்

கிருஷ்ணதேவராயர் இறந்தபோது அவருக்கு ஒன்றரை ஆண்டுகள் நிரம்பிய ஆண்மகன் ஒருவனே இருந்தான். எனவே ஆட்சியினைக் கைப்பற்றுவதில் பெரும் போட்டிகளும் சிக்கல்களும் ஏற்பட்டன. அவற்றில் எல்லாம் வெற்றி கண்ட அச்சுததேவ மகாராயர் விசயநகரப் பேரரசின் மன்னரானார். இவர் கிருஷ்ணதேவராயரின் ஒன்றுவிட்ட தம்பியாகக் கருதப்படுகிறார்.

கிருஷ்ணதேவராயரிடம் தோல்வியுற்று அடங்கியிருந்த மன்னர்கள் தாம் இழந்த நாடுகளைத் திரும்பப் பெறவேண்டுமென்ற ஆசையால் விசயநகரப் பேரரசின் மீது படையெடுக்கத் தொடங்கினர். அவர்களோடு எதிர்த்துப் போராடித் தன் பேரரசினைச் சிதறாமல் காத்த பெருமை பெற்றவர் வீர அச்சுததேவமகாராயர்.

## 5. சதாசிவதேவமகாராயர்

வீர அச்சுததேவ மகாராயர் காலமான பிறகு விசயநகரப் பேரரசின் பொறுப்பை ஏற்றவர் சதாசிவதேவ மகாராயர். கிருஷ்ணதேவராயரின் ஒன்று விட்ட தம்பியும் அச்சுததேவரின் சகோதரருமான ரங்கராயர் என்பவரின் புதல்வரே சதாசிவமகாராயர்.

அச்சுததேவரின் மகன் இளையவனாய் இருந்த காரணத்தால் ஆட்சிப் பொறுப்பை ஏற்பதில் பல குழப்பங்கள் இருந்தன. பல எதிர்ப்புகளுக்கிடையே நாட்டுப் பெருமக்களின் ஆதரவாலும் இராமராயரின் துணையாலும் சதாசிவதேவர் பேரரசரானார். எனினும் சதாசிவராயரின் ஆட்சியில் இறுதிவரை இராமராயரின் ஆதிக்கமே நடைபெற்று வந்ததாகத் தெரிகிறது. இராமராயரின் செருக்கினால் தலைக்கோட்டைப் பெரும்போர் ஒன்று நிகழ்ந்தது. அதன் பயனாய் விசயநகரப் பேரரசு வீழ்ச்சியுற்றது,

## 6. ஸ்ரீரங்கதேவமகாராயர்

பதினாறாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விசயநகரப்பேரரசின் மன்னனாக விளங்கியவராகக் கருதப்படுபவர் ஸ்ரீரங்கதேவ மகாராயர். ஆரவீட்டு வமிசத்து இராமராயர் என்பவரின் வழித்தோன்றலாக வந்தவர். இவரது மெய்க்கீர்த்தியுள் இவருக்கு முன் ஆண்ட சிறந்த பேரரசர் எழுவரின் சிறப்பும் பட்டப்பெயர்களும் தொகுத்துக்

கூறப்பட்டுள்ளன. இம்மெய்க்கீர்த்தி மூலம் விசயநகரப்பேரரசர் பலரும் பெற்றிருந்த சுமார் 45 பட்டப்பெயர்கள் கிடைக்கின்றன.

## 7. வீரவசந்தராயர்

கிருஷ்ணதேவராயரின் தமயன் வீரநரசிம்மராயருக்கு வீரவசந்த ராயர் என்ற சிறப்புப் பெயர் காணப்படுகிறது. அவருடைய ஆட்சிக் காலம் கி. பி. 1509இல் முடிவடைகிறது. இங்கு குறிப்பிடப்படும் வீர வசந்தராயரின் மெய்க்கீர்த்தியுள் காணப்படும் ஆண்டு கி. பி. 1565 ஆகும். எனவே வீரநரசிம்மராயரின் வேறான இவ் வீரவசந்தராயர் ஆரவீட்டு வமிசத்து மன்னர் காலத்தில் இருந்த ஒரு மன்னர் என்று மட்டுமே கொள்ளமுடிகிறது.

## விளக்கம்

விசயநகர மன்னர்களின் மெய்க்கீர்த்திகள் அனைத்தும் பெரும் பாலும் ஒரே மாதிரியான தொடர்களால் அமைந்துள்ளன. எனவே அத்தொடர்களுக்கான விளக்கம் தனியே ஒருசேர வரிசைப்படுத்தித் தரப்படுகிறது. ஒவ்வொரு மெய்க்கீர்த்தியிலும் உள்ள தொடருக்கு ஏற்ற விளக்கத்தைப் பொருத்தி அறிந்துகொள்ளலாம்.

1. **மண்டலேசுவரன்** —ஒரு பேரரசின் பகுதிகள் ஒவ்வொன்றும் மண்டலம் எனப்பட்டன. ஒரு மண்டலத்தின் தலைவனாக நியமிக்கப்பட்டவன் மண்டலேசுவரன் எனப்பட்டான்.

2. **மகாமண்டலேசுவரன்** — பேரரசன்.

3. **அரியராயதளவிபாடன்** - அரி + ராய + தளம் + விபாடன்.
   யகரம் கூடுதலாக அமைந்துள்ளது. (பிழையே எனலாம்)
   அரி = சத்துரு, பகைவர்.
   ராய = அரசர், தளம் = படை
   விபாடன் = அழிப்பவன்
   பகைவர் படையை அழிப்பவன் என்னும் பொருளில் அமைந்த சிறப்புப் பெயர். பட்டப்பெயர் என்றே கூறுவர்.

4. **பாஷைக்குத் தப்புவராயர கண்டன்**—
   பாஷை = வார்த்தை, சொன்னசொல்.
   தப்புவர = தவறின
   ராயர = அரசருக்கு
   கண்டன் = தலைவன். (அழிப்பவன்)
   சொன்ன சொல் தவறின அரசர்களை அழிக்கும் தலைவன் என்ற பொருளில் கொடுக்கப்பட்ட பட்டப்பெயர்.

5. மூவராயரகண்டண் —

மூவர்ராயர் = மூவராகிய அரசர் - அசுவபதி என்னும் பீசப்பூர் மன்னன், கசபதி என்னும் ஒரிசா மன்னன், நரபதி என்னும் மன்னர் மன்னன் ஆகியோர்.

ராயர = ராயருக்கு, அரசருக்கு
கண்டன் = தலைவன்

மூவராகிய மன்னர்களுக்குத் தலைவன் (அதிபதி) என்ற பொருளில் அளிக்கப்பட்ட பட்டப்பெயர்.

6. கண்டர கண்டண்—

கண்டர் = தலைவர், அரசர்.
கண்டர = அரசருக்கு
மன்னருக்கு மன்னன் (பேரரசன், சக்கரவர்த்தி)

7. கண்டயப் பிரதாபன் —

மன்னர்களில் மிகப் பராக்கிரமமுடையவன் என்னும் பொருளில் அமைந்த பட்டப்பெயர்.

8. கடாரிச் சாளுவன் —

கடாரி = பட்டாக்கத்தி எனப்படும் பெருவாள்.
சாளுவ = இராசாளி என்னும் பறவையரசு.

(கூர்மையான பார்வை உடையது ; மிக வேகமாகப் பறக்கும் திறனுடையது ; தன் இரைக்காக வேட்டை யாடும் செயலுடையது.)

பெரிய வாளினை இராசாளியாகப் பெற்றவன் என்னும் பொருளில் கிடைத்த பட்டப்பெயர்.

9. கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் —

தான் விரும்பிய நாட்டைக் கைப்பற்றும் திறனும் அதனை இழக்காத வெற்றியும் உடையவன்.

10. ஒருபரிகொண்டு திரள்பரிவேட்டும் உபயகுலோத்துங்கன் —

ஒரு குதிரியின் மீதமர்ந்து பெரிய குதிரைப்படையினைக் கவர விரும்புபவன். (உபய + குல + உத்துங்கன்) தாய் வழி, தந்தைவழியாகிய இரண்டு குலத்திற்கும் சிறந்த பெருமையைத் தேடித் தந்தவன்.

11. இராசநாரணகுலதிலகன் – தான் பிறந்த குலமாகிய சாளுக்கிய குலத்திற்குத் திலகமாக விளங்குபவன்.

12. **இராசாக்கள் தம்பிரான்** — பிரான் = தலைவன். இராசாக்களின் தலைவன்.

13. **கோட்டத்து மன்னியர்கண்டன்** — மண்டலம் என்பது போல நாட்டின் பகுதிகள் கோட்டம் எனப்பட்டன. அக் கோட்டங்களில் நியமிக்கப்பெற்ற மன்னர்களின் தலைவன்.

14. **சோரிமன்னியர்சூரியன்** – சோரி என்பது சேர என்ற சொல்லாக இருக்கலாம் என்று கொள்ளுவது பொருத்த மாகக் காணப்படுகிறது. அவ்வாறு பொருந்தினால் சேர மன்னர்களுக்குச் சூரியனாக விளங்கியவன் என்று பொருள் கொள்ளலாம்.

15. **சேடிமன்னியர் காலாந்தகன்** — இத்தொடரிலும் சேடி என்பது சோழ என்ற சொல்லாக இருக்கலாம். அவ்வாறு இருந்தால் சோழமன்னர்களுக்கு எமனுக்கு எமனாக விளங் கியவன் என்று பொருள்படும்.

( காலன் = யமன் ; அந்தகன் = யமன் )

16. **தொண்டைமண்டல ஸ்தாபனாசாரியன்** — தொண்டைமண்டலத்தைத் தோற்றுவித்தவன். (ஸ்தாபன + ஆசாரியன்)

17. **சோழமண்டல பிரதிஷ்டாபனாசாரியன்** — பிரதிஷ்டாபன + ஆசாரியன் = தோற்றுவித்தவன்.

18. **பாண்டிமண்டலத்துப் பதுமனாசாரியன்** — பாண்டிமண்டலத்தைத் தோற்றுவித்தவன் என்ற பொரு ளில் அமைந்த பட்டப்பெயராகவே கொள்ளமுடிகிறது.

19. **மறுமன்னியர் கோடாரி** – குற்றம் செய்யும் மன்னர்களை அழிப்பவன். அவர்களுக்குக் கோடாரி போன்றவன். (கோடாரி = மரம் பிளக்க உதவும் கருவி)

20. **குறுமன்னியர் கோளரி** – குறுநில மன்னர்களுக்குத் தலை வன். அவர்களுக்குச் சிங்கம் போன்றவன்.

21. **துலுக்கர் தள விபாடன்** — துலுக்கர் படைகளை நாசம் செய்பவன்.

22. **துலுக்கர்மோகந்தவிர்த்தான்** — துலுக்கரைக் கொன்று குவிப்பவன். ஆண்களைக் கொல்லுவதனால் அவர்கள் பெண்கள் மீது மோகம் கொள்ளாதவாறு விலக்கியவனாகிறான்.

23. **அரிதளவிபாடன்**—பகைவர் படையை அழித்தவன்.

24. **அரியர் மோகந்தவிர்த்தான்** — பகை மன்னர்களைக் கொன்று குவிப்பதன்மூலம் அவர்களது மோகத்தை விலக்கியவன்.

25. **ஒட்டியர்-தொட்டியர்**—கலிங்க நாட்டைச் சார்ந்த ஒரு இனத்தவர். விருபாட்சராயர் காலத்தில் விசயநகரப் பேரரசின் மீது படையெடுத்து வந்து நாசம் செய்தவர்.

26. **தக்கார்க்குத் தக்கான்**—தகுதிவாய்ந்த சான்றோர்களிடத்தில் சான்றோனாகவே விளங்குபவன்.

27. **தர்க்க விநோதன்**—சிந்தனை செய்வதில் பெரு விருப்பமுடையவன்.

28. **தண்டுவார் மிண்டன்**—தண்டல் நாயகர் அல்லது படை வீரர்களுக்குத் தலைவன்.

29. **சகல குணாபிராமன்**—சகல குண அபிராமன் — எல்லா வகையான உயர்ந்த குணங்களை உடையவனாய் யாவரையும் கவரக்கூடிய தன்மை வாய்ந்தவன்.

30. **துங்காபி ராமன்**—தன்னுடைய பெருமைகளால் பிறரைக் கவரக்கூடிய தன்மை பெற்றவன்.

31. **துங்க ரேவந்தன்**—சிறப்புவாய்ந்த பெரிய குதிரை வீரன்.

32. **பூருவ, தட்சிண, பச்சிம, உத்தர சத்த சமுத்திராதிபதி**- முறையே கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய நான்கு திசைகளிலும் சூழப்பட்ட ஏழு கடல்களுக்கும் தலைவனாக விளங்குபவன். சதுர்ச் சமுத்திராதிபதி என்னும் தொடர், நான்கு திசைகளிலும் கடலால் சூழப்பட்ட நாட்டிற்குத் தலைவன் என்னும் பொருளில் வழங்குகிறது. விசயநகரப் பேரரசின் வட வெல்லையாக அமைந்த கிருஷ்ணைப் பேராற்றினைக் கடலாகவே உருவகித்துக் கூறப்பட்டுள்ளதாகக் கொள்ள முடிகிறது.

33. **அசுவபதி, கசபதி, தனபதி, நரபதி**—மேலே கூறப்பட்ட மூவராயரகண்டன் என்ற தொடருள் கண்ட அரசர்கள் பெயர்களைத் தன்னுடைய பட்டப் பெயர்களாகக் கொண்டவன். இத்தொடர்கள் அனைத்தும் விசயநகரப் பேரரசர் பலரும் கொண்ட பட்டப் பெயர்களின் தொகுப் பாகும். ஸ்ரீ ரங்கதேவ மகாராயரின் மெய்க்கீர்த்தியில் கூறப்படும் மன்னர் பலரும் கொண்ட பட்டப் பெயர் களின் தொகுப்பு எனக் கொள்ள முடிகிறது. இவை தவிர பிற மெய்க்கீர்த்திகளில் காணப்படும் வேறுசில தொடர்களும் இவ்வாறான பொருளமைந்த பட்டப் பெயர் களாகக் காணப்படுகின்றன. அவை —

34. **இந்துராய சுரத்ராண இராசாதிராசன்**—இந்து அரசர் களை இரட்சித்துக் காக்கும் மன்னர் மன்னன். இரட்சிப்பவன் என்னும் பொருள் தரும் சுல்தான் என்னும் முகம்மதியரது சொல் சுரத்ராண என வட மொழிச் சொல்லாக ஆக்கப்பட்டது.

35. **அஷ்டதிக்குராய மனோபயங்கரன்** — எட்டுத் திக்கு களிலும் உள்ள அரசர்களின் உள்ளத்தில் அச்சத்தைத் தோற்றுவிக்கக் கூடியவன்.

36. **மேதினி மீசர கண்ட கடாரி**—உலகில் உள்ள குறுநில மன்னர்களுக்குக் கத்திபோல விளங்குபவன். அவர்களை அடக்கி ஆள்பவன். மீசரகண்ட=கர்வமுடைய மன்னர் களுக்கு.

37. **நவகோடி நாராயணன்**—பல கோடிகளுக்குத் தலைவன் என்ற பொருளில் அமைந்த தொடர்.

—:0:—

# பிற மெய்க்கீர்த்திகள்

## முதலாம் இராசராசன்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ

சாலை கலமறுத்து வேங்கை நாடும்
கங்க பாடியும் தடிய வழியும்
நுளம்ப பாடியும் கொண்ட
கோவிராச கேசரி வர்மருக்கு யாண்டு 14ஆவது

தொகுதி 3-பக். 5

2. ஸ்வஸ்தி ஸ்ரீ

காந்தளூர்ச் சாலை கலமறுத் தருளி
கங்க பாடியும் நுளம்ப பாடியும்
தடிகை வழியும் வேங்கை நாடும்
கொண்ட கோ இராசகேசரி பன்மருக்கு
யாண்டு 14 ஆவது

தொகுதி 4-II-பக். 129

## முதலாம் இராசேந்திரன்

3. ஸ்வஸ்தி ஸ்ரீ

பூர்வதேசமும் கங்கையும் கிடாரமும் கொண்ட
கோப்பர கேசரி வன்மரான உடையார்
ஸ்ரீ இராசேந்திர சோழ தேவர்க்குயாண்டு
23ஆவது......

தொகுதி 17-பக். 134

முதலாம் இராசாதிராசன்

4. ஸ்வஸ்தி ஸ்ரீ

வீரபாண்டியன் தலையும் சேரலன் சாலையும்
இலங்கையும் தண்டாற் கொண்ட
கோவிராசகேசரிவன்ம ரான உடையார்
ஸ்ரீ இர்ரசாதிராச தேவர்க்கு யாண்டு 30 ஆவது...

தொகுதி 8-பக். 163

5. ஸ்வஸ்தி ஸ்ரீ

ஈழமும் மதுரையும் கொண்டருளிய இராசாதிராச
தேவர்க்குயாண்டு 13 ஆவது...

புதுக்கோட்டை. பக். 53

முதலாம் குலோத்துங்கன்

6. ஸ்வஸ்திஸ்ரீ

சுங்கந்தவிர்த்தருளின திரிபுவனச் சக்கரவர்த்திகள்
ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு
44 ஆவது...

தொகுதி. 8-பக். 93

இரண்டாம் குலோத்துங்கன்

7. ஸ்வஸ்தி ஸ்ரீ

புவன முழுதுடை யர்ளொடும் செம்பொன் வீர
சிம்மாசனத்து வீற்றிருந்தருளிய பொன்னம்பலம்
பொன்வேய்ந்த கோவிராசகேசரி பன்மரான
திரிபுவனச் சக்க்ரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கு யாண்டு 12ஆவ்து...

புதுக். பக். 65

8. ஸ்வஸ்தி ஸ்ரீ

திருப்பேரம்பலம் பொன்வேய்ந்தருளிய கோவிராச
கேசரிவன்மரான ......ஆண்டு பதினொன்றாவது...

தொகுதி 13-பக். 117

9.

மூன்றாம் குலோத்துங்கன்

9. ஸ்வஸ்தி ஸ்ரீ

கோப்பரகேசரி பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளி காஞ்சியும் கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்ககு யாண்டு 27 ஆவது...

புதுக். பக். 86

10. ஸ்வஸ்தி ஸ்ரீ

திரிபுவனச் சக்கரவர்த்திகள் மதுரையும் ஈழமும் பாண்டியன் முடித்தலையும் கருவூரும் கொண்டருளிய ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு 24 ஆவது...

பதுக். பக். 85

வீரதேவர்

11. ஸ்வஸ்தி ஸ்ரீ

திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ மதுரையும் பாண்டியன் முடித்தலையும் கொண்டருளி, காஞ்சியும் வஞ்சியும் கொண்டருளி வீராபிஷேகம் பண்ணியருளின திரிபுவன வீரதேவர்க்கு யாண்டு 31 ஆவது...

புதுக். பக். 93

குலசேகர பாண்டியன்

12. ஸ்ரீ மெய்க்கீர்த்திக்குமேல் ஸ்ரீ கோமாறவன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் எம்மண்டலமுங் கொண்டருளிய குலசேகர தேவர்க்கு யாண்டு 40 ஆவது . . .

தொகுதி 8. பக். 78.

சுந்தரபாண்டியன்

13. ஸ்வஸ்தி ஸ்ரீ

திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு கொண்டு
முடிகொண்ட சோழபுரத்து வீராபிஷேகமும்
விசையாபிஷேகமும் பண்ணியருளிய
ஸ்ரீ சுந்தரபாண்டிய தேவர்க்குயாண்டு 20 ஆவதின்
எதிராமாண்டு...

புதுக். பக். 186

சம்புவராயர்

14. ஸ்வஸ்தி ஸ்ரீ

தண்டே சுரன் ஓலை தாபரஞ்சூழ் வையகத்துக்
கண்டீ சன்கருமம் ஆராய்க—பண்டே
அறஞ்செய்தான் செய்தான் அறங்காத்தான் பாதம்
திறம்பாமல் சென்னிமேல் வைத்து.

அருளால் ஆதிதண்டீசுரன் தேவகன்மி கோயில்
கணக்கரோம் முன்னாள் துருக்கர் வந்து திரு
வாசல்களும் நிரையல் குலைந்து தேசமும் அழிந்து
கிடைக்கையில் சகலலோக சக்கரவர்த்தி வென்று
மண்கொண்ட சம்புவராயர்க்கு யாண்டு
பதினாலாவது...

தொகுதி 8-பக். 382

15. ஸ்வஸ்தி ஸ்ரீ

தொண்டைநாடு பரவின சோழன்
பால்யானைக் கோக்கண்டனாயின
இராசகேசரி வர்மனாலும்
சேரமான் கோத்தாணு இரவியாலும்...

தொகுதி. 3-III பக். 221

16. ஸ்வஸ்தி ஸ்ரீ

வீரபாண்டியனைத் தலைகொண்ட கோப்பரகேசரி
வேந்திராதிபன்மருக்கு யாண்டு
2 முதல் 13 வரை

தொகுதி 3-III பக். 350

17. ஸ்வஸ்தி ஸ்ரீ
புயல்வாய்த்து திருவாய்க்கேழ்வி எழுதி
திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ
தேவர்க்கு யாண்டு ஒன்பதாவது...

18. ஸ்வஸ்தி ஸ்ரீ
சகலபுவனச் சக்கரவர்த்திகள் அவனி ஆளப்
பிறந்தாரான ஸ்ரீ கோப்பெருஞ் சிங்க தேவர்க்கு
யாண்டு 5 ஆவது ...
தொகுதி 8–பக். 22

19. சுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ
ஸ்ரீமான் மகாராசாதிராச ராசபரமேசுவா
ஸ்ரீ வீரப்பிரதாப ஸ்ரீ வீர ஸ்ரீரங்கதேவமகர்ராயர்
பிருதிவிராச்சியம் பண்ணியருளா நின்ற
சகாத்தம் 1504 இன்மேல் ...
வெங்கடபதிராயர் காலக் கல்வெட்டுகள் பக். 14

20. ஸ்வஸ்தி ஸ்ரீ
கச்சியும் தஞ்சையும் கொண்ட
ஸ்ரீ கன்னரதேவர்க்கு யாண்டு 16 ஆவது...
தொகுதி 3–பக். 13

பல்லவர்

21. ஸ்வஸ்தி ஸ்ரீ
கோவிசய தந்திவிக்கிரம பருமர்க்குயாண்டு ஆறாவது
தொகுதி 12. பக். 17.

22. ஸ்வஸ்தி ஸ்ரீ
தெள்ளாற்றெறிந்து இராச்சியமும் கொண்ட நந்திப்
போத்தரையர்க்குயாண்டு இருபத்தொன்றாவது.........
தொகுதி 12. பக். 23.

23. ஸ்வஸ்தி ஸ்ரீ
கூடல் ஆளப்பிறந்தானான காடவராயர் மகனார்
தொண்டைமண்டலங் கொண்ட பல்லவாண்டா
ரான காடவராயர் கல்வெட்டு.........
தொகுதி 12. பக். 62.

# மெய்க்கீர்த்திகள் வெளியாகியுள்ள இடங்கள்

## சோழர்

1. திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 64 | 40 | 5 | 205 | 517 | 7 | 276 | 440 |
| | 67 | 41 | | 206 | 518 | | 378 | 739 |
| | 94 | 66 | | 210 | 521 | | 410 | 807 |
| 2 i | 2 | 1 | | 240 | 603 | | 431 | 852 |
| | 14 | 2 | | 246 | 621 | | 432 | 861 |
| | 21 | 3 | | 275 | 652 | | 435 | 864 |
| | 42 | 4 | | 279 | 664 | | 438 | 871 |
| | 53 | 5 | | 304 | 723 | | 441 | 878 |
| | 68 | 6 | | 306 | 724 | | 442 | 880 |
| 2 ii | 121 | 24 | | 318 | 743 | | 473 | 987 |
| | 126 | 26 | | 325 | 756 | | 474 | 988 |
| | 237 | 59 | | 349 | 854 | | 476 | 998 |
| 2 iii | 249 | 63 | | 350 | 855 | | 477 | 1000 |
| | 253 | 65 | | 363 | 890 | 8 | 7 | 7 |
| | 261 | 66 | | 364 | 975 | | 127 | 234 |
| | 313 | 69 | | 367 | 980 | | 291 | 571 |
| 2 iv | 428 | 93 | | 507 | 1408 | | 297 | 584 |
| 3 i | 7 | 4 | | 509 | 1411 | | 298 | 586 |
| | 9 | 6 | 6 | 6 | 20 | | 336 | 662 |
| | 14 | 9 | | 8 | 29 | | 336 | 663 |
| | 23 | 15 | | 140 | 267 | | 341 | 678 |
| | 25 | 16 | | 140 | 268 | | 341 | 679 |
| | 26 | 17 | | 159 | 337 | | 342 | 681 |
| | 104 | 51 | 7 | 47 | 110 | | 380 | 747 |
| | 106 | 52 | | 62 | 142 | 17 | 66 | 195 |
| | 118 | 391 | | 65 | 152 | | 80 | 222 |
| 4 | 183 | 548 | | 66 | 156 | | 87 | 234 |
| 5 | 204 | 514 | | 262 | 412 | | 88 | 235 |
| | 204 | 516 | | 263 | 413 | | 89 | 238 |

தொகுதி என்றது — தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி
(South Indian Inscription Vols)

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 17 | 91 | 243 | 17 | 204 | 493 | புதுக். | 30 முதல் | 83 |
| | 147 | 322 | | 281 | 614 | | 43 முதல் | 94 |
| | 148 | 323 | | 299 | 652 | கன்னியா. | | |
| | 151 | 327 | 23 | 20 | 42 | நான்காம் தொகுதி | | |
| | 152 | 328 | | 22 | 43 | | 1969/38—1 | |
| | 179 | 442 | | 23 | 44 | | | |
| | 192 | 468 | | 50 | 79 | | | |
| | 193 | 470 | | 138 | 175 | | | |

2. ………ஜயஜய வென்று மொழி

தொகுதி. 7. பக். 433. எண். 863.

3. திருமன்னி வளர இருநில மடந்தையும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 98 | 66 | 5 | 258 | 639 | 7 | 439 | 873 |
| 2 i | 90 | 9 | | 273 | 651 | | 445 | 888 |
| | 93 | 10 | | 279 | 665 | | | 889 |
| | 95 | 11 | | 309 | 729 | | 447 | 891 |
| | 97மு | 12மு | | 319 | 747 | | 494 | 1036 |
| | 106 | 20 | | 361 | 881 | | 505 | 1047 |
| 2 ii | 220 | 54 | | 491 | 1354 | 8 | 4 | 5 |
| | 232 | 53 | | 510 | 1413 | | 7 | 6 |
| 2 iv | 402 | 82 | 6 | 5 | 13 | | 33 | 66 |
| | 404 | 83 | | 8 | 30 | | 35 | 67 |
| 4 | 29 | 223 | | 12 | 33 | | 37 | 68 |
| | 92 | 330 | | 138 | 260 | | 167 | 306 |
| | 93 | 335 | 7 | 60 | 141 | | 287 | 559 |
| | 95 | 340 | | 295 | 478 | | 296 | 583 |
| | 118 | 393 | | 383 | 755 | | 313 | 613 |
| | 177 | 538 | | 407 | 801 | | 328 | 644 |
| | 181 | 544 | | 412 | 812 | | 354 | 701 |
| 5 | 171 | 449 | | 413 | 814 | | 376 | 736 |
| | 181 | 464 | | 432 | 860 | 17 | 63 | 186 |
| | 254 | 635 | | 437 | 869 | | 64 | 192 |
| | 255 | 636 | | | 870 | | 65 | 194 |
| | 256 | 637 | | 438 | 872 | | 68 | 197 |

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 17 | 130 | 305 | 17 | 280 | 613 | 23 | 362 | 485 |
| | 131 | 306 | | 351 | 735 | | 365 | 487 |
| | 133 | 309 | 23 | 45 | 71 | புதுக். | 44 | 96 |
| | 141 | 317 | | 46 | 73 | | 45 | 98 |
| | 142 | 318 | | 49 | 78 | | 47 | 99 |
| | 143 | 319 | | 103 | 130 | | 49 | 100 |
| | 144 | 320 | | 191 | 277 | | 51 | 101 |
| | 146 | 321 | | 235 | 344 | | 53 | 104 |
| | 148 | 324 | | 236 | 346 | கன்னியா | 1968—50 | |
| | 149 | 326 | | 237 | 347 | I | 196—881 | |
| | 153 | 329 | | 333 | 439 | II | 1968—170 | |

## 4. திங்களேர் பெறவளர் அங்கதிர்க் கடவுள்

| தொகுதி. | பக். | எண். |
|---|---|---|
| 5 | 252 | 633 |
| 8 | 44 | 82 |
| 23 | 180 | 264 |

## 5. 6. திங்களேர் தருதன் தொங்கல்வெண் குடைக்கீழ்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3 I | 53 | 28 | 5 | 208 | 520 | 8 | 2 | 3 |
| 4 | 90 | 329 | | 242 | 607 | | 98 | 199 |
| | 175 | 537 | | 260 | 641 | | 339 | 675 |
| | 177 | 539 | | 366 | 978 | 17 | 85 | 231 |
| | 186 | 555 | 7 | 424 | 842 | 23 | 113 | 143 |
| | 294 | 867 | | 504 | 1046 | | 235 | 345 |
| 5 | 183 | 465 | | 506 | 1048 | புதுக். | 54 | 108 |

## 7. இரட்டபாடி ஏழரை இலக்கமும் கொண்டு

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 7 | 406 | 798 | 23 | 364 | 486 |
| 17 | 47 | 154 | | | |
| | 167 | 389 | கன்னியா I | 1968—106 | |

## 8. 9. திருமகள் மருவிய செங்கோல் வேந்தன் தன்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 134 | 127 | 3. I | 112 | 55 | 17 | 98 | 249 |
| 2 III | 304 | 67 | | 134 | 127 | 23 | 115 | 145 |
| | 305 | 67 | 5 | 184 | 466 | புதுக். | 57 | 110 |
| | 306 | 67 | 6 | 190 | 457 | | 58 | 111 |
| 3 I | 21 | 39 | 7 | 443 | 885 | | 61 | 113 |
| | 22 | 42 | | 444 | 886 | | 61 | 114 |

## 10. 11. திருமாதர் புவியெனும் பெருமாதர் இவர்தம்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 3-I | 58 | 29 | 5 | 270 | 647 |
| 5 | 195 | 489 | 17 | 246 | 579 |
| | 266 | 644 | புதுக். | 58 | 112 |

## 12. திருமகள் விளங்க இருநில மடந்தையை

தொகுதி. 3 பக். 113

## 13. அடல் களிற்றால் ஆகவ மல்லனை

தொகுதி. 7 பக். 379 எண். 743

## 14. வீரமே துணையாகவும் தியாகமே அணியாகவும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3-II | 199 | 82 | 7 | 261 | 410 | 8 | 10 | 16 |
| 4 | 94 | 339 | | 290 | 467 | | 372 | 722 |
| | 181 | 545 | | 383 | 756 | | 383 | 752 |
| 5 | 184 | 468 | | 384 | 757 | 17 | 135 | 311 |
| 6 | 190 | 458 | | 444 | 887 | | | |

## 15. திருவளர் திரள்புயத்து இருநில வலயம்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 3-I | 64 | 30 | 5 | 501 | 1382 |
| 5 | 364 | 976 | 7 | 275 | 439 |

## 16. புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்

தொகுதி. 4 பக். 36 எண். 227

17. திங்களேர் மலர்ந்து வெண்குடை மண்டிலம்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 3-I | 115 | 57 | 7 | 277 | 442 |
| 4 | 489 | 1388 | 8 | 3 | 4 |
| | 491 | 1392 | | 384 | 754 |

18. திருமன்னி விளங்கும் இருகுவடு அனையதன்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 3 | 113 | — | 3 | 172 | 77 |
| | 133 | 64 | 7 | 251 | 392 |
| | 135 | 65 | | | |

19. பூமேல் அரிவையும் போர்ச்செயப் பாவையும்

தொகுதி. 7 பக். 56 எண். 137

20. புகழ் சூழ்ந்த புணரி யகழ்சூழ்ந்த புவியில்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 141 | 68 | 5 | 382 | 1003 | 17 | 301 | 659 |
| | 144 | 69 | 7 | 328 | 551 | 23 | 206 | 300 |
| | 149 | 70 | | 394 | 776 | | 213 | 304 |
| | 152 | 71 | | 459 | 1032 | கன்னியா | | |
| 4 | 135 | 445 | 17 | 120 | 293 | III | 1968— | 270 |
| | 279 | 813 | | 287 | 625 | Early-I | — 36 | 23 |

21. புகழ்மாது விளங்க சயமாது விரும்ப

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 2-III | 391 | 77 | 4 | 146 | 508 | 5 | 381 | 1001 |
| | 392 | 78 | | 293 | 862 | | 493 | 1356 |
| 3-I | 71 | 31 | | 335 | 1023 | | 500 | 1381 |
| | 119 | 58 | | 336 | 1024 | 6 | 32 | 57 |
| 4 | 8 | 133 | 5 | 160 | 436 | | 157 | 328 |
| | 9 | 134 | | 186 | 473 | | 163 | 349 |
| | 13 | 137 | | 259 | 640 | 7 | 55 | 133 |
| | 97 | 345 | | 308 | 727 | | 55 | 134 |
| | 97 | 347 | | 380 | 1000 | | 62 | 143 |

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | 258 | 405 | 8 | 7 | 8 | 17 | 119 | 292 |
| | 260 | 409 | | 9 | 11 | | 125 | 298 |
| | 291 | 468 | | 91 | 185 | | 187 | 456 |
| | 292 | 471 | | 164 | 302 | | 252 | 586 |
| | 293 | 474 | | 168 | 310 | | 255 | 589 |
| | 297 | 484 | | 169 | 311 | | 274 | 606 |
| | 325 | 542 | | 169 | 312 | | 286 | 624 |
| | 380 | 745 | | 173 | 321 | | 289 | 628 |
| | 385 | 760 | | 174 | 323 | | 297 | 645 |
| | 398 | 785 | | 174 | 324 | 23 | 250 | 361 |
| | 413 | 813 | | 235 | 445 | | 303 | 401 |
| | 420 | 831 | | 243 | 458 | புதுக். | 63 | 117 |
| | 423 | 839 | | 244 | 459 | | 64 | 118 |
| | 423 | 840 | | 244 | 460 | | 64 | 119 |
| | 427 | 849 | 17 | 67 | 196 | | 65 | 121 |
| | 428 | 851 | | 72 | 204 | | 66 | 122 |
| | 440 | 874 | | 82 | 223 | | 68 | 125 |
| | 441 | 879 | | 83 | 226 | | 71 | 129 |
| | 474 | 989 | | 96 | 247 | கன். II | 1968—188 | |
| | | | | | | கன். III | 1968—254 | |

## 22. பூமியும் திருவும் தாமெய்ப் புணர

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 7 | 309 | 498 | 7 | 440 | 875 |
| | 325 | 541 | | 440 | 876 |
| | 381 | 748 | | 441 | 877 |
| | 381 | 749 | | 471 | 979 |

## 23. பூமன்னு பாவை காமுற்று முயங்க

தொகுதி. 4 பக். 282 எண். 818
" 7 " 16 " 43

## 24. பூமாலை மிடைந்து பொன்மாலை திகழ்தர

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 2-III | 310 | 68 | 5 | 293 | 703 | 17 | 277 | 609 |
| 3-I | 75 | 33 | | 371 | 986 | 23 | 186 | 273 |
| | 182 | 79 | 7 | 40 | 97 | | 197 | 287 |
| 5 | 174 | 456 | | 391 | 773 | | 207 | 301 |
| | 177 | 458 | 17 | 273 | 605 | | 371 | 491 |
| | 292 | 702 | | 274 | 607 | | | |

25. பூமாது புணரப் புவிமாது வளர

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | 234 | 587 | 7 | 392 | 774 | 8 | 165 | 304 |
| | 290 | 694 | | 393 | 775 | | 264 | 511 |
| | 377 | 993 | | 398 | 783 | 17 | 65 | 193 |
| 6 | 164 | 351 | | 398 | 784 | | 267 | 601 |
| 7 | 39 | 96 | | 400 | 788 | | 276 | 608 |
| | 292 | 472 | | 417 | 822 | 23 | 2 | 2 |
| | 293 | 473 | | 420 | 832 | | 185 | 272 |
| | 295 | 479 | | 428 | 850 | | 189 | 275 |
| | 324 | 540 | | 429 | 852 | | 190 | 276 |
| | 326 | 544 | | 491 | 1033 | | 195 | 285 |
| | 328 | 550 | | 495 | 1037 | | 209 | 302 |
| | 381 | 747 | 8 | 114 | 221 | | 366 | 489 |
| | 391 | 722 | | 165 | 303 | | 397 | 579 |

26. கோக்கவி மூர்க்க ஸ்ரீ விக்கிரமசோழ தேவர்க்கு

கொங்கு 6—8 (15-8-1976) பக். 9—10

27. பூமருவிய புவியேழும் புவிசூழ்ந்த பொருப்பேழுந் தன்

தொகுதி. 5 பக். 268 எண். 645

28. பூமன்னு பதுமம் பூத்த ஏழுலகும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 4 | 182 | 546 | 7 | 496 | 1038 |
| 5 | 265 | 643 | 8 | 14 | 30 |
| | 295 | 705 | 17 | 259 | 594 |
| 7 | 298 | 485 | | 262 | 598 |
| | 461 | 944 | | | |
| | 491 | 1034 | | | |

29. பூமேவு வளர்திருப் பொன்மார்பு புணர

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | 284 | 824 | 6 | 160 | 340 | 7 | 56 | 136 |
| 5 | 377 | 992 | 7 | 30 | 68 | | 65 | 150 |
| 6 | 156 | 327 | | 31 | 70 | | 259 | 407 |

| தொகுதி. | பக். | எண், | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | 269 | 428 | 7 | 451 | 913 | 8 | 173 | 320 |
| | 286 | 460 | | 478 | 1003 | | 381 | 749 |
| | 287 | 461 | | 478 | 1004 | 17 | 185 | 453 |
| | 288 | 462 | 8 | 10 | 17 | 23 | 211 | 303 |
| | 294 | 477 | | 172 | 319 | | 391 | 572 |
| | 417 | 823 | | | | | | |

30. பூமருவிய திருமாதும் புவிமாதும் செயமாதும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 79 | 35 | 7 | 285 | 458 | 8 | 120 | 228 |
| 4 | 283 | 822 | | 296 | 481 | | 154 | 285 |
| 5 | 379 | 997 | | 499 | 1040 | புதுக் | 73 | 135 |
| 6 | 129 | 440 | 8 | 113 | 220 | | 74 | 136 |
| | 179 | 440 | | 119 | 226 | | | |

31. பூமருவிய பொருப்பேழும் புனைநித்தி லத்தாம

தொகுதி. 17 பக். 257 எண். 592

32. கடல்சூழ்ந்த பார்மாதரும் பூமாதரும் கலைமாதரும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | 283 | 820 | 6 | 183 | 456 | 8 | 174 | 322 |
| 5 | 188 | 476 | 7 | 272 | 432 | 17 | 94 | 244 |
| | 270 | 646 | | 479 | 1005 | | 249 | 583 |
| | 378 | 994 | | 485 | 1026 | | 254 | 587 |
| 6 | 177 | 438 | 8 | 121 | 227 | | | |

33. பூமருவிய திசைமுகத்தோன் படைத்த பெரும் புவிவிளங்க

தொகுதி. 7 பக். 446 எண். 890
,, 7 ,, 460 ,, 942

34. கடல்சூழ்ந்த பாரேழும் திசையெட்டும் காத்து நின்று

தொகுதி. 17 பக். 251 எண். 585

35. 36. புயல்வாய்த்து வளம்பெருகப் பொய்யாத நான்மறையின்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 209 | 85 | 6 | 175 | 436 | 23 | 199 | 288 |
| 4 | 36 | 227 | 17 | 34 | 135 | | 292 | 393 |
| 5 | 368 | 983 | | 249 | 582 | புதுக் | 104 | 180 |
| | 494 | 1359 | 23 | 6 | 14 | | | |

37. புயல்வாய்த்து மண்வளரப் புலியாணையும் சக்கரமும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 3 | 217 | 88 | 7 | 405 | 797 | 23 | 361 | 484 |
| 5 | 250 | 632 | 23 | 355 | 479 | புதுக். | 90 | 163 |
| 6 | 22 | 40 | | 357 | 480 | | 94 | 166 |
| 6 | 22 | 41 | | 358 | 482 | | | |

38. திருவாய்க் கேழ்விமுன் உடைத்தாக

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 5 | 111 | 299 | 6 | 163 | 350 |
| | 162 | 438 | | 167 | 361 |
| | 198 | 496 | | | |

39. புயல்வாய்த்து மண்வளரப் புலியாணையும் சக்கரமும்

தொகுதி. 5 பக். 250 எண். 632
புதுக். பக். 90 எண். 163
,, ,, 94 ,, 166

40. திருவாய்க் கேழ்வி முன்னாக

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 7 | 17 | 44 | 7 | 48 | 116 | 7 | 256 | 403 |
| | 30 | 69 | | 252 | 393 | | 270 | 430 |
| | 43 | — | | 254 | 400 | | 327 | 547 |

41. சீர்மன்னி இருநான்கு திசைவிளங்கு திரு மடந்தையும்

தொகுதி. 4 பக். 126 எண். 424
,, 4 ,, 179 ,, 540

42. உத்தம நீதி உயர்பெருங் கீர்த்தி

தொகுதி. 8 பக். 98 எண். 198

43. 44. பூமியுந் திருவும் தாமெய்ப் புணர

தொகுதி. 7 பக். 440 எண். 875
,, 7 ,, 441 ,, 877

## பாண்டியர்

1. கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர்க் குழாந்தவிர்த்த
பாண்டியர் செப்பேடு பத்து - பக் 22—43.

2. அன்ன னாகிய அலர்கதிர் நெடுவேல்
பாண்டியர் செப்பேடு பத்து - பக் 57—66.

3. அமிர்த கிரணன் அன்வயத்தில்
பாண்டியர் செப்பேடு பத்து - பக் 75—80.

4. ஓங்குதிரை வியன்பரப்பில் உததி ஆலயமாக
பாண்டியர் செப்பேடு பத்து - பக் 100—128.

5. திருவொடுந்தெள் ளமிர்தத்தொடும்
பாண்டியர் செப்பேடு பத்து - பக் 152—170.

6. சந்திரனது வழித்தோன்றிஅத் தராமண்டலம் முழுதாண்டு
பாண்டியர் செப்பேடு பத்து - பக் 190—203.

7. திருமடந்தையும் செயமடந்தையும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | 108 | 294 | 14 | 127 | 223 | 14 | 147 | 240 |
| | 111 | 298 | | 129 | 225 | | | 241 |
| | 310 | 732 | | 130 | 228 | | 148 | 243 |
| 7 | 443 | 884 | | 132 | 229 | | 150 | 245 |
| 8 | 245 | 461 | | 133 | 230 | | 153 | 250 |
| 14 | 113மு | 198மு | | 134 | 231 | | 154 | 251 |
| | 118 | 208 | | 136 | 232 | | 156 | 254 |
| | 121 | 213 | | 138 | 234 | | 165 | 267 |
| | 122 | 215 | | 140 | 235 | கன்னி | I 1968—13 | |
| | 123 | 217 | | 144 | 238 | | | |

8. திருமகள் செயமகள் திருப்புயத் திருப்ப

தொகுதி. 14 பக். 122 எண். 214
,, 14 ,, 144 ,, 239

9. திருமகள் புணரப் பூமகள் விளங்க

தொகுதி. 5 பக். 110 எண், 297

10. திருவளரச் செயம்வளரத் தென்னவர்தம் குலம் வளர

பாண்டியர் வரலாறு - டி. வி. சதாசிவ பண்டாரத்தார் - பக். 211

11. பூமடந்தையும் செயமடந்தையும் பொலிந்துதிருப் புயத்திருப்ப

ஷெ. பாண்டியர் வரலாறு - பக். 213

12. பூதல வனிதை மேதக விளங்க

தொகுதி. 5 பக். 113 எண். 301
,, 5 ,, 153 ,, 428
,, 23 ,, 338 ., 450

13. பூதல மடந்தை புகழொடும் பொலிய

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|
| 5 | 107 | 293 | 23 | 73 | 110 |
| | 110 | 296 | | 76 | 112 |

14. பூவின் கிழத்தி மேவிவீற் றிருப்ப

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | 116 | 302 | 23 | 58 | 94 | 23 | 122 | 152 |
| | 140 | 412 | | 60 | 97 | | 339 | 451 |
| | 143 | 417 | | 64 | 99 | | | |

15. பூமலர்த் திருவும் பொருசெய மடந்தையும்

| தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக். | எண். | தொகுதி. | பக், | எண், |
|---|---|---|---|---|---|---|---|---|
| 5 | 146 | 421 | 5 | 170 | 448 | 8 | 211 | 402 |
| | 163 | 440 | | 312 | 734 | | 214 | 404 |
| | 167 | 446 | | | | | | |

16. பூமருவிய திருமடந்தையும் புவிமடந்தையும் புயத்திருப்ப

